## அத்தியாயம் 1

# அதிர்ச்சி தரும் அழகு!



**கா**லச் சக்கரம் சரித்திரப் பாதையில் சுழல்வதுபோல் வெகு வேகமாகச் சாருலதாவின் கார்ச் சக்கரங்கள் சுழன் றன. உதகமண்டலம் நோக்கிச் சென்று கொண்டிருந்த அவள் இப்போது சென்னை — சேலம் சாலையில் விரைந்தாள்.

''மணி என்ன ஆகிறது?'' என்று கேட்டாள் சாருலதா.

''பத்து முப்பது. சாப்பாட்டு நேரத்துக்குச் சேலம் போய்விடலாம். அவசரமில்லை; மெதுவாக ஓட்டு'' என்றான் அவள் பக்கத்தில் முன் ஸீட்டில் அமர்ந்திருந்த டாக்டர் வேணுகோபாலன்.

கார் சுமார் ஐம்பது—அறுபது மைல் வேகத்தில் போய்க் கொண்டிருந்தது. அந்த ஹெரால்ட் காருக்குப் பின்னால் வேறு நாலைந்து கார்கள் வந்தன. அவற்றில் சிலவற்றை முதலாளிகளே ஓட்டினர். வேறு சிலவற்றை டிரைவர்கள் செலுத்தினர். இரண்டு கார்களுக்கு இடையில் சுமார் நாற்பது அல்லது ஐம்பது அடி இடைவெளிவிட்டு எல்லாக் கார்களும் ஒரே சீராகச் சென்றன. சாருலதாவைத் தவிர கார்களில் இருந்த அனைவருமே ஆடவர்கள். பல வயதினர், பல நிறத்தவர், பல ஜாதியினர். பலவித அலுவல்களில் ஈடுபட்டிருப்பவர்கள்! இப்போது அனைவரிடத்திலும் இருந்த ஓர் ஒற்றுமை விடுமுறை ஜுரம் அவர்களைப் பற்றி இருந்தது தான். எல்லாக் கார்களிலும் சிரிப்பும் கும்மாளமும் மிகுந் திருந்தன.

எல்லாக் கார்களுக்கும் முன்னதாகச் சென்றது சாரு லதாவின் ஹெரால்ட். அதில் அவளைத் தவிர டாக்டர் வேணு கோபால் மட்டுமே இருந்தான். ''சாரு! நான் உன்னுடன் கிளம்பி வந்தது பிசகோ என்று இப்போது தோன்றுகிறது'' என்றான்.

''ஏன்? அதற்குள் உங்கள் வீட்டுக்கு வந்து போகும் நோயாளிகளின் ஞாபகம் வந்து விட்டதா? ஓய்ச்சல் ஒழி வில்லாமல் நோயாளிகளைக் கட்டிக் கொண்டு அழுகிறீர்கள் என்றுதானே நாலு நாள் விடுமுறையில் உங்களைக் கிளம்பி வரச் சொன்னேன் என்னோடு?''

''எனக்கும் விடுமுறை தேவைதான் சாரு. ஓய்வு இல்லாமல் எந்த மனிதனால் உழைக்க முடியும்?''

''ஆனாலும் உங்களைப் போல இரவு பகல் பார்க்காமல் உயிரை விடுகிற வேறு ஒரு மனிதரைப் பார்க்க முடியாது. டாக்டர் என்றால் அதற்காக....? நான் சொல்கிறேன், 'ரிஸப்ஷனிஸ்ட்' ஒருத்தியைப் போட்டுக் கொள்ளுங்கள். அவள் அழகானவளாகக்கூட இருக்கலாம். நான் பொறாமைப் பட மாட்டேன்...!''

வேணு சிரித்துக் கொண்டான். ''அப்புறம்?''

''முன் கூட்டியே 'அப்பாய்ண்ட்மெண்ட்' இல்லாமல் யாரையும் பார்க்க முடியாது என்று சொல்லுங்கள். ஒரு நாளைக்கு அதிகபட்சம் பத்து அல்லது பதினைந்து பேர்களைப் பரிசோதித்தால் போதும். மருந்துச் சீட்டு வாங்கிக் கொண்டு அவர்கள் வெளியே வரும்போது 'ரிஸப்ஷ னிஸ்ட்' குயிலாட்டம் கூவ வேண்டும்: 'தட் வில் பி டுவெண்டி ஃபைஃப் பிளீஸ்!' ஒருவருக்கு இருபத்திஐந்து ரூபாய் என்றால் ஒரு நாளைக்கு முந்நூற்றி எழுபத்தைந்து ரூபாய் ஆயிற்று. போதாதா? அரை ஃபர்லாங் நீளத்துக்கு உங்கள் வீட்டெதிரே குஞ்சும் குட்டியுமாய்ச் சேரி மக்கள் இழு நிற்பதைப் பார்க்கவே சகிக்கலை.''

''பார்க்கச் சகிக்கலேதான் சாரு! ஆனால் கேட்டிருக்கிறாயா அவர்கள் சொல்வதை? 'டாக்டர் ஐயா, புண்ணியவான், மகராஜனா யிருக்கணும்' என்று அவர்கள் சொல்வது ஒவ்வொரு சமயம் என் அறை ஜன்னல் வழியே என் காதில் விழும். அதை விட ஒரு மனுஷனுக்கு வேறே என்ன வேண்டும்?''

''வேறே என்ன வேண்டும்?—தலைக்கு நாலணாவும் எட்டணாவும் கொடுக்கிறார்களே; சிலர் கையை விரித்துவிட்டும் போகிறார்களே, போதாதா? சேச்சே, என்ன பிழைப்பு இது? ஒரு 'டிக்னிடி' வேண்டாம்?''

''சாரு! இப்படியே சாலை ஓரமாகக் காரைக் கொஞ்சம் நிறுத்து. நான் இறங்கிக் கொள்கிறேன். சென்னை நோக்கிச் செல்லும் பஸ் ஏதாவது வரும். கைநீட்டி நிறுத்தி ஏறிக்கொண்டு போய் விடுகிறேன்.''

'' அடடா ! டாக்டர் ஸாருக்குக் கோபம் வந்து விட்டதா? ஐ ஆம் ஸாரி, டாக்டர்! நான் உங்கள் சொந்த விஷயத்தைப் பற்றிப் பேசியது தப்புத் தான். மன்னிச்சுடுங்க!''

''சாரு! என் சொந்த வாழ்க்கையைப் பற்றி நீ இப்போதுதானா புதிதாகப் பேசுகிறாய்? யார் என்னைப் பற்றி என்ன பேசினாலும் நான் லட்சியம் செய்ய மாட்டேன். அது உனக்கே தெரியும். என் மனச்சாட்சிதான் எனக்கு முக்கியம். நானும் எத்தனையோ தடவைகள் உன்னைப் பற்றிக் குற்றம் குறைகளைச் சொல்லி யிருக்கிறேன். கேட்டுச் சிரித்து விட்டுப் போவதுதானே நம் வழக்கம்?''

''டாக்டர் ! ஓய்வு உங்களுக்குத் தேவை என்று ஒப்புக் கொள்கிறீர்கள். ஆனால் என்னோடு கிளம்பி வந்தது தவறு என்கிறீர்கள். இதற்கு என்ன அர்த்தம்? என்னை உங்களுக்குப் பிடிக்க வில்லை என்றால் தெளிவாகச் சொல்லி விடலாமே!''

''அபத்தமான குற்றச்சாட்டு! இதற்குப் பதில் சொல்வது அதை விட அபத்தமானதாகும். சாரு! 'ஊட்டிக்கு வா' என்றாய். 'சரி' என்று ஒப்புக் கொண்டேன். ஆனால் நமக்குப் பின்னால்- ஐந்து கார்களில் வருகிறதே பட்டாளம்! அதை நான் எதிர்பார்க்க வில்லை. அவர்களுக்கும் எனக்கும் ஒத்து வருமா? அவர்களுடன் கலகலப்பாகப் பேசவோ பழகவோ எனக்குத் தெரியாது; பிடிக்கவும் பிடிக்காது. அதனால்....''

''கவலையை விடுங்கள். சேர்ந்தாற் போல் நாலு நாட்கள் லீவு அபூர்வமாக இந்த வருஷம் குதிர்ந்திருக்கிறது. கூட இரண்டே நாட்கள் லீவு எடுத்துக் கொண்டால் போதும். என்னுடைய எஸ்டேட்டில் நண்பர்களை அழைத்து 'எண்டர்டெய்ன்' செய்ய ஒரு நல்ல சந்தர்ப்பம். 'கெஸ்ட் ஹவுஸ்'ஸுக்குப் போனதும் போகாததுமாக அந்தக் குளிருக்குப் 'பாட்டிலை'த் திறந்து விடுவார்கள்!''

எதிரே சாலையைப் பார்த்துக்கொண்டிருந்த வேணு, 'சட்'டென்று சாரு பக்கம் கழுத்தை ஒடித்தான். ''அது வேறேயா?''

''பயப்படாதீர்கள்! நத்திங் இல்லீகல்! எல்லாரிடமும் 'பர்மிட்' இருக்கிறது. ஒரு சொட்டுக் கூட மது அருந்தாத எனக்குக் கூட பர்மிட் வாங்கி வைத்திருக்கிறேன், முன் எச்சரிக்கையாக. நான் பழகும் சூழ்நிலைக்கு அது அவசியம்! அவர்கள் எல்லாம் சாய்ந்து விழுகிற வரையில் தப்பும் தவறுமாக ரம்மி ஆடுவார்கள். பிறகு எனக்குத் துணை வேண்டாமா? அதற்காகத் தான் உங்களை அழைத்தேன்!''

''இத்தகைய பேர்வழிகளுக்கிடையில் உனக்குத் துணை அவசியம்தான்!''

சாரு சிரித்தாள். ''வேணு! எனக்கு அந்த மாதிரி 'பாடிகார்டு' துணை தேவையில்லை. என்னைக் கவனித்துக் கொள்ள எனக்கே தெரியும். அவர்கள் அத்தனை பேரும் 'காக்டெய்ல்' பார்ட்டியில் மூழ்கி விட்ட பின்னர் எனக்குப் 'போர்' அடிக்கும். பேச்சுத் துணைக்கு யாராவது வேண்டுமே என்றுதான் உங்களை வரச் சொன்னேன்!''

''சாரு! சில சமயங்களில் நீ பெண் தானா என்றே எனக்குச் சந்தேகம் ஏற்பட்டு விடுகிறது.''

சாருலதா உடனே காரின் வேகத்தைக் குறைத்துப் பிரேக்கை அழுத்தினாள். சாலை ஓரமாகக் கீச்சிட்டுக் கொண்டு வண்டி நின்றது. இஞ்சினின் இயக்கத்தை நிறுத்தி விட்டுக் கதவுப் பக்கமாகச் சாய்ந்து வேணு கோபாலனை நோக்கித் திரும்பினாள் சாருலதா.

''வேணு! என்னைப் பற்றி நிறையக் குற்றம் குறைகளைச் சொல்லி யிருக்கிறீர்கள்! ஆனால் இப்படி 'இன்ஸல்ட்' பண்ண வேண்டாம். இதோ பாருங்கள்! என்னைச் சரியாகப் பாருங்கள்! நான் பெண்தானா என்பதிலா உங்களுக்குச் சந்தேகம்!''

சிரிக்கும் கண்களுடனும் குறும்புத்தனம் குமிழியிடும் அதரங்களுடனும் சாருலதா வேணுகோபாலனுக்கு முன்—அருகே — மிக அருகே — காட்சிப் பொருளாக அமர்ந்திருந்தாள். வேணுகோபாலன் பார்த்தான்:

# அனோலியம்

## கோல்ட் ரப்

**ஜலதோஷம் மற்றும் இருமலை அறவே
அகற்ற வீரியமுள்ள புதிய சக்தி**

சளியினால் உங்கள் தொண்டை மற்றும மூக்கு, மார்பில் அடைப்பு ஏற்பட்டு மூச்சுத் திணறல் ஏற்படுகிறது

அனோலியத்தில் ஆற்றல் மிகுந்த ஆறு மருந்துகள் உள்ளன. அம்மருந்துகளின் சக்தி உடலினுள் ஊடுருவிப் பாய்ந்து ஜலதோஷத்தையும், இருமலையும் விரைவில் குணப்படுத்துகிறது.

மார்பு, மூக்கு, தொண்டை முதலிய பகுதிகளில் அனோலியத்தை தடவுங்கள். அதைத் தடவும்பொழுதே உபாதையும் மறைந்துவிடுவது திண்ணம்.

அனோலியம் மலிவானது.






*மறவாதீர். இதைத் தயாரிப்பது*
**அமிர்தாஞ்சன் லிமிடெட்**

EDSAM 1235TMA

கைதேர்ந்த சிகை அலங்காரக் கலைஞனால் கழுத்தளவோடு கருத்துடன் வெட்டப்பட்டிருந்த அவளது பட்டுக் கேசங்களில் சில இழைகள், பளிங்குக் கன்னங்களைத் தாம் வருட உதவியதற்காகப் . பூங்காற்றுக்கு நன்றி கூறிக் கொண்டிருக்கும் என்று. டாக்டர் வேணு கோபாலுக்குத் தோன்றியது.

வலது கையை மடக்கி ஜன்னல்மீது மிருதுவான முழங்கையை வைத்து இடது கரத்தை 'ஸீட்' முதுகின் மேலாகத் துவள விட்டிருந்தாள். இளஞ் சிவப்பு நிறம் பூசப்பெற்ற நீண்ட நகங்களுடன் கூடிய விரல்கள் பஞ்சின் மென்மையுடன் வேணுவின் தோள் மீது பட்டும் படாமலும் கிடந்தன.

இந்த நிலையில் அவள் பொய்க் கோபத்துடன் சர்ப்பம் போல் நிமிர்ந்து வேணுவை நோக்கியபோது அவள் எடுப்பான தோற்றம் எதிர்பாராமல் கன்னத்தில் விழுந்த அறை போல் ஓர் அதிர்ச்சியையே ஏற்படுத்தியது. இந்த இடம் இப்படி இருந்தால் இன்னும் நன்றாக இருக்குமே என்று எண்ணவே இடமில்லாத பரிபூரண அழகு. அழகா அது? அழகுத் தேவதையையே வெட்கித் தலை குனியச் செய்யக் கூடிய ஒரு பேரெழிலை அழகு என்று சொல்லி எப்படித் திருப்திப்படுவது?

டெர்ரிகாட் புடவையின் இள மஞ்சள். நிறப் பின்னணி அவள் உடலோடு இனம் பிரிக்க முடியாதபடி ஒன்றிவிட அந்தத் தேகம் முழுவதும் வண்ண வண்ண மலர்களை அள்ளித் தூவியதாலேயே ம றை ந் தி ரு ப்பது போல் ஒரு பிரமை! புடவை காற்றில் படபடத்தபோது அவள் உடலைத் தீண்டும் பாக்கியம் பெற்றதால் அம்மலர்கள் மகிழ்ச்சிப் பரவசத்தில் சிரிப்பதுபோல் ஓர் எண்ணம். தலையின் முன்புறம், செருகப்பட்டிருந்த ரத்தச் சிவப்பான செம்பருத்திப் பூ, கேசத்தின் கருமைக்குச் சவால் விடுவது போல் ஒரு திகைப்பு!

ஏற்கனவே பல தடவைகள் வேணு கோபால் பார்த்துத் தனக்குள் ரசித்திருக்கும் ஓர் உருவம்தான். அங்கம் அங்கமாகப் பார்த்துப் பார்த்துப் பழகினாலும் ஒவ்வொரு முறை பார்க்கும் போதும் ஒவ்வொரு அங்கத்திலும் அழகின் ஒரு புது மெருகைக் கண்டு அதிசயிக்கக் கூடிய வளரும் வனப்பு அது. என்றாலும் ஒவ்வொரு தடவையும் ஒருசில விநாடிகளுக்கு மேல் பார்க்க முடியாமல் கண்களைக் கூசச் செய்கிற ஒரு காந்தியும் அந்த அழகுச் சொரூபத்துக்கு இருந்தது.

இப்போதும் வேணுவின் கண்கள் சூரியனை நோக்கியது போல் கூசின. இமைகள் படபடத்துத் தாழ்ந்தன. அவன் ஒரு பெருமூச்சு விட்டான்.

''சாத்தியமானால் கொள்ளையடித்துக்கொண்டு போக ஆசையைத் தூண்டும் அழகு சாரு!''

''அப்படிச் சொல்லுங்கள்!''

''சொல்கிறேன், உன் அழகைப்பற்றி வண்டி வண்டியாகச் சொல்லலாம்.''

''பிறகு, 'பெண்தானா' என்றால் என்ன அர்த்தம்?''

''உன் நடத்தை, உன் போக்கு, உன் திறமை — தொழில் வர்த்தக சாம்ராஜ்யத்தையே அல்லவா நிர்வகிக்கிறாய்!''

''அதில் என்ன அதிசயம்? சரித்திரத்தில் எத்தனையோ பெண்கள் கிளியோபாத்ரா முதல் இந்திரா காந்தி வரைசாம்ராஜ்யங்களை ஆளவில்லையா?''

''அதிசயம் என்று சொன்னேனா?''

''இல்லை யென்றால் வேறென்ன அனர்த்தத்தைக் கண்டீர்கள்?''

''பின்னால் வருகிற. கார்களில் இருப்பவர்கள் யார் யார்? ஒரு பாங்கின் செக்ரடரி, எல். ஐ. ஸி. உயர் அதிகாரி ஒருவர், தொழில்களில் முதலீடு செய்ய அயல்நாடுகளிலிருந்து வந்த இருவர், ராஜ்ய, மத்திய சர்க்கார்களில் உயர் மட்டத்தில் உத்தியோகம் பார்க்கும் இருவர், வருமான வரி இலாக்காவில் உள்ள ஒருவர் என்று இப்படிப் பலரை வளைத்துப் போட்டு அழைத்துப் போகிறாயே, என்ன தைரியம் உனக்கு?''

''டாக்டர்! நான் எதற்குப் பயப்பட வேண்டும்? சட்ட விரோதமாக எதை யாவது செய்து விட்டேனா? அவர்கள் என் நண்பர்கள். விடுமுறையைக் கழிக்க என் எஸ்டேட்டுக்கு விருந்தினராக வருகிறார்கள். இதில் தவறு என்ன?''

''தவறு ஒன்றுமில்லை. ஆனால் அவர்களை இப்படி அழைத்துப் போவதன் உள் நோக்கம் என்ன? அவர்களைக் குஷிப்படுத்தி வைத்தால் உனக்கு—உன் தொழில் வர்த்தக சாம்ராஜ்யத்துக்கு- ஏதேனும் ஒரு சமயத்தில் உதவியாக இருப்பார்கள் என்பதுதானே?''

''வேணு! எனக்கு லட்சிய வாழ்வில் நம்பிக்கை கிடையாது. ஐ ஆம் எ பிராக்டிகல் உமன்; எ ரியலிஸ்ட்!''

கார் கிளம்பியது. பின்னால் வந்த கார்கள், சாரு ஓட்டி வந்த கார் நிற்பதைப் பார்த்ததும் நின்றன. அவற்றிலிருந்து சிலர் கீழே இறங்கிச் சாருவின் காரை நோக்கி நடந்து வந்து கொண்டிருந்தார்கள், என்ன ஏது என்று விசாரிக்க. அதைத் தனக்கு முன்னாலிருந்த நிலைக் கண்ணாடியில் பார்த்து விட்ட

"Bombay 28 9/44

Dear Subbulakshmi,

Rajaji has told me everything about your good work in connection with Kasturba Memorial Fund by using your musical gifts. May God bless you.

Yours

மோ. க. காந்தி



கஸ்தூரிபா நினைவு நிதி சம்பந்தமாக ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி தமது இசையால் ஆற்றிய தொண்டு பற்றி ராஜாஜி மூலம் அறிந்த காந்திஜி, மன மகிழ்ந்தார். ஸ்ரீமதி எம். எஸ்ஸுக்கு ஆசி கூறித் தமிழில் கையெழுத்திட்டுக் கடிதம் எழுதினார்.

சாரு, ஹெரால்டைக் கிளப்பினாள். ஆனால் அதன் வேகம் முன்போல் இல்லை; நிதானமாகவே சென்றது.

''நானும் அப்படி யொன்றும் ஐடியலிஸ்ட் இல்லை சாரு! ஆனால் ரியலிஸம் என்பது அருவருப்பு ஊட்டுகிற காரியங்களில்மட்டுமே இருக்கிறது என்பதை நம்பாதவன். காந்தி அடிகள் இருந்தாரே அவர் ஐடியலிஸ்ட்தான். ஆனால் அவர் நம் கண்ணுக்கு மெய்யாக லட்சிய வாழ்க்கை வாழ்ந்து காட்டியதில் ரியலிஸத்தைக் காணவில்லையா 'நாம்?''

''டாக்டர்! காந்தி பெயரை நம் விவாதத்தில் இழுத்து என்னைப் பயமுறுத்த முயல வேண்டாம்'' என்றாள் சாருலதா.

இதன் பிறகு வேணுகோபால் ஏதும் பேசவில்லை. சாரு கலகலப்புக் குறைந்து காணப்பட்டாள். வேணுவோ வேதனை அடைந்தவனாகவே தோன்றினான்.

சற்று நேரத்தில் பின்னால் வந்த ஒரு கார் ஹாரன் அடித்தது. சாருவின் ஹெரால்டை முந்திக்கொண்டு போயிற்று. போகிற போக்கில் அதிலிருந்த ஒருவன் சாருவுக்கு டாட்டா காண்பித்தான். விரைவிலேயே இன்னொரு காரும் சாருவை 'ஓவர் டேக்' செய்தது.

அவ்வளவுதான், சாருவின் முகத்தில் காணப்பட்ட சஞ்சலம் எங்கோ இருந்த இடம் தெரியாமல் மறைந்து போயிற்று. சவாலை ஏற்றுக் கொண்டதும் அவள் முகம் பிரகாசமடைந்தது. எதிர்ப்பும் போட்டியும் அவளை ஊக்குவித்தன. 'களு'க்கென்று சிரித்துக் கொண்டே ஆக்ஸிலேட்டரை அழுத்தினாள். லாகவமாக ஸ்டியரிங்கை இயக்கினாள். அவளுடைய கார் உறுமவில்லை. கோயில மணி அடித்து ஓயும் போது 'உம்மம்' என்று ஓர் ஓசை கேட்குமே, அப்படி காரின் இஞ்சின் 'கும்'மென்று செயல்பட்டது. ஹாரன் ஒலிகூட எழுப்பாமல் இலகுவாக லவலேசமும் சிரமமின்றி அந்த இரண்டு கார்களையும்

மூந்திக் கொண்டது சாருவின் ஹெரால்ட். சில நிமிஷங்களில் வெகு தூரம், அவர்கள் கண்களிலிருந்து மறையும் தொலைவுக்குப் போய் விட்டது !

சாரு பெரிதாகச் சிரித்தாள். ''இந்தக் கார் பார்ப்பதற்குத்தான் ஹெரால்ட். உள்ளுக்குள்ளே இருப்பது இம்போர்ட்டட் இன்ஜின்! எல்லாரும் சாரு ஏன் ஹெரால்ட் வைத்திருக்கிருள்? எஸ். டி. ஸி. ஏலத்தில் ஒரு அமெரிக்கக் காரை வாங்கிக் கொள்ளக் கூடாதோ என்று நினைக்கிருர்கள். இப்போது இது இப்படிப் பறப்பதைக் கண்டு அவர்களுக்கு ஒரே வியப்பாக இருக்கும்!''

''எதற்கு அப்படி நீ செய்ய வேண்டும் சாரு ? அயல் நாட்டுக் காரை அப்படியே வைத்துக் கொள்வது தானே ? அந்த இஞ்சினைக் கழற்றி இந்த 'பாடி'யில் பொருத்துவானேன்?''

''சாரு செய்கிற காரியங்களைப் பற்றி ஏன் எதற்கு என்று தட்டிக் கேட்பவர்கள் இரண்டே பேர்தான் ! ஒருவர் நீங்கள். மற்ருெருவன் என் தம்பி. இதில் வேடிக்கை என்னவென்ருல் இரண்டு பேரிடமும் நான் ரொம்பப் பிரியம் வைத்திருக்கிறேன்!''

''ஆனல் அவர்கள் தட்டிக் கேட்பது உனக்குப் பிடிக்கவில்லே.''

''அயல்நாட்டு நண்பர் ஒருவர் இங்கு என் தொழிலகத்தில் பயிற்சி அளிப்பதற்காக இரண்டு வருஷங்கள் தங்கி இருந்தார். அவர் வரும்போது ஒரு ஜகுவார் வாங்கி வரச் சொன்னேன். கொஞ்ச நாட்கள் அதை ஓட்டியதில் ஆசை விழுந்து விட்டது. அதனுல் எஸ். டி. ஸி. டெண்டரில் மற்றவர்களைவிட ஆயிரம் ரூபாய் அதிகம் தருவதாய் எழுதினேன். காரைச் சொந்தமாக்கிக் கொண்ட பிறகு அந்த பாடியின் ஷேப் எனக்குப் பிடிக்கவில்லே. ஆகவே, இஞ்சினைக் கழற்றி இதில் பொருத்தச் சொன்னேன். இப்போது இதில் பாடி மட்டும்தான் ஹெரால்ட். மற்றபடி அநேகமாக எல்லாமே ஜகுவார் பாகங்கள்தாம் !''

''பணக்காரப் பெண் ஒருத்தியின் 'விம்ஸ் அண்டு ஃபான்ஸிஸ்' எப்படி இருக்கும் என்று புரிந்து கொண்டேன் சாரு. கிடக்கட்டும், இந்த வேகத்தில் பறந்து அடித்துக் கொண்டு போய் என்ன பிரயோஜனம்? விடுமுறை என்ருல் சுற்றுப்புறச் சூழ்நிலையை மனேரம்மியமான காட்சிகளை அனுபவித்து மகிழ வேண்டும். பரக்கப் பரக்க ஓடுவானேன் ?''

''காரியார்த்தமாக இயங்கத்தான் எனக்குத் தெரியும் வேணு. இயற்கையை ரசிக்க எனக்கு நேரமில்லே!''

''கரெக்ட் ! விடுமுறை என்ருலும் அதில் பிஸினஸையும் இணைத்துத் தானே இவர்களை எல்லாம் இழுத்து வந்திருக்கிருய்! என்ன ஹாலிடேயோ! காரைச் சற்று நேரம் நிறுத்தினயே ! அப்போதே நான் கீழே இறங்கியிருக்க வேண்டும் !''

''வேணு ! கிளம்பி வந்தது வந்து விட்டீர்கள்! இப்போது பாதியில் திரும்பினல் மற்றவர்கள் என்ன நினைப்பார்கள்? ஹாலிடே மூடே கெட்டுக் குட்டிச்சுவராகி விடுமே !''

''அப்போ, உன் நண்பர்களின் 'மூட்' கெட்டுவிடக் கூடாது என்பதற்காகத் தான் என்னே வரச் சொல்கிருய். மற்றபடி நான் இப்போதே சென்னே திரும்பினல் கவலே.இல்லே உனக்கு!''

'' உங்களிடம் பேசி என்னுல் ஜெயிக்க முடியாது!''

''பேச்சிலே உன்னே நான் வெற்றி கொள்ளலாம்; ஆனல் உன் மனத்தை? அதை வெற்றி கொள்ள என்னல் முடியவில்லேயே, சாரு?'' வேணுகோபாலின் குரலில் ஏக்கம் தொனித்தது.

சாருலதாவின் இடது கரம் சட்டென்று ஸ்டியரிங்கிலிருந்து விடுபட்டு வேணுவுடைய வலக் கரத்தின் மீது வந்து அமர்ந்தது. ஆனல் அவள் பார்வை சாலேயை விட்டு ஒரு கணமும் திரும்பவில்லே.

''வேணு ! பிளீஸ்! இன்னும் நாலு நாளைக்கு நீங்கள் சென்னேக்குத் திரும்புவது பற்றிப் பேசக் கூடாது. இரண்டாவது......''

''காதல் என்ற மூன்றெழுத்து பற்றி மூச்சு விடக் கூடாது ! அதைத் தானே சொல்ல வந்து தயங்கி நிற்கிருய் சாரு ?''

''தயக்கம் ஒன்றுமில்லே, எந்தவிதமாகச் சொல்வது என்று ஒரு கணம் யோசித்தேன். நட்பு என்கிற பிரதேசத்திலிருந்து அன்பு என்கிற எல்லேக் கோட்டைத் தாண்டிக் காதல் என்ற பகுதிக்கு நீங்கள் படையெடுத்தால் நான் தற்காப்பு நடவடிக்கை எடுக்க நேரிடும்! ஆம் ஐ கிளியர் ?''

''இதைவிடத் தெளிவாகச் சொல்ல சாட்சாத் சரஸ்வதி தேவிக்குக்கூட வார்த்தைகள் அகப்படாது, கவலேப் படாதே !'' என்ருன் வேணு. அப்போது அவன் குரல் ஆதங்கத்தில் கரகரத்தது. கண்கள் சற்றே கலங்கியதை அவன் வேறுபுறம் திரும்பி மறைத்துக் கொண்டான். (தொடரும்)

அத்தியாயம் 2

# நட்பின் எல்லையில்

மனோதிடத்தை ஒருவன் பக்கபலமாகக் கொண்டிருந்தால்கூட லட்சிய வாழ்க்கையில் உயரே உயரே செல்வது எவ்வளவு கடினம்! ஆனால் ஒரு முறை சறுக்கி விட்டால் போதும் எவ்வளவு சுலபமாக அதள பாதாளத்தில் விழுந்து உழலலாம்! இதை உணர்த்துவதாகத்தான் நீலகிரி மலைச் சிகரங்களும் பள்ளத்தாக்குகளும் டாக்டர் வேணுவுக்குத் தோன்றின.

'மலைகளுக்கேகூடக் குளிர் எடுத்து மரகதப் பச்சை நிறத்தில் சால்வை போர்த்திக் கொண்டிருக்கின்றனவோ? வெண்மையான கம்பளிக் குல்லாய் அணிந்திருக்கின்றனவோ?' என்று எண்ணுமாறு தேயிலைத் தோட்டங்களும் மேகப் படலங்களும் காட்சி அளித்தன.

இந்த எண்ணத்தைச் சாருவுக்குச் சொல்ல வேண்டும் என்று நினைத்து வேணு அவளை நோக்கினான். அவள் ரசிக்க மாட்டாள் என்பது அடுத்த கணமே அவனுக்குப் புரிந்து விட்டதால் அவன் வாய் திறக்கவில்லை.

சாருவின் கண்கள் சாலையில் லயித்து இருந்தன. கரங்கள் ஸ்டியரிங்மீது லாகவமாக விளையாடிச் சுழற்றின. வளைவுகளும் நெளிவுகளும் ஏற்றங்களும் இறக்கங்களும் மிகுந்த மலைப் பாதையில் காரை விரைவாகச் செலுத்திக் கொண்டு போவதில் அவளுக்கு இருந்த ஆர்வம் அவள் முகத்தில் தெரிந்தது. மனம் காரை ஓட்டுவதில் முழுமையாக ஈடுபட்டிருக்க ஓர் அலட்சியமான அசுரத் திறமையுடன் அவள் இயங்கி வேகமாக முன்னேறிக் கொண்டிருந்தாள்.

''ஒரு இம்போர்ட்டட் ரேஸ் கார் இஞ்சினைப் பொருத்திக் கொண்டு இந்த மலையில் இவ்வளவு வேகமாக ஏறுவதில் என்ன சாமர்த்தியம் இருக்கிறது? 1935ம் மாடல் ஆஸ்டின் காரை ஊட்டிக்கு ஓட்டிச் சென்றாயானால் உன் திறமையைப் பாராட்டலாம்'' என்றான் வேணு.

திடுக்கிட்டவள்போல் ஒரு கணம் டாக்டரைப் பார்த்தாள் சாரு. அடுத்த விநாடி பார்வை சாலைக்குத் திரும்பியது.

''உங்களுக்கு என்ன கோபம்? ராத்திரி சரியாகத் தூங்கினீர்கள் அல்லவா? காலையில் டிபன், காப்பி எல்லாம் நன்றாக இருந்ததல்லவா?''

''ஆகா! அப்ஸரா ஹோட்டலில் ஆனந்தமாய்த் தூங்கினேனே! நேரடியாக ஊட்டிக்கு வந்திருந்தால் ரொம்பக் களைப்பாக இருந்திருக்கும். கோவையில் இரவு தங்கியது நல்லதாயிற்று.''



# சாருலதா

கி.ராஜேந்திரன்

''பிறகு ஏன் சிடுசிடுத்து விதண்டாவாதம் பண்ணுகிறீர்கள்?''

''எது விதண்டாவாதம்?''

''டாக்டர்! ஒரு நூறு ஹார்ஸ் பவர் ரேஸ் காரை மலைப் பாதையில் ஓட்டிச் செல்வது 1935ம் மாடல் ஆஸ்டினை ஓட்டுவதைவிடச் சிரமம்! தெரியுமா உங்களுக்கு?''

''தெரியாது!''

''தெரியாத விஷயத்தைப் பேசக்கூடாது!''

''தெரிந்த விஷயத்தைச் சொல்லட்டுமா?''

''உம்.''

''நீ எதற்காகக் காதல் என்ற சொல்லைக் கேட்டாலே மிரளுகிறாய் என்று தெரியும்!''

''பூ, இதென்ன பெரிய காரியம்? ஷெர்லாக் ஹோம்ஸா வர வேண்டும், இதைக் கண்டுபிடிக்க? வர்த்தகத் தொழில் துறைகளில் நான் அடைந்து வரும் வேகமான முன்னேற்றம் கல்யாணத்தால் பாதிக்கப்படும். இது ஊர் அறிந்த ரகசியம்.''

''அந்த ஒரு காரணம் மட்டும்தானு சாரு ?''

''வேறு என்ன காரணம் இருக்க முடியும் ?''

''அதை நீ சொல்லு!''

''நான் என்னத்தைக் கூற? நீங்கள் தானே ஏதோ பெரிய ரகசியத்தைத் தெரிந்து கொண்டு விட்டதைப் போல் பேசினீர்கள் ?''

''அப்படியானுல் ரகசியம் ஏதோ இருக்கிறது என்று ஒப்புக் கொள் கிருய் !''

''நான் எதையும் ஒப்புக் கொள்ள வில்லே. அநாவசியமாக என் வாயைப்



பிடுங்கப் பார்க்காதீர்கள்! இன்னும் பத்து மைல்தான் இருக்கிறது. 'லெட் மி கான்ஸன்டிரேட்'. இங்கு கவனக் குறைவாக இருந்தால் ஆபத்து!''

அவள் பேச விரும்பவில்லே என் பதை நாசூக்காகச் சொல்கிருள் என்று புரிந்து கொண்டான் வேணு. அவள் எப்போதுமே இப்படித்தான். உலகத்தி லுள்ள சகல விஷயங்களேப் பற்றியும் வம்பு வளர்க்கத் தயாராகக் காத் திருப்பாள். ஆனல் அவள் சொந்த வாழ்க்கை பற்றிய பேச்சை யாராவது எடுத்தால் மரவட்டை போல அவள் மனம் சுருண்டு விடும். பல சந்தர்ப்பங் களில் இதைக் கவனித்து வேணு ஆச் சரியப்பட்டிருக்கிருன்.

உதக மண்டலத்தை அடைந்த பிறகு ரோஸ்மேரி எஸ்டேட்ஸ் எங்கே இருக்கிறது என்று சொல்லி அங்கு எப்ப டிப் போக வேண்டும் என்று விசாரித் தாள் சாரு. கார் மேலே விரைந்தது.

''வழி விசாரித்தது அந்த எஸ்டேட் டின் சொந்தக்காரி என்று தெரிந்தால் அவர்கள் என்ன நினேப்பார்கள்?'' என்று கேட்டான் வேணு.

''நினேக்க என்ன இருக்கிறது ? நான் இந்த எஸ்டேட்டை வாங்கி நாலு மாதங்கள்தானே ஆகிறது? இப் போதுதானே முதல் முறையாக அதைக் காண வருகிறேன் !''

''தொள்ளாயிரம் ஏக்கர்! இதுவே சம வெளியில் இருந்தால் ஜமீந்தாரிணி போல் உன்னே மதிப்பார்கள்; இங்கே எஸ்டேட் முதலாளிதான் நீ !''

''உச்சவரம்பு இருக்கும்போது சம வெளியில் தொள்ளாயிரம் ஏக்கர் எங்கே கிடைக்கும்? அதற்காகத்தான் டீ எஸ்டேட் வாங்குவது.''

''கறுப்பும் வெளுப்புமாய்ப் பணத் தைக் கொட்டி....!''

''ஓடோடு விட்டால்தேவலையே, இந்த எஸ்டேட்டின் சொந்தக்காரன்...''

''முன்னாள் சொந்தக்காரன்....''

''....தென் ஆப்பிரிக்கப் பிரஜை யான இந்தியன். 'கால்வாசிப் பண மாவது ஸ்டர்லிங்கில் கொடுக்கக் கூடாதா?' என்று மூக்கால் அழு தான். கொடுத்துத் தொலைத்தேன்.'' சாரு குரலில் பெருமை தொனித்தது.

''ஆமாம், ஸ்விஸ் பாங்கில் இருக் கும் பணத்துக்கும் ஏதாவது செலவு வேண்டாமா ?''

''பெயர் உங்களுக்குப் பிடித்திருக் கிறதா ?''

''சாருலதா....சாருலதா!'' அந்தப் பெயரை உச்சரிப்பதிலேயே இன்பம் அடைந்தவன் போல் காணப்பட்டான் வேணு. ''சாருலதா என்ற பெயர் ரொம்பப் பிடித்திருக்கிறது சாரு. ஆனால் அது உன் பெயர் என்ற நினைப் பிலேதான் இனிக்கிறது. கண்களுக்குத் தென்படுவனவெல்லாம் 'சாருலதா' என்ற பெயர் தாங்கி நிற்க வேண்டும் என்ற எண்ணம் பிடிக்கவில்லை!''

''நான் அப்படி எங்கே நினைக் கிறேன்? எனக்குச் சொந்தமானவை என் பெயரைத் தாங்கி நிற்பதில் தவறென்ன?''



'' எந்தப் பெயர் ? ஸ்விஸ் கரன்ஸி யின் பெயரா ?''

''எந்த நாட்டு நோட்டுக்களானா லும் பெயர் காதுக்கு இனிமையாகத் தான் இருக்கும். நான் கேட்டது, எஸ்டேட்டின் பெயரைப் பற்றி.''

'' 'ரோஸ்மேரி எஸ்டேட்ஸ்'..... ரொம்ப அழகான பெயர்தான்.''

''அதை மாற்றிவிடப் போகிறேன்.''

'' தெரியுமே, எனக்குப் பிடிக்கிறது என்று சொன்னால் உடனே மாற்றி விடுவாயே ?''

'' ஏன், சாருலதா என்ற பெயர் பிடிக்க வில்லையோ உங்களுக்கு?''

''தவறு என்று சொல்லவில்லை ; ரசனைக் குறைவைச் சுட்டிக் காட்டி னேன். சாருலதா என்டர்பிரைஸஸ், சாருலதா டீ எஸ்டேட், சாருலதா ஸிமெண்ட் ஒர்க்ஸ், சாருலதா இன்ஜி னீரிங், சாருலதா 'திஸ்', சாருலதா 'தட்' !''

''ஏன், பாக்கியெல்லாம் மறந்து விட்டதா ?''

''நாக்கு மரத்து விட்டது, சொல் லிச் சொல்லி. ஆனால் உனக்குக் கேட்க ரொம்ப ஆசையாக இருக்கும்.''

''அதில் குற்றமென்ன ? நானே என் திறமையாலும் சாமர்த்தியத்தாலும்

# தாங்க முடியாத நோவா?

ஸால்ஜான் தலைநோவின் தாக்குதலைத் தடுக்கிறது.
பல்வலி, உடல்நோவு, ஃப்ளு, தசைவலி
ஆகியவற்றிலிருந்து நிவாரணமளிக்கிறது.

பல நிறங்கொண்ட



## ஸால்ஜான்

நோவுகளிலிருந்து துரிதமான
நிச்சயமான, அபாயமில்லாத
நிவாரணம் அளிக்கிறது.

கே: ஸால்ஜான் பல நிறங் கொண்டதாகத் தயாரிக்கப்படுவது ஏன்?
ப: ஒரு தலைசிறந்த நோவு நிவாரணியை நீங்கள் சுலபமாகக் கண்டு கொள்வதற்காகத்தான்!

ஒரு ஸ்மித், ஸ்டானிஸ்ட்ரீட் தயாரிப்பு

EP-SS-18

உ[...]க்கியது இந்த.... அதற்கு என்ன பெயர் சொன்னீர்கள்?''

''தொழில் வர்த்தக சாம்ராஜ்யம்.''

''எஸ்! நான் நியாயமான பெருமை அடைகிறேன்.''

''அறிவு, திறமை, சாமர்த்தியம் என்பதோடு இன்னும் இரண்டு மூன்றை விட்டு விட்டாயே!''

''என்ன அவை?''

''பார்த்த உடனே எல்லாரையும் போட்டி போட்டுக் கொண்டு உனக்கு உதவ முன்வரச் செய்கிற போதை தரும் உன் அழகு, தலையில் ஐஸ் வைப்பது போன்ற உன் குளுமை யான பேச்சு, போதாக்குறைக்கு லஞ்சம், ஊழல், சூழ்ச்சி, காக்டெய்ல் பார்ட்டி — இத்தியாதி...''

சாரு ரொம்பவும் ரசித்துச் சிரித்தாள். ''ஆல் இன் தி கேம் டாக்டர்!'' என்றாள்.

* * *

வேணுகோபால் எஸ்டேட் பங்களாவைச் சுற்றி யிருந்த தோட்டத்தில் உலாவிக் கொண்டிருந்தான். அங்கு பூத்துக் குலுங்கிய நூற்றுக்கணக்கான ரோஜா மலர்களும் நூற்றுக்கணக்கான சாருலதாக்களாகக் காட்சி அளித்து அவனைக் கிறுகிறுக்கச் செய்தன! அந்தத் தவிப்பைத் தாங்க முடியாமல் ஒரே ஒரு மலரை மட்டும் பறித்துக் கரத்தில் ஏந்தி அழகு பார்த்தான்.

அந்த ஒரு மலரின் ரத்தச் சிவப்பு நிறம் செவ்வரி ஓடும் சாருலதாவின் ஆரோக்கியமான கண்களை அவனுக்கு நினைவூட்டின. இதழ்களின் மென்மை அவளது பட்டுக் கன்னங்களையும், அதில் படிந்திருந்த பனி ஈரமான அவளது அதரங்களையும், அதன் சுகந்தம் அவள் அசையும் போதெல்லாம் எழும் சானல் — 5 செண்ட்டின் நறுமணத்தையும், அதன் மையத்திலுள்ள மகரந்தத் துகள்கள் அவளது கலகலப்பான சுபாவத்தையும், அத்துகள்களின் மஞ்சள் நிறம் அவளது பொன்னுன மேனியையும் ஞாபகப்படுத்தின. நன்கு உரமிடப்பட்டு உதகையின் இதமான சூழலில் செழித்து மலர்ந்திருந்த ரோஜா அவளது பொங்கும் இளமையுடன் கூடிய வாளிப்பான உடற்கட்டின் உருவகமாகத் தோன்றியது. அதன் புதுமையோ மதுரமான எண்ணங்களை அவன் உள்ளத்தில் கிளர்ந்தெழச்செய்து திக்குமுக்காட வைத்தது.

நல்ல வேளையாக அதே சமயம் ஒரு முள் நறுக்கென்று குத்தவே வேணு ரோஜாவை மறு கரத்துக்கு மாற்றி விட்டு விரல்களை உதறினான். 'நட்பு என்ற எல்லையைத் தாண்டினால் தற்காப்பு நடவடிக்கை எடுக்க நேரிடும்' என்று சாரு சொன்னது அவனுக்கு நினைவு வந்தது. மெல்லச் சிரித்துக் கொண்டே 'கெஸ்ட் ஹவுஸ்' வாசலைப் பார்த்தான். 'சாரு இன்னும் வரவில்லையே!'

சாருவும் வேணுவும் எஸ்டேட்டுக்கு வந்து மூன்று மணி நேரத்துக்கு மேலாகி விட்டது. குளித்து மாற்றுடை தரித்து வந்ததும், ''எங்கேயாவது வெளியே போய்ச் சுற்றி விட்டு வரலாம்'' என்றான் வேணு.

''கொஞ்சம் இருங்கள். மற்ற 'கெஸ்ட்'களும் வந்து விடட்டும். உபசாரமாக நாலு வார்த்தை பேசி விட்டுக் கிளம்புகிறேன்'' என்றாள் சாரு.

எஸ்டேட்டின் மையத்தில் முதலாளிக்கென ஒரு பங்களாவும் கெஸ்ட் ஹவுஸ் ஒன்றும் இருந்தன. இரண்டுமே தாராளமானவை. சற்று நேரம் வேலைக்காரர்களுக்கு உத்தரவிடுவதிலும் பங்களா, தோட்டம் ஆகியவற்றைச் சுற்றிப் பார்ப்பதிலும் செலவிட்டாள் சாரு. அப்புறம் புதிய சீட்டுக் கட்டை உடைத்து 'டிக்ளேர்' ஆடத் தொடங்கினார்கள். இரண்டாவது ஆட்டத்தின் போது கார்கள் பல உறுமிக் கொண்டே வரும் சத்தம் கேட்டது.

''தளபதியைத் தேடிப் பட்டாளம் வந்து விட்டது; நான் தோட்டத்தில் இருக்கிறேன்'' என்று சொல்லிவிட்டுக் கிளம்பினான் வேணு.

ஆனால் அவன் போர்ட்டிகோவைத் தாண்டு முன்னர் விருந்தினர் பலர் படியேறி விட்டார்கள். சற்று நேரம் மரியாதைக்குத் தாமதிக்க வேண்டிய தாயிற்று.

காரிலிருந்து இறங்கிய மணி, ''சாஆஆருஊஊ!'' என்று நீட்டி முழக்கிக் கூப்பிட்டு, ''லெட் அஸ் நாட் வேஸ்ட் எனி டைம்'' என்று அவசரப்பட்டான், பாட்டிலைத் திறக்க. டாக்டரைத் தவிர எல்லாரும் 'கொல்' லென்று சிரித்தார்கள். 'அதிகபட்சம் இன்னும் மூன்று மாதங்கள். பிறகு கல்லீரல் கோளாறு காரணமாக ஆஸ்பத்திரிக்குப் போகப் போகிறான் மணி' என்பது டாக்டர் வேணுவுக்குத் தெரியும். அதை இப்போது சொன்னால் மணி தன்னைக் கேலி செய்து சிரிப்பான் என்பதும் தெரியும். வாய் திறக்கவில்லை அவன். விருந்தினர் ஒவ்வொருவராய் வரவேற்பு அறையில் நுழைந்து தங்கள் தங்கள் சௌகரியங்களைக் கவனித்துக் கொண்டார்கள்.









ஜெர்மானியனான காஃப்மான் கேட்டான்: "சாரு! சாம்பெய்ன் பாட்டிலைத் திறக்கத் தெரியுமா உனக்கு?"

ஜெர்மானிய நிறுவனம் ஒன்றின் ஒத்துழைப்புடன் காமிராக்கள் உற்பத்தி செய்யத் தொடங்கியிருந்தாள் சாரு.

அவன் கேள்விக்குப் பதிலாக, "லைக் தி பெஸ்ட் பார்மெய்ட் யு ஹாவ் எவெர் ஸீன்!" என்றாள் சாரு.

"ஆர் தி வொர்ஸ்ட்" — பளிச் சென்று சொன்னான் அந்த ஜெர்மானியன் கண்களைச் சிமிட்டியபடியே.

அப்படி அவன் கூறியதன் உட்பொருள் அந்தக் கூட்டத்தில் இருந்த சிலருக்குத்தான் புரிந்தது. அவர்கள்— சாரு உட்பட — பெரிதாகச் சிரித்தார்கள். அதே சமயம் 'டப்'பென்ற ஒலியுடன் பாட்டில் திறந்து கொள்ள மது வழிந்தது. "ஓஹோ ஹோ!" என்ற உற்சாகமான வரவேற்பொலிகள் எழுந்தன. நகைச்சுவை புரிந்தும்கூடச் சிரிக்காமல் எழுந்து வெளியேறியவன் வேணு ஒருவனே. அவன் போனதை யாருமே கவனிக்கவில்லை.

மேனாட்டு மதுக் கடைகளில் மது விற்கும் பெண்களில் பலர் நடத்தை கெட்டவர்களாகவும் இருப்பார்கள் என்பது வேணுவுக்குத் தெரியும். 'உனக்குத் தெரிந்த 'பார் மெய்ட்'களில் சிறந்த ஒருத்தியைப் போல் அத்தனை லாகவமாக நான் சாம்பெய்ன் பாட்டிலைத் திறப்பேனாக்கும்' என்று சாரு கூறியதற்குப் பதிலாக 'மிக மோசமான ஒருத்தியைப் போல என்றும் சொல்லலாம் அல்லவா?' என்றான் காஃப்மான். நடத்தையில் மோசமான மது விற்கும் மங்கை, மது பாட்டிலைத் திறப்பதில் நன்னடத்தை உள்ளவளைவிட அதிக தேர்ச்சி பெற்றிருப்பாள் என்ற கருத்தில் கிண்டலாகப் பேச்சுவாக்கில் காஃப்மான் கூறினான். அயல்நாட்டிலிருந்து வந்த ஒருவனுடைய அயல்நாட்டு ஹாஸ்யம் அது. அவன் மனத்தில் தவறான எண்ணம் எதுவுமே கிடையாது. இது சாருவுக்கு மட்டுமல்ல, வேணுவுக்கும் தெரியும். ஆனால் சாரு சிரித்து மகிழ்ந்தது போல் வேணுவால் முடியவில்லை.

* * *

**சா**ரு வருவாள் என்று தோட்டத்தில் கால் மணி நேரத்துக்கு மேல் காத்திருக்க இயலாதவனாய் நிலை கொள்ளாமல் பரபரத்தான் வேணு. உள்ளே நிலவிய சூழ்நிலை வேறு அவன் பொறுமையைச் சோதித்தது. பின்புறமாகப் போய்ச் சமையலறைப் பக்கம்

எட்டிப் பார்த்துப் பட்லரிடம் சொல்லி அனுப்பினான். அதற்குப் பலன் இருந்தது. ஐந்து நிமிஷங்களில் சாரு வந்தாள்.

''ஊற்றிக் கொடுத்தது போதும்; வா, போகலாம்!'' என்றான் வேணு.

''இன்னும் சரியாகப் பத்து நிமிஷங்களில் வந்து விடுகிறேன்.''

''அவர்களுக்குப் பாட்டில் தான் தேவை. உன்னைப் பற்றிய அக்கறை இல்லை.''

''பெரும்பாலும் நீங்கள் சொல்வது உண்மைதான். ஆனால் மேல்நாட்டினர் சிலரும் இருக்கிறார்கள். 'ஹோஸ்ட்' டைக் காணோம் என்றால் தப்பாக எடுத்துக் கொள்வார்கள். லெட் மி கெட் தி பார்ட்டி கோயிங்! அப்புறம் அவர்களிடம் விடைபெற்றுக்கொண்டே வந்து விடுகிறேன்.''

சரியாகப் பதினோரு நிமிஷத்தில் சாரு வேணுவிடம் வந்து விட்டாள். ''எங்கே போகலாம்? பொடானிகல் கார்டன் ?''

''சாரு, நமக்குள் ஒரு பந்தயம்!''

'' என்ன?''

'' யார் முதலில் மற்றவரைப் பற்றிக் குறை சொல்கிறார்களோ அவர்கள் தோற்றதாக அர்த்தம்!''

''ஐயய்யோ! அப்படியானால் நாம் என்னத்தைப் பேசுவது?''

''சாரு, நான் உன் பிஸினஸ்ஸை மறந்து விடுகிறேன். நீ என் நோயாளிகளை மறந்து விடு! நம் இருவருக்கும் பொதுவாகப் பிடித்தமான விஷயங்கள் ஏதேனும் இருக்கிறதா என்று ஆராயலாமே!''

'' ஆல் ரைட்; ஆனால் எனக்கென்னவோ நம்பிக்கையில்லை'' என்று சொல்லிக்கொண்டே காரை 'ஸ்டார்ட்' செய்தாள் சாருலதா.

* * *

மாலை சுமார் நான்கு மணிக்கு அவர்கள் எஸ்டேட்டுக்குத் திரும்பினார்கள். பங்களா வாசலில் பசும்புல் தரையில் மேஜை நாற்காலிகளைப் போட்டு உட்கார்ந்து கொண்டிருந்தனர் ஐரோப்பியர் நால்வர். மேஜையின் மேல் 'ஆஷ்டிரே'யில் சில சிகரெட் துண்டுகளும் அருகே ஒரு கண்ணாடி ஜாடியில் ஐஸ் மிதக்கும் ஆரஞ்சு ஜூஸும் இருந்தன. சட்டையைக் கழற்றி விட்டுக் குளுமையான சூழ்நிலையில் இதமான சூரிய ஒளி தேகத்தைத் தழுவ அந்த ஆனந்



'' மாடிப் படியில் கொலு வைத்து விட்டாள் என் மனைவி.''



'' வருஷா வருஷம் கொலு வைப்பதும் எடுப்பதும் கஷ்டமாக இருக்கு என்று கொலு போட்டோவை இந்த ஒன்பது நாளும் மாட்டி பூஜை போட்டு விடுகிறாள் என் ஒய்ப்!''




''சிறைச்சாலையில் கைதிகள் ஆயுத பூஜையைச் சிறப்பாகக் கொண்டாடப் போகிறோம். என்னிடமிருந்து பறிமுதல் செய்த கன்னக்கோல், சுத்தி, கொரடா, பழைய சாவிக் கொத்துக்களைத் திருப்பித்தர வேண்டுகிறேன்.''



''தலை உடைந்து போன பொம்மைக் கெல்லாம் தலையை நானே, பசை போட்டு ஒட்டிட்டேன்!''

— சுதர்ஸன்



**மீண்டும் தொல்லை-மறுபடியும் நெய்!**

குண்டாக இருப்பவர்கள் குதூகலமாக இருப்பதாகக் கண்டுபிடித்திருக்கிறார்கள். ஆனால் இவர்கள் குண்டாக ஆகிவிட்டதால் குதூகலமாக இருக்கிறார்களா, அல்லது குதூகலமாக இருப்பதால் குண்டாகி விடுகிறார்களா? இதுமட்டும் இன்னும் புரியவில்லே. 'வீக்கெண்ட்' — 'முத்து.'

தந்தை அநுபவித்தபடி நிதானமாகச் சீட்டாடிக் கொண்டிருந்தனர்.

சாரு. காரிலிருந்து இறங்கி வருவதைப் பார்த்ததும், ''என்ஜாய்ட் யுவர் செல்வ்ஸ்?'' என்று கேட்ட அவர்களில் ஒருவர் எழுந்து வந்தார். ''சாரு! உன் வீட்டைக் கொஞ்சம் சுத்தப்படுத்த வேண்டியிருக்கும்; பட்லருக்குச் சொன்னேன். அவன் கொஞ்சம் பயப்படுகிறான்'' என்றார் ஆங்கிலத்தில்.

சாரு புரிந்து கொண்டவளாகத் தலையாட்டினாள். புன்னகையுடன் '' நான் கவனிக்கிறேன் '' என்று சொல்லிவிட்டு நகர்ந்தாள்.

உள்ளே குறட்டை ஒலி கிளம்ப ஒருவன் சோபாவில் சாய்ந்து கிடந்தான். இன்னொருவன் தரையிலேயே உருண்டு விழுந்திருந்தான். மற்றுமொரு விருந்தாளி மதுக் கிண்ணத்துடன் வாய் எங்கே என்று கைக்குத் தெரியாமல் தடுமாறிக் கொண்டிருந்தான். அவர்களில் யாரோ ஒருவன் அறையின் நட்ட நடுவில் ரத்தினக் கம்பளத்தின் மீது வயிற்றைக் குமட்டியதால் அசிங்கப்படுத்தி யிருந்தான். வேறு பலர் தத்தம் அறைகளுக்கோ அல்லது வெளியேயோ சென்றிருக்க வேண்டும்.

அருவருப்பினால் வேணுவுக்கு நெஞ்சை முறுக்கியது. சாரு சற்றும் திகைப்போ தயக்கமோ இன்றிச் செயலாற்றினாள். மணி அடித்து, பட்லர் வந்ததும் நாலு ஆட்களை உதவிக்கு அழைத்து வரச் சொன்னாள். பாட்டில்களை மூடி அலமாரியில் அடுக்கிப் பூட்டினாள். கம்பளத்தைச் சுருட்டி எடுத்துப் போய்ச் சுத்தப் படுத்துமாறும் வேறு விரிப்பு கொண்டு வந்து போடுமாறும் உத்தரவிட்டாள்.

''டாக்டர்! வில் யு பிளீஸ் ஹெல்ப் மீ ?'' என்று கேட்டுக் கொண்டே கீழே விழுந்து கிடந்தவனின் கால்களைப் பற்றித் தூக்கினாள். கொஞ்சமும் பிடிக்காமலேயே வேணு அவன் தோள்களைப் பற்றிச் சுமந்தான். மதி இழந்த நிலையில் இருந்த மூவரையும் அவரவர் அறைக்குக் கொண்டு சேர்க்கப் பணியாட்களும் உதவினார்கள். சாருவுக்கு இருந்த மனோ திடத்தையும் உடல் வலிமையையும் வேணு நினைத்து வியந்து முடிப்பதற்கு முன்பே அவள், ஒன்றுமே நடக்காதது போல, ''வேணு ! குளித்து விட்டு வந்துவிடுகிறேன் ; சரியாக ஆறு மணிக்குச் சாப்பிட உட்கார்ந்து விடலாம். ஐரோப்பியர்களுக்கு 'டின்னர்' சீக்கிரம் முடித்துவிட வேண்டும்'' என்றாள். கூடவே, ''பட்லர்! ஐயாவுக்குக் குளிக்க ஹீட்டரில் வெந்நீர் போட்டிருக்கா பார்! டவல், சோப்பு எல்லாம் எடுத்துக் கொடு'' என்று உத்தரவு போட்டுக் கொண்டே தன் அறைக்குள் சென்று மறைந்து விட்டாள்.

வேணு தனக்கென்று ஒதுக்கப்பட்டிருந்த பகுதிக்குச் சென்று, சட்டையைக் கழற்றலாம் என்று பித்தானை அவிழ்க்கப் போனான். யதேச்சையாகச் சுவரில் தொங்கிய காலண்டரில் அவன் பார்வை பதிந்தது. மகாத்மா காந்தியின் படம் ! பன்னிரண்டு மாதங்களுக்கு, கைதேர்ந்த ஓவியனால் தீட்டப்பட்ட அண்ணலின் ஆறுவித வண்ணப் படங்கள் அச்சடிக்கப்பட்டிருந்தன.

ஒரு சில விநாடிகள் அந்தக் காலண்டரைப் புரட்டிப் பார்த்த வேணு, சட்டென்று அதை ஆணியிலிருந்து நீக்கினான். சுருட்டித் தன் பெட்டியில் வைத்தான். வெளியே இறைந்து கிடந்த இரண்டொரு துணிமணிகளையும் பெட்டியில் எடுத்துப் போட்டு மூடினான்.

முன் வாசல் அறைக்கு அவன் வந்த போது அங்கே சற்று முன் அவன் கண்ட அலங்கோலம் இல்லை. எல்லாம் கச்சிதமாக, சுத்தமாகக் காட்சி அளித்தன. மதுவின் நாற்றம்கூடக் காற்றில் இல்லை. வாசனைத் திரவியம் ஏதோ 'ஸ்பிரே' செய்யப்பட்டுச் செயற்கையான ஒரு நறுமணம் கமழ்ந்து கொண்டிருந்தது !

வேணு தனக்குள் சிரித்துக்கொண்டே வாசலில் இறங்கி நடந்தான்.

புல்வெளியில் சீட்டாடிக் கொண்டிருந்த ஐரோப்பியரில் ஒருவர், ''என்ன, மறுபடியும் வெளியே கிளம்பி விட்டீர்களா ?'' என்றார்.

''ஆமாம், இந்தத் தடவை சென்னைக்கே கிளம்பி விட்டேன்'' என்றான் வேணு, தன் கையிலிருந்த பெட்டியைத் தட்டிக் காட்டி. (தொடரும்)

அத்தியாயம் 3

# எழிலரசிக்கு ஓர் ஏமாற்றம்!

சாப்பாட்டு மேஜையும் அதைச் சுற்றி இருந்த நாற்காலிகளும் மிகுந்த வேலைப்பாடுகளுடன் கூடியவை. தொல் பொருள் கண்காட்சியில் இடம் பெற வேண்டியவை. அந்தப் பங்களாவின் மற்ற அறைகளைப் போலல்லாது சாப்பாட்டு அறை மட்டும் பழங்காலப் பொருள்களாலேயே அலங்கரிக்கப்பட்டிருந்தது.

சாருவுக்கு வசதியாக நாற்காலியை இழுத்துப் பிடித்து, அவள் அமர்வதற்கு முன்னால் மேஜைக்கருகே அதைத் தள்ளி உதவி செய்த ஜெர்மானியன் காஃப்மன், அவள் பக்கத்திலேயே மற்றொரு நாற்காலியில் உட்கார்ந்தான்.

''சாரு! இந்த அறையில் நீ இருப்பது பொருத்தமாகவே இல்லை'' என்றான் ரோஜர்ஸ். அவன் ஒரு பிரிட்டிஷ் பிரஜை. இந்தியப் பிரஜைகள் ஓரிருவரும் சாப்பிட அமர்ந்திருந்தார்கள்.

''ஏன் அப்படிச் சொல்கிறாய்?'' என்றாள் சாரு, 'நாப்கின்'னை எடுத்து மடியில் விரித்தவாறே.

''உன்னை இந்தியாவின் நவீன கால நங்கைக்கு ஓர் உதாரணமாகக்கூட நான் கருதவில்லை. எதிர்கால இந்தியாவில் பெரிய சாதனைகளைப் புரியப் போகிற பெண் இனத்தின் பிரதிநிதியான ஓர்எழிற் பாவையாகவே நினைக்கிறேன்'' என்று மனப்பூர்வமாகக் கூறிய அவன் தொடர்ந்தான்: ''அப்படிப்பட்ட நீ சரித்திரகாலப் பொருள்கள் நிறைந்த இந்த அறையில் உட்கார்ந்திருப்பது விநோதமாக இருக்கிறது.''

சாரு சிரித்தாள். ''உங்களுக்கு இந்த அறையின் அலங்காரம் பிடித்திருக்கிறதா? இந்த எஸ்டேட்டை வாங்கிய சமயம் பம்பாயிலிருந்து ஒரு பார்ஸிப் பெண் என்னைக் காண வந்திருந்தாள். 'இன்டீரியர் டெகரேஷ'னில் அவள் நிபுணத்துவம் பெற்றவள். 'உன் திறமையைக் காட்டு' என்று சொல்லி அவளை இங்கு அனுப்பி வைத்தேன். சாப்பாட்டு அறையை இப்படிப் பழங்காலப் பாணியில் அமைப்பதுதான் இன்றைய நவீன நாகரிகமாம். இந்த அறைக்கு மட்டும் பத்தாயிரம் ரூபாய் 'எஸ்டிமேட்' போட்டாள்.''

''கொடுக்கலாம், தகும்'' என்றான் காஃப்மன்.

அப்போது சாருலதாவின் பட்லர், ரொட்டிகள் அடங்கிய அழகிய சிறு கூடை ஒன்றை எடுத்துக் கொண்டு வந்தான்.

''மோகன்! ஏன் டாக்டர் வேணுகோபாலுக்குத் தட்டு வைக்கவில்லை? அவர் அறைக்குப் போய் நாங்கள் சாப்பிடக் காத்திருக்கிறோம் என்று சொல்லு!'' என்று உத்தரவிட்டாள் சாரு.

பட்லருடன் அவள் தமிழில் பேசவே, ''வேணுகோபாலைப் பற்றியா அவனைக் கேட்கிறாய்?'' என்றான் ரோஜர்ஸ்.

''இன்னும் இரண்டு நிமிடங்களில் வந்துவிடுவார்; நாம் காத்திருக்க வேண்டாம். ஆரம்பிக்கலாம்'' என்றாள் சாரு.



சாருலதா

கி.ராஜேந்திரன்

''என்ன? உனக்குத் தெரியாது? அவர் சென்னைக்குக் கிளம்பிப் போய் விட்டாரே! உன்னிடம் சொல்லிக் கொண்டுதான் புறப்பட்டார் என்று நினைத்தோம்!''

''ஓ! என்ன முட்டாள் நான்! மறந்தே போனேன்!'' என்று நெற்றியில் கையை வைத்து மென்னகை புரிந்தாள் சாரு. ''அவருக்கு டிரங்கால் வந்தது. பேஷண்ட் ஒருவனுக்குத் திடீரென்று நிலைமை கவலைக்கிடமாகிவிட்ட

நாம். அவசரம் அவசரமாகக் கிளம்பினார். அது சரி உங்களுக்கு வேண்டிய அளவு ஓய்வு கிடைத்ததா? நாளைக்கு 'கால்ஃப் லிங்க்ஸ்' போகலாம். கால்ஃப் கிளப்பில் செயற்குழு அங்கத்தினர் நான். அல்லது 'ரோயிங்' உங்களுக்குப் பிடிக்குமானால் இரண்டு படகுகளை ரிசர்வ் செய்து விடுகிறேன்...''

பனிக்கட்டியாக இருதயம் உறைந்து போன பிறகும் கைகால்கள் சில்லிட்ட பின்பும் எப்படித் தன்னால் அவற்றையெல்லாம் மறைத்துக் கொண்டு பேச முடிகிறது என்பது சாருலதாவுக்கே ஆச்சரியமாக இருந்தது. அப்படியே தொடர்ந்து சாப்பாடு முடியும்வரை அரை மணி நேரம் அழகாகப் பேசிச் சிரித்தாள்; சாப்பிடவும் செய்தாள். விருந்தினர் உண்ட களைப்புடன் சிகரெட், சிகார் சகிதம் 'டிராயிங் ரூமில்' உட்கார்ந்தார்கள். அருமையான பட்லரைக் கண்டுபிடித்து நியமித்ததற்காகச் சாருலதாவைப் பாராட்டினார்கள்.

''இஃப் யூ வில் எக்ஸ்கியூஸ் மீ'' என்று பண்பு குலையாமல் இப்போது சொல்லிக் கொண்டு தன் அறைக்குச் சென்றாள் சாரு. ஒரு நிமிஷம் அங்கு நாற்காலியில் விரைப்பாக நிமிர்ந்து உட்கார்ந்தாள். 'ஒரு வார்த்தை போய் வருகிறேன் என்று சொல்லிக் கொண்டு கிளம்ப முடியாமல் அப்படி என்ன நடந்து விட்டது இங்கே?'

அவளுக்கு உள்ளத்தை — உடலை என்னவோ செய்தது. என்ன செய்கிறது என்று அவளுக்கே புரியவில்லை. இப்படி எதுவுமே ஓடாமல் ஒன்றிலும் ஒட்டாமல் எதுவுமே பிடிக்காமல் எதிலுமே நாட்டமில்லாமல் ஓரிடத்தில் தான் அசைவற்று அமர்ந்திருந்ததே கிடையாது. இது தன் சுபாவத்துக்கு மாறுபட்டது என்பது திடீரென்று அவளுக்கு நினைவு வந்தது! விருட்டென்று எழுந்தாள். டிரெஸிங் டேபிள் மீது இருந்த அலங்கார டம்பப் பையை எடுத்துக் கொண்டாள். அறைக் கதவைச் சாத்திவிட்டுப் பங்களாவின் பக்கவாட்டில் இருந்த வாசல் வழியாக 'ஷெட்'டை அடைந்தாள்.

அடுத்த இரு விநாடிகளில் அவள் கார், தோட்டத்தின் தார் போட்ட சாலையை அரைத்துத் தள்ளும் சீற்றத்துடன் கிளம்பியது. சாதாரணமாக முக்கால் மணி நேரத்தில் உதகை நகரைச் சென்றடைய வேண்டிய கார் அரை மணியில் அதைச் சாதித்துவிட்டது.

இருள் கவிந்து கொண்டு வந்தது. வழியில் ஆள் நடமாட்டம் இல்லை. ஒரே ஒரு காரை முந்திக் கொண்டு சென்றதாக ஞாபகம். 'அவர் உதகைக்கு எப்படிப் போயிருப்பார்? பஸ்ஸிலா? ஏதாவது லாரியில் தொத்திக் கொண்டிருப்பாரோ? அவசரமானால் காரை எடுத்துக் கொண்டு போகக் கூடாது? டிரைவர் தேவை என்றாலும் அனுப்பியிருக்கலாமே?'

பஸ் ஸ்டாண்டை நெருங்கியதும் காரை நிறுத்தி விட்டுப் பிரயாணிகள் இங்குமங்குமாக நின்று கொண்டிருந்த இடங்களிலெல்லாம் தெரு விளக்கின் மங்கிய ஒளியில் வேணுகோபாலைத் தேடினாள் சாரு. ''ஜட்கா வேணுமா, அம்மா?'' என்று கேட்டான் ஒருவன். நின்று கொண்டிருந்த பஸ்களுக்குள்ளும் ஏறித் தேடித் துருவினாள். அவள் இப்படி யாரையோ தேடி அலைவது அவளுடைய செல்வச் செழிப்பான தோற்றத்துக்கு ஒத்து வராத காரணத்தாலோ என்னவோ, ஒரு விசித்திரப் பொருளை நோக்குவது போல் பலர்



அ... பார்த்தார்கள். ஆ... ...காக் கா...ன் ஒருவனைத் தவிர வேறு யாருக்கும் அவரிடம் பேசும் துணிவு கூட ஏற்படவில்லை. பஸ் ஸ்டாண்டில் வேணு இல்லை என்பது பத்து நிமிஷங்களில் வெட்ட வெளிச்சமாகி விட்டது. மேட்டுப்பாளையம் போகும் ரயில் ஏதும் அப்போது கிளம்பாது என்று சாருவுக்கு நன்றாகத் தெரியும். ஆனாலும் ஸ்டேஷனுக்குப் போய்த் தேடினாள். திடீரென்று ஒரு சந்தேகம். ஏதாவது ஹோட்டலில் போய்த் தங்கியிருப்பாரோ? சவாய் ஹோட்டலுக்குப் போய் விசாரித்து விட்டு, அங்கிருந்து மற்ற ஹோட்டல்களுக்கு டெலிபோன் செய்து கேட்டாள். வேணு கோபால் என்ற பெயர் கொண்ட யாருமே அங்கெல்லாம் அன்று வரவில்லை.

'ஒருவேளை அவர் உதகை நகருக்கு வந்து சேரு முன்



நாம் வந்து விட்டோமோ? இனிமேல் தான் பஸ் ஸ்டாண்டுக்கு அவர் வந்து சேர்வாரோ?' மறுபடியும் பஸ் ஸ்டாண்டுக்குப் போனுள் சாரு. அரை மணி நேரத்துக்குப் பின், வேணு ஊட்டியிலிருந்து கீழே இறங்கியாகி விட்டது என்பதை அவள் மனம் வேதனையுடன் ஒப்புக் கொண்டது. இரவோடு இரவாகவே அவர் சென்னை திரும்பலாம்; அல்லது மேட்டுப்பாளையத்திலோ கோவையிலோ தங்கி, நாளைக் காலை போகலாம். 'எப்படியானுல் என்ன? எனது விருந்தினராக வந்தவர் என்னிடம் சொல்லிக் கொள்ளாமல் என்னை விட்டுப் பிரிந்து போய்விட்டார்!'

பஸ் ஸ்டாண்டிலிருந்து ஏரிக்கரை ஓரமாகச் செல்லும் சாலையில் காரை மெதுவாக ஓட்டிச் சென்றுள் சாரு. ஏன், எதற்கு என்று தெரியாமலேயே போட் ஹவுஸ் அருகில் கார் நின்றது. 'மாலை நாலு மணி சுமாருக்குப் படகிலேறி ஏரியைச் சுற்றிவிட்டுக் கரையோரம் ஒதுங்கியபோது நான் படகை விட்டு இறங்க வசதியாகக் கரையிலிருந்தபடி கைநீட்டி உதவினுரே! தரையில் நான் இரண்டு கால்களையும் ஊன்றிய பிறகும் என் கரத்தை விட மனமில்லாதவராக — ஆனுல் மறந்துவிட்டவர்போல் நடித்து — சற்று நேரம் சிரித்துப் பேசியபடியே பிடித்துக் கொண்டிருந்தாரே! அதற்குள் அவருக்கு என்ன வந்து விட்டது?'

காரை நிறுத்தி விட்டு இறங்கினுள் சாருலதா. அதே விநாடியில் சொல்லி வைத்தாற்போல் மின்சார விநியோகக் கோளாறினுல் தெரு விளக்குகள் சட்டென்று அணைந்து விட்டன.

சுற்று வட்டாரத்தில் யாருமில்லை — ஒருவர்கூட இல்லை. 'டூரிஸ்டு'களை விளையாட்டாக ஏற்றிச் செல்லும் குதிரைகள், அவர்கள் விட்டெறியும் தின்பண்டத்தைக் கௌவிச் செல்லக் காத்திருக்கும் நாய்கள் - இவற்றில் மாதிரிக்கு ஒன்றைக்கூடக் காணேும். பட்சி ஜாலங்களின் குரலொலிகள் முழுமையாக அடங்கி விட்டிருந்தன. வானில் சந்திரன் இல்லை. ஒரு சில நட்சத்திரங்கள் அவளைப் பரிகசிப்பதுபோல் கண் சிமிட்டின. மற்றவை அவளைப் பார்க்கவே கூச்சப்பட்டு மரங்களின் பின்னல் மறைந்து கிடந்தன. நெடிதுயர்ந்த மரங்களின் உச்சாணிக் கிளைகளும் இருளோடு இருளாகக் கலந்து கரிய பெரிய பேயுருவங்களாகத் தோன்றின. சலனமற்ற ஏரி நட்சத்திர ஒளியைப் பிரதிபலித்து, பிரித்துப் போடப்பட்ட வெள்ளித் தகடாக மங்கலாய் ஒளிர்ந்து சுற்றிலும் சூழ்ந்திருந்த மையிருட்டின் பயங்கரத்தை அதிகரித்துக் காட்டியது. அந்த ஏரியிலும், மரங்களின் கரிய நிழல்கள் இருளையே இருட்டடிப்புச் செய்வது போல அப்பிக் கிடந்தன.

உயிரற்ற பாலைவனத்தைக் காட்டிலும் இரக்கமற்றதான ஒலியும் ஒளியுமற்ற ஓர் உலகில் தன்னந் தனியளாய்த் தான் தவிக்க விடப்பட்டது போல் சாருவுக்கு ஒரு பிரமை. உலகின் இருளெல்லாம் — மூலை முடுக்குகளில் முடங்கிக் கிடக்கும் இருள் உட்பட—ஒன்றுய்த் திரண்டு அவள்மீதே கவிந்துவிட மூச்சு முட்டித் திக்கித் திணறினுள் அவள்.

தன் சக்தியையெல்லாம் ஒன்று திரட்டி ஓடினுள். தலையிலிருந்து கால் வரை நடுங்கிக் கொண்டிருக்க எப்படிக் காருக்கு வந்து சேர்ந்தோம்? எப்படி அதை ஓட்டினேும்? எப்படிப் பங்களாவுக்கு வந்து சேர்ந்து தனது தனி அறையை அடைந்தோம் என்பதொன்றும் அவளுக்குத் தெரியவில்லை.

படுக்கையில் விழுந்து பிழியப் பிழிய அழுதது தெரிந்தது. அந்தக் கண்ணீர் உண்மை என்பது புரிந்தது. சாருலதா அழுவது நிஜம். பெரியதொரு தொழில் வர்த்தக சாம்ராஜ்யத்தின் தலைவி, ஐந்து கோடிக்கும் மேற்பட்ட சொத்துக்களுக்கு அதிபதி; ஈடும் இணையும் அற்ற பேரழகி என்று அனைவராலும் கருதப்படுகிற எழிலரசி — இங்கு பச்சைக் குழந்தையைப் போல் விசும்பி விசும்பி அழுவது சத்தியம்!

'ஏன் எதற்காக நான் அழ வேண்டும்?' என்று ஒரு வீம்புடன் நினைத்தாள் சாருலதா. அப்படி நினைத்த மாத்திரத்தில் அவள் அழுகை கட்டுக்கடங்காமல் மீண்டும் பெருக்கெடுத்தது!

### அத்தியாயம் 4

## அறிமுகம்: சாரங்கன்

மறுநாள் காலை குளித்து விட்டு வந்து அலங்காரம் செய்து கொள்ள மேஜை எதிரே அமர்ந்து கண்ணுடியைப் பார்த்த போது சாருலதா திடுக்கிட்டாள்.

'இது என்ன? நான் திடீரென்று இரவோடு இரவாகக் கிழவியாகி விட்டேனு? நான் காண்பது முதுமையின் ரேகைகளா? விசனத்தின் சாயலா?



ஜப்பானியப் பிரதமர் ஒரு நெடுஞ்சாலையைத் திறப்பதாக இருந்தது. "நீங்கள் திறப்பதைவிட அந்தச் சாலையைப் போட்ட ஒருவர் திறந்துவைத்தால் நன்றாக இருக்குமே?" என்று பிரதமருக்குப் பள்ளிச் சிறுவன் ஒருவன் கடிதம் எழுதினன். சாலையைத் தொழிலாளி ஒருவர் திறந்து வைத்தார்.

தகவல்: 'நாயக்' -- ஆதாரம்: ஹிம்மத்

அல்லது கண் சிவக்க அழுததன் பலனே?' தன் முகத்தையே பார்க்கப் பிடிக்காமல் அவள் வேறுபுறம் திரும்பிக்கொண்டாள். சற்று நேரத்துக்குப் பிறகு வைராக்கியமான ஒரு பிடிவாதத்துடன் மீண்டும் நிலைக்கண்ணாடியைச் சந்தித்தாள். அதில் தெரிந்த தன் உருவத்துடன் போராடத் தொடங்கினள்.

வழக்கத்தை விட அதிகமான நேரத்தை ஒப்பனையில் செலவழித்த போது பலன் கிட்டாமல் போகவில்லை. குதிரை ஓட்டுவதற்கான பிரத்தியேக உடை தரித்து அவள் வெளியே வந்த சமயம் எஸ்டேட்டில் வளர்த்து வரப் பட்ட நாலு குதிரைகளுள் ஒன்று முன்னமேயே உத்தரவிடப்பட்டிருந்தபடி வாசலில் கம்பீரமாகக் காத்திருந்தது.

அதனைக் கவனித்து வளர்ப்பவன் ஏற்கனவே பளபளவென்று இருந்த அதன் மேனியை பிரஷ் போட்டு நீவிவிட்டு மேலும் தகதகக்கச் செய்து கொண்டிருந்தான். குதிரை ஒரு முறை தும்மிச் சிலிர்த்தது.

சாருலதா அருகில் வந்தபோது சலாம் போட்ட பணியாள், அவள் குதிரையின்மேல் ஏற வசதியாகக் கடிவாளத்தைப் பிடித்துக் கொண்டு நின்ருன். "நம்மகிட்டே உள்ள குதிரைங்களிலே ரொம்பச் சாதுவானது இது தான்; தைரியமாக ஏறுங்க" என்ருன்.

சாருலதா தனக்குள் சிரித்துக் கொண்டாள். 'நாடு முழுவதும் பல ரேஸ் கோர்ஸ்களில் பிரபலமான ஜாக்கி, ஃபெர்னண்டஸ்ஸிடம் தான் குதிரை ஏற்றம் கற்றுக் கொண்டது, பாவம், இவனுக்கு எங்கே தெரியப் போகிறது?' இலேசாகப் பற்றி நீளமான லகானை இடது பாதத்தை அங்குபடியில் ஊன்றி லாகவமாக எம்பிக் குதிரை மேல் ஆரோகணித்த சாருலதா, இரண்டு கால்களாலும் அதன் வயிற்றை இடுக்கி போல் பிடித்து, விசையுடன் அழுத்தினள். அடுத்த கணம் குதிரை குளம்பொலி எழுப்பிக் குதிநடை போட்டுக் கனவில் தோன்றும் ஓர் எழில் காட்சி போல் பாய்ந்து சென்றது. திகைத்துத் திறந்த வாய் மூடாமல் நின்று கொண்டிருந்தான், அதன் காப்பாளன். 'டர்ப் கிளப்' அங்கத்தினர்களில் சாருலதா உயர் அந்தஸ்து பெற்ற ஒருத்தி; இரண்டு ரேஸ் குதிரைகளின் சொந்தக் காரி என்பதை யெல்லாம் அறிந்தானு அவன்? இன்றுதானே எஜமானி அம்மாளை முதன் முதலாகச் சந்திக்கிருன்?

எதிரே பட்லரைக் கண்டதும் குதிரையை இழுத்துப் பிடித்து நிறுத்தினள் சாரு. "நான் காப்பி சாப்பிட்டாச்சு. அறையிலிருந்து டீ ஸெட்டை எடுத்துக் கொண்டு போகலாம். விருந்தாளிங்க யாராவது எழுந்தாங்களா?" என்று கேட்டாள்.

'இல்லை' என்பதற்கு அடையாளமாக அவன் தலையசைத்தான்.

"யாரையும் எழுப்பக் கூடாது. ஆனல் அவங்க எழுந்ததும் பெட் காப்பி தரணும் சூடாக. எட்டரை மணிக்கு 'பிரெக் ஃபாஸ்ட் டேபிள்' தயாரா யிருக்கணும்!"

பதிலுக்குக் காத்திராமல் மேலே சென்றவள், தேயிலைத் தோட்டத்தினுள்ளேயே ஊடுருவிய பல மைல் நீளமுள்ள பாதைகள் சிலவற்றில் சுற்றி வந்தாள். குதிரைச் சவாரி செய்து தேகப்பயிற்சி பெற்றதன் காரணமாகச் சாருலதா பங்களாவுக்குத் திரும்பிய போது காலை இளஞ் சூரியனின் பொன்னிறக் கிரணங்கள் உதகையின் குளிர்ந்த சூழ்நிலையிலும் சுள்ளென்று உறைத்தன.

கீழே இறங்குவதற்கு முன்னல் அவள் குதிரையின் கழுத்தை நாலு தடவை தட்டிக் கொடுத்தாள்.

அதே சமயம் யாரோ கைதட்டிப் பாராட்டுவது கேட்கவே, வியப்பும் சினமும் ஆவல் குறுகுறுப்பும் ஒருங்கே எழ நிமிர்ந்து எதிரே பார்த்தாள். அந்த எஸ்டேட்டில் இதுவரை அவள் பார்க்காத ஒரு புதிய உருவம் கொஞ்சம் தாழ்ந்த மட்டத்தில் அவள் கண்களுக்குத் தட்டுப்பட்டது. உருண்டையான முகம். உதட்டுக்கு வேலி போட்டாற்போல் கருகருவென்று வளர்ந்

திருந்த மீசை. பொன்னரளி வேலியை வெட்டுவது போல் மீசையும் அளவாகக் கத்தரிக்கப்பட்டிருந்தது. நீங்காத புன்னகை. நிலையான பார்வை: அழுத்தமான நிறத்தில் டைட் பாண்ட்ஸ், கிரீம் கலரில் சில்க் சட்டை. கரும் புள்ளிகளுடன் கூடிய கண்ணைப் பறிக்கும் மஞ்சள் நிறத்தில் ஒரு மிருதுவான 'ஸ்கார்ப்' அவன் கழுத்தைச் சுற்றி வந்து முன்புறம் அடக்கமாகச் சட்டைக்குள் பதுங்கிக் கிடந்தது. அழகாக வாரி விடப்பட்டிருந்த அலை அலையான கேசத்தைத் தாங்கும் இரு தூண்களைப் போல் நீண்ட கிருதாக்கள் அவனுக்கு இருந்தன.

அவன் கைதட்டிப் பாராட்டியபடியே சுற்று முற்றும் பார்த்து, ''டைரக்டர் எங்கே? காமிராமேனைச் சட்டென்று கூப்பிட்டு இந்த ஃபிரேமைப் பார்க்கச் சொல்லுங்கள். இந்த 'டாப் ஆங்கி'ளில் 'டேக்' பிரமாதமாக அமையும்'' என்று சொன்னான்.

''டைரக்டராவது காமிராமேனாவது? என்ன உளறுகிறாய்?'' என்றாள் சாரு.

''அப்படியானால் நீங்கள் சினிமா நட்சத்திரம் இல்லையா?''

''நான்ஸென்ஸ்!''

''ஓ! ஐ ஆம் ஸாரி! இப்போதெல்லாம் ஊட்டிக்கு சினிமா தயாரிப்பாளர்கள் ஏராளமாகப் படையெடுக்கிறார்கள். நீங்கள் ரொம்ப அழகாக இருப்பதோடு படு அலட்சியமாகக் குதிரை ஓட்டுகிறீர்களா? ஏமாந்துவிட்டேன்.'' வலக்கரத்தில் இருந்த பிரம்பால் இடது உள்ளங்கையில் தட்டிக் கொண்டே பேசினான் அவன்.

சாரு தனக்கு ஏற்பட்ட பெருமித உணர்ச்சியை வெகு சாமர்த்தியமாக மறைத்துக் கொண்டு கீழே இறங்கினாள்.

''நீங்கள் சினிமா நட்சத்திரம் இல்லையென்றால் என்னுடைய 'பாஸ்' ஆகத்தான் இருக்க வேண்டும்.''

''நீங்கள்தான் சாரங்கபாணியா?''

''கரெக்ட்! எஸ்டேட் மானேஜர் அட் யுவர் சர்வீஸ்!'' ராணுவ பாணியில் அவன் கால்களை ஒன்றுசேர வைத்து 'டக்'கென்ற ஒலி யெழுப்பி விளையாட்டாக 'சல்யூட்' செய்தான். ''சாரங்கன்'' என்று அழைத்தால் போதும்; சுலபம்!''

''நேற்றே உங்களை எதிர்பார்த்தேன்.''

''நேற்று ஞாயிற்றுக்கிழமை; விடுமுறை தினங்களிலும் நான் உழைக்க வேண்டும் என்று நீங்கள் எதிர்பார்க்க மாட்டீர்கள் என்பது எனக்குத் தெரியும்!''



களங்கமில்லாமல் அவன் சிரித்த போது அவன் உதடுகளில் மட்டுமல்ல, அகன்ற கண்களிலும் குவிந்த கன்னங்களிலும் நெரிந்த புருவங்களிலும் சிரிப்பின் சாயல் மினுமினுத்தது. தொத்து நோய் போல் பரவுகிற சிரிப்பு அது. அவன் தைரியமாய்ப் பேசியது சாருவுக்குப் பிடித்திருந்தது.

புன்னகையுடன் அவள், ''எஸ்டேட்டைச் சுற்றிப் பார்ப்போமா?'' என்று கேட்டாள்.

''ஸர்ட்டன்லி! உங்கள் குதிரையிலேயே போவோமா? என் ஜீப்பில் செல்வோமா?''

சாருலதா அடக்கமாட்டாமல் சிரித்தாள். ''ஜீப்பிலேயே போகலாம். ஆனால் முதலில் டிபன் காப்பி சாப்பிட்டு விட்டுக் கிளம்புவோம்; வாருங்கள்'' என்றாள்.

நடிப்பான ஒரு மரியாதையுடன் ஜப்பானியப் பாணியில் குனிந்து நிமிர்ந்த சாரங்கன், ''ஆஃப்டர் யூ!'' என்றான் பங்களாவை நோக்கிக் கைநீட்டியபடி.

அவள் முன்னே செல்ல, அவளிடமிருந்து ஒதுங்கியும் ஒதுங்காமலும் மரியாதை காட்டுவது போலும் ஆனால் அதை மிகைப்படுத்தாமலும் நடந்து சென்றான் அவன். (தொடரும்)

**ம**லராடும் பூந்தென்றல் மகிழ்ந்தது போதுமென்று புனலாடச் செல்லும் பொழுது படர்ந்து கொண்டிருந்தது. வண்ணக் கதிர வனை வழியனுப்பி, வளர்பிறையாய் வருகை தந்த நிலா மங்கை, பூமகளுக்கு வணக்கம் சொன்னாள். இராப் போதின் அந்தத் தொடக்க நேரம் சுகமான காவியத்தின் சுவையான முன்னுரை போல் விளங்கியது.

அதோ...

அன்புக் காதலர் அடலேறு நடை போட்டு வருகிறார்!

மோகன நகை மறைந்தது; முத்துநகை மலர்ந்தது.

அகம் குளிர்ந்தும் முகம் சிவப்பானேன்? ஆசைக்கு அப்படியோர் அதிசய மாறுதலோ? ஒசிந்து ஓரக் கண்ணால் நோக்கினாள் முத்து நகை. அந்தப் பார்வையின் கூர்மையைத் தாள மாட்டாதவனாய், தவித்துப் போய் விட்டான் வேல் தாங்கி வந்து நின்ற வீரன் வீரய்யன். வெஞ்சமரில் வேல் தாங்கி அஞ்சாமல் போர் புரியும் அவனால் கஞ்ச மலர் முகத்திரண்டு கரிய பெரிய விழி வேல்களின் தாக்குதலைப் பொறுக்க மாட் டாமல் போனதென்ன?

முத்துநகை கலகலவென்று சுநாதக் குரல் எழுப்பினாள். "வந்ததும் வராததுமாக வாசற்படியில் வடித்த சிலை போல் நிற் பானேன்? வாருங்கள். உள்ளே!"

யாழோடு இணையும்போதுதான் தமிழ், இசையாக ஒலிக்க வேண்டு மென்பதில்லை. கற்புடைய மகளிர் கண்டத்திலும் அது இசையாகத்தான் வாழ்கிறது. இந்த உண்மை வீரய்யனுக்குத் தெரிந்திருக்க வேண்டுமே! அவன் ஆந்திரன்; எப்படியோ ஒரு தமிழ்ப் பெண்ணின் காதலைப் பெற்று விட்டான்.

கூடத்து ஒளிவிளக்கின் சுடர் நடம் புரிந்து கொண்டிருந்தது.

"அம்மா எங்கே, முத்துநகை?"

"கோயிலுக்குச் சென்றிருக்கிறார்கள்."

இருவரும் புறக்கடைப் பக்கமாகச் சென் றனர். சின்னஞ் சிறிய தோட்டம் போல் விளங்கிய புறக்கடையில் புற்கள் மண்டிக் கிடந்த ஓரிடமாகப் பார்த்து அமர்ந்தனர்.

அலங்காரத் திருமுகத்தை அண்ணாந்து நோக்கினாள் முத்துநகை.

"முத்து! உன் வேதனையை என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. அடுத்த வளர்பிறை யில் நம் திருமணம் நிச்சயம்!"

தெளிந்த தெலுங்கினூடே தெரிந்தவரை தமிழைக் கலந்துதான் சொன்னான் வீரய் யன். முத்துநகையும் ஓரளவு தெலுங்கு மொழியைத் தெரிந்து வைத்திருந்தாள்.



# போர்வீரன் காதலி

கோ.ஜி.மணிசேகரன்



# சாருலதா

**கி.ராஜேந்திரன்**

## அத்தியாயம் 5

# தலையாட்டிப் பொம்மை

நீலகிரி என்ற பெயரை மாற்றிப் பச்சைகிரி என்று அழைக்கத் தூண்டும் அளவுக்கு மலைச் சரிவு முழுதும் குப்பல் குப்பலாகக் கிள்ளிவிடப்பட்ட தேயிலைச் செடிகள். இப்படி ஒரு மலையா இரண்டு மலைகளா, அடுத்தடுத்து நூற்றுக் கணக்கான மலைகளை இளம் பச்சை நிறத்திலும் கரும் பச்சை நிறத்திலும் தேயிலைச் செடிகள் அப்பிக் கொண்டிருந்தன. இளம் பச்சை நிறச் செடிகள், துளிர்களைத் தொழிலாளர்கள் கிள்ளக் காத்து நின்றன. கரும் பச்சை நிறத் தேயிலைச் செடிகள் துளிர் விடத் தொழிலாளர் காத்திருந்தனர்.

''ஒரு தேயிலைச் செடி சுமார் எத்தனை ஆண்டுகள் பயன் அளிக்கும்?'' என்று கேட்டாள் சாருலதா. ஜீப்பைச் சாரங்கன் ஓட்டி வர அவனுக்குப் பக்கத்தில் அவள் அமர்ந்திருந்தாள். ஒரு விநாடி பாதையை விட்டுப் பார்வையைத் திருப்பிச் சாருலதா மீது கண்ணோட்டம் செலுத்தினான் சாரங்கன்.

''உங்களுக்கு அப்புறம் மூன்று நான்கு தலைமுறைகளுக்குக் கவலை இல்லை; பாஸ்! வேரூன்றி விட்ட எந்தத் தேயிலைச் செடியும் பிடுங்கி எறிந்தால் ஒழிய, செத்துப் போய் இதுவரை நான் பார்த்ததில்லை. இது ஒரு ''ஃபார்வெர்'' செடி. நுனியில் கிள்ளிக் கொண்டே இருந்தால் நிரந்தரமாகத் துளிர் விட்டுக் கொண்டே இருக்கும்; டீ ஃபாக்டரி இயங்கிக் கொண்டேயிருக்கும். உங்களுக்குப் பணம் வந்துகொண்டே இருக்கும்!''

''அப்படி ஒன்றும் பிரமாதமாகப் புரட்டி விட்டதாகக் காணோமே? இந்த எஸ்டேட்டை வாங்குவதற்கு முன்னால் மூன்று வருஷத்திய 'பாலன்ஸ் ஷீட்'களைப் பார்த்தேன். விசேஷமாகச் சொல்லும்படியாக லாபம் ஒன்றும் இல்லையே!''

''அது அப்படித்தான் பாஸ்! முன்பெல்லாம் தேயிலைத் தோட்ட முதலாளிகள் தேயிலையை மட்டும் கவனித்தார்கள். லாபத்தில் குறியாக இருந்தார்கள். இப்போது தொழிலாளர் நலனிலும் நீங்கள் சட்டப்படி சிரத்தை காட்ட வேண்டியிருக்கிறது. இங்கு வேலை பார்க்கும் நூறு தொழிலாளர்களுக்கும் வீட்டு வசதி, பள்ளிக்கூடம், ஆஸ்பத்திரி, நர்ஸரி, கோயில் குளம் அது இது என்று ஏகச் செலவு. போதாக் குறைக்கு விதம்விதமான ரசாயன உரங்கள், பூச்சி மருந்துகள், செயற்கை மழை போல் நீரைப் பொழியும் கருவிகள் என்று எதையெதையெல்லாமோ நம் தலையில் கட்டிப் பணத்தைப் பறித்துக் கொண்டு போய் விடுகிறார்கள். தேயிலைத் தோட்டங்களும் இப்போதெல்லாம் ஒன்றுக்குப் பத்தாகப் பெருகி விட்டன. ஆகவே, செலவினங்களுக்கு ஏற்பத் தேயிலையின் விலை ஏறவில்லை, பாஸ்!''

''சாரங்கன்! நீங்கள் என்னை 'பாஸ்' என்று கூப்பிடுவது எனக்குப் பிடிக்கவில்லை. சாரு என்றுதான் எல்லோரும் சொல்கிறார்கள். நீங்களும் அப்படியே அழைக்கலாம்.''

''ஓ.கே. சாரு!''

''பாஸ் என்று அழைக்காமலேயே நான் பாஸ் என்ற நினைவு உங்களுக்கு இருந்தால் போதும்!''

சாரங்கனுக்குக் குட்டுப் பட்ட உணர்ச்சியில் சட்டென்று கால் தடுமாறியது. விலகிச் சென்ற காலைப் பரபரப்புடன் மீண்டும் 'பிரேக்' மீது வைத்து அழுத்திக் காரை நிறுத்திய வேகத்தில் சாரு, முன்னாலிருந்த கண்ணாடியில் முட்டிக்கொள்ளாத குறையாகக் குலுங்கினாள்.

''ஸாரி சாரு! 'சார்' என்பதற்கும் 'சாரு' என்பதற்கும் அதிக வித்தியாசமில்லை. அதனால் உங்களை மரியாதைக்

குறைவாக அழைக்கும் எண்ணமும் ஏற்படவில்லை. பை திவே, உங்களுக்குத் தேயிலை பறிப்பதைக் காட்டலாம் என்பதற்காக ஜீப்பை நிறுத்தினேன்'' என்று சொல்லி முடிப்பதற்குள்ளாகச் சாரு கீழே இறங்கிப் பாதை ஓரமாகப் போய் நின்றாள். சாரங்கன் பின் தொடர்ந்தான். சற்றுத் தொலைவில் மலைச் சரிவில் பதினைந்து பெண்கள் விறு விறுவென்று இரு கைகளாலும் தேயிலைத் துளிர்களைக் கிள்ளிப் பின்னால் இருந்த கூடையில் திரும்பிப் பார்க்காமலேயே போட்டுக் கொண்டிருந்தார்கள். காயத் துக்குக் கட்டுப் போட்டது போல் நெற்றியைச் சுற்றிய ஒரு துணிப் பட்டையிலிருந்து பின்புறம் முதுகில் தொங்கிக் கொண்டிருந்தது கூடை. பட்டணத்திலிருந்து வந்த நவநாகரிகப் பெண் ஒருத்தியால் தாங்கள் உன்னிப் பாகக் கவனிக்கப்படுவதை உணர்ந்த தால் நாணத்துடன் புன்னகை புரிந்து கொண்டே, மானேஜரைக் கண்டதால் கும்பிடும் போட்டார்கள். பாதை ஓர மாக இருந்த செடியிலிருந்து ஒரு நுனி யைப் பறித்துச் சாருலதாவுக்குக் காட்டி னான் சாரங்கன். ''இரண்டு இலைகள் ஒரு இலை மொட்டு; — இதைத்தான் பறிக்க வேண்டும் அவர்கள். அதேசமயத்தில் இத னடியில் உள்ள இன்னொரு இலையையும் கிள்ளி எறிந்துவிட வேண்டும். அப் போதுதான் புதிதாக ஒரு துளிர் அங்கே கிளம்பும்.''

''அதுதான் இல்லை! ரஷ்யாவில் இயந்திரம் தேயிலை அறுவடைக்குப் பரீட்சார்த்தமாகப் பயன்படுகிறது!''

''இருக்கலாம். ஆனால் அவர்கள் அந்தச் சோதனையில் வெற்றி பெறு வார்களா என்பது சந்தேகம்! துளிர் எது முற்றிய இலை எது என்று இயந் திரத்துக்கு எப்படித் தெரியும்?''

''அது கருவியை உருவாக்கும் விஞ் ஞானி கவனிக்க வேண்டிய பிரச்னை. நமக்கு அந்தக் கவலை வேண்டாம்.''

''இவர்களும் இயந்திரமாகத்தான் இயங்குகிறார்கள். பத்து நாளைக்கு ஒரு முறை எல்லாத் தேயிலைச் செடிகளும் கிள்ளப்படுகின்றன.''

''வருஷக்கணக்கில் வாழும் என்று சொன்ன வாயால் இதைத் தேயிலைச் செடி என்றும் சொல்கிறீங்களே!''

''தப்புத்தான்; உண்மையில் இவை மரங்களேதான். சதா கிள்ளி விடப் பட்டுச் சின்னப் புதராகவே தோற்றம் அளிப்பதால் தேயிலைச் செடி என்று வழக்கில் வந்து விட்டது. நன்றாக வேரூன்றி ரொம்ப உறுதியாக இருக்



கும். ஒரு சமயம் மலைச் சரிவில் இறங்கிவிட்ட காரைத் தேயிலைப் புதர் ஒன்று தாங் கிக் கொண்டதை நான் என் கண்ணால் பார்த்தேன். ஒரு குழந்தை உட்பட ஐந்து பேர்கள் உயிர் தப்பினார்கள்!''

''நிஜமாகவா? நம்பவே முடிய வில்லையே?''

''வேணுமானால் ஜீப்பை இந்த மலைச் சரிவில் இறக்கிக் காட்டட்டுமா?''

சாரு சிரித்துக் கொண்டே ஜீப்பில் மீண்டும் ஏறினாள். ''ஜீப் எஸ்டேட் டுக்குச் சொந்தம். அது மலைச் சரிவில் உருண்டால் எனக்கு நஷ்டம்!'' என்றாள்.

''அப்படியானால் சரி, அது வேண் டாம். உங்கள் லாபத்தை அதிகமாக்க நான் மேற்கொண்டு வரும் முயற்சி களைப் பார்க்கப் போவோம்!''

''ஒரு நாளைக்கு இவர்கள் எவ்வளவு தேயிலை பறிப்பார்கள்?''

''பறித்த தேயிலையின் எடை பார்த் துக் கூலி கொடுக்கிறோம். ஒரு நாளைக் குப் பத்து ரூபாய்க்குக் குறையாமல் சம்பாதித்து விடுவார்கள் இந்தப் பெண்கள்.''

''கெட்டிக்காரிகள்தான்; பார்த் தாலே தெரிகிறதே! எத்தனை சுறு சுறுப்பு! இதைச் செய்ய இயந்திரம் வந்து விட்டால் இன்னும் வேகமாக வேலை நடக்கும்.''

''இயந்திரமயமாதல் என்பது எத் தனையோ துறைகளில் புகுந்து விட்டா லும் நல்லவேளையாக இதொன்றை மட்டும் விட்டு வைத்திருக்கிறார்கள்.''





''இந்த எஸ்டேட்டில் இரண்டு நர்ஸரிகள். ஒன்று பெண் தொழிலாளிகள் தங்கள் குழந்தையை விட்டு விட்டு வேலைக்கு வர உதவுகிறது. மற்றொன்று இது.''

''புதிய தேயிலைக் கன்றுகளை இங்கே பயிராக்குகிறீர்களாக்கும்.''

''அதோடு தேயிலையின் தரத்தை அபிவிருத்தி செய்யும் வேலையும் நடக்கிறது.''

''தரம் என்றால்?.... அளவிலா, ருசியிலா?''

''இரண்டு விதமாகவும்தான்....மலைப் பிரதேசத்தில் மிக உயரமான சூழ்நிலைக்குப் போய் விட்டால் தேயிலை அறுவடையாகும் அளவு

''அதைச் சொல்லுங்கள், கேட்க இனிமையாக இருக்கிறது.''

சற்றுத் தூரம் போனபிறகு மலைச் சரிவுப் பாதையில் வண்டி நிற்க, மீண்டும் கீழே இறங்கினார்கள். உயரே இருந்தபடி மலைச் சரிவையும், பள்ளத்தாக்கையும் பார்த்தார்கள். படிப்படியாக அமைக்கப்பட்டிருந்த பாத்திகளில் 'பாலிதீன்' பைகளில் மண்ணும் எருவும் கலந்து வைத்து அவற்றில் தேயிலை நாற்றுக்களையும் ஊன்றி யிருந்தார்கள்.

# 'என்னை காலேஜ் கிரிக்கெட் கோஷ்டியின் காப்டனாகத் தேர்ந்தெடுத்தார்கள் !'



ஆனால், சில மாதங்களுக்கு முன் எனக்கு ஒரே சோர்வு, பலவீனம். அதன் விளைவாக என்னை கிரிக்கெட் கோஷ்டியில் சேர்க்கவில்லை. நான் ஒரு டாக்டரைப் பார்த்தேன்.

டாக்டர் சொன்னார் : 'படிப்புக்கும் விளையாட்டுக்கும் தேவையான அதிக சக்தியைப் பெற தினமும நீ ஹார்லிக்ஸ் சாப்பிடு.'



ஹார்லிகஸ் அற்புதமாக பயனளித்தது ! என்னுடைய விறுவிறுப்பான ஆட்டத்தைக் கண்டு என்னை கோஷ்டியின் காப்டனாகவே தேர்ந்தெடுத்தார்கள். இப்பொழுது நான் தினமும் ஹார்லிக்ஸ் சாப்பிடுகிறேன்.



HL 7487

## ஹார்லிக்ஸ் உதவியால் முன்னேறினேன்

இளம் வயதினரான ஆண்களும் பெண்களும் இழக்கும் சக்திக்கு ஈடுகட்ட ஹார்லிக்ஸ் உதவுகிறது. ஹார்லிக்ஸ் சாப்பிடுவதனால் தெம்புடன் வேலை செய்ய முடிகிறது. சோர்வு ஏற்படுவதில்லை, சிறந்த ஆரோக்கியத்துடன் இருக்க முடிகிறது. இளைஞர்களுக்கும் வயதானவர்களுக்கும் ஒரே போல் பலன் தரும் உணவு ஹார்லிக்ஸ். தினமும் ஹார்லிக்ஸ் அருந்துங்கள் !




ஆடைச் சத்து நிறைந்த பாலுடன் கோதுமை மாவு மற்றும் மால்டெட் பார்லியின் போஷாக்குச் சத்துக்கள் சேர்த்து தயாரிக்கப்பட்டது.

# ஹார்லிக்ஸ் அதிக சக்தியை அளிக்கிறது!

குறைந்து போகும். மிகத் தாழ்வான இடத்தில் பயிராக்கினுல் தேயிலேயின் ருசி கெட்டுப் போகும். அதனுல் பெரும்பாலான எஸ்டேட்டுகள் ஐயாயிரம் அல்லது ஆருயிரம் அடி உயரத்தில்தான் அமைந்திருக்கும்.''

''ஸிலோனில் ஓர் ஆராய்ச்சி நடக்கிறது. உயரம் குறைந்த சூழ்நிலேயில் வளரும்போதும் தேயிலேயின் தரம் குறையாமல் இருக்கச் செடிக்கு ஒரு 'இன்ஜெக்ஷன்' போடுகிருர்கள்.''

''புதிதாக நீங்கள் வாங்கிய டீ எஸ்டேட்டைப் பார்க்க வரு முன்னர் தேயிலேத் தோட்டம் சம்பந்தமான ஏதோ ஒரு புத்தகத்தையும் புதிதாக வாங்கிப் படித்து விட்டு வந்திருக்கிறீர்கள் என்று புரிகிறது. ருஷ்யா ஆயிற்று, ஸிலோன் ஆயிற்று. அடுத்தது எந்தத் தேசம்?''

சாரு சிரித்துக் கொண்டே, ''இந்தத் தேசம்தான்; இங்கு நடக்கும் ஆராய்ச்சி தான். சொல்லுங்கள். இங்கே என்ன செய்கிறீர்கள்?'' என்ருள்.

''தேயிலேக் குருத்து ஒன்றைச் சரியான முறையில் வெட்டி நட்டால் அது வேர் விட்டுச் செடியாக வளரும். அல்லது விதைகளே ஊன்றியும் செடியைப் பயிராக்கலாம். எந்தத் தேயிலேச் செடியில் ருசி குன்ருது அதிகமான அறுவடையும் காண்கிருேமோ, அந்த ரகச் செடியைப் பலவாகப் பெருக்குவதில் சிரத்தை காட்டுகிருேம். இந்த உயர் ரகக் கன்றுகளேக் கொண்டு புதிய தேயிலேத் தோட்டங்களே உருவாக்கலாம்; அல்லது ஏற்கனவே உள்ள மட்ட ரகத் தோட்டப் பகுதியை அழித்து விட்டு அந்த இடத்தில் இதைப் பயிர் செய்யலாம்.''

''புதிய தேயிலேத் தோட்டம் உருவாக்கலாம் என்றீர்களே; இப்போது நம் எஸ்டேட்டில் எத்தனே ஏக்கரில் தேயிலே பயிராகி யிருக்கிறது?''

''மொத்தம் உள்ள தொள்ளாயிரம் ஏக்கர் பரப்பில் நானூறு ஏக்கர் பயிராகி யிருக்கிறது. பாக்கியெல்லாம் காடாகத்தான் இருக்கிறது. அதில் இன்னும் ஒரு நூறு ஏக்கரில் தேயிலேப் பயிர் செய்ய உத்தேசம். காட்டை அழிக்க அனுமதி கோரிச் சர்க்காருக்கு எழுதினேன். கிணற்றில் கல்லேப் போட்டாற் போல் இருக்கிருர்கள். சென்னேக்கு நான் நேரில் வந்துதான் ஃபைலேத் தேடி எடுத்துக் கொடுத்துக் கவனிக்கச் சொல்ல வேண்டும்.''

''நமக்குச் சொந்தமான காட்டை அழிக்க நாம் அனுமதி பெற வேண்டுமா?''













''காட்டுக்கு மட்டுமென்ன? தேயிலேத் தோட்டத்தில் ஆங்காங்கே நிழல் தர மரங்கள் வளர்க்கிருேமே; அவற்றின் கிளேகளே வெட்டக்கூடப் 'பர்மிஷன்' வாங்க வேண்டும். ரொம்ப அடர்த்தியாக வளர்ந்து நிழல் அதிகமாகி விட்டாலும் தேயிலேக்கு நல்லதில்லேயே!''

''அர்த்தமற்ற சட்டங்கள்; அபத்தமான கட்டுப்பாடுகள்.''

# தியாகச் சுடர்



**1962ல்** பாரதத்தின் மீது படையெடுத்த சீனர்களுடன் போரிடுகையில் எதிரிகளின் சுரங்கவெடி ஒன்று வெடித்ததன் விளைவாக காப்டன் பங்கஜ் ஜோஷி என்ற பாரத ராணுவ அதிகாரி படுகாயமுற்றார். அவருடைய கால்களில் ஒன்றினை வெட்டி எடுக்கும்படி நேரிட்டது. மற்றொரு காலில் பாதத்தின் அடிப்பாகம் அறுவைச் சிகிச்சைக்கு உள்ளாகியது. ராணுவ சேவையிலிருந்து விடுதலை பெற்ற காப்டன் ஜோஷி கடந்த ஆறு ஆண்டுகளாக வாழ்க்கையில் எவ்வித உற்சாகமும் இன்றி வாழாமல் வாழ்ந்து கொண்டிருந்தார்.

சிறிது காலத்துக்கு முன்பு அவர் சற்றும் எதிர்பாராத, கனவுகூடக் கண்டிருக்க முடியாத ஒரு சம்பவம் நிகழ்ந்தது. இருள் கவிந்திருந்த அவரது வாழ்க்கையில் ஒளி வீசியது! 'ரோகிணி' என்ற மராத்தி மாத இதழில் அதன் ஆசிரியர் ஓர் அறிவிப்புச் செய்தார். 'படித்த பெண் யாராவது காப்டன் ஜோஷியை மணக்க முன்வருவாளா?' என்பதே அவ்வறிக்கை. பம்பாய் பல்கலைக் கழகத்தில் பயின்று பட்டம் பெற்ற அழகிய யுவதி முக்தா காலே காப்டன் ஜோஷியைத்தான் மணக்க விரும்புவதாக 'ரோஹிணி'யின் ஆசிரியருக்கு எழுதினாள். பம்பாயில் வசிக்கும் நடுத்தரக் குடும்பத்தைச் சேர்ந்த யுவதி முக்தாவுக்கும் காப்டன் ஜோஷிக்கும் புனாவில் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. நகரத்தின் பிரமுகர்கள் பலரும் திருமணத்துக்கு வந்து தம்பதியை வாழ்த்தினர். அவர்களுள் ஒருவர் கேட்ட கேள்விக்கு மணமகள் முக்தா பதில் கூறினாள்: "தாய்த் திருநாட்டைக் காக்கும் பணியில் போர்க்களத்தில் ரத்தம் சிந்திய பங்கஜ் ஜோஷியின் பொருட்டு எதைத்தான் செய்யக்கூடாது?''

ஸ்ரீ.எஸ். ஸுக்டண்கர்

தமிழில்: ரா. பா.

---

''அப்படி ஒரேயடியாக அர்த்தமற்றது என்றும் சொல்லி விட முடியாது. மனிதன் தன் சுயநலத்துக்காகக் காட்டையெல்லாம் வெட்டிவிட்டால் மிருகங்கள் எங்கே போகும்? மழை எப்படிப் பெய்யும்? சட்டம் வேண்டியதுதான். ஆனால் அதை அமுல்படுத்தும் முறையில் 'காமன் ஸென்ஸ்' தேவை. அதுக்குத்தான் பஞ்சம்.''

பேசிக் கொண்டே ஜீப்பில் ஏறினார்கள். ''நான் வீட்டுக்குத் திரும்புகிறேன். விருந்தினரைக் கவனிக்க வேண்டும்'' என்றாள் சாருலதா.

எஸ்டேட் பங்களாவை நோக்கி ஜீப்பைச் செலுத்தியபடியே, ''இங்குள்ள தொழிலாளர்களுக்குச் சாமி கும்பிட ஒரு கோயில் வேணுமாம். சின்னதாகக் கட்டித் தந்தால் போதும்'' என்றான் சாரங்கன்.

''என்ன செலவாகும்?''

''பதினையாயிரம் ஆகலாம்.''

''இங்கே என்ன ஹிந்துக்கள் மட்டும் தான் வேலை செய்கிறார்களா?''

''இல்லை; கிறிஸ்துவர்களும் உண்டு.''

''எஸ்டேட்டில் சர்ச் இருக்கிறதா?''

''கிடையாது.''

''அப்படியானால் சிறியதாக ஒரு மாதா கோயிலையும் கட்டி விடுங்களேன். இரண்டுக்குமாகச் சேர்த்து இருபது அல்லது இருபத்தைந்துக்குள் முடிக்கப் பாருங்கள்.''

சாரங்கன் ஜீப்பில் பின்புற ஆசனத்தின் மீது கிடந்த சிறிய தோல் பெட்டியை எடுத்தான். ஜீப்பை ஓட்டியபடியே லாகவமாக அதைத் திறந்து அதனுள்ளிருந்த கருவியில் ஸ்விச்சைப் போட்டுவிட்டுப் பேசத் தொடங்கினான்: ''தொழிலாளர்களுக்கு மாதா கோயில், முருகன் கோயில் இரண்டும் கட்டலாம். அதிகபட்ச 'பட்ஜெட்' இருபத்தையாயிரம்'' என்று கூறிப் பிறகு ஸ்விச்சை அணைத்தான்.

''உங்கள் குரலையே கேட்பதில் உங்களுக்கு ரொம்பப் பிரியம் போலிருக்கிறது'' என்றாள் சாரு. ''டேப் ரிகார்டர்தானே அது?''

''ஆமாம். சௌகரியமாக இருக்கிறது. எதையும் மறப்பதற்கில்லை. எண்ணங்கள் உடனுக்குடன் பதிவாகி விடுகின்றன. சிங்கப்பூரிலிருந்து ஒரு 'ஃபிரெண்ட்' கொண்டு வந்தான். டிரான்ஸிஸ்டரைஸ்ட். பாட்டரியில் இயங்குகிறது.''

''ரோஸ்மேரி டீ எஸ்டேட் என்ற பெயர் எனக்குப் பிடிக்கவில்லை.''

''மாற்றி விடுவோம்.''

'''சாருலதா எஸ்டேட்ஸ்' என்று இருக்கட்டும்.''

சாரங்கன் அதையும் பதிவு செய்து கொண்டான். ''பெயர்ப் பலகையை மாற்றினால் மட்டும் போதாது. ரிஜிஸ்திராருக்குச் சொல்லி ரிகார்டுகளில் பெயர் மாற்றம் செய்ய வேண்டும். 'லெட்டர் ஹெட்'டுகள் வேறு அச்சிட வேண்டும். பிஸினஸ் தொடர்புள்ளவர்களுக்குப் பெயர் மாற்றத்தை அறிவித்து அச்சடித்த கடிதம் கையெழுத்துப் போட்டு அனுப்ப வேண்டும்'' என்று உடனுக்குடன் தோன்றிய எண்ணங்களையெல்லாம் அந்த டேப்ரிகார்டரில் பதிவு செய்து கொண்டான்.

''சாரங்கன், ஐ லைக் திஸ்! ஏன், எதற்கு என்றெல்லாம் கேட்டுக்கொண்டிருக்காமல் ஒரு காரியத்தைச் சொன்னதும், மேற்கொண்டு அது சம்பந்த

மாய்ச் செய்ய வேண்டியது பற்றி யோசிக்கிறீர்களே!''

''ஐ ஆம் எ மேன் ஆப் ஆக்ஷன்!'' என்றான் சாரங்கன். ''ஒன்றுமில்லாத விஷயத்தை எட்டு மணி நேரம் யோசித்துப் பொழுதைக் கழிப்பது எனக்குப் பிடிக்காது. நீங்கள் என் யோசனையைக் கேட்டால் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன். உத்தரவு போட்டால் தலையாட்டிவிட்டுப் போவதில் என்க்கென்ன நஷ்டம்? பொறுப்பு உங்களுடையதாகி விடுகிறதே!''

சாரு மேலும் சில கட்டளைகளைப் பிறப்பித்தாள். எல்லாம் டேப்ரிகார்டரில் பதிவாயின. பங்களாவை நெருங்குகையில் ''நீங்கள் சென்னைக்கு வரும்போது என்னை வந்து பாருங்கள்'' என்றாள்.

''ஆபீஸிலா? வீட்டிலா?''

''ஆபீஸில். சாருலதா என்டர்பிரைஸஸ்...''

''எனக்குத் தெரியும். மவுண்ட் ரோட்டில் சாருலதா பில்டிங்ஸில் எட்டாவது மாடி.''

''ஃபோன் செய்துவிட்டு வாருங்கள்.''

''ஓ. கே!'' சாரங்கன் இதையும் டேப் ரிகார்டரில் பதிவு செய்துகொள்ளத் தவறவில்லை.

பங்களா எதிரே ஜீப் நின்றது. சாருலதா இறங்கிக் கொண்டாள். ''சாப்பிட்டுவிட்டுப் போகிறீர்களா?''

''பட்லர் மோகனின் சமையல் பிரமாதமாக இருக்கும். ஆனால் எனக்கு வேலை இருக்கிறது. ஆபீஸ் அறையில் பதினைந்து நிமிஷத்தில் சாப்பாட்டை முடித்துக் கொண்டு காரியத்தில் இறங்குவேன். இங்கே உங்கள் 'கெஸ்ட்'களுடன் சேர்ந்து சாப்பிடுவதென்றால் இரண்டு மணி நேரம் 'வேஸ்ட்' ஆகும். வேலையைக் கவனிக்காமல் நான் நேரத்தை வீணாக்குவது உங்களுக்குப் பிடிக்காது.''

''ரொம்ப கரெக்ட்'' என்றாள் சாரு. ''சாரங்கன்! பர்ஸனல் விஷயம் ஒன்று உங்களிடம் சொல்லலாமா?''

அவன் மனத்தில் ஆவல் கொப்புளித்தது. ''பேஷாக'' என்றான்.

''உங்கள் கன்னத்தில் இரண்டு பக்கமும் தூண்கள் போல் நிற்கிறதே, கிருதா, அதைப் பார்க்கச் சகிக்கலை, எடுத்து விடுங்கள்!''

சட்டென்று சாரங்கனின் முகம் சிவந்து கோபத்தால் கண்கள் அகன்றன. புருவங்களைச் சுருக்கியபடி சாருலதாவின் முகத்தைப் பார்த்தான். அவள் சிறிதும் சஞ்சலமின்றி அமைதியாக இமைகளைக் கூடக் கொட்டாமல் அவனை ஏறிட்டு நோக்கினாள். அவளுடைய கம்பீர சௌந்தரியம் அவன் கண்கள் வழியே புகுந்து மனத்தில் பொங்கிய சீற்றத்தை



படத்தில் காட்டியிருக்கும் அமைப்பினை உங்களது பேனாவால் நிறுத்தாமலும், பேனா வந்த திசையிலே அதற்கு எதிராகப் போகாமலும் ஒரே கோட்டின் உதவியால் வரைய முடியுமா?

விடை: 48ம் பக்கம் பார்க்க.

அப்படியே தன் இனிமையில் கரைத்து விட்டது. கோபம் பொங்கிய முகத்தில் புன்னகை அரும்பியது.

''தாங்க்யூ'' என்றான். ஜீப் கிளம்பியது. ''மறந்துவிடப் போகிறீர்கள், அதையும் ரிகார்டரில் பதிவு செய்து கொள்ளுங்கள்'' என்று சொல்லி உல்லாசமாகச் சிரித்தபடியே 'டாட்டா' காண்பித்தாள் சாருலதா.

பங்களாவை நெருங்கியதும் வாசலில் இருந்த பணியாளிடம் பட்லரை உடனே அழைத்து வரச் சொன்னாள். அவன் வந்ததும் ''மோகன்! இன்றைக்கு என்ன ஸ்பெஷலாச் செய்திருக்கியோ அதில் கொஞ்சம் டிபன் காரியரில் வைத்து மானேஜருக்கு நீயே கொண்டு போய்க் கொடு. வீட்டிலிருந்து அவருக்குச் சாப்பாடு வருவதற்கு முன்பே நீ அவர் ஆபீஸ் அறைக்குப் போய்விட வேண்டும். புரிந்ததா?'' என்றாள்.

''சரிம்மா'' என்று தலையசைத்தான் மோகன்.

''எஸ்டேட் ஆபீஸ் எவ்வளவு தூரத்தில் இருக்கிறது?''

''அரை மைல் இருக்கும்.''

''அப்படியானால் ஒரு காரை எடுத்துக்கொண்டு போ. நடந்து போனால் எல்லாம் ஆறிப் போய்விடும்.''

''ஆகட்டும்.''

சற்று நேரத்துக்குப் பின் மோகன் டிபன் காரியருடன் சாரங்கனின் ஆபீஸ் அறைக்குள் நுழைந்தபோது, சாரங்கன் மேஜை மேலிருந்த பைல்களையெல்லாம் ஒரு புறமாய் ஒதுக்கிவிட்டு நடுவே நிலைக் கண்ணாடியை வைத்து அந்த வேளை கெட்ட வேளையில் எலெக்ட்ரிக் ஷேவரால் முக க்ஷவரம் செய்து கொண்டிருப்பதைப் பார்த்து வியந்தான். **(தொடரும்)**

இன்றே செய்யக்கூடியதை
நாளைக்கென்று
தள்ளி வைப்பானேன்?



# காலத்தே செய்க

நாளைக்கு நீங்கள் மறந்து விடக்கூடும். மறதி சில சமயங்களில் நஷ்டம் விளைவிக்கக்கூடும். உதாரணமாக, இன்சூரன்சு உரிமைப் பணம் கிடைப்பதில் தாமதம் ஏற்படக்கூடும். பின்வரும் விவரங்கள் இல்லாததனால் ஆண்டுதோறும் பலருக்கு உரிமைத்தொகைகளை உடனடியாகக் கொடுக்க முடியாமல் போய்விடுகிறது. ● வயதுக்கு சான்று ● முகவரி மாற்றம் ● பயனடைபவரின் பெயர் ● எனவே, முன்னெச்சரிக்கையாக இருப்பது நலமல்லவா? அவ்வப்போது உங்களுடைய இன்சூரன்சு பாலிசியைச் சரிபார்த்துக் கொள்ளுங்கள். ஒவ்வொரு மாதமும் சரியான அலுவலகத்தில் உரிய சமயத்தில் உங்கள் பிரீமியத்தைக் கட்ட மறக்காதீர்கள்.






ஆயுள் இன்சூரன்சுபோல
ஆதரவு தருவது எதுவுமே இல்லை

## அத்தியாயம் 6

# காரிருளில் ஒரு மின்னல்



# சாருலதா

**கீ ராஜேந்திரன்**

மணி ஐந்து என்பதை அறிவிக்கும் முகமாக அலாரம் கடிகாரம் கணகண வென்று ஒலித்தது. 'ஏர்கண்டிஷன்' செய்யப்பட்டிருந்த அந்த விசாலமான படுக்கை அறையில் மெல்லியதொரு ரஜாய் போர்த்திக் கொண்டு சுகமான ஆழ்ந்த நித்திரையில் இருந்த சாரு கண்களைத் திறக்கவில்லை. ஸீரோ வாட் பல்பின் மங்கலான ஒளிக்கு ஒளி ஊட்டுவது போல் ஒரு வெண்மையான கரம் ரஜாய்க்குள்ளே யிருந்து நீண்டு அலாரத்தை நிறுத்தியது. ஒருமுறை புரண்டு ஒரு பெருமூச்சுடன் உள்ளங் கையைக் கன்னத்துக்கு அடியில் வைத்து முழங் காலை மடித்து உயர்த்திச் சுருண்டுகொண்டாள் சாருலதா.

இரண்டு நிமிஷ நேரம் இந்த அதிகாலை மயக்கத்துக்கு இடம் கொடுத்த அவள், உடனே ஏதோ பெரிய தவறு செய்துவிட்டவள் போல் போர்வையை உதறித் தள்ளிவிட்டு விருட்டென்று எழுந்தாள். ஒருவித திட சங்கல்பத்துடன் இயங்குபவளாகக் கட்டிலை விட்டுக் கீழே இறங்கினுள். கழுத்து முதல் கணுக்கால் வரை அலை அலையாக நீண்ட காஷ்மீர் பட்டினுலான 'நைட் கவுன்' அவளுடன் வழுக்கிக் கொண்டே வந்தது. கட்டில் அருகிலேயே நின்று குனிந்தும், நிமிர்ந்தும் தேகப்பயிற்சி செய்தாள். காதோடு ஒட்டிய மாதிரி உயர்ந்தன கரங்கள். உள்ளங்கைகள் தரையில் பதியும் வரை இடுப்பு வளைந்தது. ஒரே சீராக நிதானமாக மூச்சு விட்டபடி குனிந்த பிறகு நெஞ்சு நிறைந்து உயர, காற்றை உள்ளுக்கிழுத்தபடி நிமிர்ந்தாள். இப்படிப் பதினைந்து தடவைகள் செய்து முடிப்பதற்குள் டெலிபோன் மணி ஒலித்தது.

''சாரு ஹியர்.''

''குட் மார்னிங்! 'எக்ஸர்ஸைஸ்' செய்கையில் குறுக்கிட்டுக் கெடுத்து விட்டேனு?''

''டாக்டர்! நியாயமாக நான் இப்போது என்ன செய்ய வேண்டும் தெரியுமா?''

''என்ன?''

''ஒரு வார்த்தைகூடப் பேசாமல் ஃபோனை வைத்துவிட வேண்டும்.''

''அத்தனை கோபமா?''

''இல்லை; அதற்கும் மேலேயே கோபம்!''

''நான் உன்னிடம் சொல்லிக் கொள்ளாமல் கிளம்பி வந்தது பிசகு தான் சாரு. ஆனுல் கொஞ்சம் யோசித்துப் பார். அந்தக் கூட்டத்தில் ஒருவனுக இருக்க என்னுல் முடியாது என்று ஆரம்பத்திலேயே உனக்குத் தெரியப் படுத்திவிட வில்லையா, நான்?''

''உங்களுக்கு டிரங்கால் போடலாமா என்று நினைத்தேன். அப்புறம் வேண்டாம் என்று தீர்மானித்து விட்டேன்.''

''எனக்குத் தெரியுமே, நான்தான் முதலில் பேச வேண்டும் என்று நீ எதிர்பார்ப்பாய் என்று. ஆறு நாட்கள் ஆகிவிட்டதால் நீ சென்னை திரும்பியிருப்பாய் என்ற உத்தேசத்தில் ஃபோன் செய்தேன். ஹாலிடே எப்படி இருந்தது?''

''எனக்கு ஏது விடுமுறை? அதெல்லாம் மற்றவர்களுக்குத்தான். எஸ்டேட் வேலைகள் தலைக்கு மேல் இருந்தன. இதற்குமுன் இருந்த சொந்தக்காரன் ஆப்பிரிக்காவில் வசிக்கிறவன். எதையும் சரியாகக் கவனிக்கவில்லை அவன். மூன்று வருஷங்களாக லாபம் படிப்படியாகக் குறைந்து கொண்டே வந்திருக்கிறது. ஏதாவது ஓரிடத்தில் அதைப் பிரேக் போட்டு நிறுத்த வேண்டாமா?''

''அதுவும் நீ எஸ்டேட்டை விலைக்கு வாங்கிய பிறகு லாபம் அதிகரிக்கலாமே ஒழியக் குறைய விடலாமா?''

''நல்லவேளையாக எஸ்டேட்டுக்கு ஒரு நல்ல மானேஜர் இருந்து வந்திருக்கிறான். இல்லையானால் நிலைமை இன்னும் மோசமாகி யிருக்கும்.''

''உனக்கென்னம்மா, எவனோ வெள்ளைக்காரன் எந்தக் காலத்திலோ பாடு பட்டு உழைத்து மலைச் சாரலை ஸர்வே செய்து, பாதை போட்டுக் காட்டை யெல்லாம் அழித்து, ஊரை உண்டாக்கி, தேநீர்ச் செடி பயிரிட்டு வைத்து விட்டுப் போனான். இன்றைக்குச் சுலபமாக 'செக்' வெட்டி நீ ஒரு எஸ்டேட்டை விலைக்கு வாங்கிவிட்டாய் !''

''அதற்கும் முன்னால் ஒருவன் இந்தத் தேயிலையைப் பறித்து உலர வைத்துப் பானம் தயாரிக்கலாம் என்று கண்டுபிடித்தானே அதைச் சொல்லுங்கள் ! இல்லாத போனால் தேயிலையை யார் பயிர் செய்வார்கள்? எஸ்டேட்தான் ஏது ?''

''அவன் வாழ்க ! அவன் மக்களைடைப் பழக்கத்துக்கு அடிமையாக்கியதால் நீ இன்று கூடை கூடையாக இலையைக் கொடுத்து விட்டுக் கட்டுக் கட்டாக நோட்டை வாங்கப் போகிறாய்!''

''நீங்கள் சொல்வதுபோல் நடந்தால் சௌகரியமாகத்தான் இருக்கும், வேணு. ஆனால் எத்தனை தொல்லைகள் தெரியுமா? ஒரு உதாரணம் பாருங்கள். எஸ்டேட் பங்களாவுக்குப் பின்னால் கொஞ்சம் உருளைக் கிழங்கு பயிர் செய்தார்கள். முதலில் எலிகள் வந்து எல்லாவற்றையும் சாப்பிட்டு விட்டன. எலிப் பொறி வைத்துப் பிடித்தார்கள். பூச்சி வந்தது. பூச்சி மருந்து அடித்து அவற்றை ஒழித்தார்கள். குரங்குகள் வந்து உருளைக்கிழங்கை யெல்லாம் பிடுங்கிக் கொண்டு போய் விட்டன. அவற்றையும் பயமுறுத்தி விரட்டினால் பிறகு முள்ளம் பன்றிகள் வந்தன, இரவோடு இரவாக. மலைப் பிரதேசமல்லவா ?''

''தஞ்சாவூரானால் என்ன, ஊட்டியானால் என்ன ? விவசாயம் என்றால் வேதனைதான். ஆயிரம் பாடு பட வேண்டும், அறுவடைக்கு முன்னால்.''

''ஒப்புக் கொள்கிறீர்களா? நாக்கை நீட்டச் சொல்லி விட்டுச் சீட்டு எழுதிக் கொடுப்பது போன்ற சுலபமான காரியம் இல்லை இது !''

வேணு சிரித்தான். ''எதைப் பற்றிப் பேசினாலும் சரி, கடைசி வாக்கியத்தைச் சொல்லி முடிப்பது சாருவாகத் தான் இருக்க வேண்டும், இல்லையா? போகட்டும். டென்னிஸ் கோர்ட்டில் வழக்கம்போல் உன்னை எதிர் பார்க்கலாமா?''

''வரணுமா நான் ?''

''ஏன், என்ன சந்தேகம் ?''

''உங்களுக்கு என்னோடு ஆடப் பிடிக்குமோ பிடிக்காதோ என்று தான்.''

''கோபம் இன்னும் பாக்கி இருக்கா என்ன? ஊட்டியில் நடந்ததை மறந்துவிடலாம் சாரு. என்ன சொல்கிறாய்?''

''ஒரு மணி நேரத்தில் கிளப்பில் சந்திக்கலாம் என்கிறேன்.''

''ரைட், அப்போ ஆறரை மணிக்குப் பார்க்கலாம்.''

''வேணு....''

''என்ன சாரு ?''

''ஒன்றுமில்லை.''

''என்ன விஷயம்? சொல்லேன்!''

''அன்று ஊட்டியிலிருந்து நீங்கள் சொல்லாமல் கொள்ளாமல் கிளம்பி வந்து விட்டபோது...''

''வந்தபோது...''

''என் வாழ்க்கையை விட்டே நீங்கள் ஒதுங்கிப் பிரிந்துபோவது போல் இருந்தது. எனக்கு இருந்த ஒரே ஒரு நண்பரையும் இழந்து விட்டேனே என்று தவித்துப் போனேன். துக்கம் தாங்க முடியவில்லை.''

டெலிபோன் தொடர்பு நீடித்தால் தன் துயர உணர்ச்சி மறுபடியும் பொங்கிப் பிரவாகம் எடுக்கும் என்று அஞ்சியவள் போல் சாரு டக்கென்று ரிஸீவரை வைத்து விட்டாள். அடி உதட்டைக் கடித்துக் கொண்டு கண்களை மூடித் தன்னைக் கட்டுப் படுத்திக்கொண்டாள். சில விநாடிகளுக்குப் பிறகு தேகப்பயிற்சி தொடர்ந்தது.

* * *

டாக்டர் வேணு புன்னகையுடன் தன் கையிலிருந்த டெலிபோன் ரிஸீவரையே சற்று நேரம் பார்த்தான். அவன் முகத்தில் திருப்தி நிலவியது. குழந்தையைத் தொட்டிலில் இடுவது போல் ரிஸீவரை அதற்குரிய இடத்தில் வைத்தபோது மேஜையின் மீதிருந்த 'லெட்டர் பே'டில் அவன் பார்வை லயித்தது. சாருலதாவுடன் டெலிபோனில் பேசிக் கொண் டிருக்கையிலேயே தன்

வலக்கரத்தில் இருந்த பென்சிலால் கடிதம் எழுதும் தாளில் சாரு — சாருலதா, சாரு — சாருலதா என்று திரும்பத் திரும்பத் தான் எழுதி யிருப்பதை — அதை எழுதுகிறோம் என்ற உணர்வே இல்லாமல் எழுதியிருப்பதைப் பார்த்தான்.

'இருநூறு பக்க நோட்டுப் புத்தகத்தை ஸ்ரீராமஜெயம் எழுதி நிரப்ப முற்பட்டிருக்கும் அம்மாவிடம் இதைக் காட்டினால்....'

வேணு வாய் விட்டுச் சிரித்தபடியே குப்பைத் தொட்டியில் போடும் எண்ணத்துடன் தாளை எடுத்து மடித்துக் கிழிக்க முற்பட்டான். சட்டென்று அவன் கரம் தயங்கியது. மடித்ததைப் பிரித்துப் பார்த்தான். பிறகு மேஜை டிராயரைத் திறந்தான். அதில் மேலாகச் சாருலதாவின் புகைப்படம் அலங்காரமான ஃபிரேமுக்குள் சிறைப்பட்டுக் கிடந்தது. 'டு மை குட் ஃபிரண்ட்' என்று அதில் எழுதிக் கையெழுத்திட்டிருந்தாள் சாரு. படத்தை மேஜை மேல் நிற்க வைத்துச் சில விநாடிகள் கண் இமைக்காமல் பார்த்தான் வேணு. பிறகு புறங்கையால் படத்தை அலட்சியமாக ஒரு தட்டுத் தட்டியபடியே, "சாரு இதே படத்தில் நீ எழுதி யிருப்பதை நீயே அடித்துவிட்டு 'டு மை டியர் ஹஸ்பண்ட்' என்று எழுதப் போகிறாய்" என்று வாய் விட்டுச் சொன்னான். கையிலிருந்த தாளையும் மேஜையின் மீதிருந்த புகைப்படத்தையும் டிராயருக்குள் வைத்து மூடிப் பூட்டினான். அறையை விட்டு வெளியே வராந்தாவுக்கு வந்தான்.

'சாரு! உன்னுடைய மனம் இன்னும் ஒரு கம்ப்யூட்டர் இயந்திரமாகி விடவில்லை. அதில் இன்னும் உணர்ச்சிகள் ஒட்டிக் கொண்டிருக்கின்றன. அவற்றை நீ துடைத்தெறிய அனுமதிக்காமல் நான் நடந்து கொண்டால் போதும்!'

பலபலவென்று பொழுது விடியும் நேரம். வாசலில் வேணுவின் தாயார் போட்டிருந்த கோலத்துக்கு ஏகப் போட்டி. ஐந்தாறு குருவிகள் அதன் மீதமர்ந்து மாவைக் கொத்தி உண்ணத் தொடங்கின. அப்பொழுதுதான் விழித்தெழுந்த அணில்கள் இரண்டு 'கீ கீ' என்று அலறியபடி தென்னை மரத்திலிருந்து கண்ணிமைக்கும் நேரத்தில் இறங்கி வாலைத் தூக்கிக் கொண்டு ஒரே ஓட்டமாக ஓடி வந்தன. குருவிகள் விர்ர்ரென்று பறந்து போய் மறுபுறமிருந்த வேப்ப மரத்தில் தஞ்சம் புகுந்தன. காகம் ஒன்று அணில்களை விரட்டி விட்டுக் கோல மாவை வேகமாகக் கபளீகரம் செய்யத் தொடங்கியது. இதைப் பார்த்து மகிழ்ந்ததால் தானோ என்னவோ வேப்ப மரத்தில் ஒரே அட்டகாசம். எல்லாக் குருவிகளுமாகச் சேர்ந்து கீச்சிட்டுக் குதூகலித்தன. தேன் சிட்டு ஒன்று இதையெல்லாம் லட்சியம் பண்ணாமல் தன்பாட்டுக்குப் பறந்தபடியே பூவிலிருந்து தேனை உறிஞ்சியது. இரண்டு புல் புல் பட்சிகள் டெலிபோன் கம்பி மேல் அலங்காரமாய் அமர்ந்தன. பம்மிச் செண்டாகப் பூத்த இக்ஸோரா உதய சூரியனின் சிவப்புக்குச் சவால் விட்டது. இலேசாக மழை பெய்திருந்ததால் பவழமல்லியின் மணத்துடன் மண் வாடையும் கலந்து வந்தது.

'சாருலதாவும் இப்போது மலர்களைப் பார்ப்பாள்' என்று நினைத்துக் கொண்டான் டாக்டர் வேணு. 'ஆனால் அவை ஏர்கண்டிஷன் செய்யப்பட்ட அறையில் அழகுக்காக வைக்கப்பட்டிருக்கும் பிளாஸ்டிக் பூக்களாக இருக்கும்! அவளும் தேன் சிட்டுக்களைக் காண்பாள். அவை ஜன்னலை மறைக்கும் திரைச் சீலையில் அச்சடிக்கப்பட்ட படங்களாக இருக்கும். நான் இங்கு பட்சிகளின் கானத்தைக் கேட்கும்போது அவள் அறையில் டேப் ரிகார்டரிலிருந்து மேனாட்டு இசை எழும். பவழமல்லியின் மணத்தை நான் நுகரும்போது அவள் கிரிஸ்டீன் டயார் செண்டைத் தன்மேல் 'ஸ்ப்ரே' செய்து கொண்டிருப்பாள்!'

'வருடாந்திர லாப நஷ்டக் கணக்குகளையும் மேலும் மேலும் பணம் பண்ணுவது எப்படி என்பது பற்றியுமே சிந்தித்துச் சிந்தித்து நுண்ணிய உணர்வுகளுக்குத் தன் மனத்தில் இடமே இல்லாமல் செய்து கொண்டு விட்டாளோ, சாருலதா?' என்று டாக்டர் வேணுகோபால் அஞ்சியதுண்டு. அப்படி இல்லை. அவள் மனம் இன்னும் அந்த அளவுக்கு மரத்துப் போகவில்லை என்பது இப்போது அவளுடன் டெலிபோனில் பேசிய போது உறுதிப்பட்டது. இதற்குமுன் — உதகையில் பொட்டானிகல் கார்டனில் அவளுடன் கழித்த சில மணி நேரத்தில் டாக்டர் வேணுகோபாலுக்கு ஏற்பட்டிருந்த பெரிய ஏமாற்றம் இப்போது ஓரளவுக்குக் குறைந்தது.

அங்கு — உதகைப் பூங்காவனத்தில் வேணுகோபால் சொன்னான்: "நீ அணிந்திருக்கும் புடவையே ஒரு புஷ்பக் கண்காட்சிதான். எத்தனைவிதமான வர்ணங்களில் எத்தனை விதப் பூக்கள் இதில்!"

"இது ஒன்றும் அப்படி உசத்திப் புடவை இல்லை. எழுபத்தைந்து ரூபாய்

தான். இதைப் போய்ப் புகழ வேண்டாம்'' என்றாள் சாருலதா.

''ஒரு விதத்தில் நீ சொல்வது சரிதான், சாரு. உயிருள்ள மலர்கள் ஆயிரக்கணக்கில் கண்ணெதிரே பூத்துக் குலுங்கும்போது புடவையில் அச்சடித்த பூக்களை யாராவது ரசித்துக் கொண்டிருப்பார்களா? அதோ பார், அந்த ரோஜாவை. ஒட்டுப் போட்டு, ஒட்டுப் போட்டுக் கிட்டத்தட்ட கருமை நிறத்துக்குக் கொணர்வதில் வெற்றி கண்டிருக்கிறார்கள். 'சூட்டிலும் ஒரு ருசி, கறுப்பிலும் ஓர் அழகு' என்பார்களே, அதிலுள்ள நயம் இந்தக் கறுப்பு ரோஜாவைப் பார்த்தால்தான் புரிகிறது.''

''வேஸ்ட் ஆஃப் டாக்ஸ் பேயர்ஸ் மணி'' என்றாள் சாருலதா. ''மக்களை வருத்தி எடுத்து வரி வசூலித்து இப்படியெல்லாம் பூவுக்கும் எருவுக்கும் பணத்தை வீணடிப்பானேன்? அதைவிட ஏதாவது தொழிலகத்தில் லாபகரமாக முதலீடு செய்யலாம்!''

''நீ ஏன் எதையும் எப்போதும் பணத்துடன் இணைத்துப் பார்க்கிறாய், சாரு? புடவையைப் புகழ்ந்தாலும் தோட்டத்தை ரசித்தாலும் உடனே அதற்கான செலவைப் பற்றியே கணக்குப் போடுகிறாயே, ஏன்?''

''அதில் என்ன தவறு? ரூபாய் பைசாக் கணக்குப் பார்க்க நான் கூச்சப்படுவதில்லை. நான் கருமி இல்லை வேணு. ஆனால் செலவழிக்கும் பணத்துக்கு அதிகமாக வருவாய் கிடைக்குமா என்றோ, அல்லது அதற்கு ஈடான 'குட்வில்' கிடைக்குமா என்றோ யோசிக்காமல் இருப்பதில்லை. பொட்டானிகல் கார்டனில் உலவி வரும்போது நாலு பேருக்குக் காட்ட வேண்டும் என்பதற்காகப் புதிதாகப் பனாரஸ் பட்டுப் புடவையும் காஷ்மீர் சால்வையும் வாங்கி அணிய மாட்டேன்.''

''ஆனால் அதையே ஒரு பிஸினஸ் லஞ்ச் என்றால் வாங்கி அணியத் தயங்க மாட்டாய் இல்லையா?'' என்றான் வேணுகோபால் சிரித்துக் கொண்டே. ''சாரு! நாட்டு வளத்தைக் கவனிப்பதுடன் மக்களின் மன வளத்தை வளர்க்கும் பொறுப்பும் அரசாங்கத்துக்கு உண்டு. அதற்காகத்தான் பொட்டானிகல் கார்டன், டூரிஸ்ட் பங்களா போன்றவையெல்லாம். அதோ பார். இந்தச் சூழ்நிலை அந்த இளம் காதலர்களுக்கு எவ்வளவு இதமாக இருக்கிறது. உடலாலும் உள்ளத்தாலும் அவர்கள் அப்படி ஒன்றி இருப்பதற்குக் காரணம் என்ன? இத்தனை பேர் இங்கே இருந்தும் இந்தத் தோட்டத்தின் அழகில் அவர்கள் கட்டுண்டதால் தனிமையை உணர்கிறார்கள்.''

''இன்னும் கொஞ்ச நாளைக்குத்தான். அப்புறம் கலியாணமாகிக் குழந்தை குட்டி என்று ஏற்பட்டால் போச்சு. வரவுக்கும் செலவுக்கும் சரிக்கட்டத் தெரியாமல் விழிப்பார்கள். வாழ்க்கை வேதனையாகும். பிறகு காதல் ஏது?''

''தவறு சாரு! குழந்தைகளால் பெற்றோரிடையே உள்ள காதல் பலப்படுமே ஒழியப் பலவீனமடையாது. வாழ்க்கையில் எதிர்ப்படும் சிரமங்களைச் சமாளிக்கும் உறுதியையும் சக்தியையும் அந்தக் காதலும் குழந்தைகள் காட்டும் அன்பும்தான் அவர்களுக்கு அளிக்கின்றன. அதோ அந்தப் புல் சரிவிலே பார்!....''

டாக்டர் வேணுகோபால் சுட்டிக் காட்டிய இடத்தில் கிட்டத்தட்ட செங்குத்தாகவே அமைந்திருந்தது புல் சரிவு. அதில் ஏறியும் இறங்கியும் உருண்டும் புரண்டும் விளையாடின நண்டும் சுண்டுமாக நாலைந்து குழந்தைகள். டாக்டர் குறிப்பிட்ட திக்கில் சாருலதா நோக்கியபோது வேணுகோபால் அவள் முகத்தை உன்னிப்பாய்க் கவனித்தான். சூள் கொட்டி அசுவாரசியமாகச் சாருலதா பார்வையை வேறு திசையில் திருப்பியதும் டாக்டருக்கு வியப்பாக இருந்தது; அனுதாபமும் பிறந்தது.

பூங்காவனத்தில் போட்டிருந்த குறுகலான பாதைகள் பலவற்றுள் ஒன்றில் அவர்கள் அருகருகே நடந்து சென்றார்கள். ஒரே சமயத்தில் பக்கத்தில் பக்கத்தில் இரண்டு பேர்கள் நடக்கக் கூடப் போதிய இடமில்லாத அகலக் குறைவான பாதை. டாக்டர் வேணுகோபாலின் மருமான் பாலு—ஒன்றரை வயதான குழந்தை — தோட்டத்திலிருந்து ஒரு ரோஜா மலரைப் பறித்து வந்து நீட்டுவான். மாமாவைக் குனிந்து முகர்ந்து பார்க்கச் சொல்லுவான். மூக்கின் அருகே கன்னக் கதுப்பில் மலரைத் தடவிச் சிலிர்ப்பை ஏற்படுத்திவிட்டுச் சடக்கென்று அப்பால் எடுத்து விடுவான். கெஞ்சினால் மீண்டும் ஒரு விநாடி நேரம் முன் போலவே மெய் சிலிர்ப்பை ஏற்படுத்துவான். அந்த மலரின் புதுமையும் மென்மையும் எழிலும் மணமும் போலவே, தோற்றமும் சருமமும் உருவமும் உடலும் கொண்ட சாருலதாவுடன் அவள் மீது பட்டும் படாமலும், உரசியும் உரசாமலும் அந்தப் பாதையில் நடக்கும்போது டாக்டர் வேணு கோபாலுக்குக் குழந்தையின்

அந்த விளையாட்டு ஞாபகம் வந்தது. ஆனால் அன்று அவன் உணர்ந்தது முழு இன்பம். இன்று இந்த அநுபவத்தில் இனிமையைக் காட்டிலும் இன்ப வேதனை சற்றுத் தூக்கலாகவே இருந்தது!

அவன் கேட்டான்: ''பழனியாண்டவனுக்குப் பாலாபிஷேகம் செய்து பார்த்திருக்கிறாயா நீ?''

''பழனியென்ன? இந்தியாவிலுள்ள எல்லா ஸ்தலங்களுக்குமே போய்த் தரிசித்து வந்தாகி விட்டது.''

''நிஜமாகவா? யார் நம்புவார்கள்? சாருலதா ஸ்தல யாத்திரை போய் வந்தாள் என்றால்? எப்போது போயிருந்தாய் சாரு?''

''போன ஜன்மத்தில்!''

வேணு சட்டென்று நின்றான். ''போன ஜன்ம நினைவுகள் உனக்கு ஏற்படுவது உண்டா? விசித்திரமாக இருக்கிறதே?''

''எப்போதாவது தோன்றும் டாக்டர். அது சரி, உங்களுக்குத் திடீரென்று பழனியாண்டவன் நினைவு வருவானேன்?''

''நாலு நாட்கள் முன்னால் வரை சோபனா அக்கா என்னுடன்தான் இருந்தாள். குழந்தைக்குத் திருப்பதியில் மொட்டை அடிக்க வந்தவள் ஒரு வாரம் தங்கி யிருந்தாள். இங்கே விளையாடிய குழந்தைகளைப் பார்த்ததும் எனக்குப் பாலுவின் நினைவு வந்தது. ஒரே ஒரு ஜட்டியை மாட்டிக் கொண்டு அவன் ஒரு குச்சியுடன் இங்குமங்கும் ஓடுவான். எனக்கென்னவோ பால முருகன் எங்களிடம் கருணை கொண்டு கோவணாண்டியாகக் கையில் வேலுடன் வந்திருப்பது போல் தோன்றும்! என்ன விஷமம், என்ன விஷமம்! அத்தனையும் பண்ணி விட்டு ஒரு 'களுக்'குச் சிரிப்பில் நம்மை மயக்கி விடுகிற திறமை ஆண்டவனாலன்றி யாரால் முடியும்? 'முருகா எங்கே?' என்றால் கழுத்தில் தொங்கும் சங்கிலியின் டாலரில் உள்ள முருகனைக் கையி லெடுத்து முத்தம் கொடுப்பான். மாமா பக்கத்தில்தான் படுத்துக் கொள்வேன் என்று பிடிவாதம் பிடிப்பான். வாயில் விரல் போட்டுக் கொண்டு தூங்கும்போது பரம சாதுவாய்த் தோன்றுவான். ஜட்டி நெகிழ்ந்து தங்க அரைஞாண் சிறிதளவு பளிச்சிடும். மூடிய நிலையில் உள்ள பாதாம் பருப்புக் கண்கள், மாம்பழக் கதுப்புக் கன்னங்கள், கொழு கொழுவென்ற உடம்பு. அவனை ஒவ்வொரு அங்கமாகப் பார்த்து ரசித்துக் கொண்டே இருந்தால் எனக்குத் தூக்கமே வராது!''

சாருலதா கைக் கடிகாரத்தைப் பார்த்தாள். ''நேரமாகிறதே, டாக்டர்! நாம் திரும்புவோமா?''

பாடகர் சுருதியோடு இழைந்து ஆலாபனை செய்கையில் பிடில் வித்துவான் அழுத்தம் திருத்தமாக அபஸ்வரங்களைக் கொட்டியது போல், தொனித்தது சாருலதாவின் கேள்வி, வேணுகோபாலின் காதுகளுக்கு.

ஒரு நீண்ட ஏமாற்றப் பெருமூச்சு கிளம்பியது அவனிடம். அன்று ஏற்பட்ட அந்த ஏமாற்றம் இன்று ஓரளவு தணிந்தது. 'டாக்டர்! எனக்கிருந்த ஒரே நண்பரையும் இழந்து விட்டேனே என்று தவித்துப் போனேன். துக்கம் தாங்க முடியவில்லை' என்றாளல்லவா சாருலதா டெலிபோனில்? அவள் உள்ளத்தில் ஈரப் பசை இருப்பதை உணர்த்த வேறு என்ன அத்தாட்சி வேண்டும் அவனுக்கு?

* * *

''வேணு! என்னடா கோழியையும் குருவியையும் பார்த்துண்டு நின்னுண்டிருக்கே, நேரமாகலே? எட்டு மணி அடிச்சா மைல் நீளத்துக்கு வாசல்லே கியூ நிற்குமே?'' வேணுவின் தாயார் மீனாட்சி ஒரு கையில் காப்பி டம்ளரும் மற்றொரு கையில் அவனுடைய டென்னிஸ் மட்டையுமாக வாசலுக்கு வந்தாள்.

''அம்மா! அக்கா போனதும் வீடு வெறிச்சென்று இருக்கும்மா. பாலுவை யாவது நீ கொஞ்ச நாளைக்கு இங்கே வைச்சுக்கிறதாகச் சொல்லக் கூடாது?'' என்றான் வேணு காப்பி டம்ளரை வாங்கிக் கொண்டே.

''அவள் விட்டு வைப்பாளா? 'இந்த வீட்டிலேயே ஒரு குழந்தை தவழ ஏற்பாடு செய்யேன்'னு சொல்லிட்டுப் போயிட்டாள். நேற்றுக்கூட கடுதாசு போட்டிருக்காள். அவள் கல்லூரி சிநேகிதியாம். கிளியாட்டம் இருக்காளாம்.''

''கிளியாட்டமா இருக்கிறது என்னம்மா பிரமாதம்? ரம்பை, ஊர்வசி எல்லாரும் தோற்றுப் போகிற மாதிரி ஒரு பெண்ணைக் கொண்டு வந்து உன் முன்னாலே நிறுத்துகிறேன், பாரு!''

''போடா, நீயும் உன் வேடிக்கையும்!'' டென்னிஸ் மட்டையை நாற்காலி மீது வைத்து விட்டு மீனாட்சி உள்ளே போய் விட்டாள்.

வேணு காப்பியை ரசித்து, உறிஞ்சினான். (தொடரும்)

## அத்தியாயம் 7

## முக்காலத்துக்கும் முதல்வர்; மாயையால் மறைப்பவர்!

டென்னிஸ் ஆடி விட்டுத் திரும்பிய சாருலதா புதிய உற்சாகத்துடன் குளித்துப் புத்தாடை அணிந்து காலை உணவுக்காக மாடியிலிருந்து கீழே இறங்கி வந்தாள். திருவிழாக் கோலா கலத்தினிடையில் அவுட் வைத்தால் அது உயரே, உயரே சென்று வானின் கரிய பெரிய பின்னணியில் பளிச் பளிச்சென்று ஒளிரும் வண்ண வண்ணப் பூக்களைச் சொரியுமே, அதே போன்ற தோற்றத்துடன் கூடிய ஒரு புடவையை அணிந்து ஜொலித்தாள் அவள். மாடிப் படிகளில் அவள் இறங்கி வந்தபோது அவள் உடலில் ஏற்பட்ட சிற்றலைகளைப் போன்ற சிறிய சிறிய அசைவுகள் அவள் அழகை நாலாபுறமும் மின்னி மறையும் நட்சத்திரப் பூக்களாகத் தெளித்தன.

விசாலமான சாப்பாட்டு அறையிலிருந்த நீளமான டைனிங் டேபிளின் ஒரு மூலையில் அவளுக்காகத் தட்டு தயாராக வைக்கப்பட்டிருந்தது. அவளுக்குப் பக்கத்திலேயே அவள் அப்பா பெருமாள் அமர்ந்திருந்தார். மேஜையின் மறுமுனையில் சாருலதாவுக்கு எதிரே, அவள் தம்பி குணசீலன் உட்கார்ந்திருந்தான். தூசி விழாதிருக்கக் கவிழ்த்து வைக்கப்பட்டிருந்த தட்டைச் சாருலதா நிமிர்த்திக் கொண்டதும் ஆவி பறக்கும் இட்டிலிகளை அதில் வைத்தான் முத்து. பக்கத்தில் அடுக்கி வைக்கப்பட்டிருந்த தினசரிகளை ஒரு விரலால் அலைந்து ஆராய்ந்த சாருலதா, ''முத்து! ஹிந்து பேப்பர் எங்கே?'' என்று கேட்டாள்.

சமையல்காரன் பதில் சொல்லவில்லை. ஆனால் சாரு கேட்ட கேள்வி அவள் தம்பி குணசீலன் காதில் விழுந்ததா என்று மட்டும் கவனித்துக் கொண்டான். பேப்பர் படித்துக் கொண்டிருந்த குணசீலன் தன் முகத்தை மறைத்த ஹிந்துவை இரண்டாகவும் பிறகு நாலாகவும் மடித்து மேஜையின் மீது வைத்து ஒரு தள்ளுத் தள்ளினான்.

நன்கு பாலிஷ் ஏறியிருந்த டைனிங் டேபிள்மீது அந்தத் தினசரி வழுக்கிக் கொண்டே பயணம் செய்து சாருலதாவின் அருகே வந்து சேர்ந்தது. அது தட்டில் தட்டி விடாமல் ஒரு விரலால் தடுத்து நிறுத்திய சாருலதா அப்போதுதான் தனக்கும் தன் தம்பிக்கும் உள்ள இடைவெளியின் தூரத்தை அளந்தவள் போல, ''முத்து! ஏன் குணாவுக்கு அவ்வளவு தொலைவில் தட்டு வைத்தாய்?'' என்று கேட்டாள்.

''அவன் பக்கத்தில்தான் வைத்திருந்தான். நான்தான் அதைத் தூக்கிக் கொண்டு எட்ட வந்துவிட்டேன்'' என்றான் குணசீலன்.

''உள்ளது மூன்று பேர், சேர்ந்து இருக்கக் கூடாதா?''




பெருமாளின் வாய் விஷ்ணு சகஸ்ர நாமத்தை முணுமுணுத்துக் கொண்டிருந்தது. அவர் தலை நரைத்திருந்தாலும் வயதால் அவரைத் தொண்டு கிழவர் என்று மதிக்கும்படி அவரது சருமத்தில் சுருக்கங்களையோ கண்களில் முதுமையின் சாயலையோ பார்க்க

முடியவில்லை. எனினும், உடலாலும் உள்ளத்தாலும் அவர் களைத்துச் சோர்ந்து பலவீனமுற்றிருந்தார்; கிழடு தட்டிப் போயிருந்தார் என்பதையும் அவர் தோற்றம் உணர்த்தியது.

''இதைவிடத் தொலைவில் இந்த வீட்டை விட்டேதான் போய்விட நினைக்கிறேன். அப்பாவின் சொல்லுக்கு மதிப்புக் கொடுத்து இந்த வீட்டோடு நிறுத்திக் கொண்டிருக்கிறேன்'' என்றான் குணசீலன்.

''அப்பாவை எதற்கு இதிலே இழுக்கறே? அவர்தான் கிருஷ்ணா, ராமாவைத் தவிர வேறு எதையும் சொல்றதில்லேன்னு விரதம் எடுத்துக் கொண்டிருக்கிறாரே?''

''அதை யாருக்காக ஜபித்துக் கொண்டிருக்கிறார் சாரு? தனக்காகவா அல்லது நமக்காகவா? பக்கத்தில் இருக்கிறவரை ஒதுக்கி விடறே. எட்டப் போக நினைக்கிறவனை, வம்புக்கு இழுக்கறே.''

''இங்கே உனக்கு என்ன குறைச்சல்? போயிடறேன், போயிடறேன்னு தினம் நாலு தடவை பயமுறுத்துகிறாயே?''

''இந்தச் சூழ்நிலை எனக்குப் பிடிக்கவில்லை.''

''கல்யாணத்தைச் செய்து கொண்டு மாமனார் வீட்டில் ஐக்கியமாகிவிடு. அப்போ 'அட்மோஸ்பியர்' பிடிக்கும். அப்புறம் தீபாவளிக்குத் தீபாவளி பிறந்த வீட்டுக்கு வந்தால் போதும்!''

''இந்த வீட்டிலே மரியாதை கெட்டு வாழறதைவிட மாமனார் வீட்டிலே மதிப்போடு என்னால் வாழ முடியும்,



சாரு! ஆனால் இங்கே இத்தனை நாட்கள் சோறு தின்றும்கூடத் தன்மானத்தை நான் அடியோடு இழந்துவிடவில்லை. கல்யாணம்னு செய்து கொண்டாலும் தனிக் குடித்தனம்தான் நடத்துவேன்.''

ஹிந்துப் பேப்பரில் சுவாரசியமில்லாத பெரிய செய்தித் தலைப்புக்களைக் கண்ணோட்டம் விட்டு விட்டு, சிறிய தலைப்புக்களில் சுவையான செய்திகள் ஏதேனும் அகப்படுமா என்று பார்த்துக் கொண்டிருந்தாள் சாருலதா.

இவர்களுடைய தர்க்கத்தைக் கேட்டு அலுத்துவிட்ட பாவனையிலும் தனக்குச் சம்பந்தமில்லாத விஷயம் என்ற நினைப்பிலும் முத்து, காப்பி டிரேயைக் கொணர்ந்து சாருலதா அருகே வைத்தான். ஒரு கப் காப்பி நிரப்பிக் கொண்டு போய்க் குணசீலனுக்குக் கொடுத்தான். ஒரு வெள்ளி மணியைச் சாருலதாவுக்கும் பெருமாளுக்கும் இடையில் வைத்தான், ஏதாவது காரியம் ஆகவேண்டுமானல் மணி அடித்துத் தன்னை அழைக்கலாம் என்ற அர்த்தத்தில். பிறகு சமையலறைக்குப் போய் விட்டான்.

''தன்மானங்கிறது ஓட்டைக் கூரையிலும், ஒண்டுக் குடித்தனத்திலும் தான் இருக்கா? இருநூற்றைம்பது ரூபாய் சம்பளத்தில் கல்யாணம், தனிக் குடித்தனம் என்றெல்லாம் பேசறியே. எங்கே ஜாகை? எட்டு எருமை மாடுகள் உழலும் சந்தில் பத்துக் குடித்தனங்கள் உள்ள வீட்டில் புறாக் கூண்டு போன்ற அறை கிடைக்கும் உனக்கு.''

''இருக்கட்டுமே! என் ஏழைமை நிலைமையைக் குத்திக் காட்டுபவர் யாரும் இல்லாத இடமானல் அதுவே சொர்க்கம் எனக்கு.''

''ஏழைமை நிலைமை நீயே வரவழைத்துக் கொள்கிறதுதானே! நாலு கார் வாசலில் நிற்கிறது. என்றாலும்,



பஸ்ஸில்தான் போவேன் என்று அடம் பிடிக்கிறாய்.....''

'நைட் கிளப் ஒன்றில் போலீஸார் படையெடுத்து மூன்று பேர்களைக் கைது செய்திருக்கிறார்கள். காலஞ் சென்ற கேசவ்லாலின் வாரிசுகள் எஸ்டேட் ட்யூட்டி தவறாகக் கணிக்கப் பட்டதாக ஹைகோர்ட்டில் வழக்கு தாக்கல் செய்திருக்கிறார்கள். மூன்று சினிமா நட்சத்திரங்கள் வீட்டில் 'ரெய்ட்' நடத்தியதில் கறுப்புப் பணம் பல லட்சங்களும் அவற்றுக் குரிய சாட்சியமாகச் சில கடிதங் களும் கிடைத்திருக்கின்றன' — எலீட் கிளப்பின் பெர்மிட் ரூமில் இன்று மாலை பேசுவதற்கு இந்த விஷயங்கள் போதும். சாருலதா மனத்தின் ஒரு மூலையில் இந்தச் செய்திகளைப் பத்திரப் படுத்திக் கொண்டாள்.

''குமாஸ்தா வேலை பார்க்கிறவன் அம்பாஸிடர் காரில்தான் போய் இறங்க வேண்டுமா?'' என்றான் குணசீலன்.

''நல்ல உத்தியோகம்' தருகிறேன் என்றால் அதை வேண்டாம் என்று உதறித் தள்ளுகிறவனும் நீதானே? இப்போதும் ஒன்றும் குடிமுழுகிப் போய் விடவில்லை. தோல் பதனிடப் புதுசா ஒரு ஃபாக்டரி ஆரம்பிக்க லாம் என்று நினைத்துக் கொண்டிருக் கிறேன். அதில் உன்னை மானேஜராகப் போடறேன்.''

''எனக்கு அநுபவமில்லை. உன் தம்பி என்பதால் எனக்கு ஓர் உயர் பதவி கொடுத்து விட்டுப் பிறகு என் திறமைக் குறைவினால் நஷ்டம் ஏற் பட்டால்?''

''நஷ்டம் ஏற்படாது. அதையெல் லாம் கவனித்து லாபகரமாக நடத்த ஆட்கள் இருக்கிறார்கள். நீ கையைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தாலே போதும். காரியங்கள் நடந்துகொண்டு போகும்.''

''அப்படின்னா என்னைப் பொம்மை மாதிரி உட்கார வைத்து ஒரு பெரிய தொகையைத் தண்டச் சம்பளமாகக் கொடுக்கிறேன் என்கிறாய்.''

''சரி, வேணும். எனக்குக் கீழே வேலை செய்ய உனக்குப் பிடிக்காது. உன் பேரிலேயே ஒரு கம்பெனியைப் புதுசா ஆரம்பிச்சுத் தரேன். எனக்குக் கிடைக்கிற இம்போர்ட் லைசென்சுகளை உன் பேருக்கு மாற்றித் தரேன். நேரடியா என் கம்பெனிகள் இறக்கு மதி செய்கிறதைவிட உன் கம்பெனி இறக்குமதி செய்து பிறகு எனக்கு நீ விற்று லாபம் அடையலாம். இன்கம் டாக்ஸுக்குக் கொடுக்கிறதை உனக்குக் கொடுப்பதிலே எனக்குச் சிரமமில்லை.''

''எனக்கு இந்தப் பிஸினஸ் தகிடு தத்தங்கள் எல்லாம் புரியாது அக்கா. நஷ்டப்பட்டுக் கையைச் சுட்டுக் கொள் வேன். அல்லது சட்டத்தின் பிடியில் அகப்பட்டுக் கொள்வேன்.''

''அப்படிப் பயமாயிருந்தால் என்னை யும் பார்ட்னராகச் சேர்த்துக் கொள். நஷ்டம் வந்தாலும் கவலை இல்லை. எட்டு கம்பெனிகள் லாபத்தில் நடக்கும் போது ஒண்ணு நஷ்டப்பட்டால் அதிலும் எனக்குச் சில வசதிகள் உண்டு.''

''ஆகக்கூடி உதவாக்கரை ஒருவன் தேவை என்பதற்காகத்தான் என்னைத் தேர்ந்தெடுக்கிறாய்!''

மணியை அடித்து, முத்து வந்ததும் சிவப்புப் பென்சில் கொண்டு வரச் சொன்னாள் சாருலதா. பங்கு மார்க் கெட் நிலவரங்களில் குறிப்பிட்ட ஒரு கம்பெனியின் ஷேர் விலையைச் சிவப்புப் பென்சிலால் அடிக் கோடிட்டாள். 'விலை சரிந்திருக்கிறது. என்ன கார ணமோ விசாரித்து இந்தச் சமயத்தில் ஐம்பத்தொரு சத விகிதத்தைக் 'கார்னர்' பண்ணலாமா என்று யோசிக்க வேண்டும்.' இப்படி அவள் மனத்துக் குள் முடிவு செய்தாள்.

''எப்படிப் போனாலும் நீ வழிக்கு வரலைன்னா நான் என்ன செய்யறது?'' என்று கேட்டாள் தம்பியிடம்.

''நான் எதற்காக உன் வழிக்கு வரணும் சாரு? சுதந்திரமான நாடு தானே இது? என் வழியில் நான் போக விட்டுவிடு என்றுதானே கேட்கிறேன்?''

''உனக்கு என்ன கோளாறு தெரி யுமா? 'இன்ஃபீரியாரிடி காம்ப்ளெக்ஸ்' அதை மறைத்துக் கொண்டு தன் மானம், தன்மானம் என்று வேஷம் போட்டுச் சவடாலாகப் பேசுகிறாய்!''

''அக்கா! நான் இன்ஃபீரியர் என்பதால் எனக்கு இன்ஃபீரியாரிடி காம்ப்ளெக்ஸ்; நீ சுபீரியர் என்ப தால் உனக்கு 'சுபீரியாரிடி காம்ப் ளெக்ஸ்' என்று அத்தனை சுலபமாக அந்த நோய்கள் வந்து விடுவதில்லை. உயர்ந்த நிலையில் இருப்பவர்களுக்கும் தாழ்வு மனப்பான்மை ஏற்படும்; மிகத் தாழ்ந்த நிலையில் உள்ளவர் களும் தங்களை மிக உயர்ந்தவராகக் கருதிக் கொள்ள முடியும். இப்படி யெல்லாம் அந்த மன நோய்கள் குளறுபடி செய்து மனோதத்துவ நிபுணர்களையே குழப்பத்தில் ஆழ்த் தும். சந்தேகமானால் டாக்டர் வேணு கோபாலைக் கேட்டுப் பார்.''

ரோட்டரி கிளப்பில் கிலால் சந்த் பேசியிருந்ததன் சுருக்கம் எக்ஸ்பிரஸில் வெளியாகி யிருப்பதைப் பார்த்தாள், சாருலதா. ''டெவலப்பிங் எகானமி இன்




**யாருடைய சிலை இது? எங்கே இருக்கிறது? மாலை அணிவிப்பவர் எவர்?** (45ம் பக்கம் பார்க்க)

தது இப்போது. ''பூத பவ்ய பவந் நாத: பவன: பாவனோ நல: காமஹாகாமக்ருத்காந்த: காம : காமப்ரத: ப்ரபு: ''

'' சாரு! மனிதர்கள் எல்லாருமே சாதனைகளைப் புரியப் பிறந்தவர்கள் இல்லை. ஒருவன் உயரே செல்ல ஆயிரம் பேர் ஏணிப் படிகளாக வேண்டியதுதான்'' என்றான் குணசீலன்.

''ஆயிரம் பேர் இருந்துவிட்டுப் போகட்டும். ஆயிரத்து ஒன்றாக நீ ஒருத்தன் எதற்கு? அதுதான் இப்போ பிரச்னை. நீ இப்படி இருப்பது எனக்கு அகௌரவம் என்பது உனக்கு ஏன் புரியவில்லை? உன்னைத் தெரிந்தவர்கள் எல்லோரும் என்ன கேட்பார்கள், நினைப்பார்கள்? 'இவனுக்கு ஒரு நல்ல உத்தியோகம் போட்டுக்கொடுக்கக்கூடாதா, சாருலாதா?' என்றுதானே?''

''உன்னை யாராவது தவறாகப் புரிந்துகொண்டு விடக்கூடாதே என்பதற்காக நான் என் வாழ்க்கை முறையை மாற்றி அமைத்துக் கொள்ள முடியுமா என்ன?''

''முன்னுக்கு வர வாய்ப்பில்லாதவனைப் பார்த்துப் பரிதாபப்படலாம். ஆனால் முன்னுக்கு வர வாய்ப்பிருந்தும் அதை நழுவ விடுகிறவன் முட்டாள்!''

''நீ என்னை முன்னுக்கு வரச் சொல்லவில்லை. அழுக்கில் புரளச் சொல்கிறாய்!''

''பொறுமையால் நீ என்ன பேசுகிறோம் என்றே புரியாமல் உளறுகிறாய்!''

''உண்மை கசந்தால் உளறலாகிவிடுவது சகஜம். எனக்குப் பொறுமையில்லை, உன்னிடம். அனுதாபம்தான்!''

''அது எனக்குத் தேவையில்லை!''

''உனக்குத் தேவையில்லை என்பதால் என்னிடம் உணர்ச்சிகள் செத்துவிடுமா? சகோதர பாசம் இல்லாமல் போய் விடுமா?''

''முத்து! இந்த ஹிந்துப் பேப்பரை நான் ஆபீசுக்கு எடுத்துப் போகும் என் பிரீப் கேஸில் வை!'' என்ற சாரு, தம்பி குணசீலனைக் கண்கொட்டாமல் பார்த்தாள். ''நான் பெண்பிள்ளைதான்: ஆனால் நூற்றுக் கணக்கான ஆண்கள் அதைப் பொருட்படுத்துவதில்லை. என் திறமைக்கு மதிப்புக் கொடுத்துச் சொல்

ஏன் அன்டெவலப்ட் கண்ட்ரி'' என்ற தலைப்பில் பேசியிருந்தான். 'அடப்பாவி! இவனுக்கு எகனமிக்ஸ் பற்றி என்ன தெரியும்?' யார் எழுதிக் கொடுத்ததை எழுத்துக் கூட்டிப் படித்தானோ? நல்ல வேளை, நான் ஊட்டியில் இருந்தேன். இல்லாவிட்டால் இரண்டு மணி நேரம் பேர்ர் அடிக்கும் பேச்சைக் கேட்டுத் தொலைக்க நேர்ந்திருக்கும். இப்போ சுலபமாக ஃபோன் போட்டு கன்கிராஜுலேட் பண்ணிவிடலாம். ஐஸ் வைத்தால் பின்னால் சௌகரியமாயிருக்கும்.'

''நீ சொல்லிக் காட்டுவது போல் எனக்குத் தாழ்வு மனப்பான்மை இருக்கிறது என்றே வைத்துக் கொள்ளலாம், குணு! ஆனால் அந்தத் தாழ்வு மனப்பான்மையோடு நான் சாதித்திருப்பவை என்ன, பார்த்தியா? ஐந்து கம்பெனிகள் எனக்கே சொந்தம். வேறு பத்து கம்பெனிகளில் கண்ட்ரோலிங் இன்டரெஸ்ட். இன்னும் பலவற்றில் இன்வெஸ்ட்மெண்ட். உன்னுடைய மிக உயர்ந்த மனப்பான்மையின் சாதனை என்ன? பூஜ்யம்!''

பெருமாளின் விஷ்ணு சகஸ்ரநாம உச்சாடனம் கொஞ்சம் உரக்கவே இருந்

கிறபடி கேட்கிறார்கள். உனக்கு மட்டும் என்ன வந்து விட்டது?''

''நீ சம்பந்தமில்லாத விஷயங்களைத் தர்க்கத்தில் இழுக்கிறாய், சாரு. என்னுடைய ஆண்மைக்கு ஏதோ இழுக்கு வந்துவிடும் என்பதால் நீ சொல்வதற்கெல்லாம் நான் மறுப்புத் தெரிவித்துக்கொண்டிருக்கவில்லை. அடிப்படையில் பார்த்தால் இதில் பிரச்னையே ஒன்றுமில்லை. என் வழியில் நான் போக அநுமதித்தால் போதும். பணம் என்றால் பிணமும் வாயைத் திறக்கும் என்பது பழமொழி. ஆனால் உனக்கு ஏற்பட்ட சில அநுபவங்களை அருகிலிருந்து பார்த்த பிறகு எனக்குப் பணம் என்றாலே வெறுப்பாக இருக்கிறது. எனக்குப் பணம் பண்ணத் தெரியாது.




லண்டன் டாவிஸ்டாக் சதுக்கத்தில் உள்ள அண்ணல் காந்தி அடிகளின் சிலைக்குக் காந்தி நூற்றாண்டு விழா கொண்டாட்டத்தின் போது மலர் மாலை அணிவித்தவர் இந்தியாவின் கடைசி பிரிட்டிஷ் கவர்னர் ஜெனரல் லார்ட் மவுண்ட்பாட்டன். அந்தப் படத்தைத் தான் 42ம் பக்கத்தில் பார்த்தீர்கள். இங்கு பிரிட்டிஷ் வைஸராய் தம்பதியுடன் மகாத்மா - புதுதில்லியில் '47ல் எடுத்த படம்.

உன் போன்ற சிலர் பணம் பண்ணக் கையாளும் முறைகள் எனக்குப் பிடிக்கவும் இல்லை. இருநூற்றைம்பது ரூபாய் சம்பளத்தில் நான் சந்தோஷமாக வாழ முடியும் என்பதை நீ நம்பவும் ஒப்புக்கொள்ளவும் மறுக்கிறாய். அதைவிட ஏழைமையான நிலையை நாம் கண்டதில்லையா என்ன ?''

''அது அந்தக் காலம் குணா! கமலாவை வேணுமானால் கலந்தாலோசித்துக் கொண்டு வந்து சொல்லு. கல்யாணமான பிறகு கஷ்டப்படாதே!''

''கல்யாணமா? அது எங்கே நடக்கப்போகிறது?''

''ஐய்யோ! அப்படிச் சொல்லாதே! அந்தப் பெண்ணின் எதிர்காலம் என்னவாகிறது?''

''இந்தக் கல்யாணம் நடக்கவே நடக்காது என்பது கமலாவுக்கும் தெரியும். தெரிந்தும்தான் என்னைக் காதலிக்கிறாள். எதிர்காலம் என்று ஒன்று எங்கள் இருவருக்குமே இல்லை.'' குணசீலன் சிரமப்பட்டுக் கண்ணீருக்கு அணை போட்டான்.

''இது என்ன பைத்தியக்காரத்தனம்? கல்யாணம் ஏன் நடக்காது?''

''அது உனக்கே தெரியுமே, சாரு! நான் வாய் விட்டுச் சொல்ல வேண்டுமா அதை? அதுவும் உன்னிடம்?''

'' கரணம் காரணம் கர்த்தா விகர்த்தா கஹனோ குஹ:'' என்று பகவன் நாமாவை உச்சரித்துக் கொண்டிருந்தார் பெருமாள். சாருலதா பதில் பேசாமல் மௌனத்தில் ஆழ்ந்ததால் இந்த வரி தெளிவாகக் கேட்டது.

குணசீலன் தன் இருப்பிடத்திலிருந்து எழுந்து சாருலதாவுக்கு அருகில் வந்தான். தன் பையிலிருந்து சில நோட்டுக்களை எடுத்து எண்ணி எண்பது ரூபாயை மேஜை மேல் வைத்தான்.

''என்ன இது?'' என்றாள் சாருலதா.

''இந்த வீட்டில் என் அறைக்கு வாடகை இருபது ரூபாய்; சாப்பாட்டுச் செலவு அறுபது ரூபாய். ஆக மொத்தம் எண்பது ரூபாய் உனக்குச் சேர வேண்டியது'' என்றான் குணசீலன்.

''இனி ஒவ்வொரு மாதமுமே இப்படிக் கணக்குத் தீர்த்துவிட உத்தேசித்திருக்கிறேன்'' என்று கூறியபடியே திரும்பி நடந்தான்.

அந்தப் பணத்தைச் சாருலதா வெறித்துப் பார்த்தபோது அவள் முகம் அழகாக இருக்கவில்லை. பெருமாள் சகஸ்ரநாமத்தைத் தொடர்ந்து சொல்லிக்கொண்டே மெல்ல எழுந்து தள்ளாடி நடந்து பூஜை அறையை நோக்கிச் சென்றார்.

சில விநாடிகளில் ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவள் போல் சாருலதா பணத்தை எடுத்துக் கொண்டாள். கைக்கடிகாரத்தை ஒரு தடவை நோக்கியவள் காரியாலயத்துக்குப் புறப்படத் தயாரானாள். (தொடரும்)

# ஒருவரும் அடாத விலை கொடுக்க விரும்புவதில்லை...

ஆகவே நீங்கள் அடித்துப் பேசி வியாபாரி உங்கள் விலைக்கு வர முயற்சிக்கிறீர்கள். சில சமயங்களில் வெற்றி பெறுவதுடன் சொற்ப பணமும் மிச்சப்படுத்துகிறீர்கள்—சந்தோஷம்தான். ஆனால் அது ஒரு அற்பகால வெற்றியே!

உங்கள் வரும் காலத்திற்காக நீங்கள் உங்களிடமே விலைபேச பழகவேண்டும். அனாவசியமான சிலவுகளை சுருக்கி பணத்தை சேமியுங்கள்.

உங்கள் பணத்தை வளர்தது, சந்தோஷமான எதிர் காலத்துக்குவழிகாட்ட யூகோ பாங்கில் உங்கள் பணத்தை சேமியுங்கள்.




தலைமை காரியாலயம்:
கல்கத்தா-1

நீங்கள் பணம் சேமிக்கலாம்.
யுகோ பாங்க் உங்களுக்கு
உதவி செய்ய முடியும்.



ASP/UCO-3/69

## அத்தியாயம் 8

# அந்தரங்கக் காரியதரிசி



சாருலதா
கி.ராஜேந்திரன்

சாருலதா பில்டிங்ஸின் எட்டாவது மாடிக்கு அதன் உரிமையாளரை விரைவாக லிப்ட் கொண்டு சென்றது. ஏழாவது எட்டாவது மாடிகளில் தொழில் வர்க்கத் துறைகளில் ஈடுபட்டிருந்த அவளுடைய பல காரியாலயங்கள் இருந்தன. மீதமுள்ள ஆறு மாடிகளையும் வேறு பல கம்பெனிகள் வாடகைக்கு எடுத்துக் கொண்டிருந்தன. தரை மட்டத்தில் கடைகள் அமைந்திருந்தன.

லிப்ட்டில் மேலும் கீழுமாகப் போய் வருவதென்பது சாருலதாவுக்கு மிகவும் பிடித்தமான விஷயம். என்றாவது ஒரு நாள் தான் ஒருத்தி மட்டுமே லிப்ட்டில் இருந்து கொண்டு அதை இயக்கி மேலும் கீழும் போய் வந்துகொண்டே இருக்க வேண்டும் என்று அவள் நினைத்ததுண்டு. ஆனல் அந்த ஆசை ஈடேறியது கிடையாது. 'பெரிய மனிதர்களாயிருப்பதில் இதுதான் சங்கடம்' என்று நினைத்தாள் சாருலதா. 'அவர்களுடைய அற்ப ஆசைகள் பல நிறைவேருமலே போய்விடும்! இந்தப் பெரிய கட்டடமும், இந்த லிப்ட்டும் எல்லாமே எனக்குச் சொந்தம்தான். ஆனல் அதற்காக நான் என் இஷ்டப்படி எட்டுத் தடவை மேலேயும் கீழேயும் ஒரு காரியமும் இல்லாமல் போய் வந்தால் என்ன நினைப்பார்கள்?' இப்படி எண்ணுகையிலேயே சாருலதாவுக்குச் சிரிப்பு வந்தது. அதைப் புன்னகையிலே தேக்கி, கைக்கடிகாரத்தைப் பார்த்தாள்.

காரியாலய நேரத்துக்குப் பத்து நிமிஷங்கள் முன்னல் வருவதும் மாலையில் குறித்த நேரத்துக்கு ஐந்து நிமிஷங்கள் முன்னதாகக் கிளம்புவதும் சாருலதாவின் அன்ருட வழக்கம்.

மிக விசாலமான அவளது காரியாலய அறையில் ஒரு பக்கத்தில் நவீன பாணியில் அமைந்த பெரிய அரை வட்ட வடிவ மேஜை. அதற்குப் பின்னல் உருளும் சக்கரங்களுடனும் சாய்ந்து, நிமிர உதவும் ஸ்பிரிங்குடனும் கூடிய நாற்காலி. மென்மையான அவள் உடலைத் தாங்கவே தயாரிக்கப்பட்டதுபோல் அது மெத்து மெத்தென்று ரப்பர் குஷனுலும் அதை மூடிய உயர் ரகத் தோலினுலும் உருவாகியிருந்தது. நாற்காலிக்குப் பின்னல் ஒரு மாடர்ன் ஆர்ட் படம் தடித்த ஃப்பிரேமுக்குள் அடங்கிச் சுவரில் மாட்டப்பட்டிருந்தது. சாருலதா அமர்ந்தால் அவள் தலைக்கு மேலாக இருப்பது போலவும் நின்ருல் அதில் பாதி மறைவது போலும் கணக்கிட்டுக் குறிப்பிட்ட ஓர் உயரத்தில் தொங்கியது. ஒன்றும் புரியாத அந்த விகார ஓவியத்துக்கு அருகே ஆதிநாள் முதல் இன்றுவரை அனைவருக்கும் எளிதில் புரிகிற எழில் தோற்றமாகச் சாருலதா என்ற பெண்ணுருவைப் பார்க்கும் போது ஏற்படக் கூடிய உணர்ச்சிகளைப் புரிந்து கொண்டு அதற்காகவே திட்டமிட்டு அந்த மாடர்ன் ஆர்ட் அங்கு மாட்டப்பட்டிருந்தது. அறையின் ஒரு பக்கத்தில் அன்றலர்ந்த மலர்கள் அலங்காரமாக வைக்கப்பட்டிருந்தன. கண்ணாடிக் கதவுகளைக் கொண்ட பெரிய ஜன்னல். வெனீஷியன் பிளைண்ட் திரை. நன்கு பாலிஷ் ஏறி மினுமினுத்த புத்தக அலமாரியில் புது மெருகு குன்ருமல் சில புத்தகங்கள் — வோர்ல்ட் புக் என்ஸைக்ளோபீடியா, லைஃப் நேச்சர் லைப்ரரி, ரீடர்ஜ்ஸ் டைஜஸ்ட் அல்மானக் — போன்றவை. ஒருபுறம் நடராஜரின் பெரிய வெண்கலச் சிலை. இன்னெரு பக்கத்தில் ஜப்பானிய மங்கை ஒருத்தியின் பொம்மை உருவம், ஷோ கேஸில் வைக்கப்பட்டிருந்தது.

அயல்நாட்டிலிருந்து சாருலதாவைக் காண வரும் விருந்தினருக்கு ஏற்ப ஷோ கேஸில் பொம்மை மாறும். சுவரோடு சுவராக அமைந்திருந்த மரக் கதவுடன்கூடிய அலமாரியில் பிரிட்டிஷ்

அரண்மனைக் காவலாளிப் பொம்மை, ஜெர்மனியின் பவேரியப் பகுதி பெண் மணியின் பொம்மை, அமெரிக்க சுதந் திர தேவியின் சிலை மாதிரி, பாரீஸ் ஐஃபெல் டவரின் தோற்றம் என்று பல ரகப் பொம்மைகள் தேவைக் கேற்பப் பயன்படத் தயாராகக் காத் திருந்தன. அறையின் மற்றொரு பக்கத் தில் முக்கியஸ்தர்கள் வந்தால் அமர்ந்து உரையாட வசதியாகச் சோபாக்கள் போடப்பட்டிருந்தன.

சாருலதா, ஒரு மிடுக்குடனும் ஆனால் அதே சமயத்தில் ஒய்யாரம் குறையாமலும் நடந்து வந்து தனது நாற்காலியில் அமர்ந்தாள். விக்டோரியா மகாராணிகூடச் சிம்மாச னத்தில் இத்தனை கம்பீரமாக அமர்ந் திருப்பாளா என்று சந்தேகிக்க வைக்



கும் அளவுக்கு இருந்தது அந்தக் காட்சி. அந்தக் கட்டடம் முழுதுமே ஏர்கண்டிஷன் செய்யப்பட்டிருந்ததால் சாருலதா வெய்யில் காலத்தில்கூடப் பட்டுப் புடவை அணிந்து வருவது சாத்தியமாயிருந்தது. இன்று அவள், சிறிய சரிகைப் புள்ளிகளுடன் கூடிய கருநீலநிறப் புடவை உடுத்தி வெண்மையான நீண்ட கழுத்தைச் சுற்றி நீலக் கற்கள் பதித்த ஒரே ஒரு நெக்லஸ் அணிந்து ஜொலித்தாள். தனது அறைச் சுவரில் பூசப்பட்டுள்ள சந்தன நிறத்தில் புடவையோ அல்லது சோபாசெட்டின் பழுப்புநிறத்தில் புடவையோ அணிந்து காரியாலயத்துக்கு வரக் கூடாது என்பதில் மிகுந்த கவனமாக இருந்து வந்தாள் அவள்.

சாருலதா பின்னேடு, காரிலிருந்து பெட்டியைச் சுமந்து கொண்டு வந்த பியூன் வேதாசலம், அதை மேஜையின் மேல் வைத்து விட்டு நின்ருன்.

''நீ போய்க் குமாரை வரச் சொல்லு'' என்ருள் சாருலதா.

சில விநாடிகளில் அன்றையத் தபால்களை ஒரு கையிலும், மறு கையில் ஷார்ட் ஹாண்ட் நோட்டுப் புத்தகம், பென்சிலுடனும் வந்தான் குமார். அவள் மேஜைமீது குமார் வைத்த தபால்களின் உறைகளைப் பிரித்துக் கடிதங்களை ஒன்றன் மீதொன்ருய் அடுக்க ஆரம்பித்தான் வேதாசலம்.

''காசிராம் அண்டு சிவராம் கம்பெனிக்கு எழுத வேண்டிய கடிதத்துக்கு நோட்ஸ் தயாரித்து வைத்



ஓரே ஜலதோஷம்...
சாப்பாடே பிடிக்கலே..
கஷ்டமா இருக்கு!

# விக்ஸ் வேபோரப் ஜலதோஷத்தின் தொல்லைகளை உடனே நிறுத்துகிறது.

விக்ஸ் வேபோரப்பின் சிறப்பு, அதை ஜலதோஷம் பிடிக்கும் இடங்களான மூக்கு, தொண்டை, மார்பு, முதுகு, இங்கெல்லாம் நேரடியாகத் தடவலாம். நீங்கள் ஜலதோஷத்தின் தொல்லைகளிலிருந்து உடனே நிவாரணம் பெறுகிறீர்கள். தாராளமாக மூச்சுவிடுகிறீர்கள். சுகமடைகிறீர்கள்.

விக்ஸ்வேபோரப் குணமளிப்பதன் காரணம் அது ஜலதோஷத்தை எதிர்த்து உள்ளும் புறமும் இரு வழிகளில் போராடுகிறது.

1) 
உடம்பின் மேலே

2) 
உடம்பின் உள்ளே

1) விக்ஸ் வேபோரப் ஜலதோஷத்தால் ஏற்படும் உடல்வலியைப் போக்குகிறது.
2) வேபோரப் ஆவியாக மாற்றப்படுகிறது. இந்த ஆவியில் மருந்து இருக்கிறது. ஒவ்வொரு முறை சுவாசிக்கும்போதும் இது உள்ளே ஆழச் சென்று, மூக்கு அடைப்பைப் போக்குகிறது. தொண்டை கரகரப்பை நிறுத்துகிறது. மார்பு கபத்தை நீக்குகிறது. ஜலதோஷத்தின் தொல்லைகள் மறைகின்றன.

## முக்கியமான குறிப்புகள்



விரைவாக குணம்பெற, மூக்கு, தொண்டை, மார்பு, முதுகு இங்கெல்லாம் விக்ஸ் வேபோரப்பை நன்கு தேயுங்கள்.

ஜலதோஷம் நீங்கும்வரை இதைத் தொடர்ந்து செய்து வரவும்.




**ஜலதோஷத்திற்கு மருந்து விக்ஸ் வேபோரப்**

NAS 623 N

திருக்கிறேன். நீங்களே லெட்டர் டிராப்ட் செய்து காட்டுங்கள்.

"ஆடிட்டர் சுப்புரத்தினத்துக்கு ஃபோன் போட்டு வில்லி பிராண்ட் கம்பெனியுடன் செய்து கொள்ள வேண்டிய ஒப்பந்தம் பற்றிப் பேச விரும்புகிறேன் என்று சொல்லுங்கள். எப்போ அவருக்குச் சௌகரியப்படும் என்று கேட்டுக் கொள்ளுங்கள்....

"வேறு ஏதாவது விசேஷம் உண்டா ?"

"சாரங்கன் என்று ஒருவர் உங்களைப் பார்க்கக் காத்திருக்கிறார். ஒன்பதே முக்காலுக்கு வரச் சொன்னீர்களாம்."

"சரி, அவரை உள்ளே அனுப்புங்கள்" என்று கூறியபடியே சாருலதா தன்னுடன் வீட்டிலிருந்து வந்த பெட்டியைத் திறந்து காசிராம் அண்டு சிவராம் ஃபைலை எடுத்துக் குமாரிடம் கொடுத்தாள்.

மேஜையின் மேல் அடுக்கி வைக்கப் பட்டிருந்த கடிதங்களை ஒவ்வொன்றாய் எடுத்துப் படித்து இடதுபுறம் 'மார்ஜி' னில் 'நோட்ஸ்' எழுத ஆரம்பித்தாள். அல்லது தனித் தாளில் 'மெமோ' எழுதிக் கடிதத்துடன் குண்டூசியால் இணைத்தாள்.

"குட்மார்னிங்" என்ற கலகலப்பான குரல் கேட்கவே நிமிர்ந்த சாருலதா, "உட்காருங்கள்" என்று மேஜையின் எதிரே இருந்த நாற்காலிகளைச் சுட்டிக் காட்டிவிட்டுத் தன் காரியத்தில் லயித்திருந்தாள். பியூன் வேதாசலம் கடைசிக் கடிதத்தையும் பிரித்து வைத்துவிட்டு அறைக்கு வெளியே சென்ற பின்னர்தான், பேனாவை வைத்துவிட்டு நிமிர்ந்து சாரங்கனைப் பார்த்தாள். "கிளாட் டு ஸீ யு எகெய்ன்" என்றாள் புன்முறுவலுடன்.

சாரங்கன் தன் பாக்கெட்டிலிருந்து ஒரு சிறிய நோட்டுப் புத்தகத்தை எடுத்துப் பிரித்தான். அதில் கண்ணோட்டம் செலுத்தியபடியே பேசினான் : "நெம்பர் ஒன் : ரோஸ்மேரி எஸ்டேட்ஸ் என்ற பெயரைச் சாருலதா எஸ்டேட்ஸ் என்று மாற்றி அது சம்பந்தப்பட்ட எல்லா விவரங்களையும் கவனித்து ஏற்பாடு செய்தாகி விட்டது. நெம்பர் டூ : கோயிலும் சர்ச்சும் கட்ட எஸ்டிமேட்டும் புளூ பிரிண்டும் தயாராகி விட்டன. பின்னோடு கொண்டு வந்திருக்கிறேன். நீங்கள் பார்க்க விரும்பினால் பிளான்களைக் காட்டுகிறேன். நெம்பர் த்ரீ: நூறு ஏக்கர் நிலப்பரப்பில் காட்டை அழித்து டீ பயிரிட அனுமதி அநேகமாகக் கிடைத்த மாதிரிதான். பேப்பர் இன்று கையெழுத்தாகி விடும் என்று தெரிந்து கொண்டேன். நாலாவதாக, சென்னை வரும் போது உங்களைச் சந்திக்கச் சொன்னீர்கள்.... கடைசியாகத் தூண் போல நின்ற கிருதாவை எடுத்தாகி விட்டது என்பதையும் உங்கள் கவனத்துக்குக் கொண்டு வர விரும்புகிறேன்.." — டப்பென்று நோட்டுப் புத்தகத்தை மூடி, பாக்கெட்டுக்குள் செருகிக் கொண்டான் சாரங்கன்.

சாருலதா கலகலவென்று ஆனால் அதிகமாக ஓசைப்படுத்தாமல் சிரித்தாள். "நீங்கள் கடைசியாகச் சொன்னதைத்தான் நான் முதலில் கவனித்தேன்" என்றாள். சட்டென்று அதிகார தோரணையில் அவள் முக பாவம் மாறியது. "சாரங்கன் ! உங்களை எஸ்டேட் மானேஜர் பதவியிலிருந்து இன்று முதல் 'டிஸ்மிஸ்' செய்து விட்டேன்" என்றாள்.

சாரங்கன் வெலவெலத்துப் போனான். அடுத்த விநாடி அவனுக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. விருட்டென்று அவன் எழுந்த வேகத்தில் நாற்காலி பின்னுக்குத் தள்ளப்பட்டது. ஆனால் தரையில் மிருதுவான கம்பளம் விரிக்கப்பட்டிருந்ததால் அது நகர முடியாமல் குடை சாய்ந்து விழுந்தது. முகம் சிவக்க அவன் நின்றான். தன்னை ஒரு நிலைப்படுத்திக் கொண்டு கோபத்தை வெளியிட வார்த்தைகளைத் தேடினான். அதற்கு முன்னால் சாருலதா மீண்டும் பேச ஆரம்பித்தாள்:

"அதற்குப் பதில் உங்களை இங்கே என்னுடைய பிரைவேட் செகரட்டரியாக நியமிக்கிறேன். சாரங்கன் ! எஸ்டேட் மானேஜர் என்ற முறையில் நீங்கள் என்ன சம்பளம் வாங்கினீர்கள் ?"

இந்த இரண்டாவது அதிர்ச்சி சாரங்கனின் கண்களை அகல விரிய வைத்தது. சூடாகப் பேச முற்பட்ட அவன் இப்போது சொற்களை மென்று விழுங்கிக் கொண்டிருந்தான். அவள் கேள்விக்கு அவன் பதிலளிக்கு முன் இன்டர்காமில் ரிஸப்ஷனிஸ்ட் லில்லியின் குரல் ஒலித்தது :

"கைலாசம் போனில் இருக்கிறார். உங்களுடன் பேச வேண்டும் என்கிறார்."

"நான் பிஸியாக இருக்கிறேன் ; அப்புறம் ஃபோன் பண்ணச் சொல்லு."

"ரொம்ப அவசரம் என்றார். அதனால்தான்...."

"சரி, டெலிபோன் கனெக்ஷன் கொடு !" என்றாள் சாருலதா.

மேஜையின் மேலிருந்த நாலு டெலி போன்களில் ஒன்று கணகணவென்று ஒலி எழுப்பியது. கருப்பு ஃபோனை எடுத்துப் பேசினாள் சாருலதா. ''சாரு ஹியர்! கைலாசம், நான் ரொம்ப பிஸியாக இருக்கேன். ஐந்து நிமிஷங்கள் கழித்துப் பேசுகிறேன்'' என்றாள்.

போனை வைத்துவிட்டு உடனே மேஜையின் மேல் இருந்த டெலிபோன் எண்களை எழுதி வைக்கும் சிறிய நோட்டுப் புத்தகத்தைப் பிரித்தாள். சாருலதா இன்ஜினீரிங் கம்பெனியின் மானேஜர் கைலாசத்துக்கு இருந்த பர்ஸனல் டெலிபோன் நம்பரைப் படித்து விட்டு, வெள்ளை நிற டெலி போனை எடுத்து எண்களைச் சுழற்றி னாள். ''யார்? கைலாசமா? என்ன விஷயம்? ரொம்ப அவசரம் என்பதால் என்னமோ ஏதோ என்று பிரைவேட் லைனில் கூப்பிட்டேன். ஸ்விட்ச்போர்டு மூலம் வரவேண்டாமே....''

சற்று நேரம் கேட்டுக் கொண்டிருந் தாள் சாருலதா. பிறகு பேசினாள்: ''டெண்டர் தொகை எவ்வளவு?.... சரி, நாளைக்குத்தான் முடிவு செய் கிறார்களாமா? நிச்சயம் தெரியுமா?... ஜோஷியைத்தானே நான் பார்க்க ணும்? அவரை மட்டும் பார்த்துப் பேசினால் போதுமா?.... ஆல்ரைட் கைலாசம்! நான் கவனித்துக் கொள் கிறேன்... டோண்ட் வொர்ரி.... நாளைக்குக் காலையில் ஃபோன் பண் ணுங்கள். இப்போ நான் குறித்துக் கொள்ள வேண்டிய நெம்பர், வேறு விவரங்கள் ஏதாவது இருந்தால் சொல் லுங்கள்...''

சாருலதாவின் கரம் செவிகளில் விழுந் ததை எழுதிக் கொண்டது. ''ஓ.கே.'' என்று கூறி ஃபோனை வைத்து விட்டு நிமிர்ந்தாள்.

''நாம் என்ன பேசிக் கொண்டிருந் தோம்? எஸ்.... உங்கள் சம்பளம்?''

''ஆயிரம் ரூபாய் வாங்கினேன்.''

''சரி, என்னுடைய அந்தரங்கக் காரியதரிசி என்ற முறையில் உங்க ளுக்கு இனி ஆயிரத்து இருநூறு கிடைக்கும். ஆண்டுதோறும் ஐம்பது ரூபாய் இன்கிரீமெண்ட். அதிகபட்சம் இரண்டாயிரம் வரையில் சம்பளம் உயரும். சரிதானா?''

''அங்கே எனக்குக் காரும், வீடும் இருந்தன.''

''அவை இங்கேயும் உங்களுக்கு உண்டு.''

''வேலைக்காரன் இருந்தான்.''

''இங்கும் ஸர்வண்ட் அலவன்சுக்கு ஏற்பாடு செய்யலாம். சாரங்கன் உங்கள் முதல் வேலை என்ன தெரி யுமா? என் எஸ்டேட்டுக்கு உங்களைப் போலவே அல்லது உங்களைவிடத் திறமைசாலியான மானேஜரைக் கண்டு பிடித்து நியமிப்பதுதான்.''

''செய்கிறேன்.''

''டேப் ரிகார்டர் எங்கே?'' என் றாள் சாரு, புன்முறுவலுடன்.

சாரங்கன் டேப் ரிகார்டரைப் பயன் படுத்தினான்.

''வாசலில் ரிஸப்ஷனிஸ்ட் இருக் கும் இடத்துக்குப் பக்கத்தில் ஓர் அறை காலியாக இருக்கிறது. அங்கு டைப்பிஸ்ட் உமாவை அனுப்பி விட்டு, அவள் இப்போது உள்ள அறையை நீங்கள் எடுத்துக் கொள்ளுங்கள். அவளிடமே உங்களுக்கு அப்பாய்ண்ட் மெண்ட் ஆர்டரும் டிஸ்மிஸல் ஆர்டரும் டிக்டேட் பண்ணி டைப் செய்து எடுத்து வாருங்கள். கையெழுத்துப் போடு கிறேன்.''

நிர்வாக ரீதியில் வேறு பல முக்கிய காரியங்களையும் அவள் கொடுத்தாள்.

சாரங்கன் அவ்வப்போது டேப் ரிகார்டரில் உத்தரவுகளைப் பதிவு செய்து கொண்டான்.

சற்று முன்னால் தான் டெலி போனில் கேட்டு எழுதிக் கொண்ட விவரங்களைச் சாரங்கனிடம் தந்தாள் சாருலதா. ''இதை நீங்களே உங்கள் கைப்பட டைப் செய்து எடுத்து வாருங்கள். 'லெட்டர் ஹெட்' வேண் டாம். 'பிளெய்ன் பேப்பரி'ல் இருக்கட் டும். வேறு யாருக்கும் தெரியவும் வேண்டாம். பிறகு இங்கே வந்து பிரை வேட் லைனில் ஜோஷிக்கு ஃபோன் போட்டு கிரீன்லாண்ட்ஸ் ஹோட்ட லில் என்னைச் சந்திக்க முடியுமா என்று கேட்டுச் சொல்லுங்கள். அவருக்கு எப்போது முடியுமோ அப்போது ஸ்விம்மிங் பூல் அருகே என்னை 'மீட்' பண்ணலாம் என்று கூறுங்கள். லஞ்ச் அல்லது டீ எதுவானாலும் கிரீன் லாண்ட்ஸ்லுக்கு ஃபோன் செய்து டேபிள் ரிஸர்வ் பண்ண வேண்டும். இப்போதைக்கு அவ்வளவுதான். வேறு ஏதாவதிருந்தால் இண்டர்காமில் உங் களைக் கூப்பிடுகிறேன்.''

சாரங்கன் எழுந்தான். கதவருகே அவன் சென்றதும், ''சாரங்கன்! ஒன் மினிட்! அந்தரங்கக் காரியதரிசி உத்தியோகம் என்பது ரொம்பப் பொறுப்புள்ள பதவி என்பது மட்டு மல்ல; நான் கூறும் விஷயங்களை உண்மையாகவே அந்தரங்கமாக வைத் துக் காக்க வேண்டும், நீங்கள்! புரி கிறதா, நான் சொல்வது?'' என்றாள்.

சாரங்கன் தலையை ஆட்டினன். ''பிஸினஸ் ஸீக்ரட்ஸ் பலவற்றை நீங்கள் தெரிந்து கொள்ள நேரலாம். ஆனல் உங்களைப் பார்த்ததுமே எனக்கு உள்ளுணர்வு சொல்லிற்று, நீங்கள் நம்பகமான முறையில் விசுவாசத்துடன் நடந்து கொள்வீர்கள் என்று. அதனுல்தான் உங்களை இங்கே தருவித்துக் காரியதரிசியாக நியமித்திருக்கிறேன்!''

''நம்பிக்கைத் துரோகம் செய்ய மாட்டேன், சாரு!''

''சத்தியம் என்ற சொல்லுக்கு மதிப்பு ரொம்பவும் குறைந்து வருகிற காலம் இது. நீங்கள் அப்படிப்பட்டவர் இல்லை என்று நம்புகிறேன். அந்த டேப் ரிகார்டர்...... அதை யாரிடமும் எப்போதும் தராதீர்கள். என்னுடைய உத்தரவுகளை நிறைவேற்றியதும் டேப்களை அவ்வப்போது அழித்து விடுங்கள்.''

''ஆல்ரைட்! கவலையே வேண்டாம் உங்களுக்கு.''




வண்வெளி விஞ்ஞானிக்குப் பிரத்தியேகமான உடை அணிவிக்கப்படாவிட்டால் என்னவாகும்? காற்றில்லாத வானவெளியில் செல்லும் போது அவனது இரத்த நாளங்கள் வெடித்து, உடலிலிருந்து இரத்தம் கசியும், விழிகள் பிதுங்கிக் கொண்டு வந்துவிடும்!

**சா**ரங்கன் போனதும் சாருலதா மேஜை டிராயர் ஒன்றை இழுத்துத் திறந்து அதிலிருந்து ஒரு நீண்ட கனமான நோட்டுப் புத்தகத்தை எடுத்து மேலட்டையைப் புரட்டினுள். உள்ளே பக்கங்களின் ஓரங்கள் அளவாக வெட்டப்பட்டு ஏ, பி, ஸி, டி குறிகள் இடப்பட்டிருந்தன. 'ஜே' என்ற எழுத்து இருந்த பக்கத்தைத் திருப்பினுள். அந்த எழுத்தில் ஆரம்பித்த நான்கு பெயர்களும் அவர்களைப் பற்றிய சிறு குறிப்புக்களும் இருந்தன. ஜோஷியைப் பற்றிப் படிக்க ஆரம்பித்தாள் அவள்.

''காதல் திருமணம். மனைவி நல்ல அழகி. குடும்பப் பற்று மிகுந்தவர். ரசிகர். கலை உள்ளம் மிக்கவர். எலைட் கிளப்பில் சந்தித்த போது பிடித்த நிறம் மஞ்சள் என்று குறிப்பிட்டிருக்கிருர். ரேஸுக்குப் போவதுண்டு.''

சாருலதா நோட்டுப் புத்தகத்தை மூடி வைத்து விட்டு ஒரு நிமிஷம் சிந்தித்தாள். பின்னர் எழுந்து தனது காரியாலய அறைக்குப் பக்கத்தில் இருந்த மற்ருேர் அறையின் கதவைத் திறந்து கொண்டு உள்ளே சென்ருள்.

அங்கு ஓர் அலமாரியில் இருந்த பல புடவைகளை ஆராய்ந்தாள் மஞ்சள் நிறத்தில் இரண்டு புடவைகள் இருந்தன. பட்டுப் புடவை வேண்டாம் என்று ஒதுக்கிவிட்டு 'லெமன் எல்லோ' நிறத்தில் ஷிபான் ஸாரியைப் பொறுக்கிப் பக்கத்திலிருந்த டிரெஸ்ஸிங் டேபிள் மீது வைத்தாள். மறுபடியும் அலமாரிக்குள் நோட்டம் விட்டு நீச்சல் உடைகள் பலவற்றுள் ஒன்றைத் தேர்ந்தெடுத்துத் தனது ஹாண்ட்பாக்கில் மடித்து வைத்தாள். புடவைக்கு ஏற்ற மாதிரி ஒரு ஜாக்கெட்டையும் பொறுக்கி எடுத்தாள். இரண்டு விதமான ஃப்ரேம்களுடன் கூடிய இரண்டு கறுப்புக் கண்ணுடிகளை ஒன்று மாற்றி ஒன்ருகக் கண்ணுக்கு அணிந்து பார்த்து ஒன்றைத் தேர்ந்தெடுத்துப் புடவையுடன் சேர்த்துத் தயாராக வைத்தாள்.

மறுபடியும் காரியாலய அறைக்குத் திரும்பி, ஜோஷி பற்றியோ, அவர் ஒப்புதல் தர வேண்டிய 'டெண்டர்' பற்றியோ கவலை ஏதுமின்றி அன்ருடக் காரியாலய அலுவல்களைக் கவனிக்க ஆரம்பித்தாள். **(தொடரும்)**

# எந்தக் காரணத்தால் உங்களுக்குத் தலைவலி வந்தாலும், அதைப் போக்க ஒரே ஒரு ஸாரிடான் போதும்!

தலைவலி பலவிதம். எந்தக் காரணத்தால் உங்களுக்குத் தலைவலி வந்தாலும், அதை விரைவில் போக்க ஒரே ஒரு ஸாரிடான் சாப்பிட்டால் போதும். ஸாரிடானில் சேர்க்கப் பட்டுள்ள கலவைப் பொருள்கள் தலைவலி, உடல்வலி மற்றும் பல்வலியுடன் கூடவே அனுபவ மாகும் சோர்வையும் போக்கு கின்றன; மற்றும் இதமளித்து புத்துணர்ச்சியும் ஊட்டுகின்றன. அதுவே ஸாரிடானின் தனிச் சிறப்பு!

**ஸாரிடான்** 

'ரோஷ்'




HTA-VT-8421-A. 'ரோஷ்' தயாரிப்பு ஏகபோக விநியோகஸ்தர்கள்: வோல்டாஸ் லிமிடெட்



# சாருலதா

## கி.ராஜேந்திரன்

### அத்தியாயம் 9

## வனப்பின் வெற்றி

ஹோட்டல் கிரீன்லாண்ட்ஸின் நீச்சல் குளத்தருகே மாலை நாலு மணி பத்து நிமிஷத்துக்கு ஜோஷி வந்தபோது அங்கே செயற்கைக் குளங்களில் தாமரைகள் இல்லாத குறையைச் சாருலதா நிவர்த்தி செய்து விட்டிருப்பதைக் கண்டார். குளத்தின் அடிவாரம் கூடத் தெரியுமளவுக்குத் தெளிவான நீரில் அவளுடைய உடல் கொடியாக இறங்கியிருக்க முகத் தாமரை மட்டும் ஆகாயத்தை நோக்கியபடி அண்ணாந்து இருந்தது. தாமரையைச் சுற்றிலும் சிறிய சிறிய ரோஜாக்களைப் பறித்து யாரேனும் மிதக்க விட்டிருக்கிறார்களோ என்று நினைக்கச் செய்தது சாருலதா தலையில் அணிந்திருந்த நீச்சல் 'காப்'. கேசம் நனையாதிருக்கப் பாதுகாப்பாக அணியப்படும் அந்த ரப்பர் தொப்பியில் அலங்காரமாகச் சிறிய சிறிய பிளாஸ்டிக் ரோஜா மலர்கள் இருந்தன. 'பேக் ஸ்ட்ரோக்' என்ற முறையில் அவள் நிதானமாக நீந்திக் கொண்டிருந்தாள். அவளுடைய வழுவழுப்பான இரு கரங்களும் மாறி மாறி ஒரு காலப் பிரமாணத்துடன் ஈரம் சொட்டச் சொட்ட மேலே எழும்புவதும் தலைக்குப் பின்னால் சென்று இறங்குவதுமாக இருந்த தானது வெள்ளி மீன்கள் அவ்வப்போது உயரே துள்ளி நெளிந்து விழுவது போல் ஓர் அழகுத் தோற்றத்தை ஏற்படுத்தின.

அந்த நேரத்தில் நீச்சல் குளத்தினருகே அதிகம் பேர் இருக்கவில்லை. கரையில் நின்ற ஜோஷி, தாம் வந்துவிட்டதைச் சாருலதாவுக்கு அறிவிக்க வாய் திறந்தார். அடுத்த கணமே அந்த எண்ணத்தை மாற்றிக் கொண்டு அங்கிருந்த ஒரு நாற்காலியின் முதுகில் கோட்டைக் கழற்றி மாற்றிவிட்டு டையையும் தளர்த்திக் கொண்டு அமர்ந்தார். ஒரு சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டார். தம்முன் விரிந்து கிடந்த ஒரு மனமோகனக் காட்சியை ரசிக்கத் தொடங்கினார்.

நீருக்குள் சாருலதாவின் உடல் புரண்டு கொடுத்தது. ஜோஷிக்குத் தமது இதயமே புரண்டு கொடுப்பது போலிருந்தது. முன் போலன்றிச் சாருலதாவின் கால்களும் கைகளும் இப்போது தமது சக்தியைக் காட்டித் துரிதமாக இயங்கின. நீச்சல் குளத்தின் ஓரத்துக்கு வந்து அங்கிருந்த ஏணியில் அவள் ஏறத் தொடங்கினாள்.

காலைக் கதிரவனின் ஒளி கொஞ்சம் கொஞ்சமாக உலகின் அழகுகளைப் புலப்படுத்துவதுபோல் சாருலதாவின் மேனி எழில் படிப்படியாக நீருக்கு வெளியே தெரியலாயிற்று. ஜோஷியின் கண்கள் அகல அகல விரிந்தன. தம்முடைய கண்ணே பட்டுவிடும் என்று பயந்தவர் போல் அவர் விரல்களைச் சொடுக்கினார்.

பாலைச் சுண்டக் காய்ச்சித் திரட்டுவது போலல்லவா இறைவன் அழகைக் குறுக்கிக் குறுக்கிச் சாருலதாவாகத் திரட்டி நிறுத்தி யிருக்கிறான்! நீர்த் துளிகளுடன் கூடிய பொன்னிற மேனி மாலைக் கதிரவனின் செவ்வொளி பட்டுச் செம்பொன்னாகத் தகதகத்தது. தலையிலிருந்த தொப்பியைக் கழற்றி விட்டுத் தலையை அசைத்தபோது கேசம், விடுதலை பெற்றதில் மகிழ்ந்தது போல் அவள் கன்னத்தை முத்தமிட்டுக் கொஞ்சிப் பிரிந்தது. ஜோஷி சொக்கிப் போனார்.

அப்போதுதான் அவர் அங்கு வந்திருப்பதைக் கவனித்தவள்போல் காட்டிக் கொண்ட சாருலதா, இலேசாக வியப்பை முகத்தில் தருவித்துக்கொண்டு அவரை நோக்கி நடந்து வந்தாள். வளைவுகளும் நெளிவுகளும் மிகுநத அந்த உடல், சிவந்த நீச்சல் உடையினால் கவ்வப்பட்ட நிலையில் தம்மை நோக்கி ஒயிலாக நடந்து வரும்போது தம் இதயம் ஏன் இவ்வளவு பெரிதாக அடித்துக் கொள்கிறது என்று ஜோஷிக்குக் கோபம் கோபமாக வந்தது. 'டப் டப்' பென்ற அந்த ஒலியைத் தாம் உணர்வது போல் சாருலதாவும் கேட்டுவிடக் கூடாதே என்று பயந்தவராக அவர் இடது மார்பின் மேல் கரத்தை வைத்து அழுத்திக் கொண்டார்.

''டிட் ஐ கீப் யூ வெய்ட்டிங் ஃபார் லாங்?'' என்றாள் சாருலதா.

''இல்லை; இல்லை! இப்போதுதான் வந்து டையைத் தளர்த்திக் கொண்டு உட்கார்ந்தேன். அதற்குள் நீங்கள்

கரையேறி விட்டீர்கள்'' என்றார் ஜோஷி. ஆங்கிலத்தில் பேசினார். உரையாடல் அந்த மொழியிலேயே தொடர்ந்தது.

''இரண்டே நிமிஷங்களில் வந்துவிடுகிறேன்'' என்று கூறிப் போனாள் சாருலதா.

என்றோ எப்போதோ வாலிபப் பருவத்தில் எஸ்தர் வில்லியம்ஸ் நடித்த ஆங்கிலத் திரைப் படத்தைப் பார்த்த ஞாபகம் ஜோஷிக்கு வந்தது. அந்தத் திரைப் படக் காட்சியை விடப் பன்மடங்கு அதிக எழிலை இங்கே கண்ணுக்கு மெய்யாகக் காணும் வாய்ப்பு கிட்டியிருக்கும்போது எதற்காகத் தாம் அந்தப் பழங்காலத்திய நடிகையை நினைக்க வேண்டும் என்று தம்மீதே அவர் கோபப் பட்டுக் கொண்டார். ஆனாலும் என்ன? சாருலதா தமக்கு முதுகைக் காட்டிக் கொண்டு அசைந்து அசைந்து நடந்து போவதைப் பார்த்த போது அவருக்கு 'நயாக்ரா' என்ற திரைப் படத்தில் தாம் பார்த்த மேரிலேன் மன்ரோவின் நடை நினைவு வந்தது. சினிமா நட்சத்திரங்களுடன் சாருலதாவை ஒப்பிட்டுப் பார்ப்பது அவருக்கே பிடிக்கவில்லை. ஓழிந்த நேரங்களில் ஷேக்ஸ்பியரையோ ஷெல்லியையோ படிக்காமல் சினிமாப் பார்ப்பதும், சினிமாப் பத்திரிகைகளைப் புரட்டுவதுமாகத் தம் வாழ்நாளைக் கழித்ததே தவறு என்று தம்மீதே அவர் குற்றம் சாட்டிக் கொண்டார்.

சாருலதாவை யாருடனாவது ஒப்பிடுவது என்றால் அது கிளியோபாத்ரா என்ற சரித்திர நாயகியாகத்தான் இருக்க முடியும் என்று எண்ணினார்.

அப்போதும் உடனே அவருக்கு எலிஸபெத் டெய்லரின் நினைவு வந்தது. தம்மைத் தாமே அவர் வெறுத்துக் கொள்ள ஆரம்பித்தபோது, ''என்ன பலமான யோசனை?'' என்ற மதுரமான குரல் கேட்டது. அவர் நிமிர்ந்து பார்த்தார்.

குங்குமப் பூக்களை அள்ளித் தெளித்தாற்போன்ற சித்திரங்களும் நிறமும் கொண்ட 'ரவிக்' அணிந்திருந்த சாருலதா, அப்போதுதான், குளித்து வந்திருந்ததால் அந்தக் குங்குமப் பூவே கரைந்து உடல் முழுதும் வழிந்திருப்பது போன்று மஞ்சள் நிற ஷிஃபான் சேலை உடுத்தியிருந்தாள். மாலை நேரத்தைப் பொழுது போக்காகக் கழிக்க ஏற்ற நவநாகரிக உடையாக அமைந்திருந்தன அவை.

''உன்னை எலிஸபெத் டெய்லருடன் ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டிருந்தேன்'' என்று உண்மை பேசினார் ஜோஷி.

''அளவுக்கு அதிகமாகவும் அநாவசியமாகவும் என்னைப் புகழ்கிறீர்கள்'' என்றாள் சாருலதா.

'' அப்படி ஒப்பிட்டதில் எனக்குத் திருப்தி ஏற்படவில்லை. கடைசியில் சாருலதா யாருடனும் ஒப்பிட முடியாதவள் — ஒப்பற்றவள் என்ற முடிவுக்கு வந்து விட்டேன்.''

மறுபடியும் அவர் புகழ்வதை அலட்சியப்படுத்தியவளாக, ''அடிக்கடி நீச்சல் குளத்துக்கு வர ஆசைதான்; ஆனால் நேரமே கிடைப்பதில்லை. இன்று பாங்க் ஆஃப் ஏஷியா டைரக்டர்கள் மீட்டிங், எதிர்பார்த்ததை விடச் சீக்கிரமாக முடிந்து விட்டது. இங்கே சற்று முன்னதாகவே வந்து விட்டேன். காத்திருக்கும் நேரத்தில் நீரில் இறங்கலாமே என்று தோன்றியது. ஹோட்டலை ஒட்டியிருக்கும் டிபார்ட்மெண்டல் ஸ்டோரில் நல்ல வேளையாக என் அளவுக்கு நீச்சல் உடை இருந்தது...'' — கூசாமல் புளுகுகிறோம் என்ற நினைவே இல்லாமல் பேசினாள் சாருலதா.

''உங்களைப் பார்த்தே நாளாகி விட்டதே? எலைட், கிளப்புக்கு ஏதாவது விசேஷ தினங்களில்தான் வருகிறீர்கள். ரொம்பக் கடுமையாக உழைக்கிறீர்களோ?''

பேசிக் கொண்டே நடந்து சென்று அவரை அந்தப் புத்தம் புதிய ஹோட்டலைச் சேர்ந்த முதல் தரமான 'மாயா ரெஸ்டாரண்டு'க்கு அழைத்துப்போனாள் சாருலதா. மங்கலான ஒளி. குளுகுளுவென்றிருக்கும் விசாலமான அறை. சுவர்களில் அளவாகச் சில ஓவியங்கள். அலங்காரமான விளக்குகள். நானூறு பேருக்கு மத்தியில் இருந்தாலும் ஒவ்வொரு மேஜையையும் சுற்றி ஓர் அந்தரங்கமான சூழ்நிலை நிலவுவது போன்ற பிரமை. கூரையில் மறைந்திருந்த ஒலி பெருக்கிகள் அடக்கமாகத் தம் கடமையைச் செய்து மெல்லிய இசையைச் சொரிந்தன. தொலைவில் அந்த மேல் நாட்டு இசையை வழங்கும் வாத்தியக் குழுவினரின் உடல் அசைவுகளைப் பார்க்க முடிந்தது.

டையைச் சரி செய்து கொண்டு கோட்டையும் அணிந்து சாருலதாவுடன் நடந்த ஜோஷி, 'தமக்குத் தெரிந்த பெரிய மனிதர் யாராவது அந்த ரெஸ்டாரண்டுக்கு அப்போது வந்திருக்கக் கூடாதா, தாம் சாருலதாவுடன் சேர்ந்து நடந்து வரு

# துரிதமாக. ஜாக்கிரதையாக. நிச்சயமாக.

# எப்படி?

இப்போது இடையில் நிற்காதபடி ஒரு நகரத்திலிருந்து மற்ளெரு நகரத்திற்கு நேராக எங்கள் லாரிகளைச் செலுத்துகிறோம். இந்த துரித சர்வீஸை எங்கள் வாடிக்கையாளர்கள் பெரிதும் வரவேற்கின்றனர். ஏனெனில் இந்தமுறையில் பார்சல்களை மேலும் துரிதமாக, ஜாக்கிரதையாக கொண்டு சேர்க்க முடிகிறது. இது போன்ற துரித் சர்வீஸ்களை நாங்கள் மேலும் விரிவுபடுத்தி பல நகரங்களை நேரிடையாக இணைத்து வருகிறோம்.

இந்த சர்வீஸை வியாபாரிகள் சமூகம் மிக மிக வரவேற்கிறது. ஏனெனில் வியாபாரத்திற்கான சாமான்கள் ஜாக்கிரதையாக தடங்கலின்றி அடைவதால் அவர்கள் தேவையான அளவே ஸ்டாக் செய்கின்றனர். இதனல் அவர்கள் மூலதனத்தை அனாவசியமாக முடக்கத் தேவையில்லை.

## இந்த சிறப்பான பணி ஸதர்ன் ரோட்வேஸினுல் எப்படி முடிகிறதென்ருல்:

- தனியார் துறையில் ஸதர்ன் ரோட்வேஸ் நிறுவனமே மிகவும் பெரிய ஸ்தாபனம்.
- அவர்கள் தங்களுக்குச் சொந்தமான லாரிகளையே இயக்குகிறார்கள்.
- அவர்களின் பயிற்சி பெற்ற ஊழியர்கள், லாரி ஸ்தாபனத்தின் ஒவ்வொரு இயக்கத்தையும் தனித்தனியே கண்காணிக்கின்றனர்.
- இவர்களின் டிரைவர்கள், உடலியலையும், உளவியலையும் பொருத்து நடத்தும் பரிசோதனைகள், மற்றும் தூரத்தைப்பற்றி மதிப்பிடும் பரிசோதனைகள், கண் கால்களிடை கச்சித ஒத்துழைப்புக்கான பரிசோதனைகள் ஆகியவற்றிற்கு உள்ளாகிய பிறகுதான் தேர்ந்தெடுக்கப் படுகிறார்கள்.
- 100 மைல்கட்கு ஒன்றுவீதம் ரிப்பேர், மற்றும் பராமரிப்புக்கான வசதி கொண்ட தொழில் பட்டறைகள் அமைத்திருக்கிறார்கள்.

இக்காரணங்களால் தமிழ்நாடு, ஆந்திரப்பிரதேசம், மைசூர், கேரளம் முதலிய மாநிலங்களின் மக்களிடை ஸதர்ன்ரோட்வேஸ் பெருநம்பிக்கை பெற்றிருக்கிறது.

ஓரிடத்திலிருந்து மற்ளெரு இடத்திற்கு நேரிடை பார்சல் சர்வீஸ்



உங்கள் நம்பிக்கைக்கு உரியது டிவிஎஸ்




ஸதர்ன் ரோட்வேஸ்
பிரைவேட் லிமிடெட்
(இது ஒரு டிவிஎஸ்
ஸ்தாபனம்)
மதுரை

வதைப் பார்க்கக் கூடாதா?' என்று ஏங்கினர். அத்தனை பெருமையாக இருந்தது அவருக்கு.

சாருலதாவைப் பார்த்ததுமே சூப்பர் வைஸர் ஒருவன் முகமன் கூறி அவளை ஒரு மேஜைக்கு அழைத்துப் போய் அமர உதவினன். 'ரிஸர்வ்ட்' என்று எழுதி வைக்கப் பட்டிருந்த பலகையை மேஜையிலிருந்து அகற்றினன்.

ஒன்றிரண்டு நிமிஷங்களில் சிற்றுண்டிகள் வரத் தொடங்கி விட்டன. இன்னின்ன உணவு வகைகள் தேவை என்று முன்கூட்டியே சாருலதா சொல்லி வைத்திருக்கிருள் என்று புரிந்து கொண்டார் ஜோஷி. ஒன்றன் பின் ஒன்ருக இரண்டு வித இனிப்புக்களுக்குப் பிறகு சுடச் சுட பேல் பூரியும் கட்லெட்டும் வந்தன.

''எனக்கு இந்த மாயா ரெஸ்டாரண்டின் சூழ்நிலே, உணவின் ருசி எல்லாமே பிடிக்கும்'' என்றுள் சாருலதா. ''எந்த விதமான பலகாரமாலும் முன்கூட்டியே சொல்லிவிட்டால் பிரமாதமாகத் தயாரித்து விடுவார்கள். அதை விட முக்கியம் மரியாதையாகவும் கௌரவம் அளித்தும் நடந்து கொள்கிருர்கள்.''

சாருலதா நாசூக்குப் பாராமல் ஆர்வமும் ஆசையும் மிக உணவு வகைகளைச் சுவைத்துச் சாப்பிடுவதைப் பார்க்க ஜோஷிக்கு ஆச்சரியமாக இருந்தது.

அவர் எண்ணத்தை ஊகித்தவள் போல் அவள் சொன்னுள்: ''எடை பார்க்கிற வழக்கமே எனக்குக் கிடையாது. அதைப் பற்றிக் கவலைப்படுவதே இல்லை. வஞ்சனை இல்லாமல் சாப்பிடுவேன். உடல் பருக்காமல் இருக்கக் காலையில் ஒரு மணி நேரம் பலவிதமான தேகப்பயிற்சிகளைச் செய்து வருகிறேன். அப்புறம் அரை மணி நேரத்துக்குக் குறையாமல் டென்னிஸ்; போதாதா?''

ஜோஷியும் உற்சாகத்துடன் ஒரு கை பார்க்க ஆரம்பித்தார். ஒரு பெண்ணெதிரே இருக்கிருேமே என்ற தயக்கமில்லாமல் தைரியமாகச் சப்புக் கொட்டிச் சாப்பிட்டார்.

''உங்கள் அழகின் ரகசியம் எனக்கு இப்போது புரிந்து விட்டது. எல்லாருக்கும் அம்பலப்படுத்தி விடுகிறேன் இதை!''

''அம்பலப்படுத்தக் கூடிய ரகசியமாக நான் எதையும் கூறிவிடவில்லையே? எல்லாருக்கும் தெரிந்ததுதான். ஆனல் அசிரத்தை. தேகப்பயிற்சி செய்யச் சோம்பல். அதனல் உடல் பருக்கும். ஐயோ! உடல் பருத்துவிட்டதே என்று சாப்பாட்டைக் குறைத்து அரைப் பட்டினியாகச் சித்திரவதை செய்து கொள்வார்கள். உடல் பலவீனமுற்று வேண்டாத வியாதிகள் எல்லாம் வந்து சேரும்.''

''நீங்கள் சொல்வது ரொம்பச் சரி. என் சிநேகிதன் ராம்சந்தின் மகள் ஷீலா பி.ஏ. படிக்கிருள். அவள் இப்படித்தான் சாப்பிடுவதே கிடையாது....''

''இன்னும் சிலர் இருக்கிருர்கள்; அவர்கள் நான் வீட்டு வேலை யெல்லாம் செய்கிறேனே; அது தேகப் பயிற்சி இல்லையா? என்பார்கள். இல்லை என்று சொன்னுல் கேட்க மாட்டார்கள். வீட்டு வேலை செய்யும்போது உடல் உறுப்புக்கள் எல்லாவற்றுக்கும் தேவையான அளவு ஒரே சீரான பயிற்சி கிட்டுவதில்லை. அதற்கென ஏற்பட்ட பயிற்சிகளைத்தான் செய்ய வேண்டும்.''

''குதிரைச் சவாரி செய்யும்போது, உடல் உறுப்புக்கள் அனைத்துக்கும் நல்ல பயிற்சி கிடைப்பதாகச் சொல்லுகிருர்கள்.''

''ஜோஷி! நீங்கள் ஞாயிற்றுக்கிழமை ரேஸ் கிளப்புக்கு வருவீர்களா? ஏதாவது 'டிப்ஸ்' கிடைத்திருக்கிறதா?''

''நாலாவது ரேஸில் ஓடுகிறது டய மண்ட் க்வீன். அதை மறந்துவிடாதே, சாரு. நிச்சயம் ஜெயிக்கும் என்று தெரிகிறது.''

''பாலகோபாலை புக்கீஸ் 'பிளாக் லிஸ்ட்' செய்து விட்டார்களாமே, கேள்விப்பட்டீர்களா?''

''நூற்றுக்கு நூறு அது உண்மை. பெரிய மனுஷன் வீட்டுப் பிள்ளை என்பதற்காக புக்கீஸ் வாயை மூடிக் கொண்டிருக்க முடியுமா? மூளையையே உபயோகிக்காமல் கண்ணை மூடிக் கொண்டு ஆடுகிறவன் கதியெல்லாம் இதுதான்...''

பேச்சு வளர்ந்தது. கட்லெட்டும் பூரியும் மறைந்த பின்னர் காப்பியும் பீச்மெல்பாவும் வந்தன.

''சாப்பாடு போலவே ஆகிவிட்டது. இன்றிரவு என் மனைவிக்கு என்ன பதில் சொல்லப் போகிறேனே, தெரியவில்லை. எனக்குப் பிடித்த சமையலாகப் பண்ணி வைத்துக் கொண்டு காத்திருப்பாள்.''

''சாருலதா மீது பழியைப் போடுங்கள். நளினி உங்களை மன்னித்து விடுவாள். அது சரி! இத்தனை நேரம் நான் கேட்காமலிருந்ததே பிசகு. நளினி பஹன் எப்படி இருக்கிருள்? பார்த்து மாதக் கணக்கில் ஆகிவிட்டது.''

உலகிலேயே அதிவேகமாக எழுப்பப்பட்ட கட்டிடம் மேற்கு ஜெர்மனி நகரான ஹாம்பர்க்கில் உள்ளது.



அறுபது தொழிலாளர்கள் ஏழு மாடிக் காரியாலயக் கட்டிடத்தை 65 மணி நேரம் 41 நிமிஷம் 23 செகண்டில் எழுப்பினார்கள்.

346 தனித் தனி கான்கிரீட் பகுதிகள் இணைக்கப்பட்டுக் கட்டிடம் உருவாயிற்று. தண்ணீர்க் குழாய்கள், விளக்குகள் முதலானவை முன்கூட்டியே இந்த கான்கிரீட் பகுதிகளில் பொருத்தப்பட்டிருந்தன. உரிய இடத்தில் முடுக்கப்பட்டுத் தயாராக இருந்தன.

--ஜெர்மன் இன்டர்நேஷனல்

ஜோஷியின் முகம் இலேசாகச் சிவந்தது. ''சௌக்கியமாக இருக்கிறாள். அடிக்கடி வெளியே போக அவளால் முடிவதில்லை. இன்னும் ஒரு மாத காலத்தில் குடும்பத்தினரின் எண்ணிக்கை மறுபடியும் உயர விருக்கிறது.''

''அப்படியா? இந்தச் சந்தோஷ சமாசாரத்தை முதலிலேயே சொல்லியிருக்க வேண்டாமோ? நளினி அக்காவிடம் என் மகிழ்ச்சியைத் தெரியப்படுத்துங்கள்.''

இதே சமயத்தில் சொல்லி வைத்தாற்போல் வேறு ஏதாவது தேவையா என்று கேட்க மேற்பார்வையாளர் வரவே, ''இன்னும் இரண்டு ஸ்வீட்! பாதாம் ஹல்வா இருந்தால் நல்லது'' என்றாள் சாருலதா.

''வேண்டாம், வேண்டாம்! எதற்கு மறுபடியும்?'' என்று ஜோஷி மறுத்தார்.

''அதெல்லாம் முடியாது. மரியாதையாகச் சாப்பிடா விட்டால் நளினி பஹனை இங்கே டெலிபோன் செய்து வரவழைத்து இத்தனை பேர் எதிரேயும் உங்களுக்கு ஊட்டச் சொல்லி விடுவேன்!''

''ஆர்வது குழந்தை! நான் வெளியே சொல்லவே வெட்கப்பட்டுக் கொண்டிருக்கிறேன்! நீ என்னடாவென்றால் இனிப்புக்கு மறுபடியும் ஆர்டர் கொடுக்கிறாய்!''

''எதற்காக வெட்கப்பட வேண்டும்? ஓ! நாற்சந்திகளில் எல்லாம் சிவப்பு முக்கோணத்தைத் தீட்டி வைத்திருக்கிறார்களே, என்றா? அது உங்களுக்காகவா, என்ன? இரண்டு அறைகளில் இருபது பேர் அடைந்து கிடக்க வேண்டாம் என்பதற்காகப் பிரசாரம் செய்கிறார்கள். அதைக் கண்டு நீங்கள் மிரள்வானேன்?''

''நிஜமாகத்தான் சொல்லுகிறாயா, சாரு? இல்லை கிண்டல் பண்ணுகிறாயா?''

''ஜோஷி! நீங்கள் 'ஸவுண்ட் ஆஃப் மியூஸிக்' சினிமா பார்த்திருப்பீர்களே! அதிலே அப்பா விசில் அடித்ததும் குழந்தைகள் வரிசையாக வந்து நிற்கும் இல்லையா? நாற்காலியை விட்டு எழுந்து போய் ஏழு குழந்தைகளையும் ஒன்றாய்ச் சேர்த்துக் கட்டிப் பிடித்துக் கொள்ளலாமா என்று எனக்குத் தோன்றும். நளினி பஹன் ரொம்பக் கொடுத்து வைத்தவள்....'' சாருலதாவின் மனம் பேசவில்லை; ஜோஷியை மகிழ்விக்க அவள் நா பேசியது.

சாப்பிட்டு முடியும் தறுவாயில் மேற்பார்வையாளர் ஒரு பலகையுடன் சேர்த்து 'கிளிப்' செய்யப்பட்ட கார்பன் காகித நகலுடன் கூடிய பில்லைச் சாருலதா பக்கம் நீட்டி ஒரு பென்சிலையும் அடக்கத்துடன் கொடுத்தார். விநாடிப் போதில் அதில் கையெழுத்துப் போட்டதுடன் தயாராக வைத்திருந்த ஒரு நோட்டையும் 'டிப்' பாகப் பில்லுடன் சேர்த்துத் தந்தாள் சாருலதா.

''போவோமா?'' என்றாள். ''உங்கள் கார் எந்தப் பக்கத்தில் இருக்கிறது?''

காரை நோக்கி நடக்கும்போது அவள் சொன்னாள்: ''ஜோஷி! 'பூக்கடைக்கு விளம்பரம் வேண்டாம்' என்று தமிழில் ஒரு பழமொழி உண்டு. அதே போல்தான் சாருலதா இன்ஜினீரிங்குக்கு விளம்பரமோ, சிபாரிசோ தேவையே இல்லை. அதன் சிறப்பு, அதில் பணியாற்றுவோரின் திறமை, எல்லாம் விஷய ஞானம் உள்ளவர்களுக்கு நன்றாகத் தெரியும். ஆனாலும் உங்கள் மேஜை மேல் ஏகப்பட்ட ஃபைல்களும் காகிதங்களும் இருக்க அதற்கிடையில் எங்கள் டெண்டர் அகப்பட்டுக் கொண்டு ஒருவேளை உங்கள் பார்வையில் அது படாமல் போய் விடப் போகிறதே என்பதற்காகச் சொல்கிறேன்.''

''டிபன்ஸ் அகாடமி கட்டிடம்தானே? நான் கவனிக்கிறேன்.''

''நீங்கள் கவனிக்காமல் இருக்க மாட்டீர்கள் என்றாலும், ஒரு வார்த்தை உங்களிடம் சொல்லும் உரிமையையும் சுதந்திரத்தையும் நான் எடுத்துக் கொள்ளலாம் என்று தோன்றியது. தவறாக நினைக்க மாட்டீர்களே?''

''நோ, நோ! தவறாக நினைக்க இதில் என்ன இருக்கிறது?''

சாருலதா கார் கதவைத் திறந்து பிடிக்க, டிரைவர் ஆசனத்தில் ஜோஷி அமர்ந்து காரைக் கிளப்பினார்.

''ஒரு நிமிஷம்!'' என்று அவரைத் தாமதப்படுத்தினாள் சாருலதா. தன்

கரத்தில் தொங்கிய அலங்காரப் பையைத் திறந்து அதனுள்ளிருந்து வெற்றுக் காகிதத்தில் சாரங்கன் டைப் செய்து தந்திருந்த ஞாபகக் குறிப்பை எடுத்தாள். நாலாக அதை மடித்து ஜோஷியின் இடது மார்பில் படிமானமாக இருந்த கோட்டுப் பையில் செருகினாள். அவருக்கு மெய் சிலிர்த்தது.

''நீங்கள் மறக்காமல் இருக்க'' என்று சொல்லி, ஒரு மோகனப் புன்னகையுடன் கரம் குலுக்கக் கையை நீட்டினாள் சாருலதா. கொஞ்சம் அழுத்திப் பிடித்தால் அவளுக்கு வலித்துவிடுமோ என்று பயந்தவர் போல் இலேசாக விரல்களைப் பற்றினார் ஜோஷி.

''இன்றைய மாலைப் பொழுது எனக்கு இனிமையாகக் கழிந்தது; மிக்க நன்றி'' என்று கூறி விடை பெற்றாள் சாருலதா.

* * *

ஜோஷியின் கார் நகர்ந்ததும் சாருலதா, ஹோட்டலின் முன்புற வராந்தாவில் இருந்த டெலிபோன் 'பூத்' பலவற்றுள் ஒன்றில் நுழைந்தாள். கையில் சில்லறையைத் தயாராக எடுத்து வைத்துக் கொண்டு கதவைச் சாத்திய பிறகு தன் காரியாலயத்துக்கு டெலிபோன் செய்தாள்.

''சாருலதா என்டர்பிரைஸஸ்—சேர்மன்ஸ் ஆபீஸ்'' — ரிஸப்ஷனிஸ்ட் லில்லியின் குரல் ஒலித்தது.

''லில்லி! சாரு பேசுகிறேன். சாரங்கன் இருக்கிறாரா?''

''இப்போதான் வெளியே கிளம்பினார்.''

''எங்கே போகிறார்?''

''தெரியாது.''

''நீ உடனே போய் லிஃப்ட்டுக்காக அவர் காத்திருந்தால் அழைத்து வா.''

''இதோ!''

சற்று நேரத்தில் ஆண் குரல் கேட்டது: ''சாரங்கன் பேசுகிறேன்.''

''சாரங்கன்! என்னுடைய அந்தரங்கக் காரியதரிசி என்ற முறையில் நீங்கள் செய்ய வேண்டிய முதல் காரியம், முக்கியமான காரியம் என்ன தெரியுமா?''

''........''

''நீங்கள் எங்கே வேணுமானாலும் போங்கள், வாருங்கள். காரியாலய அலுவல் நிமித்தமாகவே நீங்கள் பல இடங்களுக்கும் போக வேண்டி யிருக்கும். ஆனால் நீங்கள் எந்த வினாடியிலும் எங்கே இருக்கிறீர்கள் என்பது எனக்குத் தெரிய வேண்டும். என்னிடமோ லில்லியிடமோ தகவல் சொல்லி விட்டுப் போக வேண்டும்.''

மேற்கு ஜெர்மனி கொலோன் நகரில் ஓர் உயர்நிலைப்பள்ளி. பரீட்சையை நினைத்து மாணவிகள் நகத்தைக் கடித்துக் கொண்டு உட்கார்ந்திருக்கவில்லை. பள்ளியின் தலைமை ஆசிரியையே, அவர்களைப் பரீட்சை தொடங்கச் சற்று நேரம் இருந்தபோது நடனப் பார்ட்டியில் ஈடுபட ஊக்குவித்தார். மாணவிகள் தங்கள் நண்பர்களையும் அழைத்துக் கொண்டு வந்து பரீட்சைக் கவலையை மறந்து ராக் அண்டு ரோல் அல்லது டுவிஸ்ட் நடனமாடினார்கள். பிறகு அங்கிருந்து நேராகப் பரீட்சைக்குப் போனார்கள். கவலைப்படாமல், நரம்புத் தளர்ச்சி இன்றிச் சென்றதன் விளைவு: ஒருவர் பாக்கி இல்லாமல் எழுபத்தெட்டு பேரும் பரீட்சையில் வெற்றி பெற்றனர். —ஜெர்மன் இன்டர்நேஷனல்



''எஸ் சாரு!'' — சாரங்கன் டெலிபோனில் கேட்கும் குரலுக்கு 'ஸல்யூட்' செய்தான் மிகையான மரியாதையுடன். லில்லி புன்முறுவல் பூத்தாள்.

''சாருலதா இஞ்ஜினீரிங்'' கைலாசத்தினிடம் 'காரியம் முடிந்துவிட்டது. கவலைப்பட வேண்டாம்' என்று சொல்லுங்கள். இரண்டாவது, ஜோஷியின் மனைவிக்கு இன்னும் ஒரு மாதத்துக்குள் குழந்தை பிறக்கப் போகிறது. அதை அவர்கள் ஒன்றும் பெரிதாகக் கொண்டாட மாட்டார்கள். ஆனால் வீட்டோடு சுப விசேஷம் நடக்கும். அது என்றைக்கு என்பதையும் குழந்தைக்கு என்ன பெயர் வைக்கப் போகிறார்கள் என்பதையும் நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும். ஆனால் இவற்றை அறிய நீங்கள் விசேஷப் பிரயத்தனம் செய்வது போல் காட்டிக் கொள்ளக் கூடாது. குறிப்பிட்ட தினத்தில், ஆயிரம் ரூபாய்க்குக் குறையாமல் ஒரு பரிசு வாங்கிக் கொண்டு போய்க் கொடுத்து விட்டு வாருங்கள். என் விஸிட்டிங் கார்டில் குழந்தையின் பெயரையும் எனது ஆசிகளையும் எழுதி அந்தப் பரிசுடன் வைத்து அழகாக 'பாக்' செய்து தர வேண்டும்.''

''ஓ.கே. சாரு. நான் கவனித்துக் கொள்கிறேன்'' என்றான் சாரங்கன்.

அவன் ஃபோனை வைத்து விட்டு நிமிர்ந்ததும் லில்லி தலையைச் சாய்த்து அவனைப் பார்த்தாள். குறும்புப் புன்னகையுடன், ''என்ன ரொம்ப நீளமான உத்தரவு போலிருக்கிறதே. அந்தரங்கக் காரியதரிசிக்கு?'' என்றாள்.

''ஆமாம், அந்தரங்கமான உத்தரவும் கூட'' என்று கடுமையான குரலில் கூறி அவளைச் சங்கடத்துக்குள்ளாக்கினான் சாரங்கன். (தொடரும்)

## அத்தியாயம் 10

# காதலைக் கொல்ல ஓர் ஆயுதம்!

'இன்டர் கா'மில் ரிஸப்ஷனிஸ்ட் லில்லியின் குரல் ஒலித்தது:

''டாக்டர் வேணுகோபால் வந்திருக்கிறார்.''

சாருலதாவின் முகத்தில் வியப்பும் பரபரப்பும் புயல் வேகத்தில் சுழல்வதைக் கண்டான் எதிரே இருந்த சாரங்கன்.

''வரச் சொல்லு! வரச் சொல்லு!'' என்ற சாருலதா எழுந்து போய் அறைக் கதவைத் திறந்து பிடித்துக் கொண்டு நின்றாள்.

வேணுகோபால் தன் தோற்றத்தில் வழக்கத்தை விடச் சற்று விசேஷ சிரத்தை எடுத்துக் கொண்டிருக்கிறான் என்பது அவளுக்குப் பார்த்த மாத்திரத்திலேயே புரிந்து போயிற்று.

'' வாருங்கள் வேணு ! ஐ ஆம் ஹானர்ட்'' என்றாள் அவள் பெருமிதத்துடன்.

''உன்னை நான் கௌரவப்படுத்தி விட்டதாக நீ நினைக்கலாம்; ஆனால் எனக்கென்னவோ ஓநாய்க் குகைக்குள் நுழைந்து விட்டது போல் ஒரு பிரமை'' என்றான் வேணுகோபால் சுற்று முற்றும் பார்த்துக்கொண்டே. ''இங்குதானே சாருலதாவின் சாம்ராஜ்ய விஸ்தரிப்புத் திட்டங்கள் உருவாகின்றன?''

சாரங்கன் தன் சுபாவப்படி கலகலவென்று சிரித்துவிட்டான்.

''நீங்கள் ஆடாக இல்லாதவரை ஏன் பயப்பட வேண்டும்?'' என்றாள் சாருலதா புன்னகையுடன். ''இவர் சாரங்கன். என் பெர்ஸனல் ஸெக்ரட்டரி.''

''இவரைப் போய் ஆடு என்கிறீங்களே? சிங்கம் போலல்லவா இருக்கிறார்!'' என்றான் சாரங்கன். சாருலதாவின் முக மலர்ச்சியையும் கவனித்துக் கொண்டான்.

''தாங்க்யூ'' என்றான் வேணு.

''மணி நாலே முக்கால் ஆகிவிட்டதே. டிஸ்கஷனை நாளைக்குத் தொடர்வோமா? வேறு ஏதாவது அவசரமாக நான் கவனிக்க வேண்டியதிருக்கிறதா?'' என்று கேட்டாள் சாருலதா.

''நாளைக் காலை வரை காத்திருக்க முடியாதபடி இங்கு அவ்வளவு அவசரமான விஷயம் ஏதுமில்லை. ஆனால் ஆறு மணிககு 'எலைட் கிளப்'பில் காசிராஜனைச் சந்திப்பதாகச் சொன்னீர்கள்'' என்ற சாரங்கன் ''நான் வருகிறேன் டாக்டர்! உங்களைச் சந்தித்ததில் மிக்க மகிழ்ச்சி'' என்றான்.

''வேணு என்று கூப்பிடுங்கள். நண்பர்களாய்ப் பழகுவோம்'' என்ற வேணு




கோபால் இரு கரங்களையும் நீட்டி அவன் கையைப் பற்றினான்.

சாரங்கன் போனதும் சாருலதா மறுபடியும், ''வேணு! இதென்ன அதிசயம்? எனக்கு நம்பவே முடியவில்லை; நீங்கள் தானா இங்கு வந்திருக்கிறீர்கள்? அதுவும் இந்த நேரத்தில்?'' என்றாள்.

''என்ன இவ்வளவு சந்தேகிக்கிறாய்? என்னைக் கிள்ளிப் பார்க்க வேண்டும் என்று ஆசையாக இருக்கிறதா? இந்தா கிள்ளிக்கொள்!'' என்று அவள் முகத்தருகே தன் விரல்களைக் கொண்டு போனான் வேணுகோபால்.

அந்த விரல்களைப் பட்டும் படாமலும் பற்றி ஸோபா அருகே அழைத்துப் போனாள் சாருலதா. ''உட்காருங்கள்; என்ன சாப்பிடுகிறீர்கள்? புதன் கிழமை கான்டீனில் குலாப் ஜாமூனும் ஊத்தப்பமும் கிடைக்கும். வேறு ஏதாவது வேண்டுமானால் எதிரே உள்ள ஹோட்டலிலிருந்து வரவழைக்கிறேன்.''

''ஓவல்டின்றோ அல்லது போர்ன் விட்டாவோ கொண்டு வரச் சொல்லு; வேறொன்றும் வேண்டாம்.''

இன்டர்காமில் லில்லிக்கு உத்தரவிட்டு விட்டு வேணுகோபால் எதிரே வந்து, அவன் கூறப் போவதைக் கேட்கும் ஆர்வத்துடன் உட்கார்ந்தாள் சாருலதா. செவிப் புலன்களைத் தவிர அவளிடம் வேறு எதுவுமே அடுத்த சில விநாடிகளுக்கு இயங்காது என்பதை உணர்ந்த வேணுகோபால் சிரித்துக் கொண்டே சொன்னான்:

''என் அம்மாவிடம் ஒரு ரம்பையையோ அல்லது ஊர்வசியையோ அழைத்துக் கொண்டு வந்து காட்டுவதாகச் சொன்னேன். எனக்குத் தெரிந்த ரம்பை, ஊர்வசி எல்லாம் நீதான்!''

''ஐ ஆம் ப்ளாட்டர்ட்'' என்றாள் சாருலதா புகழ்ச்சியில் மலர்ந்த புன்னகையுடன். ஆனால் அதே சமயம் வேணுகோபால் கூறியதன் உட்பொருளையும், அவ்வாறு நடந்தால் அதை அடுத்து அதன் தொடர்ச்சியாக நிகழக் கூடியவற்றையும் நினைத்து அவள் முக பாவம் மாறி, பயம் அதில் குடி கொண்டது. ''ஆனால் வேணு! ஆறு மணிக்கு எனக்கு எலேட் கிளப்பில் ஒரு காரியம் இருக்கிறதே! சாரங்கன் நினைவு படுத்திவிட்டுப் போனாரே!''

''கான்ஸல் இட்!'' என்றான் வேணுகோபால்.

''என்ன?'' சற்றுத் திடுக்கிட்டவளாய் நிமிர்ந்தாள் அவள்.

''இன்று வர முடியாது, இன்னொரு நாள் சந்திக்கலாம் என்று டெலிபோனில் கூப்பிட்டுச் சொல்லிவிடேன்'' என்றான் வேணுகோபால் மறுபடியும் அலட்சிய பாவனையில்.

சாருலதாவுக்குக் கோபம் வந்தது. ''வேணு, நீங்கள் ஐந்து மணி நேரம் உங்கள் நோயாளிகளைத் தட்டிக் கொட்டிப் பார்த்தால் ஐம்பது ரூபாய் தேறலாம்; ஆனால் நான் இன்று ஐந்து நிமிஷம் காசி ராஜனுடன் பேசாமல் போனால் எனக்கு ஐம்பதாயிரம் ரூபாய் நஷ்டமாகும்!''

பியூன் வேதாசலம் ஓவல்டின் கொணர்ந்து வைத்து விட்டுப் போனான்.

வேணுகோபால் கூறினான்: ''சாரு! ரொம்ப அவசரக் கேஸானால் டாக்டர் சிவராமனிடம் அழைத்துப் போகும்படி கம்பௌண்டரிடம் சொல்லிவிட்டு வந்தேன். எங்களுக்குள் இப்படி ஓர் ஏற்பாடு. சிவராமனுக்கு என்றாவது லீவு தேவைப்பட்டால் அவசர கேஸ்களை என்னிடம் அனுப்பி வைப்பார். ஆனாலும் என் வீட்டுக்கு இன்று சாயங்காலம் வரும் நோயாளிகள் டாக்டரைக் காணோம் என்றதும் எவ்வளவு ஏமாற்றம் அடைவார்கள்? இன்று மாலை நான் சம்பாதிக்கக் கூடியது ஐம்பது ரூபாய்தான். ஆனால் அதை மட்டும் நான் துறக்கவில்லை. அத்துடன் ஐந்து லட்சம் பெறுமான முள்ள நல்லெண்ணத்தையும் இழந்து விட்டு வந்திருக்கிறேன்.''

''ஏன் அப்படிச் செய்தீர்கள்?''

''உனக்காக ஐந்து லட்சத்தை நான் துறக்கத் தயாராக இருக்கிறேன் என்பதை நிரூபிக்கத்தான்!''

''ஆனால் ஐம்பதாயிரத்தை நான் உங்களுக்காக இழக்கத் தயாராக இல்லை என்று குத்திக் காட்டுகிறீர்களா? தியாகம் என்பதில் எனக்கு நம்பிக்கை இல்லை.''

''சுதந்திரப் போராட்டத்தின் போது தியாகம் செய்தவர்கள் கூட நாட்டு விடுதலை என்ற லட்சியத்துக்காகத்தான் தியாகம் செய்தார்கள். பிரதி பலனை எதிர்பார்ப்பது தியாகம் ஆகுமா? நானும் தியாகம் செய்யவில்லை சாரு. எனக்கும் ஓர் உள் நோக்கம் உண்டு!''

''என்ன நோக்கம்? என்னை உங்கள் வீட்டுக்கு அழைத்துப் போய் 'ரம்பை' என்று உங்கள் அம்மாவிடம் அறிமுகப்படுத்துவதுதானே?''

''சாரு! ஊட்டியிலிருந்து நீ வந்த மறுநாள் எனக்கு டெலிபோன் செய்தாயல்லவா?''

## பிளக்கும் தலைவலியிலிருந்து விரைவில் குணமடைந்தேன் !



# அமிர்தாஞ்சனம்

## மிக உதவியது




அமிர்தாஞ்சனம் தலைவலி, ஜலதோஷம், சுளுக்கு, தசைவலி இவற்றிலிருந்து விரைவில் குணமளிக்கிறது. உபாதை ஏற்பட்டுள்ள இடத்தில் சிறிதளவு அமிர்தாஞ்சனம் தடவி துரித நிவாரணம் பெறுங்கள். 75 வருடங்களாக குடும்பங்களில் பயன்பட்டுவரும் நம்பகமான நிவாரணி அமிர்தாஞ்சனம். எப்போதும் ஒரு பாட்டில் கைவசம் இருக்கட்டும். அது சிக்கனமான ஜாடிகளிலும், கைக்கு அடக்கமான டப்பாக்களிலும் கிடைக்கிறது.

*10 மருந்து பொருள்கள் ஒருங்கே சேர்ந்த அமிர்தாஞ்சனம் வலிகளுக்கும் ஜலதோஷத்திற்கும் ஏற்ற நிவாரணி*

அமிர்தாஞ்சன் லிமிடெட், சென்னை - பம்பாய்-கல்கத்தா - புதுடில்லி - ஹைதராபாத் - பெங்களூர்.

AM-5339

''இல்லையே? நீங்கள்தான் எனக்கு ஃபோன் செய்தீர்கள்!''

'' அப்போது என்ன சொன்னாய்? 'வேணு!' எனக்கிருந்த ஒரே நண்பரையும் இழந்துவிட்டேனே என்று பயந்து போனேன்' என்றாயல்லவா?''

''ஆமாம்.''

''அதற்கு என்ன அர்த்தம்? எத்தனையோ பேர்களுடன் நீ பழகுகிறாய்; ஒரே நண்பன் நான்தான் என்றால்...?''

''எத்தனையோ பேருடன் தொழில் வர்த்தக ரீதியில் தொடர்பு கொண்டு பழகுகிறேன், பேசுகிறேன். அதெல்லாம் நட்பு ஆகுமா? அநேகமாக எல்லாருமே எந்த நிமிஷத்தில் என்னைக் காலை வாரி விடலாம் என்றுதான் காத்திருப்பார்கள். பரஸ்பரம் பிரதிபலனை எதிர்பாராமல் உண்மையான சிநேக பாவத்துடன் மட்டும் பழகுவது அபூர்வம். அத்தகைய தூய நட்பைத்தான் உங்களிடம் நான் எதிர்பார்க்கிறேன்.''

டாக்டர் வேணு ஏமாற்றம் அடைந்தவனும் மேலே பேச வார்த்தைகளைத் தேடுபவனும் எழுந்து நடந்தான். ஜன்னல் ஓரம் சென்று வெனீஷியன் பிளைண்ட்ஸ்ஸின் கயிற்றை இழுத்தான். அப்போது ஏற்பட்ட சிறிய சிறிய இடைவெளிகள் பலவற்றுள் ஒன்றின் வழியாகச் சாலையைக் காண முடிந்தது. மாலை நேர மவுண்ட் ரோட், அவசரக் கோலம் பூண்டு எட்டாவது மாடியிலிருந்து பார்க்கும்போது எறும்புப் புற்றின் சுருசுருப்புடன் தோற்றமளித்தது.

''இந்த பைனகுலர்ஸை ரேஸ் கோர்ஸில் மட்டுமில்லை. மவுண்ட் ரோடை வேடிக்கை பார்க்கவும் நான் பயன்படுத்துவதுண்டு'' என்றாள் சாருலதா வேணுகோபாலின் அருகே வந்து நின்று. அவள் கையிலிருந்த பைனகுலர்ஸை விளையாட்டாக வாங்கி, சாலையை ஆராய்ந்தான் வேணு. சாருலதா பில்டிங்ஸின் எதிரே, சாலையின் மறுபுறம் இருந்த கட்டடத்தின் சுவரில் ஒரு தோளைச் சாய்த்து, கரங்களை நெஞ்சோடு சேர்த்துக் கட்டிக்கொண்டு காத்திருந்த சாரங்கன் பளிச்சென்று பைனகுலர்ஸில் தெரிந்தான்.

''உன் காரியதரிசி, நாம் எப்போது வெளியே வருவோம் என்று காத்திருப்பதாகத் தோன்றுகிறது சாரு'' என்றான் வேணுகோபால்.

பைனகுலர்ஸ் கரம் மாறியது. சாருலதாவும் கவனித்தாள்.

''நாம் இருவரும் சேர்ந்து ஒரே காரில் போகிறோமா என்று பார்க்கக் காத்திருப்பான். க்யூரியாஸிடி யாரை விட்டது?''

''அது மட்டுமா? எந்தக் காரில், இருவரும் எப்படி, எந்த அளவுக்கு நெருங்கி உட்கார்ந்து பிரயாணம் செய்கிறார்கள் என்பதைக் கூடக் கவனிக்கும் அவன் கண்கள். நட்பு என்ற எல்லைக் கோட்டில் நின்று நாம் பழகினாலும் உலகம் நம்மைக் காதல் கண்ணோட்டத்தில் தான் பார்க்கும், சாரு! தொழில் வர்த்தகத் துறைத் தொடர்பு ஏதும் நமக்கிடை ஏற்பட நியாயமில்லை அல்லவா?''

''உலகத்தின் கண்ணோட்டம் பற்றி எனக்குக் கவலை இல்லை. நாலு பேர் என்ன சொல்வார்களோ என்று பயந்து காலத்தை ஓட்டினால் அது வாழ்க்கை அல்ல; அடிமைத்தனம்! நான் உங்களைக் கல்யாணம் செய்து கொண்டு விடுவதாகவே வைத்துக் கொள்ளுங்கள். அப்போதும் இந்த உலகம் என்ன சொல்லும் தெரியுமா? நீங்கள் என்னிடம் உள்ள பணத்துக்காகவே என்னை மயக்கி விட்டீர்கள் என்றுதான் கூறுமே தவிர நம்மிடையே காதல் நிலவியதாக ஒப்புக் கொள்ளாது! ஊர் வம்பு பிரபலஸ்

## ஆயிரம் கார்களுக்கு ஆய்வுக்கூடம்

மேற்கு ஜெர்மனியைச் சேர்ந்த பிராங்க்பர்ட் என்ற நகரில் மோட்டார் கார்களைப் பரிசோதிக்க பிரமாண்டமான ஆய்வுக்கூடம் ஒன்றை அமைத்து வருகின்றனர். ஒரே தினத்தில் ஆயிரம் வாகனங்களை இந்த ஆய்வுக் கூடத்தில் பரிசோதனை செய்ய இயலும். இத்தனை பெரிய ஆய்வுக் கூடத்துக்கான அவசியம் என்ன?

மேற்கு ஜெர்மனியில் சாலை விபத்துக்களைத் தடுப்பதற்காக ஒரு சட்டம் இருக்கிறது. அதன்படி ஒவ்வொரு மோட்டார் காரும் இரண்டு வருடத்துக்கு



ஒரு முறை நிபுணர்களின் பரிசோதனைக்கு உள்ளாக வேண்டும். தேவையான ரிப்பேர்கள் செய்யப்பட வேண்டும். அதன் பின் வாகனத்தின் நம்பர் பிளேட்டில் ஒரு முத்திரை குத்துவார்கள். அதன் பின்னரே கார் ஓட்ட அனுமதிக்கப்படும்.

இப்படி ஆய்வுக்காக வரும் ஆயிரக் கணக்கான கார், மோட்டார் சைக்கிள், லாரி முதலிய வாகனங்களை நிறுத்தி வைப்பதற்கும். கார் ஓட்டி வருபவர்கள் தங்குவதற்கும் இந்தப் புதிய பெரிய ஆய்வுக் கூடத்தில் வசதிகள் உண்டு.

வசதிகள் நிறைந்த இந்தப் பிரும்மாண்டமான ஆய்வுக் கூடம் 1970ல் கட்டி முடிக்கப்படும்.

-ஜெர்மன் கூரியர்

தர்களாய் உள்ள யாரைத்தான் விட்டு வைத்தது? நாலு பேரைப் பற்றி நாம் கவலைப்பட வேண்டாம் வேணு; நம்மை நாமே சரியாய்ப் புரிந்து கொண்டால் போதும்!''

தர்க்கத்தில் இன்னொரு முறையும் தான் தோற்றுப் போனதை வேணு உணர்ந்தான். அவனுக்கு உதவவே போல் இன்டர்காமில் வில்லியின் குரல் ஒலித்தது : ''காசிராஜன் டெலிபோனில் காத்திருக்கிறார்.''

''நான் பேசுகிறேன்'' என்றாள் சாருலதா.

கருப்பு டெலிபோன் மணி ஒலித்தது. ரிஸீவரை எடுக்க அவள் கரம் நீளு முன்னர் வேணுகோபாலின் உள்ளங்கை டெலிபோன் மீது பதிந்து அதை அழுத்திப் பற்றியது.

''இன்று அவரைச் சந்திக்க முடியாது என்று சொல்லிவிடு, சாரு'' என்ற வேணு கோபால், போனால் போகட்டும் என்பது போல் ''ப்ளீஸ்'' என்றும் சேர்த்துக் கொண்டான்.

சாருலதாவின் கண்கள் ஒருவித மிரட்சியுடன் வேணுகோபாலை ஏறிட்டுப் பார்த்தன. அவளுக்கு அவனது நட்பை இழக்கவும் விருப்பமில்லை. அவன் சொற்படி கேட்டுப் பணிந்து போகவும் இஷ்டம் இல்லை. அவன் கோரிக்கையை இன்று நிறைவேற்றா விடில் நட்பையும் அது பாதிக்குமோ என்ற கவலையும் பயமும் அம்முகத்தில் குடிகொண்டது.

வேணுகோபாலின் கரம் அகன்றது. குழப்பத்துடன் சாருலதா ரிஸீவரை எடுத்தாள். ''சாரு ஹியர்!''

சற்று நேரம் அவள் காசிராஜன் பேசுவதைக் கேட்டாள். அவள் முகத்தில் தெளிவு பிறந்தது; சாந்தி பரவியது. ''தட் இஸ் ஆல் ரைட் ராஜ்! நாளைக்கு நான் ஃபோன் செய்கிறேன். குழந்தையைக் கவனியுங்கள். யார் டாக்டர் ங்களுக்கு?...... ஓ யெஸ்! பெஸ்ட் சைல்ட் ஸ்பெஷலிஸ்ட். எனக்குத் தெரியும் அவரை... கவலைப்படாதீர்கள் எல்லாம் சரியாகப் போய்விடும். குட்லக்!''

சாருலதா டெலிபோனை வைத்து விட்டு நிமிர்ந்தாள். ''ஸாரி, உங்களைப் பக்கத்தில் வைத்துக் கொண்டே இன்னொரு டாக்டரைப் புகழ்ந்துவிட்டேன்.'' அவளுடைய இயல்பான கலகலப்பு சுபாவம் திரும்பியது.

''என்ன சொன்னான் காசிராஜன்?''

''குழந்தைக்கு உடம்பு சரியில்லையாம். அதனால் இன்று கிளப்புக்கு வர முடியாது என்றார்.''

''பார்த்தாயா! கடவுளே என் பக்கத்தில் இருக்கிறார், கிளம்பு போகலாம்!''

சாருலதா தடை கூறாது புறப்பட்டாள். கதவருகே அவள் போனதும், ''ஒரு நிமிஷம் இப்படி உன் மேஜைப் பக்கம் வந்து ஆபீஸ் விஷயமாக உன் மனத்தில் ஏதாவது இருந்தால் 'மெமொ பேடில்' எழுதி வைத்து விட்டு வா! மனத்தைத் துடைத்து விட்டு என்னுடன் வரவேண்டும் நீ!'' என்றான் வேணுகோபால்.

சாரு சிரித்தபடியே கதவைத் திறந்து கொண்டு வெளியேறினாள். வேணு பின்தொடர்ந்தான். 'ரிஸப்ஷனிஸ்ட்' அருகே வந்ததும் சாருலதா, ''வில்லி! டிரைவரை வீட்டில் காரை விட்டு விட்டுப் போகச் சொல்லு. எனக்கு இன்றைக்கு இனிமேல் கார் தேவைப்படாது'' என்று போகிற போக்கில் கூறியபடி மேலே நடந்தாள்.

கார் நகர ஆரம்பித்ததும் சாருலதாவின் முகத்தில் மீண்டும் கலவரம் நிலவியது. ''வேணு, எங்கே போகிறோம் நாம்?'' என்று மிரண்டவள் போல் கேட்டாள்.

''வீட்டுக்கு. அம்மாவைப் பார்க்க!''

''இன்னொரு நாள் நான் வருகிறேன் வேணு!''

''ஏன்? இன்று வந்தால் என்னவாம்?

''எனக்கு மனசு சரியில்லை. ஏதேதோ சொல்லிக் குழப்பி விட்டீர்கள்.''

''உனக்கு மனசு என்று கூட இருக்கிறதா என்ன?''

''என்ன சந்தேகம் உங்களுக்கு?''

''ஏதாவது பாங்கின் ஸேஃப் டெபாஸிட் வால்ட்டில் உன் இதயத்தைக் கழற்றி வைத்துப் பூட்டியிருக்கிறாயோ என்று பல நாட்களாகவே எனக்கு ஒரு சந்தேகம்!''

''நான் உயில் எழுதும்போது எந்த பாங்கில் எந்த நம்பர் ஸேஃபில் இருக்

கிறது என்று குறிப்பிட்டு இதயத்தை உங்களுக்கே சொந்தமாக்கி விடுகிறேன்!''

''அதுவரை காத்திருக்க எனக்குப் பொறுமை கிடையாது. உன் வக்கீல் அல்ல; நீயே அதை என்னிடம் ஒப்படைக்கப் போகிறாய் வெகு சீக்கிரம்!''

''நாம் இப்போது எங்கே போகிறோம்?''

''நீதான் வீட்டுக்குப் போக வேண்டாம் என்று கூறி விட்டாயே. விட்டுப் பிடிக்கிறேன். அதற்குப் பதில் சொர்க்க லோகத்துக்கே அழைத்துப் போகிறேன் உன்னை!''

''வழி தெரியுமா?''

''ஓ எஸ்! திருவான்மியூர் தாண்டி முத்துக்காடு சாலையில் நேராகப் போய் பத்தாவது கிலோ மீட்டர் கல் அருகே இடது பக்கம் திரும்பிக் கொஞ்சம் கரடு முரடான சாலையில் போனால் சொர்க்கத்தைச் சென்றடையலாம்! பூலோக சொர்க்கம்!''

''அடேயப்பா! அத்தனை அழகான இடம் சென்னையின் சுற்றுப்புறத்தில் இருக்கிறதா என்ன?''

''உனக்கு இதெல்லாம் எங்கே தெரியும்? சதா சர்வ காலமும் 'டெவலப்மெண்ட் ரிபேட்' என்றும் 'டிப்ரிஸியேஷன் வால்யு' என்றும் ஏதாவது கணக்குப் பார்த்துக் கொண்டிருந்தால்...?''

பேசிக் கொண்டே போனார்கள். சுமார் அரை மணி நேரத்துக்குப் பிறகு அவர்கள் சொர்க்க பூமிக்கு வந்து சேர்ந்தார்கள்.

கடற் கரை தான்; ஆனால் அங்கு அதன் கன்னித் தன்மை அழியாமல் காக்கப் பட்டிருந்தது. அலை ஓசைக்கு ஏற்ப ஈர மண்ணில் நண்டுகள் நர்த்தனமாடுவதைக் காரை விட்டிறங்கி வந்த அவர்கள் பார்த்தார்கள். சற்று தொலைவில் காற்றில் அசைந்து 'உய்' என்று சத்தம் எழுப்பிய சவுக்குத் தோப்பில் ஒரு பச்சைப் பாம்பு மரம் ஒன்றின் மேல் கொடியாகப் படர்ந்து கிடந்தது. அதை அவர்கள் கவனிக்கவில்லை. இந்த ஜீவராசிகளைத் தவிர அந்தப் பிரதேசத்தில் வேறு யாருமே இல்லை. வெறும் மணல் மேடுகள், சரிவுகள், கிளிஞ்சல் குவியல்கள். காற்று மணல் பரப்பில் வரைந்து சென்ற விசித்திரக் கோலங்கள் அப்படி அப்படியே அலுங்காமல் இருந்தன. வெண் மணலில் செம்மைப் புழுதி படியவில்லை. வேர்க்கடலைத் தோலியோ காகிதக் குப்பையோ காணப்படவில்லை.



## செயற்கை இடி!

மழை பெய்யும்போது, எங்கே தங்கள் கார் மீது இடி விழுந்துவிடுமோ என்று காரோட்டிகளோ, கார் பிரயாணிகளோ இனி அஞ்சவேண்டியதில்லை. இடியைத் தாங்கிக் கொள்ளும் ஆற்றல் வாய்ந்த புதுமையான சாதனம் ஒன்று, ஜெர்மன் கூட்டாட்சிக் குடியரசில் உருவாக்கப் பட்டிருக்கிறது. இதனைக் காரில் பொருத்திக்கொண்டால், இடியை இச்சாதனம் தாங்கிக்கொள்ளும். மேற்கு பெர்லின் நகரில் சிமன்ஸ் ஸ்தாபன நிபுணர்கள், இந்தக் கருவியைக் கண்டுபிடித்துள்ளனர்.

படத்தில் செயற்கை மின்னலையும் இடியையும் கார் மீது விழச் செய்து பரிசோதிப்பதைக் காணுகிறோம். காருக்கோ காருக்குள் இருப்பவருக்கோ ஆபத்தேதும் ஏற்படவில்லை. - (யூ. பி. எஸ்)

''ஆதமும் ஈவும் வாழ்ந்த ஆதி காலத்து உலகுக்கு வந்து விட்டது போலிருக்கிறதல்லவா?'' என்றான் வேணு. ''ஞாயிற்றுக் கிழமைகளிலாவது இங்கே கார் வசதி உள்ள சிலர் வருவார்கள். மற்ற நாட்களில் ஈ, காக்காய் கிடையாது. இந்தக் கடற்கரை ஓரமாக ஏகாந்தத்தை உத்தேசித்துக் கொஞ்சம் நிலம் வாங்கிப் போடலாம் என்று யோசனை.''

''அதோடு ஒரு பர்ணசாலையும் அமைத்துத் தாடி வளர்த்துக்கொண்டு நிஷ்டையிலும் ஆழ்ந்து போகலாம்!''

''என்னுடைய கற்பனை வேறு சாரு! வசதியான சின்னஞ் சிறு வீட்டைக்

கட்டிக் கொண்டு ஹனிமூனுக்கு வரலாம்!''

''என்ன பயங்கரம்! மின்சாரத் தொடர்பு கூடக் கிடையாதே இங்கே! நடு ராத்திரியில் நரி ஊளையிடும்!''

''அதைக் கேட்டுப் பயந்து என் மனைவி என்னை இறுகக் கட்டிக்கொள்ளுவாள்!''

''அவள் கட்டிக் கொள்வது தலையணையாகத்தான் இருக்கும்! நீங்கள் பயத்தில் கட்டிலுக்கு அடியில் பதுங்கிக் கொண்டிருப்பீர்கள்!''

''எனக்குக்கூட இப்போது ஊளையிடலாம் போலிருக்கிறது! அதாவது பாடலாம் என்று தோன்றுகிறது! ஆனால் வேணுவின் கானத்தை உனக்குக் கேட்கச் சகிக்காது என்பதால் வேணு கானத்தைக், கொண்டு வந்திருக்கிறேன்!''

வேணுகோபால் மணலில் ஒரு துண்டைப் பரப்பிக் காரிலிருந்து கொண்டு வந்திருந்த டேப் ரிகார்டரை அதன் மீது வைத்து இயக்கினான். காரின் பாட்டரியையும் டேப் ரிகார்டரையும் நீண்ட ஒயர் இணைத்தது. குழலொலி அந்த இனிய சூழ்நிலைக்கு இனிமை கூட்டியது.

''ஸ்ரீரஞ்சனிதானே இது?'' என்று கேட்டாள் சாருலதா.

''அடடே! உனக்குக் கர்நாடக ராகங்கள் கூடத் தெரிகிறதே!''

''சின்ன வயதில் வாய்ப்பாட்டுக் கூடக் கற்றுக் கொண்டிருக்கிறேன்.''

''வீட்டிலா பள்ளிக்கூடத்திலா? எந்தப் பள்ளிக்கூடத்தில் படித்தாய் நீ?''

''பழைய கதை எதற்கு? நான் எதிர்காலத்தில் நிற்பவள்!''

''அப்படிச் சொல்லித்தான் உன்னைப் பேட்டி காண வரும் பத்திரிகை நிருபர்களைக்கூடத் திருப்பி அனுப்பி விடுகிறாயாம். உன் நிலையில் உள்ளோர் பிராபல்யம் அடைவதை வரவேற்பார்கள். நீ மட்டும் எதற்காக ஒடி ஒளிகிறாய் சாரு?''

''அவர்கள் திரும்பிப் போய் என் வாழ்க்கையே ஒரு மர்மம் என்று எழுதுகிறார்களே, அதற்காகத்தான். அப்படி மர்மப் பெண்ணாக விளங்குவதிலே ஒரு 'கிளாமர்' இருக்கிறது!''

''அது மட்டும்தானா? அழகாக விளங்குவதிலும் கல்யாணமாகாமல் இருப்பதிலும் கூடக் 'கிளாமர்' இருக்கிறது. அந்தக் 'கிளாமர்' தொழில் வர்த்தகத் துறையில் பல காரியங்களைச் சுலபமாகச் சாதித்துக் கொண்டு போக, துரிதமான முன்னேற்றம் காண உனக்கு உதவுகிறது. இதைத்தான் நீ அடிக்கடி சொல்கிறாய். ஆனால் நான் வேறு விதமாக நினைக்கிறேன்.''

''என்னவென்று?''

''இன்னதென்று எனக்குத் தெரியாத ஏதோ ஒரு காரணத்துக்காக நட்பு என்ற ஆயுதத்தால் என் காதலை நீ கொல்ல முற்படுகிறாய் என்று கருதுகிறேன்.''

''உங்கள் காதலை நான் ஏற்று அது கல்யாணத்தில் முடியக் கூடுமானால் என் தம்பி குணசீலன் ரொம்ப சந்தோஷப்படுவான் வேணு. கமலாவை அவன் கல்யாணம் செய்துகொள்ள இருக்கும் தடை நீங்கிவிடும்! ஆனால் அது நடக்க முடியாத காரியம்!''

''ஏன் அப்படிச் சொல்கிறாய்? உன் பிடிவாதத்தால் உன் தம்பியின் வாழ்க்கையையும் ஏன் பாலைவனமாக்குகிறாய்? சாரு! என்னிடம் என்ன குறையைக் கண்டாய் நீ?''

''வேணு! யூ ஆர் வேஸ்டிங் யுவர் டைம்'' என்றாள் சாருலதா. மணலில் அமர்ந்திருந்தவள் எழுந்து புடவையை உதறினாள்.

''சாரு! இந்த டேப் ரிகார்டரை நான் எதற்காகக் கொண்டு வந்தேன், தெரியுமா? உனக்காக அல்ல; எனக்காக. வேணு கானத்தைக் கேட்டு நான் மகிழ அல்ல. இந்தப் புல்லாங்குழல் இசை உன் மனத்தை அசைக்கிறதா என்று பார்க்க. கணக்குப் பார்ப்பவளின் முகத்தில் கனிவு பிறக்கிறதா, இயந்திரமாக இயங்கும் உள்ளம் இந்த இனிமையில் நெகிழ்கிறதா என்று பரிசோதனை செய்ய!''

''டாக்டர், நான் 'கினிபிக்' இல்லை. வெள்ளெலிகளோ முயல்களோ வாங்கி வைத்துக் கொண்டு சோதனை நடத்துங்கள். இல்லையென்றால் வாழைத் தோட்டத்தில் உட்கார்ந்து வயலின் வாசித்துப் பாருங்கள்!''

சாருலதா திரும்பிக் காரை நோக்கி நடந்தாள்.

வேணு கோபத்துடன் பாய்ந்து அவள் தோளைப் பற்றித் திருப்பினான். புருவங்கள் நெறிய விழித்துப் பார்த்தான்.

''வேணு! நமது சிநேகத்துக்கு எந்த விதமான இடையூறும் வரக் கூடாது என்பதுதான் என் ஆசை. ஆனால் அந்த நட்புக்கும் ஒரு முற்றுப்புள்ளி வைக்க நேர்ந்தால் அது என்னால் ஏற்பட்டதாக இருக்காது; உங்கள் நடத்தைதான் காரணமாக இருக்கும்'' என்றாள் சாருலதா. அவள் கண்கள் குளமாகியிருந்தன.

(தொடரும்)

· அத்தியாயம் 11

# அவதியுறும் காதல்




மனேகர் பிரதர்ஸில் காரியாலய நேரம் முடிந்ததும் குணசீலனும் கமலாவும் தனித் தனியாகக் கிளம்பினர்கள். பாரி முனே பஸ் நிலேயத்தில் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். ஆனல் பேசவில்லே. வெவ்வேறு பஸ்களில் ஏறினர்கள். ஸாந்தோம் பீச்சில் இறங்கிய கமலா மணல் பரப்பில் நடந்து, அலேகளுக்குப் பக்கத்தில் வழக்கமான இடத்தில் ஒரு படகின் மறைவில் அமர்ந்து குணசீலன் வரக் காத்திருந்தாள். அலேகளுக்குப் பக்கத்தில் அவள் மனமும் அலே பாய்ந்து கொண்டிருந்தது.

குணசீலன் வந்த பிறகும் அவள் குதூகலமடையவில்லே. சற்று நேரத்துக்குப்பின் அவன் மௌனத்தைக் கலேத்தான். ''ஹெட் கிளார்க் நாணு, பெண்ணுக்குக் கல்யாணம் நிச்சயம் பண்ணி விட்டாராம்.''

''உம்....''

''ஒரு மாதம் லீவு வேணும் என்று கேட்டு மானேஜருக்கு எழுதியிருக்கிருர்.''

''உம்....''

''கோவிந்தனுக்கு லாட்டரிச் சீட்டில் பரிசு விழுந்திருக்கிறது.''

''உம்...''

''லட்ச ரூபாய் எதிர்பார்த்தான்; நூறு ரூபாய் கிடைத்திருக்கிறது.''

''எதற்கு இப்படி நம் இரண்டு பேருக்குமே அக்கறை இல்லாத விஷயங்களேப் பற்றிப் பேசிப் பொழுதைக் கழிக்கிறீர்கள்?''

''நமக்கு அக்கறை உள்ள விஷயத்தைப் பற்றிப் பேச நாம் பயப்படுவதால்தான்.''

''என்ன பயம்?''

''நாம் அந்தரங்கத்தில் எதற்காக ஆசைப்படுகிருேமோ அது நடக்காமல் போய் விடுமோ என்ற பயம்தான்.''

''நடக்காமல் போவானேன்? நீங்கள் கொஞ்சம் சிரத்தை எடுத்துக் கொண்டு உங்கள் அக்காவுக்கு வரன் பார்த்தால் ஆயிற்று. அப்புறம் நம் கல்யாணம் நடந்து விட்டுப் போகிறது.''

''அது அவ்வளவு சுலபமில்லே, கமலா.''

''கஷ்டம்தான். அவள் சாமர்த்தியம், அழகு, அந்தஸ்துக்கு ஏற்ப பணக்கார இடத்துக் கெட்டிக்காரப் பிள்ளேயாகப் பார்க்க வேண்டும். அவளுக்கென்று ஒருத்தன் பிறக்காமலா இருப்பான்? நீங்கள் கொஞ்சம் சிரமப்பட வேண்டும்.''

''உனக்குப் புரியவில்லே, கமலா. நான் செய்யக்கூடிய காரியமில்லே. அவளாக ஏதாவது ஏற்பாடு செய்து கொண்டால்தான் உண்டு.''

''அக்காவின் கல்யாணத்தில் தனக்குப் பொறுப்பில்லே என்று ஒதுங்குகிற ஆசாமி உலகத்திலேயே நீங்கள் ஒருத்தர்தான்!''

''நான் அப்படி அலட்சியமாக இல்லே; சாருவுக்குக் கல்யாணம் நடக்கக் கூடுமானல் என்னேவிடச் சந்தோஷப்படுகிறவன் வேறு யாரும் இருக்க முடியாது.''

''பிறகு பொறுப்பைத் தட்டிக் கழிப்பானேன்?''

''அவளுக்காக நான் வரன் தேடுவது அசாத்தியம். ராமனுக்குத் திருமணம் முடித்து வைக்க விசுவாமித்திரர் வந்தார். ராமன் கடலில் அணே கட்டிய போது ஒரு அணில் உதவ முன்வந்து நல்ல பெயர் தட்டிக் கொண்டு போயிற்று. ஆனல் அதே அணில் ராமனே மிதிலா புரிக்கு அழைத்துப் போயிருக்க முடியுமா? அது அதிகப் பிரசங்கித்தனமாகத்தான் இருக்கும்!''

''எனக்கு உங்கள் போக்குப் புரியவுமில்லை; பிடிக்கவுமில்லை. நீங்கள் மாப்பிள்ளை தேட மாட்டீர்கள்; அவளாகவும் கல்யாணம் செய்து கொள்ளப் போவதில்லை. 'அவள் அப்படி இருக்கும் போது என் கல்யாணத்துக்கு என்ன அவசரம் ?' என்றும் கேட்கிறீர்கள். இந்தச் சிக்கலை விடுவிப்பது எப்படி ?''

''நம்மால் முடியாது: ஆண்டவனுக வழி வகுத்தால்தான் உண்டு.''

'' யார் கண்ணிலும் படாமல் இப்படி வெவ்வேறு பஸ்களில் பதுங்கிப் பதுங்கி வந்து இங்கு ரகசியமாய்ச் சந்திப்பது எனக்குப் பிடிக்கவில்லை.''

'' அப்படியானுல் சந்திக்க வேண்டாம்.''

துயரம் நிரம்பியிருந்த கமலாவின் உள்ளம் கொதித்தது. கொப்புளங்கள் வெடித்து விசும்பலாக வெளிவந்தன.

'' கமலா, பிளீஸ் ! அழாதே, கமலா !'' என்ற போது குணசீலனுக்கு நா தழுதழுத்தது. தானும் அழுது விடக் கூடாதே என்று கவலைப்பட்டான் அவன்.

'' நாம் சந்திக்க வேண்டாம் என்று சொல்ல உங்களுக்கு எப்படி மனம் வந்தது ?''

''ஒளியாமல் பகிரங்கமாகச் சந்திக்க நமக்குத் தைரியமில்லையே, கமலா ! ஏற்கனவே ஒரு முறை மானேஜர் நம்மைக் கூப்பிட்டு எச்சரித்த பிறகு தானே இந்த மாதிரி ஏற்பாடு செய்து கொண்டோம்? நம் காதல், திருமணத்தில் முடியும் என்ற நம்பிக்கை நமக்கிருந்தால் காரியாலயத்தில் மட்டுமென்ன, ஊரில், உலகத்தில் யாரையும் லட்சியம் பண்ணுமல் கை கோத்துச் செல்லலாம். ஆனுல் அந்தப் பாக்கியம் நமக்கு இல்லையே ?''

'' அப்படியானுல் என்னை ஏன் காதலித்தீர்கள் ? நான் உங்களைக் காதலிக்க வேண்டும் என்று ஏன் எதிர்பார்த்தீர்கள் ? என் காதல் நெஞ்சத்தைக் காலடியில் போட்டு மிதிக்கவா?'' கோபத்துடன்கேட்டு அவள் விம்மினுள்.



''தப்புத்தான் கமலா; என் வாழ்நாளில்' நான் செய்துள்ள மிகப் பெரிய தவறு அதுதான். எதிர்காலம் என்று ஒன்று நம் காதலுக்கு இல்லை என்று தெரிந்தும் உன்னைக் காதலித்தேன் பார்! என்னை மன்னித்துவிடு!''

சட்டென்று அவள் விரல்கள் அவன் வாயைப் பொத்தின. ''அப்படியெல்லாம் சொல்லாதீர்கள்! ராமர் படத்தை வைத்துத் தினம் நான் ஒரு நிமிஷம்தான் தியானித்து ஒரு பூதான் போடுகிறேன். ஆனால் அந்த ஒரு நிமிஷமும் ஒரு பூவும் பக்தியில் தோய்ந்தவை என்பது உண்மையாக இருக்கும் போது நம் கல்யாணம் எப்படி நடக்காமல் போகும்?'' அன்புத் தேனை உண்டுக் கிறங்கிய வண்டுகளைப் போல் அவள் கண்கள் ஒரு மோக மயக்கத்தோடு அவனைப் பார்த்தன.

குணசீலனின் அதரங்களில் அவள் விரல்களின் ஸ்பரிசம் ஏற்படுத்திய இனிய கிளுகிளுப்பு இன்னும் மறையவில்லை.

பொறுமையுற்றவை போல் கடல் அலைகள் பொங்கி எழுந்து அவர்களைச் சூழ்ந்தன. நாலாபுறமும் எழும்பி விழுந்தன; நெருங்கி வந்தன. 'ஓம், ஓம்' என்றொரு சத்தம் காதுகளை நிறைத்து, நெஞ்சில் பாய்ந்து, சிந்தனையை அழித்தது. அலைகள் சரிந்தன; நீர்த்துளிகள் பன்னீராக அவர்கள் மீது சிந்தின. அருகே, அருகே, இன்னும் அருகே அலைகள் வந்து அவர்களை நெருக்கின. ஒருவரிடம் ஒருவர் ஒண்டிக் கொள்ளச் செய்தன. மூச்சு முட்டியது.

திடும்மென்று ஓர் இடியோசை. தூக்கி வாரிப் போட அவர்கள் இணை பிரிந்தார்கள். அண்ணாந்து பார்த்தார்கள். கருமேகக் குவியல்கள்.

''போவோமா?'' என்றான் அவன்.



# துள்ளும் குழந்தைகள் நன்கு வளர்ந்திட
# ருசித்துப் பருகட்டும் போர்ன்விடா!



ஓடி விளையாடும் குழந்தைகளுக்கு தினசரி உணவிலிருந்து கிடைக்கும் சக்தி போதுவதில்லை. எவ்வளவு சீக்கிரம் அவர்களுக்கு சக்தி கிடைக்கிறதோ அதே வேகத்தில் அது பள்ளிக்கூடத்திலும், விளையாடும் போதும் செலவழிந்து விடுகிறது. இழக்கும் சக்தியை மீட்டுத் தந்து குழந்தைகளைத் துள்ளும் ஆரோக்கியத்துடன் வளர்க்க, தினமும் ஒரு கப் போர்ன்விடா கொடுங்கள். தம் மக்கள் நலம் கருதும் தாய்மார்கள் அனைவரும் இதை ஆமோதிப்பார்களே!






பால், சர்க்கரை, மால்ட், கோகோ இவையாவும் திட்டமாகக் கலக்கப்பட்டதும், போஷாக்குச் சத்து நிறைந்ததுமான ஒரு இனிய பானம் போர்ன்விடா. ஆம், இது ஒரு காட்பரிஸ் தயாரிப்பு!

## சக்திக்கும் வலிமைக்கும்—மற்றும் தீஞ்சுவைக்கும்
## காட்பரிஸ் போர்ன்விடா.

Bensons/0391/TAM

'' இன்னும் சற்று நேரம்.''

''மழை பெய்யும்போலிருக்கிறதே?''

''பெய்தால் பெய்யட்டும்.''

அவள் ஒரு போதை நிலையிலிருந்து விடுபட்டு யதார்த்த உலகுக்குத் திரும்பியிருந்தாள். ''ஆனாலும் உங்கள் அக்கா இப்படி இருக்க வேண்டாம். நம்மைப் பற்றித் தெரியாதவளா ? கொஞ்சம் விட்டுக் கொடுக்கக்கூடாதா? கல்யாணம் செய்து கொள்வதில்லை என்று அப்படி என்ன ஒரு பிடிவாதம், கல்நெஞ்சம் ?''

''இல்லை கமலா, சாரு அனுதாபத்துக்குரியவள். அவளைப் பற்றி உனக்குச் சரியாகத் தெரியாது.''

''என்ன தெரியாது ?''

''என்ன தெரியாது என்பதை அவள் தான் சொல்ல வேண்டும்.''

'' எதற்கு என்னிடம் மறைக்கிறீர்கள் ? சாதாரணமாகக் காதலர்களுக்கிடையில் ஒளிவு மறைவு இருக்கக் கூடாது என்றுதான் படித்திருக்கிறேன்; கேள்விப்பட்டிருக்கிறேன்.''

'' ஆனால் நாம் சாதாரணக் காதலர்கள் இல்லையே ?''

''நீங்கள் மனம் விட்டுப் பேசாவிட்டாலும் அதனால் நம் அன்புக்குப் பங்கம் வந்துவிடப் போவதில்லை.''

குணசீலன் சிரித்தான். ''எதற்குச் சிரிக்கிறீர்கள்?'' என்று கேட்டாள் கமலா.

''என்னவானாலும் நம் அன்பு மாறாது என்ற இதே வாயால்தான் சற்று முன்னால் எதற்காக என்னைக் காதலித்தீர்கள் என்று கோபமாக்க் கேட்டாய்.''

'' ஏதோ கேட்டேன். நாம் வசதியான வீடாகத் தேடிப் பார்த்துக் குடி போவதைப் போலவா காதல் நடந்து கொள்கிறது? சில சமயம் அது அரண்மனையில் ஏகபோகமாக, சௌக்கியமாக வாசம் செய்கிறது ; சில சமயம் பாவம், ஒண்டுக் குடித்தனம் நடத்தி வீட்டை இன்னொருத்தருடன் பகிர்ந்து கொள்ளவும் செய்கிறது ; இன்னும் சில சமயம் ஓட்டைக் கூரைக்குக் கீழே விதியே என்று வசிக்கிறது; வேறு சில தருணங்களில் நடுத் தெருவில் நாதியற்றுக் கிடக்கிறது.''

''இதில் நம் காதல் எந்த ரகமோ?''

''நம் காதல் சிறைக் கூடத்தில் அடைபட்டுக் கிடக்கிறது. பூட்டி, சாவியை உங்கள் அக்கா இடுப்பில் செருகிக் கொண்டு போய் விட்டாள் ! கிளம்புங்கள், தூற்றல் போடுகிறது!''

பஸ் ஸ்டாண்டை நோக்கி நடக்கும் போது, ''நான் வேலைக்குப் போவதே அப்பாவுக்குப் பிடிக்கவில்லை. என்னென்னவோ சொல்லி சமாளித்துக் கொண்டு வருகிறேன்'' என்றாள் கமலா.

''வாஸ்தவம்தானே, கமலா! பெரிய அளவில் பணத் தட்டுப்பாடு என்று ஏதும் இல்லாத போது பெண்ணாய்ப் பிறந்த நீ எதற்கு ஆபீசுக்குப் போக வேண்டும் ? வீட்டோடு இருந்து விடேன் !''

''அப்பாவின் நோக்கம் உங்களுக்குப் புரியவில்லை. முதலில் வேலைக்குப் போக வேண்டாம் என்பார். அப்புறம் கொஞ்ச நாள் கழித்து உங்களிடம் ஜாடைமாடையாக நீங்கள் எங்கள் வீட்டுக்கு வந்து போவதை நிறுத்திக் கொள்ளச் சொல்வார் !''

'' ஐயோ, ஏன் அப்படி ?''

''இதுகூடப் புரியவில்லையா ?''

''புரிகிறது கமலா! நம் கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்ய நான் லாயக்கற்று இருக்கும் போது அடிக்கடி வீட்டுக்கு வந்து உன்னைப் பார்த்து விட்டுப்



காலஞ்சென்ற தமிழக முதல்வர் திரு ஸி. என். அண்ணாதுரை அவர்கள் நியூயார்க்கில் சிகிச்சை பெற்று வந்த சமயம் 11-10-68ந் தேதியிட்டு, நம் கைப்பட தலைவர் ராஜாஜிக்கு ஆங்கிலத்தில் கடிதம் எழுதினார். அதில் ராஜாஜியின் பணிகள் வீண்போகாது என்பதை இவ்விதம் உருக்கமாகக் குறிப்பிட்டுள்ளார்:

''காந்தி ஜயந்தி பற்றிய தங்கள் கட்டுரையைக் 'கல்கி'யில் படித்தேன். அதில் பொதிந்திருந்த தங்களது ஆழ்ந்த தாபத்தை உணர்ந்தேன். சில ஆண்டுகளுக்குமுன் சென்னை மாநகராட்சியின் வரவேற்பில் தாங்கள் நிகழ்த்திய உரை என் நினைவுக்கு வந்தது. ஆயினும், தாங்கள் பொறுமையுடன் விதைத்துக் கொண்டிருக்கும் சிந்தனைகள் களர் நிலத்தில் விழுந்துவிடவில்லை என்று திண்ணமாக நம்புகிறேன். எதிர்காலத்தில் பசும் பயிர்கள் எழும்புமென நம்புகிறேன்.

அன்பு வணக்கங்கள்
ஸி. என். அண்ணாதுரை''

அண்ணாவின் வார்த்தையைப் பாழடிக்காமல் நிறைவேற்றி வைக்கும் பொறுப்பு நம் கையில்தான் உள்ளது என்பதைக் கூறவும் வேண்டுமோ ?

-- வி. ச. வாசுதேவன்

போவது பிசகுதான். நமக்குக் கல்யாணம் நடக்காது என்று தெரிந்ததும் உனக்கு வேறு இடங்களில் வரன் தேடுவார். நான் அடிக்கடி வந்து போய்க் கொண்டிருப்பது அதற்குத் தடையாக இருக்கும்.''

''இப்படி வாய் கூசாமல் பேச உங்களுக்கு எப்படி மனம் வருகிறது? உங்கள் அக்காவைப் போல் நீங்களும் ஒருவிதத்தில் கல்நெஞ்சக்காரர்தான்!''

''மனமா பேசுகிறது? அறிவு அலசிப் பார்க்கிறது!''

''என் உள்ளம் பதைக்கிறதே, அது தெரியவில்லையா, உங்களுக்கு?''

அவர்கள் ஏற வேண்டிய பஸ் தென்பட்டுப் பேச்சுக்குத் தடை விதித்தது. காதலுக்குக் கமா போட்டு, பஸ்ஸைப் பிடிப்பதில் கவனம் செலுத்தினார்கள். பெண் என்று மரியாதை காட்டி கமலாவை ஏற்றிக் கொண்ட கண்டக்டர் குணசீலனை நிர்த்தாட்சண்யமாக ஒதுக்கி விட்டான்.

'வீட்டுக்கு வாருங்கள்' என்று ஜாடை காட்டினாள் கமலா. விசில் சத்தம் கேட்டது.

அரை மணி நேரத்துக்குப் பிறகு இன்னொரு பஸ் பிடித்து அவன் ராமலிங்கத்தின் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தான்.

முதலில் அப்பாவைப் பேச விட்டுப் பிறகு, அடக்கத்துடன் உரையாடலில் கலந்து கொள்வதுதான் கமலாவுக்கு வழக்கம். ஆனால் இன்று அவன் வரவை எதிர்பார்த்து வாசலிலேயே காத்திருந்தாள் அவள். அவசரம் அவசரமாகக் குளித்து அலங்காரம் செய்து கொண்டிருந்தாள் என்பது பார்த்த மாத்திரத்திலேயே தெரிந்தது.

இரட்டைப் பேட்டில் முக்கால் முழ அகலத்துக்குப் பார்டருடன் கூடிய பட்டுப் புடவை. அது புதுப் புடவை என்பதும் சரசரப்பிலிருந்து புரிந்தது. அதன் பள பளப்புடன் அவள் விழிகளின் ஒளி போட்டியிட்டது. கழுத்தில் இருந்த முத்தாரத்துடன் அவள் கள்ளச் சிரிப்பும் சேர்ந்து மின்னியது. வளைக் கரங்களின் கலகலப்புடன் அவள் உற்சாகமும் கலந்து சிறந்தது. நெற்றிப் பொட்டின் இளஞ் சிவப்பை அவள் கன்னத்தின் நாணச் சிவப்பு தோற்கடித்தது. தலையில் அவள் சூடியிருந்த கதம்பத்திலிருந்து பரவிய நறுமணம் போல் அவளுடைய குதூகலம் நாற்றிசையும் பரவி குணசீலனையும் ஆட்கொண்டது. இன்னதற்கு என்று தெரியாமலே அவன் ஆனந்தப்பட்டான்.

படியேறி வந்த அவனை உரிமையோடு கையைப் பிடித்து அழைத்துப் போனாள் அவள். ''சிறைப்பட்டிருந்த நம் காதலுக்கு விடுதலை கிடைத்து விட்டது'' என்று கிசுகிசுத்தாள்.

குணசீலன் அதிர்ச்சி அடைந்தான்.

''வாங்க, மாப்பிள்ளை!'' என்று உற்சாகமாகக் குரல் கொடுத்துக் கொண்டே உள்ளே இருந்து வந்தார் ராமலிங்கம்.

குணசீலனுக்குத் 'திக்'கென்று இருந்தது. 'மாப்பிள்ளையாமே! என்ன நடந்தது இங்கே?'

அப்பாவின் குரல் கேட்டதும் அவன் கையை விட்டு விட்டுக் காலில் விழுந்தாள் கமலா. பாதங்களைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டாள். எழுந்ததும் நாணத்துடன் ஒதுங்கி நின்றாள்.

''உங்க அக்கா வந்துட்டுப் போய் முக்கால் மணி நேரம்தான் இருக்கும். அவங்க அந்தண்டை போனதும் கமலா வீட்டுக்கு வந்து விட்டாள்.''

''என்ன... என்ன சொன்னாள் சாரு?'' தயக்கமும் தடுமாற்றமுமாகக் கேட்டான் குணசீலன்.

''நல்ல சேதிதான். கல்யாணம் பற்றிப் பேசி விட்டுப் போகத்தான் வந்தாங்க. கமலா கட்டிக்கிட்டு இருக்கிறதுகூட அவங்க கொடுத்த சேலைதான். இப்படி வந்து பாருங்க'' என்றார் ராமலிங்கம்.

உள்ளே எட்டிப் பார்த்தான் குணசீலன். மிகப் பெரிய வெள்ளித் தட்டில் சந்தனக் கிண்ணம், பன்னீர்ச் செம்பு, ஆப்பிள், ஆரஞ்சு, வாழைப் பழம், புஷ்பம் இவற்றுடன் ஒரு ரவிக்கைத் துண்டும் திறந்த நகைப் பெட்டியும் இருந்தன. நகைப் பெட்டியில் வந்த முத்தாரம்தான் கமலாவின் கழுத்தில் ஏறி, இருக்கிறது என்பதைப் புரிந்து கொள்வதில் குணசீலனுக்குச் சிரமமிருக்கவில்லை. அவன் இதயம் சில் லிட்டது.

''பெரிய பெரிய கம்பெனிகளையெல்லாம் நிர்வகிக்கிறாங்களே, எப்படி இருப்பாங்களோன்னு நெனச்சேன். சர்வ சாதாரணமாச் சிரிக்கச் சிரிக்கப் பேசினாங்க!''

குணசீலனின் உள்ளம் அழுதது. இதற்குள் ராமலிங்கத்தின் மனைவி மதுரம் அவர் அருகே வந்து நின்று கொண்டாள். '''என் தம்பியை மாப்பிள்ளையாகக் கொள்கிறதிலே ஆட்சேபணை இல்லையே' என்று கேட்டாங்க. 'இதென்ன கேள்வி' என்று நினைத்துக் கொண்டேன். 'இப்படி ஒரு சம்பந்தம் கிடைக்கக் கொடுத்து

வைக்கணுமே எங்க கமலாவுக்கு' அப்படீன்னு சொன்னேன்'' என்றாள்.

''சீக்கிரமா நாள் பார்க்கச் சொல் லிட்டுப் போயிருக்காங்க'' என்றார் ராமலிங்கம்.

குணசீலன் ராமலிங்கத்தையும் கமலா வையும் மதுரத்தையும் சீர் வரிசை களையும் மாறி மாறி வெறித்துப் பார்த் தான். அவனுக்குத் தலை சுற்றியது, வயிற்றைப் பிசைந்தது, நெஞ்சை அடைத்தது. அத்தனைக்கும் மேல் கோபம் பொங்கிக் கண்கள் சிவந்தன.

சிரமப்பட்டுத் தன்னைச் சமாளித்துக் கொண்டு வாசலை நோக்கி நடந்தான்.

'' எங்கே கிளம்பிட்டீங்க? உங்களுக் காகத்தான் பாயசம் வைச்சிருக்கேன். ஒரு வாய் சாப்பிட்டு விட்டுப் போக லாம் '' என்றாள் மதுரம்.

''எனக்கு மனசு இப்போ சரி யில்லை. அப்புறம் வந்து சந்திக்கிறேன்'' என்று கூறிப் படிகளில் இறங்கினான் குணசீலன்.

கமலா பின்னோடு ஓடி வந்தாள். ''நான் முதலில் மாட்டேன் என்று தான் சொன்னேன். அப்பாவும் அம்மா வும் கேட்கவில்லை. வற்புறுத்தி அணியச் சொல்லி விட்டார்கள்.''

குணசீலன் கோபத்தை மென்று விழுங்கி விட்டுச் சொன்னான்: ''கமலா, உன் பேரில் தப்பு இல்லை. எது நடக்க வேண்டும் என்று அல்லும் பகலும் நீ கனவு கண்டு கொண்டிருக் கிறாயோ, அது நடந்து விட்டதாக அவர்கள் சொன்னவுடன் நீ ஏமாந்து விட்டாய். நான் வருகிறேன்.''

அவன் கரத்தைப் பற்றி விரல்களைக் கண்களில் ஒற்றிக் கொண்டாள் அவள்.

''ஒருவேளை உங்கள் அக்கா தன் பிடி வாதத்தைத் தளர்த்தித் தானும் கல்யாணம் செய்து கொள்வதென்று முடிவு செய்திருக்கலாம் அல்லவா? அதை இங்கே சொல்லக் கூச்சப் பட்டுக் கூறாமல் இருந்திருக்கலா மல்லவா ?''

'அப்படியும் இருக்குமா ? ஒரு வேளை வேணுகோபால் அவள் மனத்தை மாற்றுவதில் வெற்றி கண்டுவிட் டாரோ ?' — நினைத்த போதே அவ னுக்குச் சந்தோஷத்தில் உடல் சிலிர்த்தது.

''கமலா ! நீ சொல்கிறபடி மட்டும் நடந்து விட்டால் அரை வீசைச் சர்க் கரையை நீ விழுங்கியாக வேண்டும். நானே என் கையால் அள்ளி அள்ளி உன் வாயில் போடப் போகிறேன்!'' என்று சொல்லி விட்டு வெகு வேகமாக நடந்தான் குணசீலன். பஸ்ஸுக்குக் காத்திருக்கப் பொறுமையின்றி ஒரு டாக்ஸி பிடித்து விலாசத்தைச் சொன்னான். **(தொடரும்)**

## ராஜாஜியைக் கவர்ந்த புத்தகங்கள்

என்னைக் கவர்ந்த அல்லது பண்படுத்திய புத்தகங்களை நான் எவருடைய தூண்டுதலினாலோ அல்லது புத்திமதியினாலோ படிக்கவில்லை. தற்செயலாகத்தான் நான் அவற்றைப் படிக்க நேரிட்டது.

நான் வக்கீல் தொழில் நடத்திக் கொண்டிருந்தபோது என் சக வக்கீல் ஒருவரின் வீட்டுக்குச் சிறிது நேரம் பேசிவிட்டு வருவதற்காகச் செல்வதுண்டு. ஒரு நாள் அவர் வீட்டில் பல பேப்பர்களின் குவியலிலிருந்து தோரோவின் '' டியூட்டி ஆப் டிஸ்ஒபிடியன்ஸ்'' என்றபுத்தகத்தைக் கண்டெடுத் தேன். பிற்காலத்தில் இப்புத்தகம் வாழ்க்கைப் பாதையைக் காட்டுவதாகவே ஆகிவிட்டது.

நான் சிறைச்சாலைக்குச் செல்லும் போது மிகக் குறைந்த புத்தகங்களையே என்னுடன் எடுத்துச் சென்றிருந்தேன். ''ராபின்சன் குருசோ'' என்ற புத்தகமும் அதில் ஒன்று. இப்புத்தகத்தை நான் சிறு பையனாக இருந்தபோது படிக்காமல் இருந்ததை என் அதிர்ஷ்டவசமாகவே இப்போது கருதுகிறேன். ஏனெனில், அப் போது நான் இப்புகழ்பெற்ற புத்தகத்தைப் படித்திருந்தால் குழந்தைகளுக்கான ஒரு சாதாரணக் கதைப் புத்தகமாகவே அத னைக் கருதியிருப்பேன். ஆனால், இப்போதோ ஆஸ்திக உணர்வளிக் கும் அசைக்க முடியாத செல்வம் அதில் இருப்பதை என்னால் காண முடிகிறது. இன்னொரு புத்தகம் ''தி டிரயல் அண்ட் டெத் ஆப் சாக்ரடீஸ்'' என்பது. இப்புத்தகம் சிறியதாக இருந்தாலும் இதன் மதிப்பு மிகப் பெரிது. இதை நான் எதிர்பாராதவிதமாகத் தான் படிக்க நேரிட்டது. மற்ற எல்லாப் புத்தகங்களையும்விட அதிக மாக இப்புத்தகம்தான் என்னை உருவாக்கி யிருக்கிறது.



நான்காவதாக ஜே. எல். மில் என்பாரின் ''லிபர்ட்டி'' என்னும் புத்தகத்தைக் குறிப்பிடுவேன். சாக்ரடீஸைப் பற்றிய புத்தகம் என்னை மனமுருகச் செய்தது போல் இப்புத்தகம் என்னை வெகு வாகக் கவர்ந்து விட்டது. சத்தியத்தின் மேல் உள்ள நம்பிக்கையை இவ்விரு தத்துவ ஞானிகளும் எனக்கு உணர்த்தினர்.

கடைசியாக மார்க்ஸ் அரேலியஸின் ''மெடிடேஷன்ஸ்'' என்னும் புத்தகத்தைக் குறிப்பிட்டாக வேண்டும். துன்பமும் தீமையும் என்னைச் சூழும்போது நான் அவற்றிலிருந்து விடுபட்டு சாந்தி பெற இப்புத்தகத்தையே நாடுகிறேன்.

ஆங்கிலப் புத்தகங்கள்தாம் என்னை வளப்படுத்தின என்று எண்ண வேண்டாம். என் தாயும், இரு அத்தைமார்களும் எனக்குக் கூறிவந்த அறவுரைக் கதைகள்தாம் என்னை மேம்படச் செய்தன.

- ராஜாஜி தமது நாற்பதாவது வயதில் எழுதிய ஆங்கிலக் கட்டுரையைத் தமிழில் தருபவர்:

நெல்லை ச. நல்லசிவன்

CTP-32 TAM

# இனாம்

## உங்களுக்குப் பிடித்தமான பினாகா டாப் டூத் பேஸ்ட்

நீங்கள் விரும்பும்

## பினாகா டால்க்குடன்

இனாம்




அந்த மெல்லிய, துல்லிய மணங்கமழ், மங்கல பினாகா டால்க்;
மேனியை தழுவிடத் தூண்டும். இதனுடன நழுவிட முடியாத
நல்ல வாய்ப்பாக இப்போது உங்களுக்கு பிடித்தமான பினாகா டாப்
டூத்பேஸ்ட் இனாமாக கிடைக்கிறது. திரளென மொய்க்குது கூட்டம்.
தேடிப் பெறுக இன்றே, சலுகையின் பலனை இன்றே

தமிழ்நாடு, கேரளம், மகாராஷ்டிரம் மற்றும் மேற்கு வங்காளம்
ஆகிய மாநிலங்களுக்கு மட்டுமே, ஸ்டாக் உள்ளவரை இந்த சலுகை

C I B A Cosmetics

## அத்தியாயம் 12

# வாக்குவாதம்

"குட் நைட் வேணு!" என்று கூறி டெலிபோனை வைத்தான் குணசீலன்.

குளித்து விட்டுச் சரியாக எட்டு மணிக்குச் சாப்பாட்டு மேஜை அருகே வந்த சாருலதா, "டெலிபோனில் யார்? வேணுகோபாலா?" என்ருள்.

"ஆமாம்."

"என்ன சொல்லுகிருர்?"

"இருதய மாற்று ஆபரேஷன்தான் இதுவரை வெற்றிகரமாக நடந்திருக்கிறதாம். மூளை மாற்று ஆபரேஷனைப் பரீட்சார்த்தமாக மிருகங்களிடம் கூட நடத்திப் பார்க்க டாக்டர்கள் யாரும் இதுவரை முன்வரவில்லையாம்."

"அதனுல்?"

"அப்படி ஏதாவது ஓர் அற்புதம் நிகழ்ந்தால் அப்போதுதான் உன் மனத்தை மாற்றுவதென்பது சாத்தியமாகக் கூடும் என்கிருர்."

பெருமாள் சாப்பிட உட்கார்ந்தார். முத்து சுடச் சுட எடுத்து வந்த முதல் சப்பாத்தி அவர் தட்டில்தான் விழுந்தது. மேஜையின் மேல் சூடாக வைக்கப்பட்டிருந்த கூட்டை எடுத்து அப்பாவுக்குப் பரிமாறிவிட்டு அமர்ந்தாள் சாருலதா.

"இதற்கு அவரைப் போய்க் கேட்பானேன்? என்னைக் கேட்டிருந்தால் நானே சொல்லி யிருப்பேனே?" என்ருள்.

"உன்னைத்தான் கேட்க நினைத்தேன். நீ குளிக்கப் போயிருப்பதாகச் சொன்ருர்கள். அதற்குள் ஆவலை அடக்க முடியாமல் ஃபோன் செய்துவிட்டேன்."

வியப்பினை முகத்தில் தேக்கி சாரு அவனைப் பார்த்தாள். "அப்படி என்ன திடீரென்று ஆவல் பிய்த்துக் கொண்டு கிளம்பியது உனக்கு?" உணவுடன் உரையாடல் கலந்தது.

"ராமலிங்கம் வீட்டுக்குப் போயிருந்தேன்."

"நான்கூட சாயங்காலம் போய் விட்டு வந்தேன். அதைச் சொல்லத்தான் ஆர்வமும் ஆசையுமாக வந்தேன், அதற்குள் பேச்சு திசை மாறிவிட்டது. அவர்கள் ரொம்பச் சந்தோஷத்தோடு கல்யாண ஏற்பாட்டுக்கு ஒப்புக் கொண்டார்கள். நாள் பார்க்கச் சொல்லிவிட்டு வந்தேன்."

"அக்கா! இந்தக் கல்யாணம் நடக்காது என்று ஏற்கனவே உனக்குப் பல தடவை சொல்லி யிருக்கிறேன். அப்படி யிருந்தும் நீ ஏன் அங்கு போனுய்? என் மானத்தை வாங்கவா?"

"இல்லை குணு! உன் மானத்தைக் காப்பாற்றத்தான்! அவர்கள் ஒருவேளை என்னிடம் உள்ள பணத்துக்கு ஆசைப்பட்டுப் பெண் கொடுக்கப் போகிருர்களோ என்ற கவலையில் நானே சொல்லிவிட்டேன்; — 'என் தம்பி ஒரு மாதிரி, என்னிடமிருந்து சல்லிக் காசு வாங்க மாட்டான். என்னுடைய அந்தஸ்துக்குப் பழுதில்லாதபடி கல்யாணத்தை விமரிசையாக நடத்தி விடுகிறேன்.



**சாருலதா**

**கி.ராஜேந்திரன்**

அப்புறம் குடும்ப பாரத்தை உத்தேசித்து அவன் சம்மதித்தால் நல்ல உத்தியோகம் போட்டுத் தருகிறேன். அநேகமாக அவன் அதற்கு இசைய மாட்டான். இப்போது உள்ள வேலையும் சம்பாத்தியமும்தான் நிலைக்கும் அவனுக்கு' என்று சொன்னேன். அவர்கள் கூறிய பதில் எனக்கு ரொம்பப் பெருமையாக இருந்தது குணு! 'குண

சீலன் என்கிற பெயருக்கு ஏற்ப அவர் நடந்துகொள்கிறார். அதற்காகத்தான் எங்கள் பெண்ணைக் கொடுக்கிறோம்' என்றார்கள்.''

''அதை மட்டும்தான் சொன்னார்களா? கமலாவின் கல்யாணம் பற்றி அவர்கள் கவலையோடு பேச்செடுக்கிற போதெல்லாம் என் அக்காவின் கல்யாணத்திலும் எனக்குப் பொறுப்பு உண்டு என்று சதா நினைவு படுத்திக் கொண்டே இருந்தார்களே! அதைப்பற்றி ஒன்றும் சொல்லவில்லையா?''

''என் கல்யாணம் நடந்த பிறகுதானே கமலாவின் கல்யாணம் நடக்க முடியும் என்ற எண்ணத்தில் அப்படிச் சொல்லியிருப்பார்கள். மற்றப்படி என்னைப் பற்றி அவர்களுக்கு என்ன அக்கறை வந்துவிடப் போகிறது?''

''அதற்குள்ளே அந்தப் பெண் அவசரப்பட்டு நீ கொடுத்துவிட்டு வந்த புடவையை உடுத்திக் கொண்டு விட்டாள். ராமலிங்கமோ என்னை 'மாப்பிள்ளை' என்று கூப்பிடும் அளவுக்கே போய் விட்டார். என் அபிப்பிராயம் அவர்களுக்கு நன்றாகத் தெரிந்திருந்தும் இப்படிச் செய்தார்கள்!''

''அவர்கள் பேரில் தப்பில்லை குணா! ராமலிங்கம் என் கல்யாணத்தைப் பற்றிப் பேச்செடுக்காமல் இல்லை. தயக்கத்துடன் ஆரம்பித்த அவரைத் தொடக்கத்திலேயே அடக்கி விட்டேன். உங்கள் பெண்ணுடைய எதிர்காலத்தைப் பற்றி யோசனை பண்ணுங்கள். குணசீலன் என் சொல்லைத் தட்ட மாட்டான் என்றேன்.''

''அவர்கள் ஆசையை நீ இப்படி வளர்க்கலாமா?''

''அவர்கள் ஆசை மட்டுமில்லை குணா! என்னுடைய ஆசையும் அதுதான். அப்பாவின் விருப்பமும் அப்படித்தான். அப்பாவின் சம்மதத்துடன்தான் நான் ராமலிங்கம் வீட்டுக்குப் போனேன்.''

''என்னுடைய ஆசையைப் பற்றி யாருக்குமே கவலை இல்லையா?''

''உன் ஆசை என்ன, சொல்லு! அமர்க்களமான கல்யாணமா? அடக்கமான கல்யாணமா? எப்படி நடக்க வேண்டும்? அடக்க



யாக இருக்க வேண்டும் என்றால் திருப்பதியில் முடித்துக் கொண்டு வந்து அபட்ஸ்பரியில் எல்லாரையும் கூப்பிட்டு ரிஸப்ஷன் வைத்து விடலாம்.''

''அக்கா! ஏன் என்னை இப்படி வதைக்கிறாய்? நீ தழையத் தழையத் தாலியைக் கட்டிக் கொண்டு இந்தக் கல்யாணத்தை நடத்தி வைத்தால் நான் வேண்டாம் என்பேனா? உன்னை இந்த நிலையில் வைத்துவிட்டு...''

''எனக்குத்தான் ஏற்கனவே திருமணமாகி விட்டதே, குணா? உனக்குத் தெரியாதா?''என்றாள் சாருலதா. வயிற்றில் பலமாகக் குத்தப்பட்டதுபோல விசுக்கென்று ஒரு வித வேதனையுடன் நிமிர்ந்தான் குணசீலன். வினாடிப் போதில் பெருமாளுக்குக் கண் கலங்கி விட்டது.

''ஐ ஆம் வெடட் டு சாருலதா என்டர்பிரைஸஸ்!'' என்று கூறிச் சிரித்தாள் அவள். ''தாலி கட்டாத கணவனாக மிஸ்டர் பிஸினஸ்ஸை ஏற்றுக் கொண்டு அவருக்காக உடல் பொருள் ஆவி அனைத்தையும் அர்ப்பணித்திருக்கிறேனே!'' — அவள் சிரிப்புத் தொடர்ந்தது.

''சாரு ஐ ஆம் ஸீரியஸ்!'' குணசீலனின் குரல் உயர்ந்தது.

''நானும் ரொம்ப ஸீரியஸாகத்தான் பேசுகிறேன், குணா! கல்யாணமாகாத வரை நீ இப்படித்தான் என்னைப் பற்றியே நினைத்துக் கொண்டிருப்பாய். குடும்பப் பொறுப்பு என்று ஏற்பட்டு விட்டால் எல்லாம் சரியாகி விடும். அப்புறம் நீயாகவே என்னிடம் வந்து 'ஒரு கௌரவமான உத்தியோகமாகக் கொடு சாரு' என்பாய்.''



''பிதற்றல்!'' என்ருன் குணசீலன். அவன் கண்கள் சிவந்தன. ''நீ பிச்சை போடவா நான் காத்திருக்கிறேன்!''

சாருலதாவுக்கும் கோபம் வந்தது. உரக்கவே பேசினுள்: ''குணு! கடைசி தடவையாகச் சொல்கிறேன். என்னை உத்தேசித்து நீ கல்யாணம் செய்து கொள்ளாமல் இருக்காதே. அப்படி ஒரு தயக்கம் யாருக்குமே இருக்கக் கூடாது என்பதற்காகத்தான் நானே போய்க் கல்யாணம் பேசிவிட்டு வந்தேன். உன் அசட்டுப் பிடிவாதம் நீடித்தால் ஒரு பாபமும் அறியாத கமலாவின் எதிர்காலம் குட்டிச்சுவராகி விடும். அதை நான் பார்த்துக் கொண்டு சும்மா இருக்க முடியாது! இந்தக் குடும்பத்துக்கு இன்று நான் தான் தலைவி. நான் சொல்கிறபடி நீ கேட்டுத்தான் ஆகவேண்டும்!''

உணவு பிடிக்காமல் உதறிவிட்டு எழுந்தான் குணசீலன். ''உனக்குப் பணிந்து நடக்க நான் தயாராக இல்லாத போது நான் இந்த வீட்டில் இருந்து கொண்டிருப்பதில் அர்த்தமில்லை, சாரு. ஒரு தனி அறை வாடகைக்குக் கிடைக்கும்வரை ஓட்டலில் இருந்து கொள்கிறேன், எல்லாருக்கும் நிம்மதி!''

மேற்கொண்டு யாரும் எதுவும் பேச முற்படு முன்னர் சாப்பாட்டு மேஜை மீதே ஒரு பக்கமாக இருந்த டெலிபோன் மணி ஒலித்தது. ரிஸீவரை எடுத்து ''எஸ்'' என்ருன் குணசீலன். பிறகு, ''உனக்குத்தான்'' என்று கூறி. டெலிபோனைச் சாருலதா அருகே எடுத்து வைத்துவிட்டுக் கைகழுவப் போனுன்.

சாருலதா ஃபோனில் பேசினுள்: ''சாரு ஹியர்!... எஸ், சாரங்கன்.. என்ன விஷயம்?... என்ன, காலமாயிட்டாரா? நிஜமாகவா?... எப்போ?...''

அவள் முகம் வெளிறியது. பெருமாள் திகைப்பும் பரிவுமாக மகளின் தோளை ஆதரவுடன் அணைத்தார்.

## அத்தியாயம் 13

# அரும்பும் காதல்

**கா**லை ஒன்பதரை மணி. சாருலதா வருவதற்கு இன்னும் கால் மணி நேரம் இருந்தது. லில்லியின் எதிரே நின்று கழுத்தில் 'டை'யின் முடிச்சைச் சரி செய்து கொண்டான் சாரங்கன்.

''ஹாய்! லில்லி! ஹௌ இஸ் தி சார்மிங் லிட்டில் கேர்ல் திஸ் மார்னிங்?''

''வணக்கம் ஐயா நலமாக இருக்கிறேன். தங்களது அன்பும் பரிவும் நிரம்பிய விசாரணைக்கு நன்றி!''

''அடேடே! லில்லிக்குத் தமிழ் கூடப் பேச வருகிறதே!''

''பிறந்தது தமிழராய்; வாழ்வது தமிழ் நாட்டில்; ஆள்வது தமிழக அரசு. ஆக பேசுவது தமிழாக இருந்தால் திகைப்பது ஏன்?''

''லில்லி! லில்லி! கொஞ்சம் இரு! எனக்குத் தலையைச் சுற்றுகிறது!'' தடுமாறுவது போல் நடித்து மேஜையை ஆதரவுக்குப் பற்றிக் கொண்டான் சாரங்கன். ஆனுல் அவனுக்கு உண்மையிலேயே வியப்பாகத்தான் இருந்தது.

''ஓர் ஆங்கிலோ இந்தியப் பெண்மணி இத்தனை அழகாகத் தமிழ் பேசுவாள் என்று யார்தான் எதிர்பார்ப்பார்கள்?''

''ஆங்கிலோ இந்தியனு? அனந்த கிருஷ்ணன் மகள் நான்!''

''அதிர்ச்சிக்கு மேல் அதிர்ச்சியா? ஐயோ! என்னுல் தாங்க முடியாது! ஹார்ட் வீக்!'' என்று சொல்லி நெஞ்சைப் பிடித்துக் கொண்டான் அவன்.

லில்லி பயந்தே போய்விட்டாள். ஓடிவந்து அவனை ஆதரவாகப் பற்றி அருகில் இருந்த நாற்காலியில் உட்காரவைத்தாள். ''தண்ணீர் கொண்டு வரட்டுமா? என்ன செய்கிறது உடம்பை?'' என்று கலவரத்துடன் கேட்டாள்.

''இதென்ன கஞ்சத்தனமான உபசாரம்? காப்பி கொண்டு வரட்டுமா என்று கேட்கக் கூடாதா?''

''நடித்தீர்களா? அழகுதான். ஆபீசுக்கு வந்து இதென்ன நாடகம்?''

''ஹ! நீ ஆங்கிலோ இந்தியப் பெண் போல் வேஷம் போடலாம். நான் மட்டும் நடிக்கக் கூடாதோ?''

''அதுவா? நான் ஒற்றைப் பின்னலும் பன்னிரண்டு முழப் புடவையுமாகத்தான் வந்தேன். ஆனுல் ரிஸப்ஷனிஸ்ட் என்ருல் அதற்கென்று ஒரு தனிக் கோலம் தேவை என்று சாரு சொல்லி என் தோற்றத்தை மாற்றி விட்டாள். அஜந்தா கொண்டையும் டெரிகாட் ஸாரியுமாகக் கொஞ்ச நாள் இருந்தேன். அஜந்தா கொண்டை ரொம்ப வேலை வாங்கியது. அது பணம் படைத்த, நேரத்தை வீணடிக்கத் தயாராக உள்ள பெண்களுக்குத்தான் லாயக்கு என்று முடிவு செய்து 'ஹேர் டூ'வை மாற்றி விட்டேன். அந்த அளவுக்குப் போன பிறகு ஸ்கர்ட்

**உங்கள் ஊகம் சரிதானா?**
வலது பக்கத்தில் உள்ள ராஜாராணி ஓவியம்தான் போட்டியில் முதல் பரிசு பெற்ற படம்! -பாபு

அண்ட் பிளவுஸும் கௌனும் அணியப் பழகுவது சிரமமாக இல்லை.''

''அடடா! ரொம்பத் தப்புப் பண்ணிட்டே! நம்மவங்களுக்கு இழைய இழையத் தலை வாரிப் பின்னி முழம் பூவையாவது வைத்துக் கொண்டால் தான் 'அழகு!''

''சாயங்கால நேரத்திலே அந்தக் கோலம்தான்!''

''அதெப்படி முடியும்? நீதான் முடியை வெட்டி விட்டாயே?''

''சீச்சீ! முடியை வெட்டுவதா? இது விலைக்கு வாங்கியது'' என்று கேசத்தைத் தட்டிக் காட்டினாள் லில்லி

'' 'விக்'கா?'' என்று வாயைப் பிளந்த சாரங்கன், ''லில்லி! எனக்கு இப்போ நிஜமாகவே காப்பி வேணும்; வா, காண்டீனுக்கு!'' என்றான்.

''சாரு வரும் நேரமாகிவிட்டதே!''

''அவள் ஒன்பதே முக்காலுக்கு வந்தாலும் பத்து மணிக்கு நாம் நம் 'ஸீட்'டில் இருக்க வேண்டும் என்ற அளவுக்குத்தான் எதிர்பார்ப்பாள்.''

இரண்டு கரங்களில் இரு காப்பிக் கோப்பைகளை வாங்கிக் கொண்ட சாரங்கன், லில்லி உட்கார்ந்திருந்த மூலைக்குச் சென்றான். காப்பியை மேஜை மேல் வைத்து விட்டு, ''அப்போ உன் பெயர் லில்லியாக இருக்க நியாயம் இல்லையே?'' என்றான்.

''சாரு என்னைச் செல்லமாக லில்லி என்று கூப்பிட ஆரம்பித்தாள். அதுவே நிலைத்து விட்டது. வீட்டிலே லலிதா தான். அப்பா மட்டும் 'லல்லூ' என்று கூப்பிடுவார்!''

''லல்லூ! லல்லூ! சகிக்கலையே! லில்லியே தேவலாம்! அதெப்படி நீ இங்கே வந்து மாட்டிக் கொண்டாய், லில்லி?''

''அப்பா பள்ளிக்கூடத்தில் கணக்கு வாத்தியார். வருமானம் போதவில்லை. அண்ணாவுக்குக் கல்யாணமாகி விட்டது. அவன் குடும்பத்துக்கே அவன் சம்பாத்தியம் சரியாகப் போய்விடுகிறது. அதனால் நான் தமிழ் ஆசிரியையாக வேலை பார்த்தேன்...''

''என்ன வேலை பார்த்தாய்?''

''வித்வான் பரீட்சை எழுதிப் பாஸ் செய்திருக்கிறேன். ஆனால் தமிழ் ஆசிரியைக்கு என்ன கொடுத்துவிடப் போகிறார்கள்? இப்போது கிடைக்கும் சம்பளத்தில் பாதிகூட இல்லை. அம்மாவுக்கு உடம்பு சரியில்லை. ஏழைகளுக்கு வரக் கூடாத வியாதிகளெல்லாம் வந்து விட்டது. ஏகச் செலவு, கடன்... போர் அடிக்கிறேனா?''

''இல்லை, சொல்லு!''

''வரவேற்பாளர் தேவை என்று விளம்பரம் வந்தது. அதிக வருமானத்தை உத்தேசித்து மனுச் செய்தேன். இன்டர்வியூவுக்கு என்னையும் சேர்த்துப் பத்துப் பேர் வந்திருந்தார்கள். அவர்களில் நான்தான் சிறந்த அழகி என்பதால் சாரு என்னைத் தேர்ந்தெடுத்தாள்.''

''அழகுப் போட்டியே நடந்திருக்கிறது! மிஸ் மெட்ராஸா நீ?''

''ஏறக்குறைய அப்படித்தான்.''

''ரிஸப்ஷனிஸ்டாக இருப்பதற்கு அழகு மட்டும் போதுமாக்கும்!''

''சாருவின் சாமர்த்தியத்தைக் குறைத்து மதிப்பிடாதீர்கள்! வித்வான் பரீட்சை தேறியிருப்பதால் எனக்கு அறிவும் திறமையும் உண்டு என்று கணக்குப் போட்டாள். 'அந்தத் திறமை இதுவரை ஒரு துறையில் செயல்பட்டது. இனி வேறு ஒரு துறையில் செயல்படப் போகிறது' என்றாள். நல்லதொரு வரவேற்பாளராக விளங்க எனக்குப் பயிற்சி அளித்தாள். கான்வெண்டில் தினம் மூன்று மணி நேரம் ஆங்கிலப் பாடம்; இன்ஸ்டிடியூட்டில் இரண்டு மணி நேரம் டைப்ரைட்டிங். டெலிபோன் ஸ்விட்ச் போர்டை இயக்கும் விதத்தையும் புரிந்து கொண்டேன். இப்போ நான் ரிஸப்ஷனிஸ்ட், கம் டெலிபோன் ஆபரேட்டர், கம் டைப்பிஸ்ட். சும்மா கதைப் புத்தகம் படித்துக் கொண்டு உட்கார்ந்திருக்க முடியாது.''

''நீ உரு மாறியது இருக்கட்டும்; உன்னை உருமாற்றியவளை நினைத்தால் இன்னும் ஆச்சரியமாக இருக்கிறது. சாரு என்ன படித்திருக்கிறாள்? உனக்குத் தெரியுமா?''

''அவளைப் பற்றி யாருக்குமே அதிகமாக ஒன்றும் தெரியவில்லை. ஆனால் ஒன்று; அவள் அனுபவக் கல்லூரியில் முன்னேற்றப் படிப்பில் முதல் வகுப்பில் தேறியிருக்கிறாள்!''

''பிரமாதமாகப் புகழ்கிறாயே! பெண்ணுக்குப் பெண் விட்டுக்கொடுப்பாயா!''

''பாராட்டினால் இப்படிச் சொல்லுவீர்கள். குறைவாகப் பேசினால் பொறாமை என்பீர்கள்!''

''படித்துப் பட்டம் பெறுவதற்கும் வாழ்க்கையில் முன்னேறுவதற்கும் சம்பந்தம் இல்லைதான்.''

''சாரு பட்டம் பெற்றதாகத் தெரியவில்லையே தவிர காமன் ஸென்ஸ்

ரொம்ப அதிகம். ஓரிரு சந்தர்ப்பங்களில் இன்ஜினீயர் கைலாசம் அவள் கூறும் யோசனையைக் கேட்டுப் பிரமித்திருக்கிறார். மற்ற துறைகளிலும் கூட இப்படித்தான். ஒரு நாளைக்கு எத்தனை டெலிபோன்கள்! 'சாரு! அதற்கு உன் உதவி தேவை; சாரு! இதற்கு என்ன செய்யலாம்? சாரு! இந்தச் சிக்கலைத் தீர்க்க வழி என்ன?' ........''

''படிப்பிலும் ஒன்றும் குறைச்சல் இல்லையே? ஃபிரெஞ்சும் ஜெர்மனும் இப்போது கற்றுக் கொண்டு வருகிருள் போலிருக்கிறதே!''

''ஆமாம். என்னிடம் தமிழை முறையாகப் பயிலப் போவதாகக்கூடச் சொல்லி யிருக்கிருள்'' என்ருள் லில்லி சற்றுப் பெருமிதத்துடன். ''நான் இங்கு வந்த புதிதில் கான்வென்டில் அவளும் தினமும் ஒரு மணி நேரம் ஆங்கில டியூஷன் எடுத்துக் கொண்டாள். முக்கியமாகச் சரியான உச்சரிப்புடன் அந்த மொழியைச் சரளமாகப் பேசக் கற்றுக் கொள்ள வேண்டும் என்பாள்.''

''ஆமாம், பல அயல்நாட்டவருடன் பழக நேர்கிறதல்லவா.''

''அதோடு அவளே இரண்டுதடவை மேல் நாடுகளுக்குப் போய் வந்திருக்கிருளே, பிஸினஸ் சம்பந்தமாக.''

''அபூர்வமான, அதிசயமான பெண்.''

''அவளுடைய சூத்திரம் என்ன தெரியுமா? திறமை+ஊக்கம்=சாதனை!''

''ஃபார்முலாவுக்கு விளக்கம்தேவை!''

''திறமை எத்தனையோ பேரிடம் இருக்கிறது. பயன்படுத்துவாரின்றி மங்கி மழுங்கிப் போகிறது. ஆனுல் திறமையைக் கண்டுபிடித்துப் பயன்படுத்திக் கொள்ளும் ஆற்றல் அவளிடம் இருக்கிறது. திறமையை வளர்க்கும்போது அந்த வளர்ச்சியுடன் சேர்ந்து தானும் வளரலாம், வாழ்க்கையில் உயரலாம் என்ற ரகசியத்தைப் புரிந்து கொண்டிருக்கிருள் சாரு. இதுதான் அவள் வெற்றியின் அடிப்படை!''

''தெரியுமே! என்னை டீ எஸ்டேட்டிலிருந்து இங்கே கொண்டு வந்தாளே! என் திறமையை உணராமலா?''

இந்தத் தற்பெருமையைக் கவனிக்காதவள் போல் லில்லி தொடர்ந்தாள்: ''தன்னிடம் இல்லாத தகுதிகளைப் பணம் கொடுத்து அவள் பெறுகிருள். முதல் தரமான நபர்களுக்கு அள்ளிக் கொடுக்க அவள் தயங்குவதே இல்லை.''

''கவனித்தேன். சாருலதா இன்ஜினீரிங்கில் வெவ்வேறு துறைகளைச் சேர்ந்த எட்டு இன்ஜினீர்கள் இருக்கிருர்களே!''

''எல்லோரையும் கசக்கிப் பிழிந்து வேலை வாங்கி விடுகிருள்.''

## சுடுங்கள்; கவலையில்லை!

சினிமாக்களில் வில்லன் கதாநாயகியைக் காரிலே கடத்திச் செல்வான். அப்போது கதாநாயகன் வில்லன் காரின் டயரைப் பார்த்துச் சுடுவான். டயர் வெடிக்கும்! கார் நிற்கும்!



ஆனுல் இப்போது துப்பாக்கியால் சுட்டாலும் வெடிக்காத டயர்களை குட் இயர் (Good Year) கம்பெனியார் உருவாக்கியுள்ளனர். இந்தப் புதிய டயர்கள் ஆணிகள் குத்தினுலும் வெடிக்காது!

ஆதாரம்: 'சையன்ஸ் டுடே'
அனுப்பியவர்: 'பன்னீர்'

---

''அதைச் சொல்லு! நேற்று டெலிபோனில் சாருலதா ஸெமண்ட்ஸ் கோபால் ராவிடம், 'ஐ டோண்ட் வாண்ட் எக்ஸ்பிளனேஷன்ஸ்! ஐ வாண்ட் ரிஸல்ட்ஸ்!' என்று கத்தினுள், பாரு. எனக்கே வெலவெலத்து விட்டது.''

''லில்லி கைக்கடிகாரத்தைப் பார்த்தாள். நேரமாகிறது, போகலாமா?''

''காப்பி வாங்கிக் கொடுத்தேனே, தாங்க்ஸ் கிடையாதா?'' என்ருன் சாரங்கன், அவளைப் பின்தொடர்ந்து நடந்தபடியே.

''இந்தக் காப்பியைச் சாப்பிட்டதற்கு எனக்கு நீங்கள் தாங்க்ஸ் சொல்ல வேண்டும்!''

''இந்தக் காப்பி மோசம் என்று சொல்வதானுல் உன் வீட்டுக் காப்பியை ருசித்துப் பார்த்துவிட்டல்லவா சொல்ல வேண்டும்?''

''என் வீட்டுக்கு வர நீங்களே உங்களுக்கு அழைப்பிதழ் வழங்கிக் கொண்டு விட்டீர்கள்!''

''அதை நீ பிடுங்கிக் கொண்டுவிடப் போவதில்லையே?''

''திடுதிப்பென்று என்னைத் தேடிக் கொண்டு வந்து நிற்காதீர்கள். அப்பாவும் அம்மாவும் பயந்து விடுவார்கள். அவர்களைத் தயார்ப்படுத்தி விட்டுச் சொல்கிறேன்.''

லில்லி டெலிபோன் ஸ்விட்ச் போர்ட் அருகே அமர்ந்தாள். அது 'கொர் கொர்' என்று ஒலி எழுப்பியது.

''குட் மார்னிங்! சாருலதா என்டர் பிரைஸஸ்!'' — லில்லி கடமையில் ஆழ்ந்து போனுள்.

திருகுப்பூவுடன் கூடிய ஒற்றைப்பின்னலும் ஆறு கஜப் புடவையுமாக அவளைக் கற்பனை செய்து பார்த்தான் சாரங்கன், ஒரு நிமிஷம். பிறகு தன் அலுவல்களைக் கவனிக்க நடந்தான். **(தொடரும்)**




# ஆத்ம சமர்ப்பணம்

கு. வேங்கடரமணி

**ப**கல் பொழுதாய் நழுவிக் கொண்டிருந்தது. பங்குனி மாதத்து வெய்யிலின் வெம்மை அடங்கி, இனிமையும் தண்மையுமாய்க் குழைந்த மாலைக் காற்று தவழ்ந்து வரத் தொடங்கி விட்டது.

காவிரியில் நீர் வற்றி, மணல் பரவிக் கிடக்கிறது.

உள்ளத்துக்கு இதமாய் ஒரு நினைப்பை அந்த மணல் தனக்குள் புதைத்து வைத்துக் கொண்டிருந்தது. கனவாகிப் போன பழைய நாட்கள் நெஞ்சில் ததும்பி வரும்போது, சோகத்தில் புதைந்து கிடந்தாலும் கற்பனையில்

## அத்தியாயம் 14

# சட்டமும் தர்மமும்

மணியின் ஈமச்சடங்குகள் நடக்கும் போது அந்த வீட்டுக்கு வந்திருந்த சாருலதா, கறுப்பு நிற ஜார்ஜெட் சேலையும் டூபை டூவில் கறுப்புச் சோளியும் அணிந்திருந்தாள். துயரகரமான அந்தச் சூழ்நிலைக்கு ஏற்ப அவள் உடுத்தியிருந்தாலும் அதிலும் எழிலின் ஏற்றத்தை வந்திருந்தவர்களால் காணமல் இருக்க முடியவில்லை.

நன்கு இருட்டிய பிறகு சந்திரோதயமானல்தானே நிலாவின் அழகு பளிச்சிடுகிறது? காகிதத்தின் வெண்மை கறுப்பு மையால் அதில் அச்சிட்ட பிறகு தானே தெற்றெனத் தெரிகிறது? — இப்படிப் பலவாருக எண்ண வைத்தது, அவள் தோற்றம்.

சாருலதா கலங்கிப் போயிருந்தாள். அங்கு குழுமியிருந்தவர்கள் மீது அவள் கண்ணேட்டம் செலுத்தினள். அறிமுகமான நபர்கள் எத்தனையோ பேர்கள் இருந்தும் அமைதியின்றி அவள் வேணுகோபாலைத்தான் தேடினள். 'வேணு இங்கு வருவதற்காக வீட்டை விட்டுக் கிளம்பி விட்டார் என்பதை ஃபோனில் உறுதிப்படுத்திக் கொண்டுதானே நான் புறப்பட்டேன்? எங்கே அவர்?'

கடைசியில் அவன் நிற்குமிடத்தைக் கண்டுபிடித்துக் கொண்டதும் நிம்மதி பெற்றுள் அவள். வேணுவின் கண்களைச் சந்தித்த பிறகு மணியின் மனைவியை அணுகுவதற்கு அவளுக்குத் தைரியமும் தெம்பும் பிறந்தன. இரண்டு நிமிஷங்கள் அவள் அருகே அமர்ந்திருந்து ஆறுதலாக நாலு வார்த்தைகள் கூறிவிட்டு, எழுந்து வேணுகோபாலை நோக்கி வந்தாள் அவள்.

''எதற்காகக் காத்திருந்தார்களாம்?''

''பெங்களூரிலிருந்து இரண்டாவது பிள்ளை இரவோடு இரவாகக் காரில் வந்திருக்கிறன்; அதுதான் தாமதம்.''

''நீங்கள் இன்னும் கொஞ்ச நேரம் இருப்பீர்களா?''

''நீ எப்போ கிளம்புவாய் என்று பார்த்துக் கொண்டிருக்கிறேன், சாரு. என் வண்டி சர்வீஸுக்குப் போயிருக்கிறது. நீ வீட்டுக்குப் போகும்போது வழியில் இறங்கிக் கொள்ளலாம் என்று நினைத்தேன்.''

இருவரும் கூட்டத்தினரிடையே மெல்ல வழி ஏற்படுத்திக் கொண்டு நகர்ந்து, சாலையில் சாருலதா காரை நிறுத்தியிருந்த இடத்துக்குப் போனர்கள்.



# சாருலதா

### கி.ராஜேந்திரன்

கார் புறப்பட்ட சற்று நேரத்துக்கெல்லாம் வேணுகோபால் கூறினன்: ''ஊட்டியிலே மணி காரை விட்டு இறங்கும்போதே, 'சாரு, லெட் அஸ் நாட் வேஸ்ட் எனி டைம்!' என்று கூவிக்கொண்டே இறங்கினன். காக்டெய்ல் பார்ட்டியை ஆரம்பிக்க அத்தனை அவசரம்! அப்போதே இன்னும் மூன்று மாதங்கள்தான் என்று கெடு வைத்தேன். இரண்டு வாரங்கள் முன்னுடியே நடந்து விட்டது.''

''பாவம்!'' என்றுள் சாருலதா.

''பாவமாவது புண்ணியமாவது? வலிய மரணத்தை வரவழைத்துக்கொள்கிறவர்களுக்கு அனுதாபம் என்ன வேண்டிக் கிடக்கிறது? 'லிவர் ரொம்பக் கெட்டுப் போயிருக்கிறது; குடிப்பதை நிறுத்து; அதுதான் மருந்து' என்றேன். 'அதெப்படி முடியும்?' என்று கேட்டு இன்னெரு டாக்டரை வரவழைத்தான். டாக்டர் மாறிலும் மருந்து மாறுமா? மடையன்!''

''செத்துப் போனவரை ஏன் திட்டு கிறீர்கள்?''

''அதுவும் சரிதான்; அவன் உயி ரோடு இருக்கும்போது குடிக்கத் தூண் டியவர்கள் மீதுதான் நியாயமாகக் கோபப்பட வேண்டும். மணியின் மர ணத்துக்கு நீயும் பொறுப்பேற்க வேண் டியவள்தானே!''

''இதென்ன அசட்டுத்தனமான பேச்சு? அவரிடம் பர்மிட் இருந்தது; பணம் இருந்தது; அலமாரி நிறைய விஸ்கி இருந்தது. அவர் ஊட்டியில் என்னுடன் தங்கியிருந்தபோது மட்டும் தானா குடித்தார்? தினமும்தான் குடித் தார். எப்படி இருந்தாலும் சாகப் போகிறேன்; நன்ருகக் குடித்துவிட்டுத் தான் சாகிறேனே என்பது அவர் சித் தாந்தம்.''

''அவருடைய லிவர் கெட்டுப் போயிருக்கிறது என்பது தெரிந்தும் நீ அவரை ஊட்டிக்கு அழைத்துப் போனதும் மது வழங்கியதும் மகா பாவம்!''

''வேணு! ஏற்கனவே குஞ வீட்டை விட்டுப் போய்விட்ட தால் என் மனசு ரொம்ப நொந்து போய்க் கிடக் கிறது. நீங்கள் வேறு அதை மேலும் புண்ணக் காதீர்கள்!''

''குஞவீட்டை விட்டுப் போய் விட்டான? ஏன்? எங்கே?''

''எங்கே என்றுதான் தெரியவில்லே. நேற்று சாயங்காலம் அவனுக்குக் கல் யாணம் பேசிவிட்டு வரப் போனேன். ராமலிங்கம் ரொம்ப சந்தோஷமாகச் சம்மதம் தெரிவித்தார். வீட்டுக்கு வந்து இவனிடம் விஷயத்தைச் சொன் னதும் தன் மானம் கப்பலேறி விட் டது என்று குதித்தான். அந்தச் சம யம் பார்த்து மணி காலமான செய் தியைச் சாரங்கன் ஃபோன் செய்தாரா? எனக்கு ஒன்றுமே ஓடவில்லே. காலேயில் டிபனுக்கு வந்து உட்கார்ந்தபோது குஞவைக் காணேம். ராத்திரியே



பெட்டி, படுக்கையோடு அவன் கிளம்பி விட்டதாக முத்து சொன்னுன்.''

''ஆக, தம்பியை வீட்டை விட்டுத் துரத்தி விட்டாய்!''

''இன்று உங்களுக்கு என்ன வந்து விட்டது? மணி செத்துப் போனல் அதற்கு நான்தான் காரணம்; குஞ வீட்டை விட்டு வெளியேறினல் அதற்கும் நான்தான் பொறுப்பு. அவரவர்களுக்கு வயசாகவில்லே? எல்லோருடைய. தலே விதியையும் நிர்ணயிக்க நான் என்ன கடவுளா?''

''நீ எப்படிக் கடவுளாக முடியும்? கடவுள் தர்மத்துக்குப் பயந்தவர்!''

''அவர் 1969ம் ஆண்டு இந்தியாவில் வாழ்ந்து பார்க்க வேண்டும். இன்று இங்கு யோக்கியப் பொறுப்புடன் நடந்து கொள்கிறவன் முட்டாள்!''

''அயோக்கியத்தனம் வளர அனுசரணையாகத்தான் இன்று சட்ட திட்டங்களும் கட்டுப்பாடுகளும் இருக்கின்றன, ஒப்புக் கொள்ளுகிறேன். ஆனுலும்.....''

''வருஷக் கணக்கில் வருமான வரி கட்டாமலும், கணக்குக் கொடுக்காமலும் அதற்கு அபராதம் செலுத்தாமலும் இருக்கும் மந்திரி ஒருவர் தொடர்ந்து பதவியில் நீடிக்க முடிகிற



காலம் இது. அவரிடம் போய்த் தர்மத்தைப் பற்றிப் பேசுங்கள்!''

''அரசன் எவ்வழி அவ்வழி மக்கள்!''

''கரெக்ட்! இன்று இன்கம்டாக்ஸ் ஆபீஸில் வந்து ஸ்டூலில் உட்காருகிற பியூன் தினத்தந்தி படிக்கிறவன். மந்திரிக்கு இருபதாயிரம், ஆபீஸருக்கு இரண்டாயிரம், ஹெட் கிளார்க்குக்கு இருநூறு என்றால், எனக்கேன் இரண்டு ரூபாய் தரக் கூடாது? என்று விகிதாசாரக் கணக்குப் போடுகிறான் அவன்!''

''அந்த இரண்டு ரூபாயையும் தன் குழந்தைக்குப் பால் வாங்கிக் கொடுக்க அவன் பயன்படுத்துவதில்லை. ஸபயர் தியேட்டருக்கு டாக்ஸியில் போய் இறங்கத்தான் செலவழிக்கிறான்!''

''நீங்கள் ஒருத்தர் வேணுமானால், வருகிற கால் ரூபாய், அரை ரூபாய்க் காசுகளுக்குக் கூடக் கணக்கு எழுதி வைக்கலாம். மற்றபடி எத்தனை வக்கீல்களும் டாக்டர்களும் ஒழுங்காக ரசீது தருகிறார்கள்? நேர்மையுடன் வரிகளைக் கட்டுகிறார்கள்?''

''கடன் இழவே என்று வரிகளைப் பைசா பாக்கி இல்லாமல் செலுத்துகிறவன் மாதச் சம்பளம் வாங்குகிறவன்தான் சாரு. அவனும் ஏமாற்ற வாய்ப்புக் கிடைக்காத வரையில்தான் நாணயஸ்தன்!''

''தெரிந்திருக்கிறதே உங்களுக்கு!''

''அதெல்லாம் புரியாமலில்லை. வால் அறுந்த நரி கதையாக நீ ஏன் நடந்து கொள்ள வேண்டும் என்பதுதான் என் கேள்வி. எல்லாரும் தப்புப் பண்ணுகிறார்கள் என்பதற்காக நீயும் குற்றங்கள் புரிய வேண்டுமா?''

''நான் என்ன செய்து விட்டேன்? சட்டத்தை மீறி நான் என்றுமே எதையுமே செய்தது கிடையாது. என்மீது யாரும் எந்த விதமான குற்றமும் சுமத்த முடியாது!''

''அது எனக்குத் தெரியும் சாரு! சட்டத்தை நீ உடைக்க மாட்டாய். ஆனால் சட்டத்தின் கண்களில் மண்ணைத் தூவி அதன் பிடியிலிருந்து நழுவும் வழிகள் அத்துபடியாகி யிருக்கின்றன உனக்கு.''

சாரு சிரித்தாள். ''ஒரு வேடிக்கையைக் கேளுங்கள்! நான் போன மாசம் டில்லிக்குப் போயிருந்தேனே?...''

''ஆமாம், தொழில் வர்த்தகத் துறையில் தில்லிக்குப் போகாமல் என்ன காரியம்தான் நடக்கும்? பர்மிட் கிடைத்ததல்லவா?''

''கிடைத்த கதையைத்தான் சொல்கிறேன். டில்லியில் 'லியேஸன்' வேலையைக் கவனிக்க என் 'ரெப்ரஸென்டேடிவ்' கோபி இருக்கிறார். அவர் என்னைக் கிளப்புக்குச் சீட்டாட அழைத்துப் போனார். நான் ஜெயிக்கக் கூடாது, தோற்கத்தான் வேண்டும் என்று முன் கூட்டியே எச்சரித்து விட்டார்! முதலில் எனக்குப் புரியவில்லை. அப்புறம் பார்த்தால் நாங்கள் ஆடியது இரண்டு ஆபீசர்களுடன்! தொடர்ந்து நாலு நாட்கள் கஷ்டப்பட்டு நாலாயிரம் தோற்ற பிறகு பர்மிட் கிடைத்தது!''

''ஆமாம். லஞ்சம் கொடுத்தால் தானே குற்றம்? சீட்டாட்டத்தில் தோற்பது நாகரிகம்!''

''தலைவர்கள் பலர் ஐம்பதாவது பிறந்த நாளைக்கு ஐம்பது லட்சம், ஐம்பத்திரண்டாவது பிறந்த நாளைக்கு ஐம்பத்திரண்டு லட்சம் என்றெல்லாம் இலக்கு வைத்து நன்கொடை வசூலிக்கிறார்களே, எதற்குத் தெரியுமா?''

''அத்தனை வசூலாகிறதோ இல்லையோ, கையில் இருக்கும் பத்துப் பதினைந்து லட்சம் கறுப்புப் பணத்தை வெளுப்பாக்க அது உதவும் என்பதால் தான். இதே காரணத்தினால்தான் குதிரைப் பந்தயத்திலும் லாட்டரியிலும் ஜெயித்த டிக்கட்டுகளுக்குப் பரிசுப் பணத்தை விடக் கூடுதலாகவே சில சமயங்களில் கிடைக்கிறது.''

''சட்டத்தை ஏய்க்க ஒன்றா இரண்டா? நூற்றுக் கணக்கான வழிகள்!''

''அதனால்தான் சொல்லுகிறேன்; 'சாரு சட்டத்துக்குட்பட்டு நடந்தால் போதாது, தர்மத்துக்கும் கட்டுப்பட்டு நடக்க வேண்டும்' என்று. காந்திஜியே சட்டத்தை மீறியிருக்கிறார், பல தடவைகளில். ஆனால் அவர் தர்மத்தை மீறியதில்லை. சட்டத்தை விடத் தர்மத்தையே மேலானதாக மதித்தார்.''

''தர்ம ரட்சாமணியே! உங்கள் வீடு நெருங்கிக் கொண்டிருக்கிறது. இறங்கத் தயாராகுங்கள்!''

''ஸ்விஸ் பாங்கில் நெம்பர் அக்கௌண்ட் வைத்துக் கொண்டு சட்டத்தை ஏய்க்கலாம், சாரு. சட்டத்தைக் காக்க அதிகாரிகளும் போலீசும் தான் உண்டு. ஆனால் தர்மத்தைக் காப்பது மனச்சாட்சி. அதை ஏமாற்ற முடியாது. இன்று அது பணிந்து போகும்; நாளை பழி வாங்கி விடும்!''

''தொழில் வர்த்தக முன்னேற்றம் என்ற பெரிய லட்சியத்துக்கு முன்னால் லஞ்சம் கொடுப்பதும் ரகசிய அக்கௌண்டும் சின்ன விஷயங்கள். இந்த அற்பச் செயல்களில் நான் ஈடுபடாமல் போனால் இவ்வளவு சீக்கிரத்தில் இந்த அளவுக்கு முன்னேறியிருக்க முடியாது!''

''கொஞ்சம் நிதானமாகத்தான் அந்த முன்னேற்றம் நடக்கட்டுமே! என்ன கெட்டு விடும்?''

''என் தவறுகளை அலசிப் பார்ப்பவர் என் சாதனைகளைக் கவனிக்காமல் கண்ணை மூடிக் கொள்கிறீர்கள். எத்தனை பேர்களுக்கு வேலை வாய்ப்புக்களை ஏற்படுத்தித் தந்திருக்கிறேன்! நாட்டின் பொருளாதார முன்னேற்றத்துக்கு எந்த அளவுக்கு உதவியிருக்கிறேன்!''

''இந்த அற்பச் செயல்களில் ஈடுபடாமலேயே இந்த அளவுக்கு முன்னேறும் திறமை உனக்கு இருக்கிறது என்பதுதான் என் வாதம். லட்சியம் உயர்வாக இருந்தால் போதாது; அதை அடையும் வழியும் நல்லதாக இருக்க வேண்டும் என்று காந்திஜி வற்புறுத்தவில்லையா?''

''நீங்கள் எதற்கு எதற்கெடுத்தாலும் காந்திஜி பெயரை இழுக்கிறீர்கள்?''

''நீ எதற்குக் காந்திஜியின் பெயரைக் கேட்டு மிரள்கிறாய்?''

''அவர் அவதார புருஷர். அவரைப் போல் எல்லோராலும் நடந்து கொள்ள முடியுமா?''

''பாபம் புரியும் பலவீனர்கள் சொல்லும் சமாதானம் இதுதான்! நொண்டிச் சாக்கு, பேடித்தனம்! முயன்று பார்த்தால் முடியாதது கிடையாது.''

''ஆணுக்குப் பெண் சமம் என்பதெல்லாம் வாயளவோடுதான். தவறிப் போய்ப் பெண்ணொருத்தி முன்னுக்கு வந்து விட்டால் ஆயிரம் குற்றம் குறைகளை அவளைப் பற்றிச் சொல்வீர்கள்.'' கார் நின்றது. வேணுகோபால் இறங்கவில்லை.

''வீட்டிலே பெண்களைப் பூட்டி வைக்கும் காலம் மலையேறிவிட்டது என்பதை யார்தான் புரிந்து கொள்ளவில்லை? நாட்டின் பிரதம மந்திரியே பெண்தானே! தொழில் வர்த்தகத் துறையில் உன் முன்னேற்றம் பெண் இனத்துக்கே பெருமைதான் சாரு.''

''ஆனால் லஞ்சம் தருவது மட்டும் ஆணின் ஏகபோக உரிமை — காப்பிரைட் என்கிறீர்கள்!''

''இல்லை சாரு! திருடர் கூட்டத்துக்குக் கூடப் பெண்ணொருத்தி தலைவியாக இருந்து அகப்பட்டுக் கொண்டிருக்கிறாள். எனக்குப் பெண் குலத்தைப் பற்றிய கவலை அப்புறம். முதல் கவலை சாருவைப் பற்றித்தான்.''

''ரொம்ப நன்றி; வீடு வந்துவிட்டது; கார் நின்றுவிட்டது!''

''இதோ கதவைத் திறந்து விடுகிறேன்'' என்ற வேணுகோபால், சொன்னபடி செய்தான். ஒரு காலைத் தரையில் ஊன்றியவன் தயங்கித் திரும்பி, கோபமாக இருந்த சாருலதாவைக் கனிவுடன் பார்த்தான். ''சாரு! உன்னைக் குறைவாகப் பேசினேன் என்று நினைக்காதே! உன் பெருமைகளை உணராதவன் இல்லை நான், நீ பழகுகிற மனிதர்கள்; வளைய வருகிற சூழ்நிலை எல்லாம் பயங்கரமானவை. உன் சிநேகிதர்கள் எல்லாரும், மது அருந்துபவர்கள்; ஆனால் நீ ஒரு சொட்டுக்கூட ருசி பார்த்தது கிடையாது. கேவலமான, ஒழுக்கம் கெட்ட மனிதர்கள் பலருடன் நீ தொடர்பு கொள்ள நேர்ந்தாலும் மதி இழக்காமல் மனோதிடத்துடன் இருந்து தும்பைப் பூப்போல உன் தூய்மையைக் காப்பாற்றிக் கொண்டு வருகிறாய். காட்டுக்குப்போய்த் தவமிருப்பது சுலபம். ஆனால் நீ கடைப்பிடிப்பது தவ வாழ்க்கையை விடக் கடினமான ஒரு யோக நிலை!''

''தாங்க்ஸ் வேணு! கசப்பு மருந்தை விழுங்கச் செய்து விட்டு நாக்கில் சர்க்கரையும் தடவி விட்டீர்கள்!''

''மருந்து என்று ஏற்றுக் கொண்டால் சரி.''

''ஆனால் என் உடம்பு அந்த மருந்துக்கு 'இம்யூன்' ஆகிவிட்டது, டாக்டர்! மருந்தினால் பலன் இருக்காது. நான் மேற்கொள்ளுகிற எந்தக் காரியத்தையுமே — கீழ்த்தரமான செயலைக் கூட விரும்பித்தான் செய்கிறேன்.

என் ஒரே குறிக்கோள் மேலே மேலே உயர்ந்து கொண்டே யிருப்பதுதான். அதற்கு அனுகூலமானவற்றை நான் செய்யத் தயார்!''

''சாரு, உனக்கு இருக்கும் ஒரே நண்பன் என்று என்னைக் குறிப்பிட்டாய். அதனால் இவ்வளவுதூரம் பேசுகிறேன். உன் அறிவிடம் நான் வாதாடவில்லை; மனத்திடம் மன்றாடுகிறேன்!''

சாரு வேறு புறம் திரும்பிக்கொண் டாள். ''வாதத்தில் வெல்ல முடியா விட்டால் காலைப் பிடிப்பதுதான் அடுத்த கட்டம்'' என்று அவள் வாய் முணுமுணுத்தது.

''உனக்குப் பிடிக்காததையும் நான் பேசுவதால் என் நட்பு உண்மையானது என்று புரிந்து கொண்டிருக்கிறாய். என் சிநேகத்தை இழந்து விடவும் நீ விரும்ப வில்லை. ஏன்? நீ பெண் என்பதுதான் காரணம். பெண் ஒருத்தியால் கொடி யாகத்தான் இயங்க முடியும். நிமிர்ந்து நிற்கப் பலத்தைக் கொம்பிடம் பெறு வது கொடியின் இயல்பு. நீயும் என் னைச் சார்ந்திருக்கும் லதாதானே, சாரு லதாதானே?''

''பெயரை வைத்துச் சிலேடையாகப் பேசிவிட்டால் ஆயிற்றா? என் முன் னேற்றத்துக்குக் காரணம் என் அறிவு, திறமை. நீங்களல்ல!''

''அறிவை நான் கொடுப்பதாகச் சொல்லவில்லையே? தெம்பை அளிப்ப தாகச் சொன்னேன். நல்லதோ கெட் டதோ எதைச் செய்யவும் பெண்ணுக் குப் பக்க பலம் தேவை. உனக்கு அந்த உள்ளார்ந்த சக்தியைக் கொடுப்பவன் நான். அதனால்தான் நீ சில தவறுகள் செய்யும்போது அவற்றுக்கு நானும் உடந்தையாக இருப்பதாக எனக்குப் படுகிறது. இதை நான் நீடிக்க விட முடியாது, சாரு!''

வேணுகோபால் கீழே இறங்கிக் கதவைச் சாத்தியதும் ''நன்றாக யோசித்துப் பார் சாரு'' என்றான். அவனுடைய இந்தக் கடைசி வேண்டு கோள் கார் உறுமிக் கிளம்பிய சத்தத் தில் அமுங்கிப் போயிற்று.

என்றாலும் சாருலதா யோசிக்காமல் இருக்கவில்லை. 'ஊட்டியில் வேணு என் னைப் பிரிந்து போனதும் நான் ஏன் அழுதேன்? துக்கம் விசாரிக்கப் போன இடத்தில் முதலில் வேணு எங்கே இருக் கிறார் என்று எதற்காகத் தேடினேன்? பக்க பலத்துக்காகவா?' என்று அவள் மனம் எண்ணிப் பார்க்க ஆரம்பித்தது.

(தொடரும்)

---



● ஒரு பாட்ஸ்மன் மற் றொருவரிடம் கேட்டார்: ''ஏனப்பா, இப்படி இடிந்து போய் உட்கார்ந் திருக்கிறாய்?''

மற்றொருவர் சொன் னார்: ம், கேவலம் தொண் ணூற்றொன்பது ரன்க ளில் ''சென்சுரி''யைத் தவற விட்டுவிட்டேன்!



டிருக்கிறது... தோற்றம் 'ரேஷன் அரிசி' அல்ல என்பதைத் தெளிவாக் குகிறது....

● ஓர் ஆட்டக்காரர் பல விதமாக அவுட் ஆகி யும் அம்பயர் 'அவுட்' கொடுக்கவில்லை. எதிர்க் கட்சி காப்டன் அம்பயரை அணுகி, 'இவரை அவுட் டாக்க வேறு வழிகள் உங்களுக்கு ஏதாவது தெரிந்தால் சொல் லுங்கள்' என்றார். 'யாரப்பா அவன் தூக்கத்தைக் கெடுப்ப வன்?' என்று சீறினார் அம்பயர்!

● ''ஆமாம், அந்த ஆட்டக்கார ருக்கு மாலையைப் போட்டு விட்டு ஏதோ பேசிக்கொண்டிருந்தாயே, என்ன பேசினாய்?''

''மாலையின் விலை இரண்டு ரூபா யைக்கேட்டுக்கொண்டிருந்தேன்.''




● ''நான் 'சென்சுரி' போட்டு விட் டேன். தெரியுமா?''

''தெரியாதே, எப்படி?''

''நூறாவது முறையாக 'டக்' அடித்திருக்கிறேன்!''

● ''ஆட்டத்தில் இதெல்லாம் சகஜம். வெற்றி தோல்விகளைக் கண்டு அஞ்சக் கூடாது.''

''அதனால் தான் சொல்கிறேன், நீங்கள் தோற்று விடுங்கள் என்று!''

● ''லஞ்சு''க்குச் சற்றுமுன்னால் ''கமென்டேட்டர்'' கூறியது: பந்தை, அடித்து விட்டார்... மேற்குப் புறமாக பௌண்டரி யைத் தாண்டி ''எம்'' ஸ்டாண்டுக்குப் போய் விட்டது. அங்கே ஒருவர் இலையை விரித்துக் கொண் டிருக்கிறார்... ஆஹா...... புளியோ தரை.... அதில் முந்தி ரிப் பருப்பு போடப்பட்



● ''உன் பையன் கோபு கிரிக் கெட் நன்றாக விளையாடுகி றான் போலிருக்கிறதே?''

''ஆமாம், உனக்கு எப்படித் தெரியும்?''

''கண்ணாடி ஜன்னல்களைப் பார்த்துச் சொல்கிறேன்!''

— கே. வி. முரளி



கார்ன் ப்ராடக்ட்ஸ் பக்குவமுறைப் போட்டியில் பங்கு கொண்டு பரிசு பெறுங்கள்!

எங்கள் விசேஷமான

# சாதா கிறிஸ்துமஸ்

(அனுப்பியவர் : திருமதி வசுதா ஆச்சார்யா, '' வத்சலா '',




# பேக்கிங் பவுடர்

## கொண்டு தயாரிக்கப்பட்டது



கேக்குகள், பிஸ்கோத்துகள், பக்கோடா, பூரி, குலாப்ஜாமுன் ஆகியவற்றை அதி மென்மையாகத் தயாரிக்க உதவுகிறது ரெக்ஸ் பேகிங் பவுடர். சிறிதளவு உபயோகித்தாலே போதும் ரெக்ஸ் பேகிங் பவுடர் அருமையான பொருள்களிலிருந்து மிகுந்த கவனத்துடன பக்குவப் படுத்தப்பட்டது. பேகிங் பவுடர்களில மிகவும் சிறந்தது ரெக்ஸ்.

எல்லா பிரவுன் & போல்ஸன் தயாரிப்புக்களும் (கஸ்டர்டு பவுடர் உள்பட) சைவ உணவுக்குக் குந்தகமற்றது. அவை முட்டை கலவாதவை.



# அத்தியாயம் 15

# காணுமல் போனவள்?

**கா**ல்ஃப் ஆட்டத்தில் முதல் பரிசு பெற்ற தேவ்சந்தைச் சுற்றி நாலு பேர்கூட இல்லே; இரண்டாவது பரிசு பெற்ற சாருலதாவைச் சூழ்ந்து நாற்பது பேர் நின்ருர்கள்! சாருலதா பெண், அழகி என்பதுடன் தயக்கமோ கூச்சமோ இன்றித் தன்னைப் பாராட்ட வருபவர்களுடன் தாராளமாய்க் கைகுலுக்குவாள் என்பதையும் புரிந்து கொண்டிருந்ததால்தான் அப்படி அவளை மொய்த்தனர் என்பது வேணுவுக்குத் தெரிந்திருந்தது. அந்தக் கூட்டத்துக்கு வெளியே நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான் அவன்.

''கங்கிராஜுலேஷன்ஸ் மிஸ் சாருலதா!''

''அப்படிச் சொல்லாதீர்கள், குமார்! சாரு என்று கூப்பிடுங்கள்! 'ஸ்ரீமான் சம்பத்குமார் அவர்களே வணக்கம்!' என்று சொன்னுல் அழகாக இருக்குமா? 'வணக்கம் குமார்' என்ருல் தானே இயல்பாக ஒலிக்கிறது?''

சூழ இருந்தவர்கள் கலகலவென்று சிரித்தார்கள். ''வெல்ஸெட் சாரு!''

இதுதான் சாக்கு என்று சம்பத்குமார் இரண்டாவது தடவையாக அவள் கரத்தைப் பற்றிக் கொண்டான். ''கங்கிராட்ஸ் சாரு!''

தன் கரத்தை அவர்கள் குலுக்கும் போதே அவர்களுடைய குண இயல்புகளையும் புரிந்துகொள்ள முடிவதைச் சாருலதா உணர்ந்தாள். சிலர் அவளைத் தீண்டக் கிடைத்த சந்தர்ப்பத்தை அளவுக்கு அதிகமாகப் பயன்படுத்திக் கொண்டு இரண்டு கரங்களாலும் அவள் கையைப் பற்றி, அவள் தானுகவே அதை விடுவித்துக் கொள்ளட்டும் என்று காத்திருந்தார்கள். வேறு சிலர் கூச்சத்துடன் நாலு விரல்களை நீட்டினுர்கள். அவள் தான் அவர்கள் கரத்தைப் பற்ற வேண்டியிருந்தது. இன்னும் சிலரது பிடியில் ஆத்மார்த்தமான நல்லெண்ணம் பாய்வதைத் தெளிவாக அறிய முடிந்தது. மற்றும் பலர் தொழில் வர்த்தகத் துறையில் அவளது முன்னேற்றத்தால் பாதிக்கப்பட்டவர்களாகப் பொருமையுற்றிருந்ததும் புரிந்தது.

கூட்டத்தினிடையே வழி ஏற்படுத்திக கொண்டு சாரங்கனும், வேணுகோபாலும் அருகருகே நின்ற இடத்துக்கு வந்தாள் சாருலதா. ''ஹல்லோ வேணு! ஆர் யூ நாட் கோயிங் டு கங்கிராஜுலேட் மீ?''

''நீ ஜெயிப்பதில் என்ன அதிசயம் சாரு? எந்தத் துறையில் நுழைந்தாலும் வெற்றி பெறுவது என்பது தான் உனக்கு அன்ருடக் காரியமாகி விட்டதே? நீ என்றைக்காவது எதிலாவது தோற்ருல் அப்போதுதான் உன்னைக் கங்கிராஜுலேட் செய்வதாக இருக்கிறேன்!''

''நான் எதில் தோற்ருலும் நீங்கள் எதிர்பார்க்கிற ஒரு விஷயத்தில் நான் தோற்கப் போவதேயில்லே, வேணு!'' என்ருள் சாருலதா, அதரங்களில் புன்னகை நெளிய. ஆனுல் அவளுடைய கண்களோ விஷமத்தனமாகக் கலகல




வென்று சிரித்தன! ''என்ன சாரங்கன், நீங்கள் எப்போ வந்தீர்கள்?'' என்று கேட்டாள்.

ஏதோ யோசனையாக இருந்தவன் திடுக்கிட்டு, ''என்னையா கேட்டீர்கள்?'' என்ருன். ''மூன்றரை மணி சுமாருக்கு வந்தேன். ரொம்ப லாகவமாக ஆடினீர்கள். ஊட்டியில் இருந்தபோது கால்ஃப் லிங்க்ஸ்ஸுக்கு அடிக்கடி போகும் வழக்கமுண்டு எனக்கு. அதனுல் உங்கள் திறமையை என்னுல் நன்ருக ரசிக்க முடிந்தது. பிரிலியண்ட் ஸ்ட்ரோக்ஸ்!''

''நீங்கள் இங்கேயும் கிளப் மெம்பராக வேண்டும் சாரங்கன். நான் ரெகமண்ட் பண்ணுகிறேன். வேணு

இரண்டாவது கையெழுத்து போடுவார். ஓ.கே.?''

''பேஷாக, வித் பிளஷர்'' என்றான் வேணு.

''அது சரி, உங்களிடம் எனக்குத் தனிமையில் ஒரு முக்கிய விஷயம் பேச வேண்டுமே?'' என்றான் சாரங்கன்.

''நாளைக் காலை வரை காத்திருக்கக் கூடாத காரியமா? இப்போ பரிசளிப்பு விழா நடக்கப் போகிறது; அப்புறம் டின்னர். இரவு நான் சீக்கிரம் படுக்கப் போகும் பழக்கமுள்ளவள் என்பது உங்களுக்குத் தெரியும்.''

''சரி, சாரு! ஐந்து நிமிஷம் கிடைக்குமானால் பாருங்கள். இல்லையென்றால் காலையில் பேசுவோம்.''

''வேணு வாருங்கள்! பரிசளிப்பு விழாவின் போது நீங்கள் முதல் வரிசையில் உட்கார்ந்திருக்க வேண்டும்'' என்றாள் சாருலதா.

''ஐயய்யோ! என்னால் முடியாது'' என்று அவன் மறுத்த மறுகணம் அவள் முகம் வாடிப் போய் விட்டது.



''ஏன்? நான் பரிசு வாங்குவதைப் பார்க்கக் கசப்பாக இருக்கிறதா, உங்களுக்கு?''

''அதற்கு முன்னால் சொற்பொழிவுகளைக் கேட்டாக வேண்டுமே? எங்கேயாவது ஓரமாக உட்கார்ந்தால் போர் அடிக்கும் போது எழுந்து வெளியே போய் விடலாம்; அல்லது பக்கத்தில் இருப்பவருடன் அரட்டை அடிக்கலாம். முதல் வரிசையில் இருந்தால் ஆணி அடித்தாற் போல் ஆடாமல் அசையாமல், பேசாமல் உட்கார்ந்திருக்க வேண்டும், பெரிய மனுஷன் தோரணையில்!''

''தோரணை என்ன? பெரிய மனிதரே தான் நீங்கள்! முதல் வரிசையில் அமர்ந்திருக்கிற பெரிய மனிதர்களிடம் தலா ஆயிரம் ரூபாய் கால்ஃப் கிளப்புக்காக நன்கொடை வசூலிக்கப் போகிறார்கள், இன்றைக்கு. நீங்கள் ஒளிந்து கொண்டால் எப்படி?''

''அது சரி! அப்படியானால் முதல் வரிசையில் உட்கார்ந்துவிட வேண்டியதுதான். ஆயிரம் ரூபாய் என்னிடம் இல்லை என்பதைக் காட்டி, நான் பெரிய மனுஷன் இல்லை என்பதை நிரூபித்துவிட நல்ல சந்தர்ப்பம்!''

மூவரும் மேடையை நோக்கி நகர்ந்தார்கள்.

*   *   *

ஞாயிற்றுக்கிழமை முழுவதையும் கால்ஃப் மைதானத்தில் சுற்றி அலைந்து விளையாடிக் கழித்ததால் சாருலதா மிகவும் களைத்துப் போயிருந்தாள். இல்லாவிட்டால்கூட அவள் வழக்கமாகவே சீக்கிரமாகப் படுத்துக் கனவுகள் ஏதுமற்ற நித்திரையில் ஆழ்ந்துபோகிறவள்தான். எட்டு மணி நேரத்துக்குக் குறையாமல் தூங்கி விடுவாள். தேவையான அளவு ஓய்வு பெற்றால்தான் உடலும் அறிவும் இளமைச் சுறுசுறுப்புடன் பாக்கி நேரத்தில் இயங்கும் என்பதை அறிந்தவள் அவள்.

மறுநாள் காலை அவள் டென்னிஸ் ஆடக் கிளம்பியபோது எதிரே கேட்டைத் திறந்து கொண்டு சாரங்கன் வந்தான்.

''என்ன சாரங்கன், என்ன விசேஷம்?'' என்று கண்டிப்புக் குரலில்



கேட்டு, அவன் வீடு தேடி வந்தது தனக்குப் பிடிக்கவில்லை என்பதைத் தயக்கமின்றிக் காட்டிக் கொண்டாள் சாருலதா.

''ஒரு முக்கியமான சமாசாரம். நேற்றே சொல்ல நினைத்தேன். ஆனால் நீங்கள் நாளை பார்த்துக் கொள்ளலாம் என்று கூறி விட்டீர்கள்.''

''எதுவானாலும் ஆபீஸில் பேசலாமே? பிஸினஸ் விவகாரங்களை வீட்டிலே உட்கார்ந்து விவாதிப்பது எனக்குப் பிடிக்காது.''

''இது ஆபீஸ் விஷயமல்ல; பர்ஸனல் மேட்டர்.''

''பர்ஸனல் மேட்டர் என்றால்....? உங்களைப் பற்றியதா, அல்லது என்னைப் பற்றியதா ?''

''உங்களைப் பற்றிய காரியம்தான். ஆனால் உங்களிடம் ரொம்பவும் மதிப்பு வைத்திருக்கிறேன் என்ற முறையில் நம்மைப் பற்றிய விஷயம் என்று கூடச் சொல்லலாம்.''

வராந்தாவில் போடப்பட்டிருந்த கூடை நாற்காலிகளுள் ஒன்றில் அவனை அமரச் செய்து சாருலதா தானும் உட்கார்ந்தாள். ''சொல்லுங்கள்!''

''நேற்று கால்ஃப் கோர்ஸில் நீங்கள் ஆடிக் கொண்டிருந்தபோது உங்களுடைய ஒவ்வொரு ஸ்ட்ரோக்கையும் கவனிக்க ஒரு கூட்டம் உங்கள் பின்னாலேயே வந்து கொண்டிருந்தது, இல்லையா ?''

''ஆமாம்.''

''அந்தக் கூட்டத்தில் நானும் ஒருவனாய் இருந்தேன்.''

''சரி.''

''அப்போது ஒரு சமயம் எனக்குப் பக்கத்தில் இருந்த இருவர் பேசிக் கொண்டது என் காதில் விழுந்தது.''

# 'ஆஸ்ப்ரோ'

# மட்டுமே மைக்ரோஃபைண்ட் செய்யப்படுகிறது அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக










சாப்பிடும் அளவு:
வயது வந்தவர்கள்:
இரண்டு மாத்திரைகள்
தேவையானால்
மீண்டும் சாப்பிடவும்.
குழந்தைகள்: ஒரு
மாத்திரை அல்லது
உங்கள் டாக்டர்
சொற்படி



மேற்க் கண்டவைகளுக்கு புதிய மைக்ரோ ஃபைண்ட் 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்:
நோவு • தலைவலி • உடல்வலி • ஃப்ளு • ஜுர வேகத்துடன் கூடிய ஜலதோஷம் • முட்டுவலி • தொண்டை அழற்சி • பல்வலி.

புதிய மைக்ரோஃபைண்ட் 'ஆஸ்ப்ரோ' இப்பொழுது கிடைக்கும் அதி நவீனமான வலி நிவாரணியாகும்.

**புதிய மைக்ரோஃபைண்ட்**
**'ஆஸ்ப்ரோ' அதிவேகமாக**
**வலியை வெளியே இழுத்துவிடுகிறது.**

நிக்கோலஸ் ® தயாரிப்பு

(53ம் பக்கத்தில் அதைக் காணலாம்)

''என்ன சொன்னுர்கள்?'' அலட்சியப் புன்னகையுடன் அவள் கேட்டாள்.

'' 'அவள்தானு? நிச்சயம்தானு?' என்று ஒருவன் கேட்டான். 'எனக்குச் சந்தேகமாயிருக்கிறதே' என்ருன்.''

''உம்...?'' சாருலதாவின் முகத்தில் புன்னகை மாறியதைக் கவனித்தான் சாரங்கன். அலட்சியத் தோற்றம் மறைந்து, அவள் வதனம் பாவம் என்ருல் என்ன என்பதையே அறியாத ஒரு சிற்பி வடித்த சிலேயாயிற்று. மிகச் சிரமப்பட்டு அந்த நிலே மாருமல் கவனித்துக் கொண்டாள் சாருலதா.

சாரங்கன் தொடர்ந்தான்: ''அந்த இன்னொருவன், 'எனக்குத் துளிக்கூடச் சந்தேகமில்லே; வேணுமானுல் மற்ருெரு முறை ஃபோட்டோவைப் பார்' என்ருன்.''

''அப்புறம்-?''

''முதலில் பேசியவன் தன் சட்டைப் பையிலிருந்து ஒரு கவரை எடுத்து அதிலிருந்து ஒரு ஃபோட்டோவைப் பாதி தூரம் வெளியே இழுத்துப் பார்த்தான்.''

''நீங்கள் பார்த்தீர்களா படத்தை?''

''ஒரே ஒரு கணம் பார்க்கும் வாய்ப்புக் கிட்டியது, சாரு!''

''என்ன தெரிந்தது ?''

''ஒரு பெண்ணின் உருவம்.''

''எப்படி இருந்தாள் அவள்?''

''கர்நாடக பாணியில் புடவை உடுத்தித் தலேவாரிப் பின்னிக் கொண்டிருந்தாள். மூக்குத்தி, தோடு எல்லாம் அணிந்திருந்தாள்.''

''பிறகு ?''

''உங்களேயும் படத்தையும் அவர்கள் மாறி மாறிப் பார்த்தார்கள்.''

''உம்...?''

''படத்தைக் கவருக்குள் தள்ளிப் பையில் செருகிக் கொண்டு அவர்கள் கிளம்பிவிட்டார்கள். கால்ஃப் ஆட்டத்தில் அவர்களுக்கு அக்கறையில்லே. உங்கள் திறமையைக் காண அவர்கள் வரவில்லே. உங்களேப் பார்க்கத்தான் வந்திருந்தார்கள்!''

''நீங்கள் படத்தைப் பார்த்தீர்கள் அல்லவா ?''

''அவர்கள் தோளுக்கு மேலாக எம்பிப் பார்க்க வேண்டியிருந்தது. படத்தைப் பாதி அளவுதான் கவரை விட்டு வெளியே இழுத்திருந்தார்கள். மறு பாதியில் யார் உருவம் இருக்கிறதோ, தெரியாது.''

''படத்தில் இருந்த பெண்ணுடன் என்னே ஒப்பிட்டுப் பார்த்தார்கள் என்கிறீர்களே, உங்களுக்கு என்ன தோன்றியது? படத்தில் இருந்த பெண் நான்தானு?''

''எனக்கு என்ன நினேப்பதென்று புரியவில்லே. விநாடிப் போதில் என்ன முடிவுக்கு வர முடியும்? படத்தைக் கையில் கொடுத்தால் ஊன்றிப் பார்த்துத் தீர்மானமாகச் சொல்லலாம். அலங்காரத்தைப் பொறுத்த வரையில் உங்களுக்கும் படத்தில் இருந்த பெண்ணுக்கும் சம்பந்தமேயில்லே. ஒருவேளே ரொம்ப நாளேக்கு முன்ைல் எடுக்கப்பட்ட படமாக இருக்கலாம். அதோடு அவர்கள் நடத்தை என் மனத்தைக் குழப்பி விட்டது.''

''யதேச்சையாக நடந்த ஒரு சம்பவத்தை நீங்கள் இந்த அளவுக்கு விவரிப்பதே பெரிய காரியம். அந்த இருவரும் எப்படி இருந்தார்கள்?''

''ஒருவன் தாட்டியாகவும் சற்றுக் குள்ளமாகவும் இருந்தான். இன்னொருவன் நோஞ்சானுகத் தோன்றினுன். இப்போது நினேத்துப் பார்த்தால் எனக்கு லாரல் அண்டு ஹார்டி சினிமா ஞாபகத்துக்கு வருகிறது. ஆனுல் அப்போது அப்படித் தோன்றவில்லே. அழுத்தமான பேர்வழிகள் என்று பட்டது. அப்போது ஏற்பட்ட அதிர்ச்சியிலிருந்து நான் இன்னும் மீளவில்லே.''

''இதில் அதிர்ச்சி அடைய என்ன இருக்கிறது ?''

''நீங்கள் இப்படிக் கேட்பது எனக்கு மேலும் அதிர்ச்சி அளிக்கிறதே !''

சாரு சிரித்தாள். ''யாரோ இருவர் தங்கள் குடும்பத்தில் காணுமல் போன ஒருத்தியைத் தேடிக் கொண்டிருக்கிருர்கள். அப்படிக் காணுமல் போனவள் நானுக இருக்கலாமோ என்று சந்தேகிக்கிருர்கள், இவ்வளவுதானே?''

''அவ்வளவுதான்.''

''வந்து கேட்டால், அவர்கள் வீட்டில் காணுமல் போன பெண் நான் இல்லே என்று சொல்லி அனுப்பி விட வேண்டியது.''

''சரி....''

''என்ன இழுத்தாற்போல் பேசுகிறீர்கள் ? உங்களுக்கு நம்பிக்கை ஏற்படவில்லையா ? என்னைப் பார்த்தால் காணாமல் போன பெண் போலவா தோன்றுகிறது உங்களுக்கு?''

''உரக்கப் பேசாதீர்கள்! உங்கள் அப்பா காதில் விழுந்தால் உதைக்கப் போகிறார் !''

''உதைக்கிற அளவு அவருக்குத் தெம்பு கிடையாது. அதிகபட்சம் கையில் இருக்கும் விஷ்ணு சகஸ்ரநாமம் புத்தகத்தை உங்கள்மீது விட்டெறிவார், நல்ல காலிகோ பைண்டு !''

''ஆகா, ஆதி சங்கரரின் பாஷ்யத்துடன் கூடியதுதானே ? கொடுத்து வைத்திருக்க வேண்டுமே!'' சாரங்கனின் இயல்பான கலகலப்பு சுபாவம் இப்படிப் பேசினாலும் அது அதிக நேரம் நீடிக்கவில்லை. ''ஆனாலும் எனக்குக் கவலையாகத்தான் இருக்கிறது, சாரு! உன் தம்பியை வேறு நாலு நாட்களாய், தேடிக் கொண்டிருக்கிறோமா; அவனுக்கும் இவர்களுக்கும் ஏதாவது சம்பந்தம் இருக்குமோ என்று....''

''சீச்சீ ! என்ன சொல்கிறீர்கள். அப்படிப்பட்ட எண்ணங்களை உடனே துடைத்து எறியுங்கள். குணா கோபித்துக் கொண்டு போகலாம். ஆனால் எனக்குத் தீங்கு ஏதும் நினைக்கமாட்டான். மயில் இறகினால்கூட என்னை அடிக்க அவனுக்கு மனசு வராது !''

''ஏதோ தோன்றியது. சொன்னேன். தப்பாக நினைக்காதீர்கள் !''

''மேலும் சாரங்கன், குணா நேற்று ராத்திரி ஃபோன் செய்து என்னை கங்கிராஜுலேட் பண்ணினான், கால்ஃபில் பரிசு பெற்றதற்காக. அவனை ஃபோனை வைக்க விடாமல் பேசினேன். ஐந்து நிமிஷம்கூட ஆகியிராது, அவன் எங்கே ரூம் எடுத்துத் தங்கியிருக்கிறான் என்பதைச் சொல்ல வைத்து விட்டேன்!''

''பாசத்துக்கு அவ்வளவு சக்தி இருக்கிறது, பாருங்கள் !''

'' இன்னும் ஒரு வாரம், பத்து நாளைக்குள் அவனை மறுபடியும் இந்த வீட்டுக்கே வரவழைத்துவிட முடியும் என்ற நம்பிக்கையும் எனக்கிருக்கிறது.''

'' சரி, அப்படியானால் குணாவை இனி நான் தேட வேண்டாம்; ஒரு வேலை மிச்சம்.''

சாருலதா எழுந்தாள். ''நேரமாகிறது; வேணுகோபால் டென்னிஸ் கோர்ட்டில் காத்திருப்பார்.''

காரில் ஏறப் போன சாருலதா டென்னிஸ் மட்டையைப் பின் ஸீட்டில் போட்டு விட்டுத் தயங்கித் திரும்பினாள். ''ஆமாம்; அந்த இருவரும் தமிழில்தான் பேசினார்களா?'' என்று சகஜமாகக் கேட்பதுபோல் கேட்டாள்.

சாரங்கன் திடுக்கிட்டு விழித்துக் கொண்டவன் போல் நிமிர்ந்தான். '' ஏன் அப்படிக் கேட்கிறீர்கள் ? அவர்கள் தமிழில் பேசி இருக்க மாட்டார்கள் என்று எதனால் சந்தேகிக்கிறீர்கள் ?''

''இதென்ன இப்படி மிரள்கிறீர்கள்?''

''மிரள்வதற்குக் காரணம் இருப்பதால்தான். அவர்கள் தமிழில் பேசவில்லை, சாரு !''

''பிறகு ?''

''ஹிந்தியில் பேசினார்கள்!''

''உங்களுக்கு ஹிந்தி தெரியுமா ?''

''பிராதமிக் வரை படித்தேன். ஆனால் பரீட்சை எழுதவில்லை.''

''நீங்கள் ஏதாவது அரைகுறையாகப் புரிந்துகொண்டு மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் முடிச்சுப் போடுகிறீர்களோ என்னவோ ?''

''அவர்கள் பேசியதே சொற்பம். அதைப் புரிந்துகொள்வது ஒன்றும் சிரமமாக இல்லை. மேலும் அவர்கள் பேச்சைவிட நடத்தையே அதிகமான விஷயங்களை எனக்குப் புரிய வைத்தது.''

''சாரங்கன் ! டோண்ட் வொர்ரி ! இந்த நிகழ்ச்சியை அடியோடு மறந்து விடுங்கள். தாங்கள் தவறு செய்து விட்டதை உணர்ந்து அவர்கள் நமக்குத் தொந்தரவு கொடுக்காமலிருந்து விடலாம். அப்படியே அவர்கள் என்னைத் தேடி ஆபீசுக்கு வந்தாலும் நீங்களே பார்த்து நல்ல வார்த்தையாகச் சொல்லி அனுப்பி விட்டால் தீர்ந்தது.''

''ஆபீசுக்கு வராமல் இங்கே வீட்டுக்கு அவர்கள் வந்து சேர்ந்தால் ?''

''கூர்க்கா எதற்கு இருக்கிறான் ?'' என்று கேட்டுச் சிரித்தபடியே சாருலதா காரைக் கிளப்பினாள்.

அது கண்ணுக்கு மறையும் வரை பார்த்துக் கொண்டிருந்த சாரங்கனுக்குச் சாரு அந்த நிகழ்ச்சியை அலட்சியப்படுத்தி ஒதுக்குவதாகத் தோன்றவில்லை; அலட்சியப்படுத்தி ஒதுக்குவதுபோல் நடிப்பதாகப்பட்டது.

* * *

**பா**ரத் இன்ஷூரன்ஸ் கம்பெனியின் போர்ட் ஆஃப் டைரக்டர்ஸ் மீட்டிங்கை முடித்துக் கொண்டு பதினொன்றரை மணி சுமாருக்குக் காரியாலயத்துக்கு வந்து சேர்ந்தாள் சாருலதா.

''ஃபிளையிங் கிளப் செக்ரட்டரி ஃபோன் செய்தார்; உங்களைப் பார்க்க

வேண்டுமாம்'' என்றான் சாரங்கன், அன்றையத் தபால்களுடன் வந்தபடியே.

''என்ன விசேஷம் ?''

''புதிதாக ஒரு டிரெயினிங் விமானம் வாங்கி யிருக்கிறார்களாம். அதை வெள்ளோட்டம் விடுவது நீங்களாகத் தான் இருக்க வேண்டும் என்றார். உங்களுக்குப் பைலட் லைசென்ஸ் உண்டு என்பதே எனக்கு இப்போதுதான் தெரியும் !''

''விமானம் செலுத்தப் பழகிய போது நான் ஒரு ஹாபி என்ற அளவில்தான் பயிற்சி பெற்றேன். ஆனால் ஒவ்வொரு சமயம் அதுவே பெரிய உதவியாக இருக்கலாம். பம்பாய், தில்லி என்று அடிக்கடி போக நேர்கிறதே. எப்பவாவது ஸீட் இல்லை என்று சொல்லி விட்டால் அவசரத் துக்கு ஒரு டக்கோட்டாவை சார்ட்டர் பண்ணிப் பறந்துவிடலாம் இல்லையா ?''

''உங்களுக்கு ஸீட் இல்லை என்று ஐ. ஏ. ஸி. யில் எவன் சொல்லுவான்? கெரவெல்லில் பறந்த பிறகு டக்கோட்டாவைக் கையாள்வது என்றால் கட்டை வண்டியை ஓட்டுவது போலல்லவா இருக்கும் ?''

''அது சரி, இப்போ என்னை ரேக்ளா வண்டியைத்தானே வெள்ளோட்டம் விடச் சொல்லி அழைக்கிறார்கள்? புஷ்பக்கா, டைகர்மாத்தா?''

''புஷ்பக்தான்— ஹால் தயாரிப்பு.''

''எவ்வளவு டொனேஷன் எதிர் பார்க்கிறார்கள் ?''

''அதை எப்படி ஊகித்தீர்கள் ?''

''என்னைப் போல் பணம் படைத்தவர்களைத் தலைமை தாங்கு, வெள்ளோட்டம் விடு, திறந்து வை என்றெல்லாம் சொல்லி அழைத்தால் அது பெரும்பாலும் நன்கொடையை எதிர் பார்த்துத்தான் இருக்கும். சாரங்கன், இன்றே இரண்டாயிரத்து ஐந்நூறுக்கு ஒரு செக் அனுப்பி விடுங்கள். பணம் கைக்கு வந்து சேர்ந்த பிறகும் வெள்ளோட்டத்துக்கு நானேதான் வரவேண்டும் என்று வற்புறுத்தினார்கள் என்றால் அப்புறம் பார்த்துக் கொள்ளலாம்.''

காரியாலய அலுவல்களில் அவள் கருத்தைப் பெற வேண்டிய அம்சங்கள் முடிந்ததும் சாரங்கன் எழுந்து தன் அறைக்குப் போக நடந்தான்.

கதவருகே போன அவனைக் கூப்பிட்டாள் அவள். அவன் திரும்பியபோது அவள் அவனுக்குத் தன் முதுகைக் காட்டி ஜன்னல் வழியே மவுண்ட் ரோடில் பார்வையைச் செலுத்திக் கொண்டிருந்தாள். ''அவர்கள் வந்தார்களா ?'' என்று கேட்டாள்.










சாரங்கனின் முகத்தில் விசனத்தின் சாயல் படர்ந்தது. ''அவர்கள் என்றால்?''

''பத்து நாளைக்கு முன்னால் காலஃப் க்கோர்ஸில் பார்த்ததாகச் சொன்னீர்களே, அவர்கள்தான்!''

''அன்று ரொம்ப அலட்சியமாகப் பேசினீர்களே, இன்று ஏன் விசாரிக்கிறீர்கள்?''

''சும்மாத்தான்; மர்மக் கதை ஒன்றைப் பாதி படித்துவிட்டு நிறுத்தி விட முடிகிறதா? முடிவைத் தெரிந்து கொள்ளும் ஆவல்!''

''வந்தார்கள்.'' — பரிவும் அனுதாபமும் மிகக் கூறினான் அவன்.

''வந்தார்களா!'' வந்தது அவளுக்குப் பிடிக்கவில்லை என்பதைத் தொனி உணர்த்தியது.

''ஆமாம்.''

''நீங்கள் என்ன சொன்னீர்கள்?''

''நீங்கள் என்ன சொல்லச் சொன்னீர்களோ, அதைத்தான்! வேறு யாரையோ நினைத்துக் கொண்டு இங்கே வந்திருக்கிறீர்கள். நீங்கள் தேடும் பெண் சாருலதா இல்லை என்றேன்.....''

''திருப்தி அடைந்து திரும்பி விட்டார்களா?''

''இல்லை! 'நாங்கள் தவறு செய்யவில்லை. சரியான இடத்துக்குத்தான் வந்திருக்கிறோம்' என்றார்கள்.''

''என்னிடம் என்ன காரியம் ஆக வேண்டுமாம் அவர்களுக்கு?''

''அதை அவர்கள் சொல்லவில்லை; உங்களை நேரில் தனிமையில் சந்தித்துப் பேச வேண்டும் என்றார்கள்.''

''ஒரு காரியமுமில்லாமல் சும்மா வருகிறவர்களிடம் அரட்டை அடித்துக் கொண்டிருக்க எனக்கு நேரமில்லை என்று சொல்லி யிருப்பீர்கள்!''

''சொன்னேன்.''

''அதைக் கேட்டுக் கொண்டு அவர்கள் போய் விட்டார்கள்; முடிந்தது கதை!'' சாருலதா ஜன்னல் பக்கமிருந்து மேஜையின் அருகே வந்தாள் ஒரு தீர்மானத்தோடு.

''கதை முடியவில்லை, சாரு! இப்போதுதான் ஆரம்பமாகி யிருக்கிறது! அவர்கள் மறுபடியும் வருவோம் என்றார்கள். அவர்களைப் பார்க்க நீங்கள் சம்மதம் அளிக்கும் வரை திரும்பத் திரும்ப வருவார்களாம்.''

அவள் வலுவிழந்தவள் போல் மெல்ல நாற்காலியில் அமர்ந்தாள்.

''அடிக்கடி வந்து தொந்தரவு கொடுப்பது என்று அவர்கள் ஆரம்பித்தால் நீங்கள் போலீஸைக் கூப்பிட வேண்டியதுதான்!''

''நான், உங்கள் நிலையில் இருந்தால் போலீஸைக் கூப்பிடுமுன் ஒரு தடவைக்கு இரண்டு தடவையாக யோசித்துச் செய்வேன்.''

மேஜை மேல் எதையோ தேடுவது போல் பாவனை செய்து, குனிந்த தலை நிமிராமல் சாருலதா கேட்டாள்: ''எதனால் அப்படிச் சொல்கிறீர்கள்?''

''அவர்கள் கூறிய விஷயம், அப்படி என்னை வைக்கிறது.''

''ஓ! அப்படியானால் அவர்கள் இன்னும் ஏதேதோ உங்களிடம் சொல்லி இருக்கிறார்கள்.''

''ஆமாம்.''

சாருலதா கோபத்துடன் எழுந்து மேஜையைக் குத்தியபடி கத்தினாள்: ''சாரங்கன்! கெஞ்ச வேண்டுமா நான்? முழுவதையும் சொல்லித் தொலைக்கிறதுதானே?''

''தயக்கத்துக்குக் காரணம் இருக்கிறது சாரு! என் பெருமதிப்புக்கும் மரியாதைக்கும் உரிய உங்களுக்கு ஏதாவது தீங்கு நேரலாமோ என்று நினைத்துப் பார்க்கவே எனக்குக் கஷ்டமாக இருக்கிறது.''

''பரவாயில்லை, சொல்லுங்கள் சாரங்கன்!'' அதட்டினாள் அவள். அவள் உடம்பெல்லாம் நடுங்கிக் கொண்டிருந்தது.

''அவர்கள்.... அவர்கள்...''

''உம்....'' காலால் தரையை உதைத்தாள் அவள், பொறுமை இழந்து.

''சாரு! அமைதியாக இருங்கள். மனத்தைத் திடமாக வைத்துக் கொள்ளுங்கள். அந்த இருவரும், புனிதமான கங்கை நதிக் கரையில் பாவம் புரிய யாராவது நினைப்பார்களா? என்று உங்களைக் கேட்கச் சொன்னார்கள். இந்தக் கேள்வியை உங்கள் காதில் போட்டுவிட்டால் அப்புறம் அவர்களைச் சந்திக்க நீங்கள் உடனே சம்மதிப்பீர்களாம்!''

சாருலதா மேஜையில் கைகளை மடித்து வைத்து முகத்தை அவற்றில் பதித்து விம்மி விம்மி அழத் தொடங்கி விட்டாள்.

பிரமித்துப் போய்ச் சற்று நேரம் நின்ற சாரங்கன் பிறகு, அவளைச் சமாதானப்படுத்துவதுகூட அவளுக்குப் பிடிக்காது என்பதைத் தெரிந்து கொண்டிருந்தானதனால் ஒன்றும் பேசாமல் அறையை விட்டு வெளியேறினான்.

# சாருலதா

## கி.ராஜேந்திரன்



### அத்தியாயம் 16

## முடிவு எப்போது?

மூன்று தனித் தனி பாங்குகளிலிருந்து வெவ்வேறு தேதிகளில் ஐயாயிரம், மூவாயிரம், இரண்டாயிரம் என்று பழைய, பழகிய நூறு ரூபாய் நோட்டுக்களாகப் பார்த்து வாங்கிக் கொண்டு வந்து 'கொடுத்தான் சாரங்கன். சாருலதா பத்தாயிரம் ரூபாயையும் வாங்கித் தனது மேஜையின் இரண்டாவது டிராயரில் வைத்துப் பூட்டினாள். ஒரு வாரம் கழித்து அவள் எதையோ எடுக்கக் குறிப்பிட்ட அந்த டிராயரைத் திறந்த போது பணம் அதில் இல்லை என்பதைக் கவனித்தான் சாரங்கன். இடையில் இரண்டு தடவை அந்த லாரல் அண்டு ஹார்டி ஆசாமிகள் வந்த போது அவள் உத்தரவு பெற்று அவர்களை அவள் அறைக்கு அழைத்துப் போயிருந்தான் சாரங்கன். அவளிடம் தனிமையில் பேச அவர்கள் விரும்பினார்கள். அதற்கு அவள் சம்மதம் அளித்தாள். பத்தாயிரம் ரூபாய் பணமும் அவர்களிடம்தான் போய்ச் சேர்ந்திருக்கும் என்பதில் சாரங்கனுக்குச் சந்தேகமே இல்லை. ரசீது ஏதும் தரப்படவில்லை. அவன் மனம் ரொம்பவும் வேதனையுற்றது. ஆனால் சாருலதாவோ முன்னைக்கிப்போது கவலையற்றவளாகவும் உற்சாகம் மிகுந்தவளாயும் காணப்பட்டாள்.

''சாரங்கன்! வாட்ச் பாக்டரி நிறுவ உதவிய நமது ஜப்பானிய நண்பர்களுக்கு அவர்கள் தாய்நாடு திரும்பும் முன்னர் ஒரு 'பார்ட்டி' கொடுக்க வேண்டாமா?'' என்று கேட்டாள் அவள்.

''கனிமராவில் ஏற்பாடு செய்யட்டுமா டின்னருக்கு? அடுத்த சனிக்கிழமை இரவு வைத்துக் கொள்ளலாம்.''

''அன்று வேறு எங்கேஜ்மெண்ட் ஏதுமில்லையே, எனக்கு?''

''இல்லை, டைரியைப் பார்த்துவிட்டேன். முக்கியமாக அழைக்கப்பட்ட வேண்டியவர்களின் லிஸ்ட் தயாரித்து எடுத்து வருகிறேன். ஏதாவது விட்டுப் போயிருந்தால் சேர்த்து விடுங்கள்.''

''ஓ. கே.!'' என்ற சாருலதா, மேஜை மேல் அவள் கையெழுத்துக்குத் தயாராயிருந்த கடிதங்கள் மீது பார்வையைச் செலுத்தினாள்.

'காரியம் முடிந்தது; சாரங்கன் போகலாம்' என்று அவள் இப்படி சூசகமாக அறிவித்துவிட்ட போதிலும் அவன் நகரவில்லை; நின்றான்.

''மஹிபாலும் சந்திரபாலும் மறுபடியும் வந்தால் என்ன சொல்ல?''

படித்துக் கொண்டிருந்த கடிதத்திலிருந்து கவனத்தைத் திருப்பி, சாரு அவனைக் கடுமையாக நோக்கினாள். ''நீங்கள் இன்னும் இங்கேதான் இருக்கிறீர்களா?'' என்று கேட்டவள் பின்னால் சாய்ந்து, காலால் தரையை உந்தினாள். நாற்காலி சுழன்றது. அவள் பார்வை ஜன்னல் பக்கம் திரும்பியது. ''அவர்கள் இனி வர மாட்டார்கள்'' என்றாள்.

''எதனால் அவ்வளவு நிச்சயமாகச் சொல்லுகிறீர்கள்?''

''சாரங்கன்! ஐ டோண்ட் லைக் டு டிஸ்கஸ் தி மேட்டர்!''

''நீங்கள் அதைப் பற்றி விவாதிக்க விரும்பாமல் இருக்கலாம். நடந்ததை மறந்து கூடப் போய் விடலாம். ஆனால் மஹிபாலும் சந்திரபாலும் சும்மா இருப்பார்களா என்பது சந்தேகம். அவர்கள் கைக்குப் போய்ச் சேர்ந்த பத்தாயிரம் ரூபாய் திருப்தியை

உண்டாக்காது; நெய்யாக உருகி ஆசைத் தீயை வளர்க்கும்.''

''ஆசைத் தீயைப் பற்றி நமக்குக் கவலை இல்லை, சாரங்கன்! அசல் தீயில் அந்தப் புகைப்படம் சாம்பலாகி விட்டது! பணம் கேட்க இனி அவர்களுக்கு வாய் வராது!''

''படத்தைக் கொடுத்துவிட்டார்களா, உங்களிடம்?''

''நெகடிவுடன் சேர்த்துத்தான். வாங்கி, நானே என் கைப்படக் கொளுத்தி விட்டேன்!''

''எனக் கென்னமோ இன்னமும் யோசனையாகத்தான் இருக்கிறது.''

''சாரங்கன்! பொழுது விடிந்த பிறகு ஆக வேண்டிய காரியங்களைப் பார்க்காமல் இரவு கண்ட பயங்கரச் சொப்பனத்தைப் பற்றியே யாராவது நினைத்துக் கவலைப்பட்டுக் கொண்டிருப்பார்களா?''

வேலையைக் கவனிக்காமல் மேலும் அங்கே நிற்பது உசிதமில்லை என்று புரிந்ததால் சாரங்கன் சென்றான்.

அவன் அப்பால் போய் ஐந்து நிமிஷங்களில் டெலிபோனில் வில்லியின் குரல் ஒலித்தது. ''மஹிபாலும் சந்திரபாலும் உங்கள் அறைக்கு வந்து கொண்டிருக்கிறார்கள்'' என்றாள் அவள்.

வடதுருவத்தில் செய்யப்பட்ட பனிக் கட்டி பொம்மையாக உறைந்து போனாள் சாருலதா.

அதிர்ச்சியைச் சமாளித்துக்கொண்டு பேசும் சக்தியைப் பெற்றதும் அவள் வில்லியைச் சாடினாள். ''எதற்கு அவர்களை இங்கே அனுப்புகிறாய், என் அனுமதி இல்லாமல்? சாரங்கனைப் பார்க்கச் சொல்கிறதுதானே?''

''நான் சொன்னேன் சாரு!'' வில்லியின் குரல் நடுங்கியது. '''சற்று உட்காருங்கள்' என்றால்கூடக் கேட்க வில்லை அவர்கள். 'எப்போது வேணுமானாலும் நாங்கள் வரலாம் போகலாம் என்று சாருலதா அனுமதி கொடுத்திருக்கிறாள்' என்றார்கள். அப்படிக் கூறியபடியே உன் அறையை நோக்கி நடந்து விட்டார்கள்.''

''நான்ஸென்ஸ்!'' என்றாள் சாருலதா ஆத்திரத்துடன். அதற்குள் கதவு திறக்கப்பட்டது. ''ரிஸப்ஷனிஸ்டைக் கோபிக்காதே, சாரு! அவள் பேரில் தப்பில்லை'' என்றான் மஹிபால்.

''தவறு உன்னுடையதுதான் சாரு!'' என்றான் சந்திரபால். ''நாங்கள் எப்போது வேணுமானாலும் வந்து போகலாம், தடை செய்ய வேண்டாம் என்று நீ ரிஸப்ஷனில் சொல்லி



வைத்து விட்டால் நாங்களும் அநாகரிகமாக நடந்து கொள்ள நேராது.''

''எக்ஸ்கியூஸ் மீ, சாரு!'' என்றாள் லில்லி, ஃபோனில். ''நான் எவ்வளவோ முயன்று பார்த்தேன். அவர்கள் பிடிவாதமாகவும் முரட்டுத்தனமாகவும் நடந்து கொண்டார்கள். எனக்குப் பயமாயிருந்தது. சாரங்கனை உடனே உங்கள் ரூமுக்கு அனுப்பிவைக்கிறேன்.''

''வேண்டாம்'' என்றாள் சாருலதா. ''அவர் இனி இங்கே வந்து சாதிக்கப் போவது ஒன்றுமில்லை.'' —ஃபோனை வைத்துவிட்டு நீண்ட துயரப் பெருமூச்சுடன் அவள் நிமிர்ந்தாள். தனது கலவரத்தையோ வேதனையையோ காட்டிக் கொள்ளாமல் அவர்களை ஏறிட்டுப் பார்த்தாள். ''மறுபடியும் எதற்காக வந்தீர்கள்?''

''வந்தவர்களை 'வா' என்று அழைப்பதில்லையா சாரு?'' என்றான் ஒருவன்.

''உட்காருங்கள் என்று சொல்லக் கூடாதா?'' என்றான் மற்றவன்.



உண்டாககாது; நெய்யாக உருகி ஆசைத் தீயை வளர்க்கும்.''

''ஆசைத் தீயைப் பற்றி நமக்குக் கவலை இல்லை, சாரங்கன்! அசல் தீயில் அந்தப் புகைப்படம் சாம்பலாகி விட்டது! பணம் கேட்க இனி அவர்களுக்கு வாய் வராது!''

''படத்தைக் கொடுத்துவிட்டார்களா, உங்களிடம்?''

''நெகடிவுடன் சேர்த்துத்தான். வாங்கி, நானே என் கைப்படக் கொளுத்தி விட்டேன்!''

''எனக் கென்னமோ இன்னமும் யோசனையாகத்தான் இருக்கிறது.''

''சாரங்கன்! பொழுது விடிந்த பிறகு ஆக வேண்டிய காரியங்களைப் பார்க்காமல் இரவு கண்ட பயங்கரச் சொப்பனத்தைப் பற்றியே யாராவது நினைத்துக் கவலைப்பட்டுக் கொண்டிருப்பார்களா?''

வேலையைக் கவனிக்காமல் மேலும் அங்கே நிற்பது உசிதமில்லை என்று புரிந்ததால் சாரங்கன் சென்றான்.

அவன் அப்பால் போய் ஐந்து நிமிஷங்களில டெலிபோனில் லில்லியின் குரல் ஒலித்தது ''மஹிபாலும் சந்திரபாலும் உங்கள் அறைக்கு வந்து கொண்டிருக்கிறார்கள்'' என்றாள் அவள். வடதுருவத்தில் செய்யப்பட்ட பனிக் கட்டி பொம்மையாக உறைந்து போனாள் சாருலதா.

அதிர்ச்சியைச் சமாளித்துக்கொண்டு பேசும் சக்தியைப் பெற்றதும் அவள் லில்லியைச் சாடினாள். ''எதற்கு அவர்களை இங்கே அனுப்புகிறாய், என் அனுமதி இல்லாமல்? சாரங்கனைப் பார்க்கச் சொல்கிறதுதானே?''

''நான் சொன்னேன் சாரு!'' லில்லியின் குரல் நடுங்கியது. '''சற்று உட்காருங்கள்' என்றால்கூடக் கேட்க வில்லை அவர்கள். 'எப்போது வேணுமானாலும் நாங்கள் வரலாம் போகலாம் என்று சாருலதா அனுமதி கொடுத்திருக்கிறாள்' என்றார்கள். அப்படிக் கூறியபடியே உன் அறையை நோக்கி நடந்து விட்டார்கள்.''

''நான்ஸென்ஸ்!'' என்றாள் சாருலதா ஆத்திரத்துடன். அதற்குள் கதவு திறக்கப்பட்டது. ''ரிஸப்ஷனிஸ்டைக் கோபிக்காதே, சாரு! அவள் பேரில் தப்பில்லை'' என்றான் மஹிபால்.

''தவறு உன்னுடையதுதான் சாரு!'' என்றான் சந்திரபால். ''நாங்கள் எப்போது வேணுமானாலும் வந்து போகலாம், தடை செய்ய வேண்டாம் என்று நீ ரிஸப்ஷனில் சொல்லி





வைத்து விட்டால் நாங்களும் அநாகரிகமாக நடந்து கொள்ள நேராது.''

''எக்ஸ்கியூஸ் மீ, சாரு!'' என்றாள் லில்லி, ஃபோனில். ''நான் எவ்வளவோ முயன்று பார்த்தேன். அவர்கள் பிடிவாதமாகவும் முரட்டுத்தனமாகவும் நடந்து கொண்டார்கள். எனக்குப் பயமாயிருந்தது. சாரங்கனை உடனே உங்கள் ரூமுக்கு அனுப்பிவைக்கிறேன்.''

''வேண்டாம்'' என்றாள் சாருலதா. ''அவர் இனி இங்கே வந்து சாதிக்கப் போவது ஒன்றுமில்லை.'' —ஃபோனை வைத்துவிட்டு நீண்ட துயரப் பெருமூச்சுடன் அவள் நிமிர்ந்தாள். தனது கலவரத்தையோ வேதனையையோ காட்டிக் கொள்ளாமல் அவர்களை ஏறிட்டுப் பார்த்தாள். ''மறுபடியும் எதற்காக வந்தீர்கள் ?''

''வந்தவர்களை 'வா' என்று அழைப்பதில்லையா சாரு?'' என்றான் ஒருவன்.

''உட்காருங்கள் என்று சொல்லக் கூடாதா?'' என்றான் மற்றவன்.



உண்டாக்காது; நெய்யாக உருகி ஆசைத் தீயை வளர்க்கும்.''

''ஆசைத் தீயைப் பற்றி நமக்குக் கவலை இல்லை, சாரங்கன்! அசல் தீயில் அந்தப் புகைப்படம் சாம்பலாகி விட்டது! பணம் கேட்க இனி அவர்களுக்கு வாய் வராது!''

''படத்தைக் கொடுத்துவிட்டார்களா, உங்களிடம்?''

''நெகடிவுடன் சேர்த்துத்தான். வாங்கி, நானே என் கைப்படக் கொளுத்தி விட்டேன்!''

''எனக்கென்னமோ இன்னமும் யோசனையாகத்தான் இருக்கிறது.''

''சாரங்கன்! பொழுது விடிந்த பிறகு ஆக வேண்டிய காரியங்களைப் பார்க்காமல் இரவு கண்ட பயங்கரச் சொப்பனத்தைப் பற்றியே யாராவது நினைத்துக் கவலைப்பட்டுக் கொண்டிருப்பார்களா?''

வேலையைக் கவனிக்காமல் மேலும் அங்கே நிற்பது உசிதமில்லை என்று புரிந்ததால் சாரங்கன் சென்றான்.

அவன் அப்பால் போய் ஐந்து நிமிஷங்களில டெலிபோனில் லில்லியின் குரல் ஒலித்தது. ''மஹிபாலும் சந்திரபாலும் உங்கள் அறைக்கு வந்து கொண்டிருக்கிறார்கள்'' என்றாள் அவள். வடதுருவத்தில் செய்யப்பட்ட பனிக் கட்டி பொம்மையாக உறைந்து போனாள் சாருலதா.

அதிர்ச்சியைச் சமாளித்துக்கொண்டு பேசும் சக்தியைப் பெற்றதும் அவள் லில்லியைச் சாடினாள். ''எதற்கு அவர்களை இங்கே அனுப்புகிறாய், என் அனுமதி இல்லாமல்? சாரங்கனைப் பார்க்கச் சொல்கிறதுதானே?''

''நான் சொன்னேன் சாரு!'' லில்லியின் குரல் நடுங்கியது. '''சற்று உட்காருங்கள்' என்றால்கூடக் கேட்கவில்லை அவர்கள். 'எப்போது வேணுமானாலும் நாங்கள் வரலாம் போகலாம் என்று சாருலதா அனுமதி கொடுத்திருக்கிறாள்' என்றார்கள். அப்படிக் கூறியபடியே உன் அறையை நோக்கி நடந்து விட்டார்கள்.''

''நான்ஸென்ஸ்!'' என்றாள் சாருலதா ஆத்திரத்துடன். அதற்குள் கதவு திறக்கப்பட்டது. ''ரிஸப்ஷனிஸ்டைக் கோபிக்காதே, சாரு! அவள் பேரில் தப்பில்லை'' என்றான் மஹிபால்.

''தவறு உன்னுடையதுதான் சாரு!'' என்றான் சந்திரபால். ''நாங்கள் எப்போது வேணுமானாலும் வந்து போகலாம், தடை செய்ய வேண்டாம் என்று நீ ரிஸப்ஷனில் சொல்லி



வைத்து விட்டால்! நாங்களும் அநாகரிகமாக நடந்து கொள்ள நேராது.''

''எக்ஸ்கியூஸ் மீ, சாரு!'' என்றாள் லில்லி, ஃபோனில். ''நான் எவ்வளவோ முயன்று பார்த்தேன். அவர்கள் பிடிவாதமாகவும் முரட்டுத்தனமாகவும் நடந்து கொண்டார்கள். எனக்குப் பயமாயிருந்தது. சாரங்களை உடனே உங்கள் ரூமுக்கு அனுப்பிவைக்கிறேன்.''

''வேண்டாம்'' என்றாள் சாருலதா. ''அவர் இனி இங்கே வந்து சாதிக்கப் போவது ஒன்றுமில்லை.'' —ஃபோனை வைத்துவிட்டு நீண்ட துயரப் பெருமூச்சுடன் அவள் நிமிர்ந்தாள். தனது கலவரத்தையோ வேதனையையோ காட்டிக் கொள்ளாமல் அவர்களை ஏறிட்டுப் பார்த்தாள். ''மறுபடியும் எதற்காக வந்தீர்கள்?''

''வந்தவர்களை 'வா' என்று அழைப்பதில்லையா சாரு?'' என்றான் ஒருவன்.

''உட்காருங்கள் என்று சொல்லக் கூடாதா?'' என்றான் மற்றவன்.



அவள் அழைக்காமலே வந்தவர்கள் அவள் உபசரிக்காது போனாலும் ஸோபா செட்டை நோக்கி நடந்து அமர்ந்தார்கள். கால் மேல் கால் போட்டு நன்றாகச் சாய்ந்து கொண்டார்கள்.

''ஏன், சாரு? விஸ்கி அண்டு சோடா, ஜின் அண்டு டானிக் எல்லாம் உன் நண்பர்களுக்குக் கொடுத்து உற்சாகப்படுத்துவாயாமே? நாங்கள்கூட உன் நண்பர்கள்தானே!''

''வோட்காதான் எனக்கு வேண்டும், இருக்கிறதல்லவா?''

ஸோபாவின் எதிரே மேஜை மேலிருந்த, தந்த வேலைப்பாடுகளுடன் கூடிய அலங்காரமான பெரிய பெட்டி நிறைய சிகரெட்டுகள் இருந்தன. பெட்டியைத் திறந்து விலை உயர்ந்த சிகரெட்டுக்களை ஆளுக்கொன்றாய்ப் பற்ற வைத்துக் கொண்டதுடன் சட்டைப் பாக்கெட்டுக்களையும் நிரப்பிக் கொண்டார்கள்.

சாருலதா அமைதியாகக் கேட்டாள்: ''எவ்வளவு பணம் வேண்டும், உங்களுக்கு?''

''இப்போதைக்கு இருபதாயிரம் ரூபாய் இருந்தால் போதும்.''

''பத்து நாட்களுக்கு முன்னால் தானே பத்தாயிரம் கொடுத்தேன்; அதற்குள் என்ன?''

மஹிபால் சிரித்தான். ''நேற்று சாப்பிட்டோமே என்பதால் இன்று சாப்பிடாமல் இருந்து விடுகிறோமா சாரு?''

சந்திரபால் சொன்னான்: ''போன வருஷம் மூன்று லட்சம் லாபம் வந்ததே என்பதால் இந்த வருஷம் லாபமே வேண்டாம் என்று இருந்து விடுவாயா?''

''நான் பணம் கொடுக்க மாட்டேன் என்றால்?''

''நீ தராவிட்டால் என்ன நடக்கும் என்பது உனக்கே தெரியாதா, சாரு? சாருலதாவைப் பேட்டி காண வந்து எத்தனை பத்திரிகை நிருபர்கள் ஏமாற்றத்துடன் திரும்பி இருக்கிறார்கள்?''

''வெறும் வாயை மெல்கிறவர்களுக்குப் பிடி அவல் இல்லை; பிடி அவலே வைத்திருக்கிறோம் நாங்கள்!''

''அந்தப் புகைப்படத்தைத்தான் நெகடிவ்வோடு சேர்த்து என்னிடம் தந்து விட்டீர்களே, இனி நீங்கள் எந்த ஆதாரத்தின் மீது எனக்கு என்ன தீங்கு விளைவித்துவிட முடியும்?''

''ஒரு ஃபோட்டோதானே கொடுத்தோம்? இன்னும் நூறு பிரிண்ட் இருக்கிறது எங்களிடம்.''

''என்னிடம் நீங்கள் கொடுத்த நெகடிவ், ஒரு என்லார்ஜ்மெண்ட்டைக் காப்பி எடுத்தபோது கிடைத்தது; ஒரிஜினல் நெகடிவ் உங்களிடமே பத்திரமாயிருக்கிறது. அப்படித்தானே?''

''நீ சாமர்த்தியசாலி சாரு, உனக்கு உண்மை தெரியாமல் போகுமா?''

''திருடிப் பொன்று இருபதாயிரம் கொடு என்றால் நான் எங்கே போவேன்? எவ்வளவு தான் பணக்காரரானாலும் கையிலே ஆயிரக்கணக்கில் பணம் வைத்திருப்பார்களா, என்ன?''

''பணத்துக்கு ஏற்பாடு செய்ய நாங்களா சொல்லித் தர வேண்டும்? அதுவும் சாருலதாவுக்கு?''

''தொழில் வர்த்தகத் துறையில் மாயா ஜாலங்கள் புரிகிறவள் என்று புகழ் பெற்றவளாயிற்றே நீ!''

''சரி, இன்னும் ஒரு மாதம் கழித்து வாருங்கள்!''

''ஆஹாஹா! ஒரு மாசம்!''

''அத்தனை நாள் காத்திருக்க முடியாதே சாரு!''

''மூன்று வாரம்?''

''அதிகபட்சம் பத்து நாள் கழித்து வருகிறோம்; அன்று பணம் கிடைத்தாக வேண்டும், எங்களுக்கு?''

''தொலைந்தது என்று இருபதாயிரம் கொடுத்து விடுகிறேன். ஆனால் இது தான் கடைசித் தடவை. மறுபடியும் வந்து தொல்லை கொடுத்தீர்களோ?'' சாருலதா மேஜையின் மேல் டிராயரைத் திறந்து அதிலிருந்து ஒரு துப்பாக்கியை எடுத்து அவர்களை நோக்கி நீட்டினாள். இதை எதற்கு வைத்திருக்கிறேன், தெரியுமா? உங்களைப் போன்ற அயோக்கியர்களிடமிருந்து என்னைப் பாதுகாத்துக் கொள்ளத்தான் லைசென்ஸ் பெற்று இதை வாங்கி வைத்திருக்கிறேன்!''

''பயமுறுத்துகிறாயா சாரு? நாங்கள் நடுங்க வேண்டுமா?''

''எங்களை நீ சுட்டுக் கொன்று விட்டால் உனக்கு மரண தண்டனை விதிக்க எந்த நீதிபதிக்கும் மனசு வராது!''

''அழகான உன் கழுத்தில் கயிறு இறுகுவதைக் கற்பனைக் கண்கொண்டு பார்க்கக்கூட எவனுக்கும் பிடிக்காது தான்.''

''ஆனால் சட்டம் இருக்கிறதே அதைத் தளர்த்தலாமே ஒழிய உடைத்து எறிய முடியாதே!''

''இருபது வருஷமாவது உன்னைக் கம்பி எண்ண வைத்துவிடுமே சட்டம்!''

''அப்புறம் உன் அப்பாவின் கதி? சாருலதா என்டர்பிரைஸஸின் எதிர்காலம்?''

''உனக்கு இருக்கும் பெயர், புகழ், அந்தஸ்து எல்லாம் என்னவாகிறது?''

மாறி மாறி அவர்கள் பேச சாருலதாவுக்குத் தலை சுற்றியது. ''வில் யூ

வைத்து விட்டால் நாங்களும் அநாகரிகமாக நடந்து கொள்ள நேராது.''

''எக்ஸ்கியூஸ் மீ, சாரு!'' என்றாள் லில்லி, ஃபோனில். ''நான் எவ்வளவோ முயன்று பார்த்தேன். அவர்கள் பிடிவாதமாகவும் முரட்டுத்தனமாகவும் நடந்து கொண்டார்கள். எனக்குப் பயமாயிருந்தது. சாரங்கனை உடனே உங்கள் ரூமுக்கு அனுப்பிவைக்கிறேன்.''

''வேண்டாம்'' என்றாள் சாருலதா. ''அவர் இனி இங்கே வந்து சாதிக்கப் போவது ஒன்றுமில்லை.'' —ஃபோனை வைத்துவிட்டு நீண்ட துயரப் பெருமூச்சுடன் அவள் நிமிர்ந்தாள். தனது கலவரத்தையோ வேதனையையோ காட்டிக் கொள்ளாமல் அவர்களை ஏறிட்டுப் பார்த்தாள். ''மறுபடியும் எதற்காக வந்தீர்கள்?''

''வந்தவர்களை 'வா' என்று அழைப்பதில்லையா சாரு?'' என்றான் ஒருவன்.

''உட்காருங்கள் என்று சொல்லக் கூடாதா?'' என்றான் மற்றவன்.



Bensons/2BCB/5TAM

# உங்களுக்கு சுவையுள்ள, கெட்டியான, ஸ்ட்ராங்கான மற்றும் உடனே தயாராகும் காபி வேண்டுமா...

இதோ **ப்ரூ** இருக்கிறது







கெட்டியான,
ஸ்ட்ராங்கான
காபி-சிக்கரி கலவைதான் ப்ரூ.
உடனடியாக தயாராகிவிடுகிறது!
புத்துணர்ச்சியளிக்கும்
மிகச் சிறந்த பானம்.

**ப்ருக் பாண்ட்**

**ப்ரூ** இன்ஸ்டண்ட்

காபி சிக்கரி ப்ளெண்ட்

அவள் அழைக்காமலே வந்தவர்கள் அவள் உபசரிக்காது போனாலும் ஸோபா ஸெட்டை நோக்கி நடந்து அமர்ந்தார்கள். கால் மேல் கால் போட்டு நன்றாகச் சாய்ந்து கொண்டார்கள்.

''ஏன், சாரு? விஸ்கி அண்டு சோடா, ஜின் அண்டு டானிக் எல்லாம் உன் நண்பர்களுக்குக் கொடுத்து உற்சாகப்படுத்துவாயாமே? நாங்கள்கூட உன் நண்பர்கள்தானே!''

''வோட்காதான் எனக்கு வேண்டும், இருக்கிறதல்லவா?''

ஸோபாவின் எதிரே மேஜை மேலிருந்த, தந்த வேலைப்பாடுகளுடன் கூடிய அலங்காரமான பெரிய பெட்டி நிறைய சிகரெட்டுகள் இருந்தன. பெட்டியைத் திறந்து விலை உயர்ந்த சிகரெட்டுக்களை ஆளுக்கொன்றாய்ப் பற்ற வைத்துக் கொண்டதுடன் சட்டைப் பாக்கெட்டுக்களையும் நிரப்பிக் கொண்டார்கள்.

சாருலதா அமைதியாகக் கேட்டாள்: ''எவ்வளவு பணம் வேண்டும், உங்களுக்கு?''

''இப்போதைக்கு இருபதாயிரம் ரூபாய் இருந்தால் போதும்.''

''பத்து நாட்களுக்கு முன்னால் தானே பத்தாயிரம் கொடுத்தேன்; அதற்குள் என்ன?''

மஹிபால் சிரித்தான். ''நேற்று சாப்பிட்டோமே என்பதால் இன்று சாப்பிடாமல் இருந்து விடுகிறோமா சாரு?''

சந்திரபால் சொன்னான்: ''போன வருஷம் மூன்று லட்சம் லாபம் வந்ததே என்பதால் இந்த வருஷம் லாபமே வேண்டாம் என்று இருந்து விடுவாயா?''

''நான் பணம் கொடுக்க மாட்டேன் என்றால்?''

''நீ தராவிட்டால் என்ன நடக்கும் என்பது உனக்கே தெரியாதா, சாரு? சாருலதாவைப் பேட்டி காண வந்து எத்தனை பத்திரிகை நிருபர்கள் ஏமாற்றத்துடன் திரும்பி இருக்கிறார்கள்?''

''வெறும் வாயை மெல்கிறவர்களுக்குப் பிடி அவல் இல்லை; பிடி அவலே வைத்திருக்கிறோம் நாங்கள்!''

''அந்தப் புகைப்படத்தைத்தான் நெகடிவ்வோடு சேர்த்து என்னிடம் தந்து விட்டீர்களே, இனி நீங்கள் எந்த ஆதாரத்தின் மீது எனக்கு என்ன தீங்கு விளைவித்துவிட முடியும்?''

''ஒரு ஃபோட்டோதானே கொடுத்தோம்? இன்னும் நூறு பிரிண்ட் இருக்கிறது எங்களிடம்.''

''என்னிடம் நீங்கள் கொடுத்த நெகடிவ், ஒரு என்லார்ஜ்மெண்ட்டைக் காப்பி எடுத்தபோது கிடைத்தது; ஒரிஜினல் நெகடிவ் உங்களிடமே பத்திரமாயிருக்கிறது, அப்படித்தானே?''

''நீ சாமர்த்தியசாலி சாரு, உனக்கு உண்மை தெரியாமல் போகுமா?''

''திடுதிப் பென்று இருபதாயிரம் கொடு என்றால் நான் எங்கே போவேன்? எவ்வளவு தான் பணக்காரராானாலும் கையிலே ஆயிரக்கணக்கில் பணம் வைத்திருப்பார்களா, என்ன?''

''பணத்துக்கு ஏற்பாடு செய்ய நாங்களா சொல்லித் தர வேண்டும்? அதுவும் சாருலதாவுக்கு?''

''தொழில் வர்த்தகத் துறையில் மாயா ஜாலங்கள் புரிகிறவள் என்று புகழ் பெற்றவளாயிற்றே நீ!''

''சரி, இன்னும் ஒரு மாதம் கழித்து வாருங்கள்!''

''சூச்சூசூ! ஒரு மாசம்!''

''அத்தனை நாள் காத்திருக்க முடியாதே சாரு!''

''மூன்று வாரம்?''

''அதிகபட்சம் பத்து நாள் கழித்து வருகிறோம்; அன்று பணம் கிடைத்தாக வேண்டும், எங்களுக்கு?''

''தொலைகிறது என்று இருபதாயிரம் கொடுத்து விடுகிறேன். ஆனால் இது தான் கடைசித் தடவை. மறுபடியும் வந்து தொல்லை கொடுத்தீர்களோ?'' சாருலதா மேஜையின் மேல் டிராயரைத் திறந்து அதிலிருந்து ஒரு துப்பாக்கியை எடுத்து அவர்களை நோக்கி நீட்டினாள். இதை எதற்கு வைத்திருக்கிறேன், தெரியுமா? உங்களைப் போன்ற அயோக்கியர்களிடமிருந்து என்னைப் பாதுகாத்துக் கொள்ளத்தான் லைசென்ஸ் பெற்று இதை வாங்கி வைத்திருக்கிறேன்!''

''பயமுறுத்துகிறாயா சாரு? நாங்கள் நடுங்க வேண்டுமா?''

''எங்களை நீ சுட்டுக் கொன்று விட்டால் உனக்கு மரண தண்டனை விதிக்க எந்த நீதிபதிக்கும் மனசு வராது!''

''அழகான உன் கழுத்தில் கயிறு இறுகுவதைக் கற்பனைக் கண்கொண்டு பார்க்கக்கூட எவனுக்கும் பிடிக்காது தான்.''

''ஆனால் சட்டம் இருக்கிறதே அதைத் தளர்த்தலாமே ஒழிய உடைத்து எறிய முடியாதே!''

''இருபது வருஷமாவது உன்னைக் கம்பி எண்ண வைத்துவிடுமே சட்டம்!''

''அப்புறம் உன் அப்பாவின் கதி? சாருலதா எண்டர்பிரைஸஸ்ஸின் எதிர்காலம்?''

''உனக்கு இருக்கும் பெயர், புகழ், அந்தஸ்து எல்லாம் என்னவாகிறது?''

மாறி மாறி அவர்கள் பேச சாருலதாவுக்குத் தலை சுற்றியது. ''வில் யூ

பிலீஸ் கெட் அவுட் ப்ரம் ஹியர்?'' என்று கத்தினாள். அவள் கரங்கள் நடுங்கின. அந்த நடுக்கத்தின் விளைவாகத் துப்பாக்கி விசையை எங்கே அவள் விரல் அழுத்தி விடுமோ என்று அஞ்சியவர்களாக அவர்கள் புறப்பட்டார்கள்.

கதவைத் திறந்து பிடித்துக் கொண்டவன் காலை வெளியே வைப்பதற்கு முன்னால் சொன்னான்: ''ஒரு தங்கச் சுரங்கத்தைக் கண்டு பிடித்து விட்ட பிறகு பாளம் பாளமாக அதை வெட்டி எடுக்காமல் விட்டால் அது முட்டாள்தனமில்லையா?''

''ஆனால் நாங்கள்தான் கெட்டிக்காரர்களாயிற்றே!'' என்றான் இன்னொருவன்.

''நிலச் சரிவு ஏற்பட்டுச் சுரங்கத்துக்குள்ளேயே நீங்கள் சமாதி ஆகிவிடாமல் கவனித்துக் கொள்ளுங்கள்'' என்றாள் சாரு துப்பாக்கியை உயர்த்தி.

அவர்கள் கொஞ்சம்கூடப் பயந்ததாகத் தெரியவில்லை. சிரித்துக் கொண்டே சென்றார்கள். துப்பாக்கியை மேஜை டிராயரில் வைத்து அறைந்து சாத்தினாள் சாருலதா.

மேஜை மேல் இரண்டங்குல கனத்துக்கு அவள் கவனித்துப் படித்துக் கையெழுத்திட வேண்டிய தாள்களும் பதில் எழுத வேண்டிய கடிதங்களும் குவிந்து கிடந்தன. ஆத்திரத்துடன் அவற்றைக் கரத்தின் ஒரு வீச்சிலே ஒதுக்கித் தள்ளினாள். பொத்தென்று தரையில் விழுந்தவற்றை மீண்டும் எடுத்து மேஜை மேல் ஒழுங்குபடுத்தி வைத்தாள்.

'இருபது நாட்களுக்கு ஒரு தரம் இருபதாயிரம் ரூபாயா? முடிவில்லாமல் இவர்களுக்குக் கொடுத்துக் கொண்டே இருக்க முடியுமா? இருபதாயிரம் ரூபாய் என்பது ஒரு பெரிய விஷயமில்லை. ஆனால் பணம் இருக்கிறது என்பதால் அதை நம் இஷ்டப்படிச் செலவழித்துவிட முடிகிறதா என்ன? வருமான வரி இலாக்காவினர் பாங்கில் கட்டப்படும் பணத்துக்கு மட்டுமில்லை; பாங்கிலிருந்து எடுக்கப்படும் பெரிய தொகைகளுக்கும் கணக்குக் கேட்பார்கள். அந்தப் பெரிய தொகைகள் வேறு எதில் முதலீடு செய்யப்பட்டிருக்கின்றன என்று விவரம் கூற வேண்டும். பெரிய தொகைகளைப் பாங்கிலிருந்து எடுத்து விட்டு அதற்குச் சரியான காரணம் கொடுக்காது போனால் விடமாட்டார்கள். விசாரணை, வழக்கு என்றெல்லாம் வந்து விடும். பிறகு என்ன செய்வது? கருப்புப் பணம் என்று இருக்கத்தான் செய்கிறது. ஆனால் பத்து இருபது என்று இவர்களுக்குக் கொடுத்துக் கொண்டு போகும் வேகத்தில் அது எத்தனை நாளைக்குக் காணும்? நகைகளை விற்கலாமா? எங்கே கொண்டு போய், யார் மூலம் விற்பது? சாருலதா நகைகளை விற்றாள் என்பது வெளியானால் பங்கு மார்க்கெட்டே சரிந்து விடுமே! கையிலிருப்பது போதாது; மேலும் கருப்புப் பணம் தயார் செய்தாக வேண்டும்.

சாருலதா அறையில் குறுக்கும் நெடுக்குமாக அலைந்தாள். பிறகு ஒரு முடிவுக்கு வந்தவளாக மேஜை எதிரே அமர்ந்து பர்ஸனல் லைனில் சாருலதா இன்ஜினீரிங் கைலாசத்தைக் கூப்பிட்டாள். அவளுக்கிருந்த பதற்றத்தில் இரண்டு தடவை ராங் நம்பர் விழுந்தது. ஒரு வழியாகக் கைலாசத்தின் குரல் கேட்ட போது இவள் சொன்னாள்: ''ஏன் எதற்கு என்று கேட்காமல் எனக்கு நீங்கள் ஒரு பெரிய உபகாரம் பண்ண வேண்டும்!''

''உனக்கில்லாத உதவியா சாரு?''

''சாருலதா இன்ஜினீரிங்கில் ஒன்றிரண்டு இயந்திரங்கள் அதிகப்படியாக இருக்கின்றன அல்லவா?''

''ஒரு ஜிக் போரிங் மிஷினும் ஒரு டாப்பிங் மிஷினும் உள்ளன.''

''அவற்றில் ஏதேனும் ஒன்றையோ அல்லது இரண்டையுமேயோ விற்றுவிட முடியுமா?''

''எதற்காக விற்க வேண்டும் சாரு? அவை அதிகப்படியாக உள்ளனவே தவிர உபயோகமின்றி இருக்கவில்லை. ஏதாவது ஒரு மிஷின் பழுதாகி விடும்போது இவை 'ஸ்டாண்ட் பை'யாக இருந்து பயன்படுவதால் வேலை தடைப்படாமல் தொடர்கிறது. அதை 'லாக்ட் அப் காப்பிட்டலாக' நினைக்கக் கூடாது நீ!''

''கைலாசம்! நான் பிஸினஸ் ரீதியில் பேசவில்லை; பர்ஸனலாக எனக்கு உதவும்படி கேட்கிறேன்.''

''எனக்குப் புரியவில்லை, சாரு! அந்த மிஷின்கள் இரண்டும் நமது தொழிலகத்தின் தங்கு தடையில்லாத இயக்கத்துக்கு அவசியத் தேவைதான் என்கிறேனே!''

''ஆறு மாசம் கழித்து மறுபடியும் அதே போன்ற மிஷின்களை புதிதாகவோ ஸெகண்ட் ஹாண்டிலோ என்ன விலையானாலும் சாருலதா இன்ஜினீரிங்கில் நாம் வாங்கிவிடலாம்.''

''இப்போது இவற்றை விற்பானேன், அப்புறம் அவற்றையே வாங்குவானேன்?''

''கைலாசம்! அவற்றை புக் வால்யுவைவிட அதிக விலைக்கு விற்க முடி

யும் இல்லையா? புக் வால்யுவுக்குச் செக் வாங்குங்கள். அதிகப்படிப் பணத்தைக் கேஷாகப் பெற்று என்னிடம் தந்து விடுங்கள். இப்போ எனக்குக் கொஞ்சம் பணம் முடையாக இருக்கிறது.''

''சாரு! உனக்கு என்ன வந்து விட்டது? பணம் வேண்டுமென்றால் செக் எழுதிச் சாரங்கனிடம் கொடு. எதிர்த்தாற் போல் பாங்கு இருக்கிறது; போய் வாங்கி வருகிறேன்!''

''கைலாசம்!'' — உரக்கப் பேசினாள் சாருலதா. ''ஏன், எதற்கு என்று கேட்காமல் என் கோரிக்கையை நிறைவேற்றுவதாக ஆரம்பத்திலேயே வாக்களித்தீர்கள்!''

''சாரு! உன் கட்டளைப்படி நடக்க நான கடமைப்பட்டிருக்கிறேன். எனக்காகக் கொஞ்சமாகவா செய்திருக்கிறாய் நீ?''

''எவ்வளவு கிடைக்கும் எனக்கு இந்த டீலில்?''

''நீ கேட்பது சுலபமாக முடியக் கூடிய காரியம்தான். நம்மிடம் இருப்பவை ஜெர்மன் மிஷின்கள். இங்கே எளிதில் கிடைக்காதவை. துடைத்துத் துடைத்து வைத்துக் கொண்டிருக்கிறேன் நான். நாம் அவற்றைக் கொடுத்து விடப் போகிறோம் என்று தெரிந்தால் போதும், இம்போர்ட் செய்வதில் உள்ள தொல்லைகளைப் பார்க்கையில் பிளாக்கில் பணம்

## தமிழ்நாட்டில் எல்லை காந்தி



### நிகழ்ச்சி நிரல்

**1 - 1 - 70**

| | | |
|---|---|---|
| காலை | 11-00 | திருச்சிக்கு விமான மூலம் பயணம். |
| பகல் | 12-00 | திருச்சி வருகை. |
| மாலை | 5-30 | திருச்சியில் பொது மக்கள் வரவேற்பு. |

இரவு திருச்சியில் தங்குகிறார்.

**2 - 1 - 70**

| | | |
|---|---|---|
| காலை | 8-00 | காந்தி கிராமம் கிளம்புகிறார். |
| ,, | 10-00 | காந்திகிராமம் வருகை. |
| மாலை | 6-00 | திண்டுக்கல்லில் பொது மக்கள் வரவேற்பு. |

இரவு காந்திக் கிராமத்தில் தங்குகிறார்.

**3 - 1 - 70**

| | | |
|---|---|---|
| காலை | 8-00 | வத்தலக்குண்டு பயணம். |
| ,, | 9-00 | வத்தலக்குண்டு வருகை. |
| ,, | 9to11-00 | கிராமதானத் திட்டத்தைப் பார்வையிடல். |
| பகல் | 11to12-00 | கிராமதான மகாநாடு. |
| பகல் | 12-00 | வத்தலக்குண்டு சர்வோதய ஆசிரமத்தில் சிரமபரிகாரம். |
| மாலை | 4-00 | |
| ,, | 4-00 | கிராமதான சமூகப் பயிற்சி நிலையத்தைப் பார்வையிடுகிறார். |
| ,, | 5-00 | மதுரைக்குப் புறப்படுகிறார். |
| ,, | 6-30 | மதுரை வந்தடைகிறார். |

**4 - 1 - 70**

| | | |
|---|---|---|
| காலை | 9-30 | தமிழ்நாடு நிர்மாண ஊழியர்களைச் சந்தித்தல். |
| மாலை | 6-30 | நகரசபை வரவேற்பும் பொதுக் கூட்டமும்-தமுக்கம்மைதானம். |

**5 - 1 - 70**

| | | |
|---|---|---|
| காலை | 7-00 | திருநெல்வேலிக்குப் புறப்படுகிறார். (பகல் உணவு திருநெல்வேலி சர்க்யூட் விடுதியில்.) |
| மாலை | 7-30 | பொதுஜன வரவேற்பு திருநெல்வேலியில். |

இரவு சர்க்யூட் விடுதியில் தங்குகிறார்.

**6 - 1 - 70**

| | | |
|---|---|---|
| காலை | 7-00 | திருவனந்தபுரம் புறப்படுகிறார். |

**9 - 1 - 70**

| | | |
|---|---|---|
| இரவு | ... | மலப்புரத்திலிருந்து கோவை வருகை. |

இரவு சர்க்யூட் விடுதியில் தங்குகிறார்.

**10 - 1 - 70**

| | | |
|---|---|---|
| காலை | 8-00 | திருப்பூருக்குக் கிளம்புகிறார். |
| ,, | 9-30 | காங்கேயம், படியூர் பார்வையிடல். |
| பகல் | 12-00 | திருப்பூர் சேர்தல். |
| பகல் | 12-00 | வீரபாண்டி சர்வோதய கேந்திரத்தில் உணவும்-ஓய்வும். |
| மாலை | 4-00 | |
| மாலை | 4-00 | திருப்பூரில் பொது மக்கள் வரவேற்பு. |
| ,, | 5-00 | கோவைக்குப் புறப்படுகிறார். |
| ,, | 6-30 | கோவையில் பொது மக்கள் வரவேற்பு. |
| 11-1-1970 | | பங்களூர் வழியாகப் பம்பாய் பயணம். |

கொடுத்தே வாங்கலாம் என்று 'க்யூ' வில் காத்திருப்பார்கள்!''

''தாங்க்யூ கைலாசம்! நான் உங்கள் உதவியை மறக்கமாட்டேன்.''

''சாரு, இதனாலெல்லாம் உனக்கு எதாவது தீங்கு நேரக் கூடாதே என்ற கவலைதான் எனக்கு!''

''கைலாசம்! மறந்து போகாதீர்கள்! நமக்குப் பணம் தேவை என்பதால் அவற்றை விற்கவில்லை; அதிகப்படியாக இருப்பதால் இரண்டு மிஷின் களைத் தள்ளி விடுகிறோம்!''

''யோசித்துத்தான் முடிவு செய்திருக்கிறாயா, சாரு?''

''பைதிவே. சனிக்கிழமை கன்னிமராவில் ஒரு பார்ட்டி, நமது ஜப்பானிய நண்பர்களுக்கு. சாருலதா கடிகாரங்கள் மார்க்கெட்டில் சக்கைப் போடு போடும் என்பதற்கான அறிகுறிகள் நிறைய இருக்கின்றன. முழு மூச்சில் உற்பத்தி ஆரம்பமாகுமுன் வரே ஷேர் வேல்யூ கூடுவதைக் கவனித்தீர்களா? சாரங்கன் இன்விடேஷன் அனுப்புவான். அவசியம் வந்து சேருங்கள்! குட் பை!''

வர்த்தக ரீதியான ஓர் ஒப்பந்தத்தை ரொம்ப சாமர்த்தியமாகப் பேசி தனக்குச் சாதகமாக முடித்துக் கொண்டதால் ஏற்படக்கூடிய திருப்தி போல் சாருலதா உணர்ந்தாள். டெலிபோன் ரிஸீவரை உரிய இடத்தில் வைத்தாள். அது வரை ஒரு போட்டியில் வெற்றி பெறும் வேகம் இருந்தது அவளுக்கு. ஆனால் கைலாசத்தைப் பேச்சில் ஜெயித்த பிறகு அதன் பின் விளைவுகள் நினைவுக்கு வந்து அவளைச் சோர்வுறச் செய்தன.

மேலும் கொஞ்சம் கருப்புப் பணத்துக்கு வழி செய்தாகி விட்டது. பத்து நாட்களில் இருபதாயிரம் வாங்கிக் கொண்டு போய் விடுவார்கள். அப்புறம் பேசாமல் இருப்பார்களா? முஹிபாலும் சந்திரபாலும் மீண்டும் மீண்டும் வரமாட்டார்களா? அப்போது என்ன சொல்லப் போகிறோம், செய்யப் போகிறோம்?

ஒரு பெரிய கேள்விக்குறி அவள் முன் நின்றது. அதை ஒதுக்கி விட்டுக் காரியாலய அலுவல்களில் கவனம் செலுத்த முயன்றாள்; முடியவில்லை.

சிந்தனை இன்றி இயல்பாக அவள் இடக் கரம் டெலிபோனை எடுத்தது. வலக்கரத்தின் விரல் வேணுகோபாலின் டெலிபோன் நெம்பரைச் சுற்றியது.

''டாக்டர்! வேணுகோபால்!''— கவலைகள் மறந்து அவளது கலகலப்பான சுபாவமும் உற்சாகமும் திரும்பின. குரலை மாற்றிக் கொண்டு வேடிக்கை செய்தாள். ''ஹல்லோ, டாக்டர்! சாம்புவுக்கு ரொம்ப உடம்பு சரியில்லை. வயிற்று வலி என்று துடிக்கிறான். கொஞ்சம் சிரமத்தைப் பொருட்படுத்தாது உடனே வந்து பார்த்துவிட்டுப் போகிறீர்களா?''

''எஸ் சாரு, என்ன விசேஷம்?''

''ஹௌ குரூட்! ஏமாந்து போனதாக நடிக்கவாவது கூடாதா?''

''சாரு! உன் சாயம் வெளுத்துப் போச்சு! இதுதான் நீ ஆபீஸ் நடத்துகிற லட்சணமா?''

''வேலைக்கென்ன எப்போதும் இருக்கத்தான் செய்கிறது. மலையாகக் குவிந்திருக்கும் வேலைகளுடன் சதா போராட்டம்தான்.''

''அப்படித்தான் ஒரு பிரமையை ஏற்படுத்தியிருக்கிறாய் நீ! ஆனால் இப்போ காரியாலய நேரத்தில் விளையாட நேரம் கிடைத்திருக்கிறதே, உனக்கு!''

''இப்போதும் ஆபீஸ் விஷயமாகத்தான் கூப்பிட்டேன் வேணு. சனிக்கிழமை இரவு கன்னிமராவில் ஒரு பார்ட்டி கொடுக்கிறேன். நீங்கள் அவசியம் வரவேண்டும்.''

''சரி வருகிறேன்; அப்புறம்?''

''அப்புறம் என்றால்?''

''நீ இதைச் சொல்ல என்னைக் கூப்பிடவில்லையே? சாரங்கன் செய்யவேண்டிய காரியமல்லவா இது? நீயே நேரில் என்னை அழைக்க வேண்டும். என்றாலும் நாளை டென்னிஸ் கோர்ட்டில் சந்திக்கும் போது சொல்லிக் கொள்ளலாமே!''

''யூ ஆர் ரைட் வேணு! நான் ஃபோன் செய்தது வேறு விஷயம். நேரில்தான் பேச வேண்டும். உங்களை இன்று சாயங்காலம் சந்திக்க முடியுமா நான்?''

''எப்போ வரட்டும்?''

''கன்ஸல்ட்டிங் அவர்ஸுக்குப் பிறகு போல் ஸ்டார் ரெஸ்டாரண்டுக்கு வருகிறீர்களா? அங்கே உங்களுக்காகக் காத்திருக்கிறேன்.''

''ரைட்டோ!'' என்றான் வேணுகோபால்.

ஏழு மணிக்கு மேல் வேணுகோபாலுடன் சற்று நேரம் பேசிக் கொண்டிருக்கலாம் என்பது நிச்சயமானது. மேஜை மேல் இருந்த வேலைச் சுமை சாருலதாவுக்கு ஒரு பாரமாகத் தோன்றவில்லை.

அவள் அழைத்ததன் பேரில் உள்ளே நுழைந்த ஸ்டெனோ குமார் வாயிலிருந்து பிரவாகமாக... கொடுத்த சொற்களுக்கு ஈடு... முடியாமல் திணறிப் போ...

# சாருலதா

கி.ராஜேந்திரன்



## அத்தியாயம் 17

## உடைந்த காதலன்

அழகான வண்ணப் பூச் சித்திரங்களுடன் கூடிய கண்ணாடி டம்ளர்களில் ஆரஞ்சுப் பழ ரசம் வழங்கப்பட்டது, சாருலதாவுக்கும் வேணுகோபாலுக்கும். போல் ஸ்டார் உணவு விடுதியின் ஒரு மூலையில் அமர்ந்து அவர்கள் அதை ருசி பார்த்தார்கள்.

சற்றுத் தள்ளி, அவர்களுக்குத் தங்கள் முதுகைக் காட்டிக் கொண்டு, இரு இளம் காதலர்கள் கொக்கோ கோலாவை உறிஞ்சிக் கொண்டிருந்தனர். அதை அவர்கள் அருந்திய விதம் விசித்திரமாக இருந்தது. ஒரு கப் வெனில்லா ஐஸ்கிரீமும் கொண்டு வரச் சொல்லி அதை இருவரும் மாறி மாறி மர ஸ்பூனினுல் வழித்தெடுத்து, கொக்கோ கோலா பாட்டில்களுக்குள் ஸ்ட்ராவின் உதவியுடன் செலுத்தினுர்கள். கொக்கோ கோலா நுரைத்துப் பொங்கிக் கொண்டு வந்தது. அது அடங்கும் வரை காத்திருந்து மறுபடியும் ஐஸ்கிரீமை உள்ளே திணித்தார்கள். ஒரு வழியாக ஐஸ்கிரீம் கப் காலியான பிறகு ஒருவர் முழங்கையுடன் மற்றெருவரது முழங்கையைக் கொக்கி போட்டது போல் மாட்டி இழுத்துக் கொண்டு அந்தக் கரங்களினுலேயே பாட்டில்களைப் பற்றி, பானத்தை ஸ்டிரா மூலம் உறிஞ்சினுர்கள். இடையிடையே 'களுக்'குச் சிரிப்பும் 'கிசுகிசு'த்த பேச்சும் அமர்க்களப்பட்டன.

அந்த ரெஸ்டாரெண்டில் இருந்த அனைவரது கண்களும் அவர்களையே நோக்கின. ஆனுல் அவர்கள் யாரையும் லட்சியம் பண்ணவில்லை. இரண்டு ரூபாய் செலவில் அந்த 'ஏர் கண்டிஷண்ட்' உணவு விடுதியில் இரண்டு மணி நேரம் உட்கார்ந்திருந்து இரண்டாயிரத்துக்குக் குறையாமல் அன்பு மொழிகளைப் பேசித் தீர்த்து விடுவது என்று தீர்மானித்து விட்டவர்கள் போல் அவர்கள் நடந்து கொண்டார்கள்.

சாருலதா அவர்களை அருவருப்புடன் பார்த்தாள். டாக்டர் வேணுகோபால் சொன்னுன்: ''அவர்களுக்கு இந்தச் சூழ்நிலையே மறந்து போயிருக்கும்; உலகமே அவர்கள் உணர்விலிருந்து கழன்று கொண்டிருக்கும்!''

''பாஸிடிவ்லி இன்டீஸண்ட்'' என்றுள் சாருலதா. ''பொது இடத்தில் இப்படியா நடந்து கொள்வார்கள்?''

''அவர்கள் பேரில் தப்பில்லை சாரு; அவர்கள் காதல் வயப்பட்டிருக்கிறுர்கள்.''

''காதலிக்கட்டுமே, யார் வேண்டாம் என்கிறுர்கள்? அதற்காக இப்படியா?....''

''ரொம்பக் கௌரவமாக வாழ்க்கை நடத்துவோர்கூடக் காதலில் கட்டுண்டால் கும்மாளம் போடுவார்கள், குழந்தைத்தனமாக.' காதல் அத்தகைய அபார சக்தி வாய்ந்ததுதான்!''

''அழகாய்த்தான் இருக்கிறது! அடுத்தாற்போல் தமிழ்த் திரைப்படங்களில் காதலனும் காதலியும் 'டூயெட்' பாடியபடி ஓடிப் பிடித்து விளையாடுவதுகூட இயற்கையாகத்தான் இருக்கிறது என்பீர்கள் போலிருக்கிறதே!''

''பல படங்களில் அதே போன்ற காட்சி திரும்பத் திரும்ப வருவதாலும் மிகைப்படுத்தப்படுவதாலும் நமக்குப் பிடிக்கவில்லை. இரண்டு பேர் கருத்தொருமித்துக் காதல் வயப்பட்டால் எப்படி இருக்கும் என்பது உனக்கும் தெரியாது, எனக்கும் தெரியாது. நமக்கு அதைப் பற்றிய உண்மை அநுபவம் இல்லாத போது பிறரைக் குற்றம் சொல்வானேன்?''

''இதோ, இவர்களைப் போல் அசிங்கமாக நடந்து கொள்வதுதான் காதல் என்றுல் எனக்கு அது வேண்டவே வேண்டாம்!''

''அசிங்கம் என்பது மனத்துக்கு மனம் வேறுபடக்கூடிய விஷயம் சாரு. மாடர்ன் ஆர்ட் ஒன்றை ஒருவன் அசிங்கம் என்று ஒதுக்கித் தள்ளுகிறுன்; அதையே வேறெருவன் ஆயிரம் ரூபாய் கொடுத்து வாங்கிப் போகிறுன். பல ஆடவர்களை நீ பார்ட்டிக்கு அழைத்து உன் கையாலேயே மது வழங்குகிறுய். அதை அசிங்கம் என்று



நான் கருதுகிறேன்; ஆனல் அதை நீ சர்வ சாதாரண விஷயமாக நினைக்கிருய்!''

''அப்பா, காத்திருந்து, காத்திருந்து இன்றைக்கு என்னை வகையாக மடக்கி விட்டீர்கள்! 'ஹாண்ட்ஸ் அப்' சொல்லுங்கள்!'' சரணகதி அடைந்து விட்ட பாவனையில் கரங்களை உயர்த்தினள் சாரு, விளையாட்டாக.

''வார்த்தைகளால் உன்னை மடக்கி விடுவதில் எனக்குத் திருப்தியில்லை; உன் மனத்தை அறிந்து கொள்ளும் போதுதான் எனக்கு வெற்றி. இப்போது கொஞ்சம் புரிகிறது.''

''என்னவென்று?''

''இவ்வளவு அல்ட்ரா மாடர்னக இருக்கும் நீ, இந்த நவயுகக் காதலர்களைக் கண்டு ஏன் முகம் சுளிக்கிருய்? அவர்களுடைய நடத்தையை நீ வெறுக்க வில்லை. அவர்களிடையே நிலவும் காதலை உன்னல் பொறுக்க முடியாததுதான் காரணம்!''

''உண்மைதான், காதல் என்ற வார்த்தையையே எனக்குக் கேட்கப் பிடிக்கவில்லை.''

சாருலதாவின் கண்கள் மேஜை மேலிருந்த கண்ணடி டம்ளரில் நிரம்பி இருந்த ஆரஞ்சுப் பழ ரசத்தில் நிலைக் குத்தி நின்றன.

''அது ஏன் சாரு? காதல் புனிதமானது, தெய்விகமானது என்று நம்ப நீ ஏன் மறுக்கிருய்?''

''காதல் தெய்விகமானதாக இருந்தால் அந்தக் கடிதம் கிழிந்திருக்காது.'' — அவள் எங்கோ சென்று ஏதோ நினைவாகப் பேசினள். அவளுடைய அந்த 'மூட்' கலையாதவிதமாக வேணு கேட்டான்: ''யார் எழுதிய கடிதம்?''

''நான்தான்.''

''யாருக்கு எழுதினய்?''

''என் காதலனுக்கு!''

வேணுகோபால் தனக்கு ஏற்பட்ட அதிர்ச்சியை ரொம்பக் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டான்.

''யார அந்த அதிர்ஷ்டசாலி?''



''அவன் இப்போது இல்லே; உடைந்து விட்டான்!''

விண்ணென்று தெறித்த இடத்தில் இதமாக ஒத்தடம் கொடுத்ததுபோல் இருந்தது, வேணுகோபாலுக்கு. ''இறந்து விட்டான் என்று சொல்லு.''

''இறக்க வில்லே; உடைந்துதான் போய் விட்டான்.'' — சாருலதாவின் குரல் நடுங்கியது. உடல் விறைத்துக் கொண்டது. இந்த மாற்றங்களேக் கவனித்த வேணு, மேலே தொடர்வது உசிதமா என்று ஒரு கணம் டாக்டர் என்ற முறையில் தயங்கினன். ஆனல் புதிரை விடுவித்துவிடும் ஆசை கொண்ட மனிதனே வெற்றி பெற்ருன்.

''ஐயோ, பாவம்! யார் அவனே உடைத்து விட்டார்கள் சாரு?''

அவள் கண்கள் பழ ரசத்தின் மேல் பரப்பிலிருந்து இன்னமும் விடுபட வில்லே. அதைத் திரையாகக் கொண்டு என்னென்ன காட்சிகளே மனத்திலிருந்து பிரதிபலிக்கச் செய்து காண்கிருளோ? அவற்றைத் தானும் பார்க்க வேண்டும் என்ற ஆவல் துடிப்பு வேணுகோபாலுக்குக் கட்டுக்கடங்காமல் பெருகிற்று.

''சொல்லு சாரு, யார் உடைத்தார்கள் அவனே?'' அனுதாபக் குரலில் அவன் வற்புறுத்தினன்.

''நானேதான்! தரையில் அடித்து நொறுக்கிப் பொடிப் பொடியாக்கி விட்டேன்! அப்போது என் கையில் பட்ட பலத்த காயத்தின் தழும்புகூட இன்னும் மறையவில்லே.'' சாருலதாவின் கண்கள் கலங்கின; கண்ணீர் முத்துக்கள் திரண்டன.

காயத் தழும்பைக் காட்டச் சொல்லி வேணுகோபால் கேட்கவில்லே. நினேவுக் குவியல்களிலிருந்து சாருலதாவை அவன் சுயநலத்துடன் விடுவிக்காமலேயே விட்டான்; மூழ்கவே அனுமதித்தான்.

''அந்தக் காதலனின் பெயர் என்ன சாரு?''

''கிருஷ்ணன்!''

வேணுகோபாலின் நெஞ்சம் நெகிழ்ந்தது. ''அழகான கண்ணன்... மயில் பீலி... குழலூதும் கரங்கள்....''

''பட்டுப் பீதாம்பரம் அணிந்த பளபளப்பான உடம்பு, இலேசாகப் பம்மிய வயிறு, கதுப்புக் கன்னங்கள், மயக்கும் கண்கள்.... கொள்ளே அழகு அவன்!''

''இந்த ராதை அந்தக் கண்ணனுக்கு என்ன கடிதம் எழுதினள்?''

''ராதை கண்ணனுக்கு என்ன எழுதுவாள்? காதல் கடிதம்தான்!

# உடல் தேய...

ஒவ்வொரு நிமிடமும்
உழைப்பிலே செலவழிகிறது
அவள் உள்ளடங்கிய க்ளூகோஸ்!





களைப்பு என்ருல் உங்கள் உடம்பு
க்ளூகோஸுக்காக ஏங்குகிறது என்றே
பொருள். சக்தியைக் கணநேரத்தில்
மீட்டுத் தருகிறது தூய க்ளூகோஸ்
பவுடராகிய க்ளாக்ஸோஸ்-D

நம் உடம்பிலே சக்தியைத் தோற்றுவிக்கும் 'மூலதனம்'
க்ளூகோஸ். களைப்பு மேலிடும்போது க்ளூகோஸ்
சாப்பிட்டீர்களாளுல் தெம்பு மீளும். பால், பழச் சாறுகள், குடிநீர்
ஆகியவற்றுடன் சேர்த்தோ, நேரடியாகவோ உண்பதற்கு
உகந்தது க்ளாக்ஸோஸ்-D. மறவாதீர்கள், யாவரும் விரும்புவது
இன்சுவையுள்ள க்ளாகஸோஸ்-D.
உடனடியான சக்தி பெற, ஒருசில காசுகளே செலவு!




## க்ளாக்ஸோஸ்-D

க்ளாக்ஸோவின் க்ளூகோஸ் பவுடர்.

dCA-GL 4a tam

வார்த்தை வார்த்தையாக யோசித்து, உருகி உருகி எழுதினுள். நாலு நாள் ஆயிற்று, அதை முடித்துக் கையெழுத்துப் போட. முத்து முத்தான எழுத்துக்களில் அவனுக்கு முத்தம் தந்தாள். சொல் மலர்களால் மாலே கட்டி அணிவித்தாள். எண்ணங்களேத் தன் வடிவமாக்கி அவனேத் தழுவி மகிழ்ந்தாள். தன் கண் வீச்சிலே அவனே மோகிக்கச் செய்தாள் — ஊடல் புரிந்தாள்—சரணுகதி அடைந்தாள்; இன்பத்தின் எல்லேயைக் கண்டாள்....''

''அந்தக் கடிதம்.... அது... என்னவாயிற்று சாரு'' என்று வேணுகோபால் கேட்டு முடிக்கவில்லே; அதற்கு முன்னுல் சாருலதாவின் மேனி ஒரேயடியாக நடுங்க ஆரம்பித்து விட்டது. கண்கள் செருகிக் கொண்டன. தலேயை அவள் இப்படியும் அப்படியுமாக விகாரமாக ஆட்டினுள். ''கிழிக்காதீங்கோ, மாமா! ப்ளீஸ்! கிழிக்காதீங்கோ! நான் இனிமேல் எழுத மாட்டேன் மாமா! அதைத் திருப்பித் தந்துடுங்கோ மாமா! உங்களுக்குக் கோடிப் புண்ணியம்! திருப்பித் தந்துடுங்கோ!.....''

'வீல்' என்று பெருந் துயரத்துடன் கூடிய ஒரு சத்தம்! நல்ல வேளே சாருலதா இதயம் வெடிக்கு முன்னர் மூர்ச்சை அடைந்து விட்டாள். அதிர்ஷ்டசாலி!

விநாடி நேரத்தில் கூட்டம் கூடி விட்டது. ''என்ன? என்ன?'' என்ருர்கள் எல்லாரும்.

''மயக்கம்தான்; விலகி இருங்கள். நிமிஷ நேரத்தில் சரியாகி விடும்'' என்ருன் வேணுகோபால்.

''யாராவது டாக்டருக்கு ஃபோன் செய்யுமாறு ஹோட்டல் மானேஜருக்குச்சொல்லுங்களேன்'' என்ருர் ஒருவர்.

''அவசியமில்லே; நானே டாக்டர் தான். கவலேப்படாமல் உங்கள் காரியத்தைக் கவனியுங்கள்'' என்ருன் வேணுகோபால். சாருலதாவைத் தன் தோளில் சாத்திக் கொண்டு கைக்குட்டையை மேஜை மீதிருந்த குடி நீரில் நனேத்துப் பிழிந்து அவள் முகத்தை ஒற்றினுன்.

''என்ன ஆயிற்று? என்ன நடந்தது?'' என்ருள் சாருலதா கண் விழித்து.

ஐந்து ரூபாய் நோட்டு ஒன்றை மேஜை மேல் வைத்து விட்டுச் சில்லறைக்குக் காத்திராமல் எழுந்தான் வேணு. சாருலதாவை மெல்லப் பற்றி ஆதரவாக அணேத்தபடி காருக்கு அழைத்துச் சென்ருன்.

'சாரு? உன் உடலே இப்போது அணேக்க முடிவது போல் புண்பட்ட உன் உள்ளத்தை என்னுல் அணேத்து ஆறுதல் கூற முடியுமானுல் எவ்வளவு நன்ருக இருக்கும்' என்று நினேத்துக் கொண்டான் வேணுகோபால். 'புண்பட்ட மனத்தில் பழைய நினேவுகள் புழுதியாகப் படிந்து புரையோடிப் போகச் செய்து விட்டிருக்கின்றனவே. நான் டாக்டராக இருந்து என்ன பயன், அதற்கு மருந்து கொடுத்து ஆற்ற முடியாது போனுல்?'

டிரைவர் ஸீட்டில், தன் காரில் அமரப் போனுள் சாருலதா. ''நீ கார் ஓட்டக் கூடிய நிலேயில் இல்லே சாரு. சொன்னதைக் கேள். நான் உன்னே வீட்டில் கொண்டு போய் விட்டு விட்டு டாக்ஸியில் திரும்பி வந்து என் காரை எடுத்துக் கொள்கிறேன்'' என்ருன் வேணுகோபால்.

பலவீனமுற்றிருந்த அவள் பதில் பேசாமல் இடதுபுறம் நகர்ந்துகொண்டாள். வேணு ஓட்ட, கார் பீச் சாலேயை நோக்கிச் சென்றது.

''எக்ஸ்கியூஸ் மி, வேணு! உங்களுக்கு ரொம்பச் சங்கடமாகப் போயிருக்கும். நாலு பேர் மத்தியில்....''

''எனக்கு ஒரு சிரமமுமில்லே. மயக்கமடைந்த நோயாளியை நான் இப்போதுதானு முதல் தடவையாகப் பார்க்கிறேன்!''

''என்னவோ ஒரேயடியாகத் தலேயைச் சுற்றிக் கொண்டு வந்தது. நான் ஏதாவது உளறினேஞு என்ன?''

''இல்லேயே, உண்மைகளேத்தான் சொன்னுய்!''

''எனக்கு மூளேயே இன்று சரியாக இயங்க வில்லே; ஒரே குழப்பமாக இருந்தது வேணு!''

''அறிவு ஸ்டிரைக் செய்யும் போது தான் இதயம் பேசுகிறது! சுய அறி

## தபால் ''தலே'' சிறந்த கிரிக்கெட்



மேற்கிந்தியத் தீவுகளுக்குக் கிரிக்கெட் விளேயாட்டில் எவ்வளவு அபிமானம் பாருங்கள்! கிரிக்கெட் விளேயாட்டுக்கு மதிப்புத் தெரிவிக்கும் வகையில் தபால் தலேகள் வெளியிட்டுள்ளனர்.

படம், செய்தி: ப்ளேஃபேர்
அனுப்பியவர்: 'கேவியெம்'

வுடன் இருந்திருந்தால் இதையெல்லாம் நீ சொல்லி இருக்க மாட்டாய். மனத்துக்குள்ளேயே அடைத்து வைத்துத் திணறிக் கொண்டிருப்பாய்.''

''நான் என்ன சொன்னேன் ?''

''உன் வாழ்க்கையில் நடந்த, அழகாக ஆரம்பித்துத் துயரமாக முடிந்த ஒரு கதையைச் சொன்னாய்! காதல் என்றால் என்ன என்பது புரிந்தும் புரியாமலும் இருக்கிற ஒரு வயது. மென்மையான காதல் உணர்வுகள் மனத்தில் பூக்கின்றன. அப்போது நீ மாயக் கண்ணன் பொம்மையைத்தான் வைத்து விளையாடிக் கொண்டிருந்தாய்.''

''என்னிடம் இருந்த ஒரே பொம்மை அதுதான் !''

''கண்ணன் — ராதை பற்றிய கதைகளைப் படித்ததாலோ கேட்டதாலோ உன்னுடைய காதல் உணர்வுகளும் கண்ணனிடமே திரும்பியிருந்தன. பன்னிரண்டு வயதுப் பெண்....''

''பதின்மூன்று'' என்று திருத்தினாள் சாருலதா.

வேணுகோபால் தொடர்ந்தான் : ''உன்னையே ராதையாகப் பாவித்துக் கொண்டு காதல் ரசம் சொட்டச் சொட்டக் காவியக் கடிதம் ஒன்று எழுதினாய். பரம ரகசியமாக அதை வைத்துக் கொண்டு பல நாள் பாடுபட்டுச் சிறுக்ச் சிறுக யோசித்து எழுதினாய். அடித்துத் திருத்தி எழுதிய கடிதம் முழுமை பெற்று மறு பிரதி எடுத்த தறுவாயில் மாமன் உருவத்தில் ஒரு முரடன், மனித உருவில் ஓர் அரக்கன் வந்தான். மென்மையான உணர்வுகளுக்கு மதிப்பு அளிக்கத் தெரியாத அந்த மடையன் அந்தக் கடிதத்தைப் படித்துவிட்டு ஓஹோஹோ என்று பரிகாசமாகச் சிரித்தான்.''

''சிரித்து விட்டுப் போனாலும் தேவலாமே ! என்னைக் கேலி செய்ய வேண்டும் என்பதற்காக நாலுபேரைக் கூப்பிட்டு உட்காரச் சொல்லி அந்தக் கடிதத்தை எல்லாருக்கும் கேட்க உரக்கப் படித்தான்.'' — சாருலதா விம்மினாள்.

''சாரு! சாரு! அமைதியாக இருக்க வேண்டும் நீ !''

வேணுகோபால் காரைச் சாலை ஓரமாக நிறுத்தினான். ''என்றோ நடந்து போன விஷயம். ஏன் மனத்தைக் கஷ்டப்படுத்திக் கொள்கிறாய் ?''

''என்றோ நிகழ்ந்த எத்தனையோ பல சம்பவங்களை நினைவில் வைத்துக் கொண்டிருக்கிறோமா, வேணு ? வைத்துக் கொள்ளத்தான் முடியுமா? அந்த ராட்சதன் அன்று என்ன சொன்னான் தெரியுமா? 'முழ நீளம் உயர்வதற்குள்ளே காதல் ! காலம் கெட்டுப் போச்சு' என்று சொல்லி, படித்து முடித்த பிறகு அந்தக் கடிதத்தைச் சுக்குநூறாகக் கிழித்துத் துகள்களைப் பறக்க விட்டான். சுற்றிலுமிருந்தவர்களில் ஒருவராவது வாய் திறக்க வேண்டுமே ? கிடையாது! எனக்கு ஆத்திரம் கட்டுக்கடங்காமல் பெருகியது. மாமனை அடிக்கப் போனேன். 'ஏய்! பெரியவங்ககிட்டே கைமிஞ்சப் படாது' என்று என்னைத்தான் கண்டித்தார் அப்பா. மாமா சாண்டோ போல இருப்பான். அடிக்க வந்த என் கரங்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு என்னால் நகர முடியாதபடி செய்தான். 'மாமாகிட்டே கோவிச்சுக்கலாமா கண்ணு ! எங்கே ஒரு முத்தம் கொடு!' என்றான். வயதான தைரியத்தில் அவன் அப்படிப் பேசினான். சூழ்ந்திருப்பவர்களும் மாமன் மருமகளைக் கொஞ்சுவதாகத்தான் எடுத்துக் கொண்டார்கள். ஆனால் அவன் பாசத்துடன் என்னை நெருங்கவில்லை. பண்பு கெட்டுத்தான் அணுகினான் என்பது எனக்கு நன்றாகப் புரிந்தது. க்ஷவரம் செய்யப்படாத அந்த முகம் என் கன்னத்தில் உரசியது. எனக்கு அருவருப்பில் வயிற்றைக் குமட்டியது. முத்தம் தர நான் மறுக்கவே, 'பச்சைப் பிள்ளைங்களுக்குக்கூட இந்தக் காலத்திலே வெட்கம்' என்று சொல்லிக் கொண்டே என்னைக் கட்டிப் பிடித்து முத்தமிட்டான் அவன்.'' சாருலதா அருவருப்புடன் உடலைச் சிலிர்த்துக் கொண்டாள்.

''இப்படித்தான் சில மனிதர்கள் முட்டாள்தனமாக நடந்து கொள்கிறார்கள். கோமளமான ஓர் இதயத்தைப் புரிந்து கொண்டு பரிவுகாட்டுவதற்குப் பதில் அதைக் கசக்கிப் போட்டு விடுகிறார்கள். அசுரத்தனமாக நடந்து கொள்கிற அரை நிமிஷத்தில் அந்தக் குமரியின் எதிர்காலத்தையே பாழடித்து விடுகிறோம் என்பதை அவர்கள் தெரிந்து கொள்வதேயில்லை. அந்த ஒரு நிகழ்ச்சி காரணமாக எத்தனையோ மனப் போராட்டங்களுக்கு அந்தப் பெண் பிற்காலத்தில் ஈடு கொடுத்துத் தவிக்க நேரிடுகிறது !''

''அந்தக் காமாதுரன் மீது காட்ட வேண்டிய ஆத்திரத்தை யெல்லாம் நான் என் அழகான கண்ணன் பொம்மை மீது காட்டினேன். என்னைக் காக்கத் தவறிய காதலனைத் தரையில் அடித்து நொறுக்கி விட்டேன் !''

''ஈ.வெ.ரா. பெரியாருக்குச் சரியான சிஷ்யைதான்'' என்றான் வேணு

ளைத் துயர நினைவுகளிலிருந்து விடுவிக்கும் நோக்கத்தோடு.

கண்ணீர் சிந்தியபடியே சிரித்தாள் சாருலதா. ''குருவுக்கு மிஞ்சிய சிஷ்யை. அவர் இன்று சொல்வதை அன்றே செய்து காட்டியவள்!'' — அவள் தன் இடது உள்ளங் கையைப் பார்த்துக் கொண்டாள். தெரு விளக்கின் ஒளி காருக்குள் மங்கலாகத்தான் வீசியது என்றாலும் தழும்பு தெளிவாகத் தெரிந்தது. ''பொம்மையை உடைத்தபோது காயம் பட்டுப் புரையோடிப் போயிற்று. ஆறுவதற்கு ஒரு மாதம் பிடித்தது.''

வேணுகோபால் வலது ஆள் காட்டி விரலால் அந்தத் தழும்பை மெல்லத் தடவினான். பிறகு கரத்தைப் பின்னுக்கு இழுத்துக் கொள்ளாமல் அந்த உள்ளங்கையிலேயே கிடக்க அனுமதித்தான். அவன் இடக்கரம் கார் ஸீட்டின் முதுகு மேல் நீண்டிருந்தது.

''சாரு! மனத்துக்குள்ளேயே வைத்து வேதனைப்பட்ட ஒரு விஷயத்தை இன்று என்னிடம் சொல்லி விட்டாய். இனி உன் உள்ளம் இலேசாகி விடும். நிம்மதியாக இருக்கலாம் நீ!''

''எனக்கு ஏது நிம்மதி?'' என்றாள் சாருலதா, இன்னும் பத்து நாட்களில் வந்து நிற்கப் போகிற மஹிமாவையும் சந்திரபாலையும் நினைத்துக் கொண்டு. ''இவ்வளவு தூரம் நான் உங்களிடம் இன்று பேசியதே எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது.''

''அது உண்மைதான் சாரு. இதை நானும் எதிர்பார்க்கவில்லை. யதேச்சையாக நடந்து விட்டதுதானே இந்த நிகழ்ச்சி? ஆமாம், என்னை எதற்காக போல்ஸ்டார் ரெஸ்டாரெண்டுக்கு வரச் சொன்னாய்? அதை மறந்தே விட்டோமே நாம்?''

''ஆமாம், எதற்காக வேணுவைச் சந்திக்க விரும்பினேன்?' என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டாள் சாருலதா. மனசுக்குள்ளேயே பேசினாள். 'நான் பிளாக் மெயில் செய்யப்படுவதைக் கூறவா? அதை எவ்வாறு சொல்லி யோசனை கேட்க முடியும்? 'எதற்காக உன்னை பிளாக் மெயில் செய்கிறார்கள்?' என்று வேணு கேட்டால் என்ன பதில் சொல்வது?'

''சில தினங்களுக்கு முன்னால், நீங்கள் சொன்னீர்கள் அல்லவா, உங்களிடமிருந்து நான் தெம்பு பெறுவதாக; அது உண்மைதானா என்று பரீட்சித்துப் பார்க்கத்தான் உங்களை ஃபோனில் கூப்பிட்டேன்!''

''பரிசோதனையின் முடிவு?''

''உங்களுக்கு நூற்றுக்கு நூறு மார்க்! இன்று சாயங்காலம் உங்களைச் சந்தித்துப் பேசலாம் என்பது உறுதியானதும் பேஜை 'மேல் மலையாகக் குவிந்திருந்த வேலைகளை விடுவிடு என்று முடித்து விட்டேன். சோர்வெல்லாம் இருந்த இடம் தெரியாமல் ஓடி விட்டது.''

''அப்படியானால் நாளைக்கு கன்சல்டிங் ஃபீஸ், கோரி உனக்கு ஒரு பில் அனுப்பி வைக்க வேண்டியதுதான்'' என்று கூறியபடியே காரைக் கிளப்பினான் வேணு. அவளது உள்ளங்கைத் தழும்பை ஸ்பரிசித்துக் கொண்டிருந்த தன் வலது கரத்தை நீக்கி அந்தக் கரத்தாலேயே ஸ்விட்சைப் போட்டு இஞ்சினையும் இயக்கிக் காரைச் செலுத்தினான். இடது கரம் பின்புறம், சாருலதாவின் சிரத்தைத் தாங்கிக் கொண்டிருந்தது இப்போது.

''எதற்கு பில்? தண்ணீரை அள்ளி முகத்தில் தெளித்ததற்கா? ஒரு மருந்து கூட எழுதித் தரவில்லை; டாக்டர் ஃபீஸ் வேறா? நான் ஒன்றும் அவ்வளவு ஏமாந்தவளல்ல!'' — பேசுகையில் அவளுக்கு இமைகள் கனத்தன; நாக் குளறியது; தலை சாய்ந்தது.

''மருந்துச் சீட்டு எதற்கு? நானேதான் உனக்கு டானிக்காகப் பயன் படுகிறேன் என்று நீயே ஒப்புக் கொண்டு விட்டாயே சாரு!''

இதற்குப் பதிலாகச் சாருலதாவிடமிருந்து ஒரு நீண்ட பெருமூச்சுத்தான் பிறந்தது. ஆடி விழுந்த அவள் தலை அவன் தோளில் ஒண்டிக் கொண்டது. வேணு சாலையிலிருந்து பார்வையைத் திருப்பி ஒரு கணம் அவள் முகத்தைப் பார்த்தான். அவள் மனத்துக்கு இன்று ஏற்பட்டிருந்த சிரமங்கள் காரணமாக அவள் சோர்வுற்று, இப்போது ஏதோ பாதுகாப்பு பெற்று விட்டதுபோலக் கவலையின்றிக் குழந்தையாகத் தூங்கிக் கொண்டிருந்தாள்.

வேணு மென்னகை புரிந்து காரை மெதுவாகவே ஓட்டி, அந்த இனிய நேரத்தைத் தன்னால் ஆனவரை நீடிக்கச் செய்தான்.

(தொடரும்)



இரு வீடுகளில் கொல்லைப்புற கிணறுகள் அருகருகே இருந்தன. தாம்புக் கயிறுகளில் கட்டப்பட்ட வாளிகள் ஒன்றோடொன்று பேசிக் கொண்டன.

''என்னைத் தண்ணீரால் நிரப்பியவுடனேயே தண்ணீரை எடுத்துக் கொண்டு காலி செய்துவிடுவார்களே என்று வருந்துகிறேன்'' என்றது முதல் வாளி.

''காலி செய்வது மீண்டும் நிரப்புவதற்காகத்தானே என்று நான் சந்தோஷமல்லவோ அடைகிறேன்'' என்றது இரண்டாம் வாளி.

— மணி

## அத்தியாயம் 18

# கமலாவின் கல்யாணம்

"ராமலிங்கம் வந்திருக்கிறார். அழைத்து வரட்டுமா?'' என்று சாரங்கன் டெலிபோனில் கேட்டான்.

''ராமலிங்கமா? யார் அது, ராமலிங்கம்?'' என்று பதில் கேள்வி தொடுத்தாள் சாருலதா.

''இதோ வருகிறேன் நான்'' என்று கூறி ஃபோனைக் கீழே வைத்தான் சாரங்கன். பிறகு எதிரே யிருந்த ராமலிங்கத்தைப் பார்த்து, ''ஸார்! ஐந்து நிமிஷங்கள் பொறுத்துக் கொள்ளுங்கள். ஏதோ முக்கிய காரியமாம். உடனே வரச் சொல்கிறாள் சாரு. அதை முடித்துக் கொண்டு வந்து உங்களை அவளிடம் அழைத்துப் போகிறேன்'' என்றான். ''இந்தாருங்கள் லைஃப் மாகஸீன் பார்க்கிறீர்களா?'' என்று சொல்லி நாலைந்து இதழ்களை அவர் அருகில் வைத்தான். ''கோவிந்த்! கோவிந்த்!'' என்று அழைத்தான். பியூன் வந்ததும், ''ஸாருக்கு ஒரு ஃபான்டா கொண்டு வந்து கொடு சீக்கிரம்'' என்றான். ராமலிங்கத்தைப் பார்த்து, ''ஏன் ஸார்! ஐஸ்ஸில் வைத்ததாக இருக்கலாமில்லையா ?'' என்று கேட்டான்.

ராமலிங்கம் கையிலிருந்த பத்திரிகையைப் புரட்டியபடியே அலட்சியமாகத் தலையாட்டினார்.

சாரங்கன் அவசரம் அவசரமாகச் சாருலதாவின் அறைக்கு நடந்தான்.

''என்ன சாரு, என்னை இப்படிச் சங்கடத்தில் மாட்டி விடுகிறீர்கள்? ராமலிங்கம் என் எதிரிலேயே உட்கார்ந்திருக்கிறார். யார் அது ராமலிங்கம் என்று கேட்டால் எப்படிப் பதில் சொல்வது?''

மீண்டும் அதே வினவைத்தான் எழுப்பினாள் சாருலதா.

''உங்கள் தம்பியை மாப்பிள்ளையாக்கிக் கொள்ளப் போகிறாரே, அந்த ராமலிங்கம்தான்.''

''ஓ, அவரா ! என்ன வேண்டுமாம், அவருக்கு?''

சாரங்கனுக்குத் தலையில் அடித்துக் கொள்ளத் தோன்றியது. நெற்றியைத் தடவிக் கொடுப்பதுடன் திருப்தி அடைந்தான்.

''அவருக்கு என்ன வேண்டும்; பெண்ணின் கல்யாணம் நடக்க வேண்டும். ஓரே கோபமாய் இருக்கிறார். ஐஸ் வைத்துவிட்டு வந்தேன்.''

''சாரங்கன் ! எனக்கு ஓர் உதவி பண்ணுங்கள். இப்போதைக்குக் கல்யாணப் பேச்சு வேண்டாம் என்று




சொல்லி அவரை அனுப்பிவிடுங்கள். ஒரு மாதம் கழித்து வந்து பார்க்கட்டும்.''

சாரங்கன் பிரமித்துப் போனான். கொஞ்ச நாட்களாகவே சாருலதா சரியாக நடந்து கொள்ளவில்லை என்பது அவனுக்குத் தெரிந்துதான் இருந்தது. அந்தத் தடியர்கள் மஹிபாலும் சந்திரபாலும் தலையைக் காட்டியதிலிருந்தே சாருலதாவின் மனம் பாழாகி விட்டது. ஆனால் இந்த அளவுக்கா !

'' சாரு ! தயவுசெய்து கொஞ்சம் யோசிக்க வேண்டும், நீங்கள். இதென்ன வியாபாரப் பொருளா, 'இப்போ சரக்குத் தேவையில்லை, அப்புறமா வா' என்று சொல்ல ?''

''சாரங்கன், என்னை ஏன் தொந்தரவு செய்கிறீர்கள்? காண்ட் யூ ஸீ ஐ ஆம் பிஸி ?''

''ஆர் யூ, ரியலி?''

''என்ன சந்தேகம் வந்து விட்டது, உங்களுக்கு?''

''நீங்கள் கோபிக்காமல் இருந்தால் சொல்கிறேன். முன்பெல்லாம் பம்பரம் போல் இயங்குவீர்கள். அந்த வேகத்தைத் தாக்குப் பிடிப்பதே எங்களுக்குக் கஷ்டமாக இருந்தது. இப்போ நாளுக்கு நாள் உங்கள் மேஜையின்மேல் வேலை குவிகிறது !''

''நாள் முழுவதும் இங்கேயேதானே அடைந்து கிடக்கிறேன் நான்? வேலைகள் முன்னைவிட இப்போது அதிகம்; அதற்கென்ன செய்ய?''

''சாரு! எனக்கு நீங்கள் சால்ஜாப்பும் சமாதானமும் சொல்ல வேண்டிய நிலைக்கு வந்து விட்டீர்கள்! பாழாய்ப்போன அந்த மஹிபாலும் சந்திரபாலும் இந்த அளவுக்கு உங்களைத் தாழ்த்தி விட்டார்கள்!''

சாருலதா திகைத்துப் போனாள். கோபமும் வந்தது. ''நெருப்புடன் விளையாடுகிறீர்கள்!'' என்றாள் அவள் சூடாக.

''நெருப்பாகத்தான் இருந்தீர்கள், சாரு! ஐந்து மணிக்கு மேல் இங்கு யாராவது உட்கார்ந்திருந்தால் கோபித்துக் கொள்வீர்களே, ஞாபகம் இல்லையா? ஆபீஸ் நேரத்தில் அரட்டை அடித்துவிட்டு அப்புறம் ஓவர்டைம் செய்வது போல் காட்டிக் கொள்வானேன் என்று சீறி விழுவீர்கள்!''

''இன்று நான் அரட்டையும் அடிப்பதில்லை; வேலைகளையும் கவனிப்பதில்லை என்கிறீர்கள். உண்மைதான். உங்களிடம் மறைப்பானேன்? எனக்கு ஃபைலைத் தொடவே பிடிக்கவில்லை. எந்த வேலையை முதலில் கவனிப்பது என்றே புரியவில்லை.''

''முதல் காரியமாக ராமலிங்கத்தை மரியாதையாக வரவேற்று நல்லபடியாக நாலு வார்த்தை பேசி அனுப்புங்கள்.''

''குடும்ப விவகாரத்தைக் காரியாலயத்தில் வைத்துப் பேசுவானேன்? வீட்டுக்கு வரச்சொல்லுங்கள்.''

''சாரு! வீட்டுக்கும் ஆபீஸுக்கும் நீங்கள் பந்தாடக்கூடிய மனிதரா இவர்? சம்பந்தியாகப் போகிறவர். குணாவின் வருங்கால மாமனார்!''

''சரி, வரச் சொல்லுங்கள்'' என்றாள் சாருலதா அரை மனத்துடன்.

''ப்ளீஸ் சாரு'' என்று வற்புறுத்தும் குரலில் கூறிக் கெஞ்சுவதுபோல் முகத்தை வைத்துக் கொண்டான் சாரங்கன், அவர் வரும்போது விநயமாக நடந்து கொள்ள வேண்டும் என்று சொல்லாமல் சொல்பவனாக.

''டோண்ட் வொர்ரி, ஐ ஆம் ஆல் ரைட்'' என்றாள் சாருலதா, ஒரு சோகப் புன்னகையுடன்.

*　　　*　　　*

ராமலிங்கம் வந்து உட்கார்ந்தார். ''நாள் பார்க்கச் சொன்னீங்க; நானும் தேதியைக் குறித்துக் கொடுத்துட்டேன். ஆனா......''

''ஏற்பாடுகள் எதையும் கவனிக்கவில்லையே என்று யோசிக்கிறீர்களா? அந்தக் கவலையே உங்களுக்கு வேண்டாம். இன்னும் ஒரு மாதம் இருக்கிறதே. நமக்கென்ன பணமா, படையா எதற்குப் பஞ்சம்? சாரங்கன் இருக்கிறார், 'கமாண்டர் இன் சிப் ஆஃப் கல்யாணம் அரேன்ஜ்மெண்ட்ஸ்'!'' சாருலதாவின் சிரிப்பு செயற்கையாக ஒலித்தது. ராமலிங்கமோ போனால் போகட்டும் என்பதற்காகக்கூடச் சிறிதும் சிரிப்பைச் சிந்தவில்லை.

அந்த விநாடியில் சட்டென்று சாருலதாவுக்கு ஒரு யோசனை உதித்தது. கல்யாணச் செலவுகளைக் கூடுதலாகக் கணக்குக் காட்டிப் பத்தாயிரமோ இருபதாயிரமோ மிச்சம் பிடித்துத் தனியாக எடுத்து வைக்கலாம். அதை என்னைப் பிடித்திருக்கும் இரட்டைச் சனியன்களுக்குக் கொடுத்து அழலாம். அவர்களுக்குத்தான் எவ்வளவு கொடுத்தாலும்போதாதே! அதற்கு அவ்வப்போது இப்படிக் கறுப்புப் பணம் தயாரித்து வைத்துக் கொண்டால்தானே உண்டு!

ராமலிங்கம் சொல்லிக் கொண்டு போனார்: ''இதோ பாருங்க. என் பெண்ணைக் கல்லூரியிலே படிக்க வைச்சபோதே உறவுக்கார மனுஷங்க அதெல்லாம் எதுக்குன்னுங்க. அப்புறம் உத்தியோகத்துக்குப் போகிறதாகவும் கமலா சொல்லவே எல்லாரும் மறுபடியும் முகத்தைச் சுழிச்சாங்க. நான்தான் ஒரே பெண்ணுங்கிற பாசத்திலே சம்மதம் தெரிவிச்சுட்டேன். பிறகு ஒரு நாள், 'யாருடா அவன் உன் பெண்ணைச் சுற்றிக்கிட்டுத் திரியறானமே?'ன்னு கிண்டலும் கேலியுமா வார்த்தைகளை என் காதில் போட்டாங்க. நான் அவங்களைப் பகைச்சுக்கிட்டேன். ஆனால் அப்போதும் எனக்குக் கமலா பேரிலே வருத்தம் ஏற்படவில்லை. பிடிச்சவனைக் கட்டிக்கிட்டுச் சந்தோஷமாக இருக்கட்டுமேன்னு நெனச்சேன்.''



''அதுதான் சரி, இந்தக் காலத்திலே பிள்ளைங்களை அதது மனசுப்படி விடறது தான் நல்லது.''

'' அப்படித்தான் நானும் எண்ணினேன். ஆனால் இப்போ அது தப்புன்னு தோணுது.''

''ஏன் ?''

''நாள் பார்த்து ஜோஸியர் குறிச்சுக் கொடுத்த முகூர்த்தத்திலே கல்யாணம் நடந்துட்டா சந்தோஷம்தான். ஆனால் அது நடக்காதுபோலிருக்கே. உங்க தம்பி உங்க வீட்டோடு இல்லையே?''

''ஆமாம். தனி அறை பார்த்துப் போய் விட்டான்.''

''பக்கத்தில் இருக்கிற போதே உங்க பேச்சைக் கேட்க மாட்டான்.... இனி மேலா?.....''

'' எனக்கு இருக்கிற பிடிவாத குணத்திலே பாதிப் பங்காவது என் தம்பிக்கு இருக்காதா ?''

''இப்படிப் பேசிட்டா போதாது. உங்களுக்கு இதிலே பொறுப்பு உண்டு. பெரிய மனுஷங்க; நாணயமா நடந்துக்குவாங்கன்னு நம்பிக்கிட்டுத்தான் குணுவை அடிக்கடி வீட்டுக்கு வந்து போக அனுமதிச்சேன். நீங்க ஒரு நாள் என் வீட்டு வாசல்லே காரிலே வந்து இறங்கறதையும் வெள்ளித் தட்டு, பட்டுப் புடவை சகிதம் உள்ளே நுழையறதையும் அக்கம் பக்கத்திலே வசிக்கிறவங்க பார்த்திருக்காங்க. இந்தக் கல்யாணம் நடக்காமல்போனால் அப்புறம் நான் தெருவிலே தலைகாட்ட முடியாது. கமலாவுக்கு வேறு இடத்திலே மாப்பிள்ளை தேடுவதும் சாத்தியப்படாது.''

''ராமலிங்கம், கவலைப்படாதீங்க! ஜோஸியர் குறிப்பிட்ட முகூர்த்தத்தில் குணுவுக்குக் கல்யாணம் நடக்கிறதோ இல்லையோ, கமலாவுக்குக் கல்யாணம் நடக்கும். நான் அதற்கு ஜவாப்தாரி'' என்றாள் சாருலதா.

சாரங்கனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. ஆனால் ராமலிங்கம் கலங்கவில்லை. இந்த அளவுக்கு உறுதிமொழி பெற்றதே அவருக்குத் திருப்திதான் என்பதுபோல் காணப்பட்டார்.

''கமலா குணசீலனுக்காகக் காலமெல்லாம் காத்திருப்பேன் என்கிறாள். ஆனால் எனக்கு அந்தமாதிரி லட்சிய நோக்கமெல்லாம் பிடிக்காது. நியாயமான அளவுதான் பொறுத்திருக்கலாம். வயசு வந்தவளைக் கட்டிக் கொடுக்காமல் எத்தனை காலம் வீட்டோடு வைத்துக் கொண்டிருப்பது?''

கலக்கத்தினூடே ஏற்பட்ட நிம்மதியுடன் விளங்கினாள் சாருலதா. கல்யாணத்தைச் சாக்கிட்டு மஹிபால சந்திர



# டிவிஎஸ் கட்டும் பாடிகள் பலவகையான டிசைன்களை உங்களுக்கு அளிக்கிறது



ஒவ்வொரு பாடியையும் ... சோதனைகளுக்குப் பின்னரே டெலிவரி செய்கின்றனர்

நீங்கள், டிவிஎஸ்ஸின் பஸ் பாடி கட்ட ஆர்டர் கொடுத்தால் அவர்களுடைய பாடி கட்டும் தொழிலின் 45 ஆண்டு பழுத்த அனுபவத்தின் பயனையும் அடைவீர்கள்.

டிவிஎஸ் — இந்தியாவிலேயே மிகப்பெரிய பாடிகள் கட்டும் ஸ்தாபனம்.






உங்கள்
நம்பிக்கைக்குரியது
டிவிஎஸ்

**சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிமிடெட்**
மதுரை (இது ஒரு டிவிஎஸ் ஸ்தாபனம்)

SI-5300

பாலுக்காக இருபது என்ன, முப்பது, நாற்பதுகூடக் கறுப்புப் பணம் தயார் பண்ணிவிடலாம். நாலு தவணைகளுக்கு ஆயிற்று. மலை போன்ற பிரச்னைகள் நெஞ்சை அழுத்துகையில் மூச்சுவிட விநாடிப் போது அவகாசம் கிடைத்தால் கூட 'அப்பாடா' என்றுதானே இருக்கிறது ?

''ராமலிங்கம்! உங்கள் யதார்த்தப் போக்கு எனக்கு ரொம்பப் பிடித்திருக்கிறது. குணுவுக்கும் கமலாவுக்கும் கல்யாணம் நடந்தால் கொஞ்சமாகவா சந்தோஷப்படுவோம்? ஆனால் குணுவின் பிடிவாதம் நீடித்தால் நீங்கள் அதற்காகப் பயப்படாதீர்கள். நான் விரலைச் சொடுக்கினால் போதும், கமலாவைக் கட்டிக் கொள்கிறேன் என்று 'கியூ'வில் வந்து நிற்பார்கள். சுயம்வரமே நடத்தலாம். எப்படியானாலும் கமலா ராணியாட்டமா வாழ்வாள். அவளை என் தங்கையா நினைச்சு நானே கல்யாணச் செலவை ஏற்றுக் கொள்கிறேன்.''

ராமலிங்கம் விடைபெற்றுச் சென்ற பிறகு சாரங்கன் கேட்டான்: ''எங்கே கொஞ்சம் விரலைச் சொடுக்குங்கள், பார்ப்போம் ?''

''ஏதோ பேச்சுக்குச் சொன்னேன்; இப்போதைக்கு அவர் இங்கிருந்து கிளம்பினால் சரி என்று.''

''முகூர்த்த நாள் நெருங்கிக் கொண்டிருக்கிறதே !''

திடும்மென்று எதையோ நினைத்துக் கொண்டவளாக அவள் சாரங்கனை ஏறிட்டு நோக்கி இமைகளைப் படபடத்தாள். '''சாரங்கன்! எனக்காக நீங்கள் ஒரு பெரிய உதவி செய்ய வேண்டும்.''

''என்ன?''

''கமலாவை நீங்கள் கல்யாணம் செய்து கொண்டு விடுங்கள்.''

சாரங்கன் விழித்தான். பிறகு சிரித்தான். ''ஜோக் என்றால் முன்னாடியே சொல்லி விட்டால் தேவலை. சிரிக்காமலிருந்து உங்களை அதிருப்திக்குள்ளாக்க நான் விரும்பவில்லை.''

''நோ, நோ ! இதை நீங்கள் ஹாஸ்யமாகக் கருதினால்தான் எனக்கு அதிருப்தி ஏற்படும். கமலா தங்கமான பெண். அடக்கம், குடும்பப் பாங்கு எல்லாம் உள்ளவள். உங்களுக்கு ஏற்ற மனைவியாகத்தான் விளங்குவாள்.''

சாரங்கனுக்குக் கோபம் வந்தது. ''ஆர் யூ அவுட் ஆஃப் யுவர் மைண்ட்?'' என்று பளிச்சென்று கேட்டுவிட்டு அறையை விட்டு வெளியேறினான்.

## அத்தியாயம் 19

# நட்பு நிலைக்குமா?

கடிகார உற்பத்தியில் நிபுணர்களான சில ஜப்பானியர்களுக்குக் கன்னிமாரா ஹோட்டலில் சாருலதா கொடுத்த விருந்து உபசாரத்தின்போது அவளைப் பாராட்டாதவர் கிடையாது. விருந்து களை கட்டிவிட்டது. ஆனால் சாருலதாவின் முகம் களை இழந்துதான் காணப்பட்டது.

''ஒப்பந்தத்தில் ஒரு ஷரத்து பற்றிக் கேள்விப்பட்டேன் சாரு ! மாஸ்டர்ஸ்ட்ரோக்!'' என்றார் ஒருவர்.

''என்ன அது? விவரமாகச் சொல்லுங்கள்!'' என்றார் இன்னொருவர்.

''உங்களுக்குத் தெரியாதா?'' என்று ஆரம்பித்தார் மூன்றாவது ஆசாமி. ''டோஹோ கம்பெனிக்கு இங்கு உருவாகியுள்ள தொழிலகத்தின் மூலதனத்தில் நாற்பது சதவிகிதம் பங்குகள் உள்ளன. அது தவிர அவர்களுடைய பெயரைப் பயன்படுத்திக் கொள்வதற்கு ராயல்டியும் நிபுணர்களை அனுப்பி உதவியதற்காக ஒரு தொகையும் அவர்களுக்குத் தர வேண்டும். இந்த இடத்தில்தான் சாருலதாவின் ஜீனியஸ் வேலை செய்திருக்கிறது.''

அவர் விட்ட இடத்தில் வேறொருவர் பிடித்துக் கொண்டு தொடர்ந்தார் : ''ராயல்டியையும் நிபுணர்களுக்கான பணத்தையும் இங்கு தயாராகும் கடிகாரங்களாகவே டோஹோ கம்பெனிக்குத் தந்துவிடுவதாக ஒப்பந்தம்.''

''ஒண்டர்ஃபுல்! அந்நியச் செலாவணி மிச்சமாகுமே ஏராளமாய் !''

''அது மட்டுமில்லை, சுவாமி! பணமாக ஜப்பானுக்குக் கொண்டு போக முடியாது; கடிகாரங்களைத் தான் எடுத்துச் சென்று விற்றுக் கொள்ள வேண்டும் என்று ஏற்பட்டதால் இங்கு தயாராகும் கடிகாரங்களின் தரத்தில் அவர்கள் அதிக சிரத்தை காட்டுவார்கள்!''

''ஜப்பானில் தயாராகும் கடிகாரங்களைப் போலவே அதே அளவு சிறப்பாக இங்கும் கடிகாரங்கள் உற்பத்தியாக வேண்டும் என்ற நிர்ப்பந்தமே அல்லவா ஏற்பட்டு விட்டது !''

''கரெக்ட்! சாருலதாவைத் தவிர வேறு யாருக்கு இப்படியெல்லாம் யோசனை தோன்றும்!''

ஒரு பக்கமாகக் கையில் தக்காளிப் பழ ரசம் நிரம்பிய கோப்பையுடன் நின்று கொண்டிருந்த சாரங்கனுக்குப் பெருமிதம் கலந்த வேதனையில் கண்கள் பனித்தன. 'இத்தனை திறமையுடனும் சாமர்த்தியத்துடனும் நடந்துகொண்ட அதே சாருலதாதான் கொஞ்ச நாட்களாக அவசியமான எந்தக் காரியத்தையும் கவனியாமல் ஒத்திப் போடுகிறாள்; வேண்டாத விஷயங்களில் தலையிட்டுத் தவற்றுக்கு மேல் தவறு செய்கிறாள் — பிறகு அமைதியிழந்து தவிக்கிறாள்; ஏதாவது சொல்லப் போனாலோ சீறி விழுகிறாள்!'

அவன் இப்படி நினைத்த மறுவிநாடி. சாருலதா அவன் எதிரே நின்றாள். ''அதெப்படி நீங்கள் வேணுவுக்கு ஞாபகப்படுத்தாமல் இருந்தீர்கள்?'' என்று எரிச்சலுடன் கேட்டாள்.

''நான் சொன்னேனே! நீங்களே அவரை அழைத்திருப்பதாகக்கூட அவர் என்னிடம் தெரியப்படுத்தினரே!''

''அதை யார் கேட்டார்கள்? இன்றைக்கு அவருக்கு நினைவுபடுத்தியிருக்க வேண்டும் நீங்கள்!''

''டைரியில் குறித்துக் கொண்டு விட்டதாக அவர் சொன்னர்.''

''உங்கள் கடமையைச் செய்யாமல் அவர் பேரில் ஏன் பழியைப் போடுகிறீர்கள்? அவருக்கு டயரியைப் பிரித்துப் பார்க்கவே ஞாபகமிராது!''

சாரங்கன் கோபத்தைக் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டான். அனுதாபம் பொங்கிச் சீற்றத் தீயைத் தணித்தது அவ்வப்போது. ''இதோ ஃபோன் பண்ணிவிட்டு வருகிறேன்'' என்றான்.

''நானே பேசலாம் என்றால் சதா நாலு பேர் சுற்றி நிற்கிறார்கள்.''

சாரங்கன் தன் கோட்டுப் பையிலிருந்து ஒரு சாவியை எடுத்துச் சாருலதாவிடம் தந்தான். ''ஒருவேளை உங்களுக்கு உபயோகப்படலாம் என்று இன்றைக்கு மட்டும் ஒரு ரூம் ரிஸர்வ் செய்திருக்கிறேன். ஸெகண்ட் ஃப்ளோர்—நெம்பர் இருபத்திநாலு. போய் ஃபோன் செய்துவிட்டுக் கொஞ்சநேரம் ரெஸ்ட் எடுத்துக் கொண்டு வாருங்கள். விருந்தினர்களை நான் கவனித்துக் கொள்கிறேன்.''

நன்றி நிலவிய கண்களால் அவனைப் பார்த்து ஏதோ கூற வாயெடுத்தாள் சாருலதா. சாரங்கன் முந்திக் கொண்டான். ''பாராட்ட நினைத்தால் அதை லில்லியிடம் சொல்லுங்கள். அவளுடைய யோசனைதான் இது. ஒரு பெண்ணின் தேவைகளை இன்னொரு பெண்தானே உணர முடியும்?''

களை இழந்திருந்த சாருலதாவின் முகம் மேலும் வெளிறியது. ''அவள் பெயரை எதற்கு இப்போது இழுக்கிறீர்கள்?''

''அவசியம் நேர்ந்ததால்தான். நீங்கள் அவளை இன்று காலையில் வந்ததும் வராததுமாய் வறுத்தெடுத்துவிட்டதில் அவள் மனமுடைந்து போயிருக்கிறாள். என்னிடம் சொல்லி வருத்தப்பட்டுக் கொண்டாள். ஆனாலும் உங்களிடம் உள்ள பிரியத்தினால் இந்த யோசனையையும் அவள் என்னிடம் கூறத் தவறவில்லை.''

''பரிவு, பரிதாபம், அன்பு எதுவும் எனக்குத் தேவையில்லை. அதையெல்லாம் இடைஞ்சலாகவே கருதுகிறேன். புரிகிறதா?'' அவள் குரல் உயர்ந்தது. நாலு தலைகள் திரும்பிப் பார்த்தன. சாரங்கனுக்குச் சங்கடமாகப் போயிற்று.

''இரண்டாவது மாடி, இருபத்திநாலாம் நெம்பர் அறை'' என்று கூறிவிட்டு நகர்ந்தான்.

* * *

டெலிபோனில் வேணுகோபாலின் குரல் கேட்டதும் சாருலதா சொன்னாள்: ''வேணு! உங்களுக்கு என்னைப் பிடிக்கவில்லை என்றால் தெளிவாகச் சொல்லிவிடலாம். இதுபோன்ற சின்னச் சின்ன வேதனைகளைத் தவிர்க்கலாம், பாருங்கள்!''

''நீ கோபித்துக் கொள்வதில் நியாயம் இருக்கிறது சாரு. ஆனால் நான் என்ன செய்யட்டும்? புறப்படும் சமயத்தில் அம்மா முனகிய சத்தம் கேட்டது. கிட்டத்தில் போய்ப் பார்த்தால் உடம்பு கொதித்தது. மூட்டுக்கு மூட்டு வலிக்கிறது என்கிறாள். மருந்து கொடுத்திருக்கிறேன். இங்கு ஏன் என்று கேட்க ஆள் கிடையாது.''

''சொல்லி வைத்தாற்போல் நீங்கள் பார்ட்டிக்குக் கிளம்பும் நேரத்தில் உங்கள் அம்மாவுக்கு உடம்புக்கு வந்துவிட்டதாக்கும்!''

''சாரு, நீ என்னை நம்ப வேண்டும். இப்பொகூட நான் டின்னர் ஸூட்டும் பௌடையுமாகத்தான் நிற்கிறேன்.''

''டெலிவிஷனை நம் நாட்டுக்கு இன்னும் முழுசாக வராதபோது டெலிவிஷனுடன்கூடிய டெலிபோன் உற்பத்தி இப்போதைக்கு ஏது? ஃபோனில் எதையும் நீங்கள் துணிந்து பேசலாம் நான் நம்ப வேண்டியதுதான்!''

''சாரு! நீ பேசுவது அழகாயில்லை.''

''தவறெல்லாம் என்னுடையதுதான் வேணு. உங்களுக்கு என் நடவடிக்கைகள்

பிடிக்கவில்லை; நான் வளைய வருகிற சூழ்நிலை பிடிக்கவில்லை; முன்னுக்கு வர வேண்டும் என்கிற என் ஆர்வத்தை உங்களால் புரிந்து கொள்ள முடிய வில்லை. அப்படி இருக்கும்போது நம் மிடையே நட்பு மட்டும் நீடிக்க வேண் டும் என்று நான் எண்ணுவது முட்டாள் தனம்தானே? அதுவும் போல்ஸ்டார் ரெஸ்டாரெண்டில் அன்று நான் தாறு மாறாக நடந்து கொண்டு உங்களை ரொம்பச் சங்கடப்படுத்தி விட்டேன். மறுபடியும் நாலு பேர் மத்தியில் எனக் குக் கிறுக்குப் பிடித்துவிட்டால் உங்க ளுக்குத் தொல்லையாகத்தானே இருக் கும்?'' அடக்கமாட்டாமல் அழுதுவிட் டாள் அவள்.

''சாரு, உனக்கு உடம்புக்கு என்ன?'' கலவரத்துடன் கேட்டான் வேணு.

''நான் வேணுவைத்தான் கூப்பிட் டேன்; டாக்டரை அழைக்கவில்லை!'' என்று சொல்லி ஃபோனை வைத்துவிட் டாள் சாருலதா.

* * *

**ப**க்கத்து வீட்டுக்கார அம்மாள் தன் வேலைகளை வேணுகோபால் துரிதப்படுத் தியதன் பேரில் அவசரம் அவசரமாக முடித்துக் கொண்டு வந்து மீனாட்சி அருகே அமர்ந்தாள். அவளிடம் தன் தாயாரை எப்படிக் கவனித்துக்கொள்ள வேண்டும், எப்போது எந்த மருந்தைக் கொடுக்க வேண்டும் என்று ஒரு தடவைக்கு இரண்டு தடவையாகச் சொன்னான் வேணுகோபால். அதைத் திருப்பிக் கூறச் சொல்லி அவள் சரி யாகப் புரிந்து கொண்டிருக்கிறாள் என் பது நிச்சயமானதும் கிளம்பினான்.

ஹோட்டல் கன்னிமாராவில் விருந்து நடைபெற்ற விசாலமான அறைக்கு அவன் வந்து சேர்ந்தபோது அது அநேகமாக முடியும் தறுவாய்க்கு முன் னேறி விட்டிருந்தது. வேணுகோபா லிடம் டெலிபோனில் பேசியபிறகு தான் அழுதது தெரியாதிருக்க வேண்டிய ஒப்பனைகளைச் செய்து கொண்டு வந் திருந்தாள் சாருலதா. ஆயினும் அவள் முகம் மெல்லியதொரு மேகத்தால் மறைக்கப்பட்ட முழு நிலவாகத்தான் விளங்கியது. ஆனால் வேணுகோபால் அந்த அறைக்குள் அடியெடுத்து வைத்த தும் இனி நம் ஜம்பம் சாயாது என்று எண்ணியதுபோல் துயரைத் தேக்கிய அந்த மேகப் படலம் மரியாதையுடன் விடைபெற்றுக் கொண்டது.

'' வாருங்கள், வேணு !'' என்று எழுந்து போய் வரவேற்று முக்கியமான வர்கள் அமரும் மேஜையின் அருகே அழைத்துப் போனாள் சாருலதா.

''இண்டியன் பங்சுவாலிடி பார்த் தீரா ? ஒன்றரை மணி நேரம்தான் லேட் !'' என்று விருந்தினரில் சிலர் அலட்சியமாகவும் கேலியாகவும் முணு முணுத்தார்கள்.

''லேடீஸ் அண்டு ஜெண்டில்மென், ஐ ப்ரொபோஸ் எ டோஸ்ட்!'' என்று சொல்லி ஆரஞ்சுப் பழ ரசக் கோப்பை யைக் கையில் எடுத்து நின்றாள் சாரு லதா. மற்றவர்களும் உடனே அவரவர் கோப்பையைக் கரத்தில் ஏந்தினர்.

சாருலதா சொன்னாள்: ''நண்பர் வேணுகோபாலுக்கு எனது தொழில் வர்த்தக விவகாரங்களில் எந்தவிதமான சம்பந்தமும் கிடையாது. ஆனாலும் எனது வெற்றிக்கும் முன்னேற்றத்துக் கும் பக்கபலமாகவும் தோன்றாத் துணை யாகவும் இருந்து வருவது எங்க ளிடையே நிலவும் நட்புதான். நானே இதைச் சமீபத்தில்தான் புரிந்து கொண் டேன். அத்தகைய ஒரு சிறந்த நண்ப ருக்குப் புதிய கடிகாரத் தொழிலகத்தில் தயாரான முதல் கைக் கடிகாரத்தைப் பரிசாக அளிக்கிறேன்!''

வேணுகோபால் நெகிழ்ந்துபோனான். வெட்கப்படவும் செய்தான். இந்த அள வுக்குத் தன்னைக் கௌரவிக்க வேண்டும் என்று சாருலதா எண்ணிக் கொண் டிருக்கையில் தான் இன்று வராமல் இருந்திருந்தால் அவளுக்கு எவ்வளவு ஏமாற்றமாக இருந்திருக்கும்?

விருந்தினர் வேணுகோபாலை வாழ்த் திப் பானம் பருகினார்கள். மேஜையைத் தட்டிப் பாராட்டினார்கள். பழைய கடி காரத்தை வேணு கழற்றினான். சாரு லதா தன் அன்பளிப்பான புதிய கடி காரத்தை அவன் அணிய உதவினாள்.

பிறகு அவள் மேலும் கூறினாள் : ''வேணுகோபால் இப்போது அணிந் திருப்பது ஷாக் புரூப் — ஆடோமாடிக் கடிகாரம். நீண்ட நேரம் கழற்றி வைக்காமல் இருந்தால் நிற்காமல் ஓடிக் கொண்டேயிருக்கும். அதிர்ச்சிகளால் பாதிக்கப்படாது. அதேபோல் எங்கள் நட்பும் காலத்தைக் கடந்து நிற்பதுடன் அதிர்ச்சிகளால் தகர்ந்து விடாமல் நிலைக்க வேண்டும்.''

வேணுகோபால் உபசாரமாக நன்றி சொன்னான். ஆனால் சாருலதா கூறிய வார்த்தைகளின் உட்பொருளை உணர்ந்த சாரங்களுக்கு நெஞ்சை அடைத்தது. 'சாருலதா பிளாக்மெயில் செய்யப்படுகிறாள் என்பது தெரிந்தால் வேணுகோபாலுக்குப் பெரிய அதிர்ச்சி யாகத்தானே இருக்கும்? அதனால் அவர் களிடையே நிலவும் சிநேகம் பாதிக்கப் படுமா?' என்று சிந்தனையில் ஆழ்ந்தான் அவன்.

(தொடரும்)

தரமானதும்
சிக்கனமானதுமான
சமையல் சாதனம்



# விமலா

விமலாவில் தயாரான பண்டங்கள் ஒரு தனிப்பட்ட ருசியும், மணமும் பெற்றிருக்கும். உணவில் இதற்குமுன் கண்டிராத சுவையை அளிக்கிறது. வெறுப்பையும், திகட்டலையும் கொடுக்கும் மற்ற சமையல் சாதனங்களை அறவே விட்டு விட்டு தரத்தில் உயர்ந்ததும், சிக்கனமானதுமான விமலா சுத்திகரிக்கப்பட்ட எண்ணெய் உபயோகித்து பண்டங்களை உண்டு மகிழுங்கள்.

விமலா
கொழுப்பு சத்துக்கள்
இல்லாதது






கேரளா சோப்ஸ் & ஆயில்ஸ் லிட்.,
ஹைட்ரோஜனேஷன் பாக்டரி டிவிஷன்
கள்ளிக்கோட்டை-5 கேரளா

## அத்தியாயம் 20

# சதித் திட்டம்!

''ஹல்லோ சாரங்கன்! வெல்கம்! உள்ளே வாருங்கள்'' என்ற டாக்டர் வேணுகோபால், வரவேற்பு அறையில் இப்போது சோபாவாக விளங்கிய சோபா—கம் பெட்டை நோக்கிக் கை காட்டினான். ''உட்காருங்கள். நீங்கள் ஒன்றும் தவறாக நினைத்துக் கொள்ள மாட்டீர்கள் என்று நம்பிச் சொல்கிறேன்! உங்கள் 'வெய்ஸ்ட் லை'னில் நீங்கள் கவனம் செலுத்த வேண்டும். இலேசாகத் தொந்தி போட ஆரம்பித்திருக்கிறது. இப்போதே அதைக் கட்டுப்படுத்தாமல் வளரவிட்டால் அப்புறம் அதை அடக்கி ஆளவே முடியாமல் போய்விடும். நிறைய எக்ஸர்ஸைஸ் செய்யுங்கள். இந்த உலகத்திலுள்ள தொண்ணூற்று ஐந்து சதவிகிதம் வியாதிகளுக்கு அடிப்படைக் காரணம் 'ஓவர்வெய்ட்'தான் என்று நிரூபிக்கப்பட்டிருக்கிறது.''

சாரங்கன் சிரித்தான். ''வேணு! நான்....''

''எனக்குத் தெரியும். நீங்கள் என்னை டாக்டர் என்ற முறையில் பார்க்க வரவில்லை. நானும் டாக்டர் என்ற முறையில் இதைச் சொல்லவில்லை. இது என் 'கன்ஸல்டிங் ரூ'மும் இல்லை. ஒரு 'ஃபிரெண்ட்லி அட்வைஸ்', அவ்வளவுதான்.''

''நான் சொல்ல வந்தது வேறு. தினம் அரை மணி நேரத்துக்குக் குறையாமல் தேகப் பயிற்சி செய்கிறேன். அது போதவில்லை என்று புரிகிறது. ஆனால் அதற்குமேல் நமக்கு நேரம் எங்கே கிடைக்கிறது?''

''5BX என்று கேள்விப்பட்டிருக்கிறீர்களா?''

'இல்லை' என்று தலையாட்டினான் சாரங்கன்.

''ராயல் கெனேடியன் ஏர் ஃபோர்ஸில் பலவித ஆராய்ச்சிகளுக்குப் பிறகு 5BX தேகப் பயிற்சிகளை உருவாக்கியிருக்கிறார்கள். மிகக் குறைந்த நேரத்தில், மனிதனுக்குத் தேவையான முழுமையான உடற்பயிற்சி அளிக்கவென்று ஏற்பட்டவை. 'நேரமாச்சு நேரமாச்சு' என்று பரபரக்கும் நம்மைப் போன்ற பட்டணவாசிகளுக்கு ரொம்பவும் ஏற்றவை. ஒரு நாளைக்குப் பதினோரு நிமிஷ நேரம் இந்தப் பயிற்சியில் ஈடுபட்டால் போதும். பெண்களானால் பன்னிரண்டு நிமிஷங்கள்.''*

''அப்படியா? ஆச்சரியமாயிருக்கிறதே!'' என்றான் சாரங்கன்.




''ஆச்சரியப்படுவதுடன் நிறுத்திக் கொள்ளாமல் பயிற்சிகளைச் செய்வதில் சிரத்தையும் காட்டினால் மன்மதனுடம் இருப்பீர்கள். உங்களுக்குக் கல்யாணம் ஆகி விட்டதா?''

சாரங்கன் இலேசாக வெட்கப்பட்டுச் சிரித்தான். ''இன்னும் இல்லை.''

''ஒரு வேளை அதைப் பற்றிதான் ஏதாவது பேச வந்தீர்களோ என்னிடம்?''

''உம்...அப்படியும் வைத்துக் கொள்ளலாம்.''

''பலே! பலே! யாரையாவது சம்சார பந்தத்தில் சிக்க வைப்பது என்றால் எனக்கு ரொம்பக் குஷி. சரி, நீங்கள் என்ன சாப்பிடுகிறீர்கள்? சூடாக எதுவும் கிடைக்காது. என் அம்மாவை வேளை கெட்ட வேளையில் காப்பி போடு, ஓவலைக் கொண்டா என்று நான் தொந்தரவு செய்வதில்லை. சமையல்காரனை வைத்துக் கொள்ள அவள் அனுமதிக்க மாட்டேன் என்கிறாள். 'குடியா குடித்தனமா? நீ ஒருத்தன்தானேடா? சமைத்துப் போட முடியாதா என்னால்?' என்கிறாள். அபரிமிதமான அன்பும் ஒரு வகையில் தொந்தரவுதான் இல்லையா?''

''எனக்குக் காப்பி தர முடியவில்லை என்பதற்காக உங்கள் அம்மா உங்களிடம் வைத்திருக்கும் அன்பைத் தொந்தரவு என்று சொல்லாதீர்கள். எனக்குச் சாப்பிட எதுவுமே இல்லாவிட்டாலும் பரவாயில்லை.''

''அன்பினாலேயே வயிற்றை நிரப்பிக் கொள்கிறேன் என்கிறீர்கள். ஆல்ரைட்.

---

* இந்த 5BX (11 நிமிஷம்) XBX (12 நிமிஷம்) தேகப்பயிற்சிகள் பற்றி மேலும் விவரங்கள் அறிய விரும்புவோர்: Physical Fitness என்ற தலைப்பில் உள்ள புத்தகத்தைப் படித்துப் பயன் பெறலாம். Penguin Book No: 2055.



சற்று இருங்கள். அன்பு கொண்டு வருகிறேன்!''

வேணுகோபால் உள்ளே போய் ஒரு தட்டில் சிறிது தேன்குழலும் ஒரு கண்ணாடி டம்ளரில் முக்கால் பாகம் எலுமிச்சம் பழ சர்ப்பத்தும் எடுத்து வந்தான்.

''இதைத்தான் அன்பு என்று குறிப்பிட்டீர்களா?''

''தேன்குழல் செய்வ தென்றால் சுலபமா, சொல் லுங்கள். இதெல்லாம் எதற் காக அம்மா செய்து அவஸ் தைப்படுகிறாய்? பேசாமல் ராஜாஜி எழுதிய ராமா யணத்தையோ, பாரதத் தையோ படித்துக்கொண்டு உட்கார்ந்திரேன் என்றால் கேட்க மாட்டாள். 'உனக் குச் செய்வதில் எனக் கென் னடா சிரமம்?' என்கிறாள்.''

''அன்பினால் உருவான தேன்குழல் நன்றாகத்தான் இருக்கிறது'' என்றான் சாரங்கன், அதைச் சுவைத்துக் கொண்டே. ''உப்புதான் கொஞ்சம் தூக்கலாகப் போய் விட்டது!'' சிரித்தான் அவன்.

''அதற்கு விஞ்ஞான ரீதியாக ஒரு விளக்கம் இருக் கிறது, சாரங்கன்! இதைச் செய்தவள் என் அம்மா. மாவை ருசி பார்த்தபோது அவளுக்கு உப்பு தூக்கலா கவே தோன்றியிராது. ஏன் தெரியுமா? வயது ஆக ஆக, நாக்கில் உள்ள ருசி பார்க்கும் நரம்புகளின் சக்தி குறைகிறது. அப்போது உப்பு, காரம் எல்லாமே கொஞ்சம் மிகுதியாக இருந்தால்தான் நன்றாயிருப்ப தாகத் தோன்றும்!''

''வெரி இன்டரஸ்டிங்'' என்றான் சாரங்கன்.

''சும்மா மரியாதைக்குச் சொல்கிறீர்கள், சுவாரசியமாக இருக்கிறதென்று. நீங்கள் வந்த விஷயத்தைக் கேட்காமல் நான், உங்களை 'போர்' அடித்துக் கொண்டிருக்கிறேன்.''

''போர் ஒன்றுமில்லை. ஆனால் நான் உங்களிடம் பேச வந்த விஷயமும் ரொம்ப முக்கியமானதுதான்.''

''சொல்லுங்கள்.''

சாரங்கன் எப்படிப் பேச்சை ஆரம்பிப்பது என்று சற்று நேரம் யோசித்து விட்டுக் கூறினான்: ''வேணு! நான் சொல்லப் போவது சாரு லதாவைப் பற்றி. நியாயமாக நான் இதையெல்லாம் பேசக் கூடாது. நான் அவளுடைய அந்தரங்கக் காரியதரிசி. ரகசியங்களைக் காக்க வேண்டிய பொறுப்பு உள்ளவன். நம்பிக்கைத் துரோகம் செய்யக் கூடாது நான். ஆனால் இப்போதுள்ள நிலைமையை இப்படியே நீடிக்க விடுவது சாருவுக்கே நல்லதல்ல என்பது ஒரு காரணம். நீங்கள் சாருவின் நல்வாழ்வில் உண்மை அக்கறை கொண்டுள்ளவர் என்பது இன்னொரு காரணம். மூன்றாவதாக...''

''மூன்றாவதாக?''

''நான் அவளுக்குக் கீழே வேலை செய்கிறவன். அவளிடம் கீழ்ப்படிந்து தான் நடக்க முடிகிறதே தவிர, யோசனை சொல்லவோ வாதாடவோ என்னால் முடியவில்லை. அதற்கெல்லாம் அவள் அதிகமாக இடம் தருவது மில்லை. உத்தரவுகளைப் பிறப்பித்தே பழகி விட்டாள்.''

''ரொம்ப சரி, உங்கள் சங்கடம் எனக்குப் புரிகிறது.''

''ஆனால் வேணு, உங்கள் நிலைமை வேறு. நீங்கள் அவளுக்கு அறிவுரைகளைத் தாராளமாய் வழங்கலாம். அதற்கு உரிமையுண்டு.''

''நான் அறிவுரை வழங்கலாம்; அவ்வப்போது வழங்கியும் வருகிறேன். ஆனால் அவள் எதையும் கேட்பதில்லை. உபதேசிக்க எனக்கு உரிமை உண்டு; அதன்படி நடக்காதிருக்க அவளுக்கு உரிமை உண்டு!''

''அது உண்மைதான். ஆனால் நீங்கள் சொல்வதை அவள் கேட்காது போனாலும் எச்சரித்து விட்டோம் என்ற திருப்தியாவது உங்களுக்கு இருக்குமில்லையா?''

''கரெக்ட்! சாரங்கன்! உங்களால் அறிவுரை வழங்க முடியாது; ஆனால் எதைப் பற்றி அவளுக்கு யோசனை கூற வேண்டும் என்பது தெரியும்! என்னால் அறிவுரை வழங்க முடியும்; ஆனால் எதைப் பற்றி நான் அவளுக்கு நல்ல விதமாக எடுத்துச் சொல்ல வேண்டும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள் என்பது எனக்குத் தெரியாது. விசித்திரமான நிலைதான்.''

''இந்தச் சிக்கலைத் தீர்க்கத்தான் நான் எனக்குத் தெரிந்த சில விஷயங்களை உங்களிடம் சொல்லலாம் என்று வந்தேன். ஆனால் நான் இவற்றை உங்களிடம் கூறியதாகச் சாருவுக்குத் தெரியக் கூடாது.''

''அப்படியானால், அவளுக்கு அறிவுரை வழங்கும்போது இந்த விவரம் எனக்கு எப்படித் தெரிய வந்தது என்று அவள் கேட்பாளே, அதற்கு என்ன பதில் சொல்வது?''

''பிரச்னைதான்!''

''அந்தப் பிரச்னையைப் பிறகு கவனிப்போம். நீங்கள் விஷயத்தைச் சொல்லுங்கள்!''

''வேணு! சில நாட்களுக்கு முன்னால் கன்னிமராவில் நடந்த விருந்தின்போது சாரு உங்களுக்கு ஒரு கடிகாரம் பரிசளித்து என்ன சொன்னாள் நினைவிருக்கிறதா?''

''எந்தவிதமான அதிர்ச்சி ஏற்பட்டாலும் சரி, எங்கள் இருவரிடையிலும் உள்ள நட்பு 'ஷாக்புரூ'பாக இருந்து நிலைக்க வேண்டும் என்றாள்.''

''அதன் உள்ளர்த்தம் புரிந்ததா உங்களுக்கு?''

''உள்ளர்த்தத்தோடு அவள் பேசியதாக நான் நினைக்கவேயில்லை!''

''அதிர்ச்சி என்று அவள் எதைக் குறிப்பிட்டாள் என்று நான் சொல்லப் போகிறேன். வேணு! சாரு பிளாக் மெயில் செய்யப்படுகிறாள்!''

# 'ஆஸ்ப்ரோ'

# மட்டுமே மைக்ரோஃபைன்ட் செய்யப்படுகிறது அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக










சாப்பிடும் அளவு:
வயது வந்தவர்கள்: இரண்டு மாத்திரைகள் தேவையானால் மீண்டும் சாப்பிடவும்.
குழந்தைகள்: ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டர் சொற்படி

கீழ்க் கண்டவைகளுக்கு புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்:
நோவு • தலைவலி • உடல்வலி • ஃப்ளூ • ஜுர வேகத்துடன் கூடிய ஜலதோஷம் • மூட்டுவலி • தொண்டை அழற்சி • பல்வலி.

புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' இப்பொழுது கிடைக்கும் அதி நவீனமான வலி நிவாரணியாகும்.



**புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' அதிவேகமாக வலியை வெளியே இழுத்துவிடுகிறது.**

நிகோலஸ் ® தயாரிப்பு

உட்கார்ந்திருந்த ஆசனத்தை விட்டு விருட்டென்று எழுந்தான் வேணு. ''நிஜமாகவா? ஏன், எதற்காக, யார் அவளைத் துன்புறுத்துகிறார்கள்?'' என்று பரபரப்புடன் கேட்டான்.

''ஏன், எதற்காக, என்றெல்லாம் எனக்கும் தெரியாது. மஹிபால், சந்திரபால் என்று இருவர் அடிக்கடி வந்து போகிறார்கள்.''

''மஹிபால்... சந்திரபால்... யார் அந்த அயோக்கியர்கள்?''

''யாரென்று தெரியாது. எங்கிருந்து வருகிறார்கள் என்பதற்கும் தகவல் ஏதும் கிடையாது. மஹிபால், சந்திரபால் என்பவை அவர்களுடைய உண்மைப் பெயர்களாயிராது என்றும் சந்தேகிக்கிறேன். ஒவ்வொரு தடவையும் பத்தாயிரம், இருபதாயிரம் என்று அவர்களுக்கு அள்ளிக் கொடுக்கிறாள்.''

''அடப் பாவிகளா! ஆயிரம் இரண்டாயிரம் போதாதாமா?''

''இந்த விவரத்தை யார் மூலமாகவாவது என்றாவது நீங்கள் தெரிந்து கொண்டுவிட நேர்ந்தால் அதன் பிறகும் உங்களுக்குச் சாருவிடம் உள்ள நட்பு நீடிக்குமா? அல்லது உங்களுக்குச் 'சீ' என்று போய் விடுமா?—இதுதான் இன்று சாருவுக்குள்ள மிகப் பெரிய மனப் போராட்டம். அதனால்தான் அன்று அவள் அப்படிச் சூசகமாகப் பேசினாள்!''

புதிராக விளங்கிய பல விஷயங்கள் இப்போது புரிந்தன போலிருந்தது; அதே சமயம் வேறு பல புதிய, பெரிய புதிர்களும் வேணுவின் எதிரே நின்று அவனைக் குழப்பின.

''எங்களிடையே உள்ள தொடர்பைக் குறிக்க நட்பு என்ற சொல்லைத் தான் அடிக்கடி சாரு பயன்படுத்தி வருகிறாள், சாரங்கன். ஆனால் என் மன நிலை வேறு. உங்களை என் சகோதரன் போல் பாவித்து வெட்கமின்றிச் சொல்கிறேன். அவளை நான் காதலிக்கிறேன். இல்லை, அப்படிச் சொன்னால் போதாது. அதற்கும் மேம்பட்ட ஒரு நெருக்கமான நிலையை நான் உணர்கிறேன், புரிகிறதா?''

''புரிந்து கொள்ள முயல்கிறேன்.''

''சாதாரணமான ஓர் ஆணுக்கும், பெண்ணுக்கும் இடையில் அன்பு துளிர்த்தால் அதைக் காதல் என்று வர்ணித்து விட்டுப் போகலாம். கருத்தொருமித்த காதல் என்கிறோம். ஆனால் சாரு அசாதாரணமானவள். அவளிடம் நெருங்கிப் பழகும் எந்த ஆடவனும் அவளிடம் சில குறைபாடுகளைக் காணத்தான் செய்வான். அவை என்ன என்று உங்களுக்கே தெரியும்.''

சாரங்கன் தலையாட்டினான். ''முன்னுக்கு வரவேண்டும் என்ற ஆர்வம்;

---

**அட்டைப் படக் கவிதை**

## ஒரு குடையில் . . .





அவன் :

உனக்கு வேண்டாம் குடையென்றால்
எனக்கும் வேண்டாம், நில் சற்றே!
உனக்குச் சாரல் பிரியமென்றால்
எனக்கும் பிரியம்தான் பெண் சிட்டே!

பிணங்க வேண்டாம், கைக்குடையைப்
பிரித்தே காற்றில் வீசிடலாம்.
இணங்கி வந்தால் இருவருமே
இனிதாய் இல்லம் ஏகிடலாம்!

அவள் :

'நானும் நீரும் ஒரு குடைக்கீழ்
நடந்தால் உலகம் என்சொல்லும்?
வானம் உதறும் பூஞ்சிதறல்
வடிந்தால் வருவேன், நீர் செல்லும்!'

என்றால், புத்தகம் நனைந்துவிடும்;
ஏடும் எழுத்தும் சிதைந்துவிடும்.
நன்றாய் வந்தது இம்மழையே,
நடவும் போவோம் நம்வழியே!

— லெமன்

அதற்காக அவள் கடைப்பிடிக்கும் வழிகள்....''

''நீங்கள் மரியாதையுடன் வார்த்தைகளைப் பயன்படுத்துகிறீர்கள். நான் அப்பட்டமாகச் சொல்கிறேன், கேளுங்கள். லஞ்சம், ஊழல், மோசடி, தந்திரங்கள்-இத்தியாதி தவிர, கவர்ச்சிகரமான தன் தோற்றத்தையே அவள் காரியங்களைச் சாதித்துக் கொண்டு போகப் பயன்படுத்துகிறாள். தன் கையாலேயே பலருக்கு மது வழங்கவும் அவள் தவறுவதில்லை—எல்லாம் பணம் பண்ண வேண்டும் என்ற ஒரே நோக்கத்துக்காக.''

''நீங்கள் பேசுவதைக் கேட்கவே எனக்குப் பயமாயிருக்கிறது. சாரு பரிசுத்தமானவள் என்பதில் எனக்கு லவலேசமும் சந்தேகமில்லை.''

''அந்த நம்பிக்கை எனக்கும் உண்டு. சேற்றில் நீ செந்தாமரை என்று அவளிடமே நான் கூறியிருக்கிறேன். ஆனால் அதையே வேறுவிதமாக — அருவருப்பூட்டும் விதமாக — வர்ணிக்கவும் என்னால் முடியும். 'ஏனப்பா, சாக்கடையில் உழல்கிறாய்' என்று நான் உங்களைக் கேட்டால், 'வெற்றுடம்புடனா புரள்கிறேன்? ஆடைகளையெல்லாம் அணிந்து கொண்டுதானே சாக்கடையில் இறங்கியிருக்கிறேன்!' என்று நீங்கள் சமாதானம் சொல்வீர்களா?''

''உங்கள் வாதத்துக்கு என்னிடம் பதில் இல்லை.''

''இருக்க முடியாது! இப்படிப்பட்ட ஒரு பெண்ணைத் தன்மானமுள்ள எந்த ஆண் பிள்ளை காதலிப்பான்? அவள் அழகில் மோகம் கொண்டு அவளை மணக்க முன்வரலாம்; அவள் பணத்துக்கு ஆசைப்பட்டு அவளைக் கல்யாணம் செய்து கொள்ளலாம். ஆனால் காதலுக்கு அங்கு இடமேது?''

சாரங்கன் தலையசைத்தான், கிடையாது என்று.

''ஆனால் எனக்கு அவளிடம் உள்ள குற்றம் குறைகளெல்லாம் நன்றாகத் தெரிந்திருந்தும் அவற்றையும் மீறிக் காதல் உணர்ச்சி பொங்குகிறது. கருத்து வேறுபாடுகள் என்று பார்த்தால் எனக்கும் அவளுக்கும் இடையில் மலைக்கும் மடுவுக்கும் இடையில் உள்ள வித்தியாசம் இருக்கிறது. ஆனாலும் நான் அவளைக் காதலிக்கிறேன்!''

விசித்திரமான ஒரு பிரகிருதியைப் பார்ப்பதுபோல் சாரங்கன் வேணுவை நோக்கினான். ''அதனால்தான் காதலை விட மேம்பட்ட ஒரு நிலை என்று குறிப்பிட்டீர்களா?''

''அப்படி அதை வர்ணிப்பதா அல்லது எனக்கு மூளைக் கோளாறு என்று முடிவு கட்டுவதா என்றே எனக்குச் சில சமயங்களில் சந்தேகமாகப் போய் விடுகிறது. ஆனால் அவளிடம் எனக்குள்ள அளவில்லாத காதல் பற்றி மட்டும் எனக்கு எள்ளளவும் சந்தேகம் இல்லை!''

''இத்தனை அன்புடன் காத்திருக்கும் உங்களை அவள் ஏன் கல்யாணம் செய்துகொள்ளாமல் காலம் கடத்துகிறாள்? குணுவின் கல்யாணத்துக்கு இருக்கும் தடையும் நீங்கிவிடுமே?''

''அதுதான் எனக்குப் புரியவில்லை. கல்யாணம், தொழில் வர்த்தகத் துறையில் தான் அடைந்து வரும் துரிதமான முன்னேற்றத்துக்குத் தடை என்று அவள் சொல்லி வருவது நொண்டிச் சாக்கு என்று நான் நினைத்தேன். என் ஊகம் சரி என்று இன்று நீங்கள் கொண்டு வந்திருக்கும் செய்தி நிரூபிக்கிறது. அவளுடைய கடந்த கால வாழ்க்கையில் ஏதோ ரகசியம் இருக்கிறது. அதை வைத்துத்தானே இப்போது அவளை 'ப்ளாக் மெய்ல்' செய்கிறார்கள்? திருமணம் வேண்டாம் என்று அவள் தீர்மானமாகக் கூறுவதற்கும் அந்த ரகசியமே காரணமாய் இருக்கலாம் அல்லவா?''

''அந்த ரகசியம் என்னவென்று நாம் கண்டுபிடிக்க வேண்டும்.''

''எப்படிக் கண்டுபிடிப்பது? உங்களுக்கு ஏதேனும் வழி தோன்றுகிறதா?''

சாரங்கன் யோசித்தான். சட்டென்று அவன் பரபரப்புடன் நிமிர்ந்தான். ''மஹிபாலும், சந்திரபாலும் அவளை முதன் முதலில் பார்க்க வந்த போது அவர்கள் தேடிக் கொண்டிருந்த பெண் சாரு இல்லை என்று சொல்லி அனுப்பிவிடப் பார்த்தேன். ஆனால் அவர்கள் மசியவில்லை. 'புனிதமான கங்கை நதிக்கரையில் யாராவது பாபம் பண்ணத் துணிவார்களா?' என்று அவளைக் கேளுங்கள். எங்களைப் பார்க்க உடனே சம்மதிப்பாள்' என்றார்கள். அவர்கள் சொன்னபடியேதான் நடந்தது!''

''இந்தத் தகவல் நமக்கு எந்த விதத்தில் உதவப் போகிறது? கங்கை இமய மலைச் சிகரங்களில் உற்பத்தியாகி வங்கக் கடலில் விழுகிறது. வழியில் எத்தனையோ ஊர்கள், புனித ஸ்தலங்கள் எங்கே என்று போய் யாரை என்று விசாரிப்பது?''

''அதொன்றும் நடக்காத காரியம்!''

இருவருமே யோசனையில் ஆழ்ந்தார்கள். சில நிமிஷங்களுக்குப் பிறகு

சாரங்கன் பேசியபோது அனுதாபம் பொங்கியது அவன் குரலில்.

''சாருலதாவிடம் உள்ள குற்றம் குறைகளை நீங்கள் சற்றுமுன் பெரிது படுத்திச் சொன்னீர்கள். ஆனால் அழகும், மதுவும், லஞ்சமும் ஊழலும் மட்டும்தான் இந்தத் தொழில் வர்த்தக சாம்ராஜ்யத்தை உருவாக்கியதாகச் சொல்லிவிட முடியுமா?''

''சாரங்கன்! நான் அப்படி நினைக்க வில்லை. வேறு யாராவது அப்படிப் பேசினாலும் நான் அவனுடன் சண்டைக்குப் போகத் தயார்!''

''சாரு ஒரு மேதை, வேணு! அருகிலிருந்து அவள் செயல் திறனைப் பார்த்துப் பார்த்துப் பிரமித்தவன் நான்.''

''நீங்கள் மட்டுமென்ன? தொழில் வர்த்தகத் துறையில் விஷயஞானமுள்ள எவருமே பாராட்டத்தான் செய்வார்கள்; அல்லது பொறாமைப்படுவார்கள். அற்பக் காரியங்களில் இறங்காமலே இந்த அளவுக்கு முன்னேறும் ஆற்றல் அவளுக்கு உண்டு என்பதுதான் என் வாதம். இதை அவளிடமே பல தடவைகள் சொல்லியிருக்கிறேன், நான்.''

''எவ்வளவு தன்னம்பிக்கையுடன் அலட்சியமாகக் காரியங்களைச் செய்து கொண்டு போவாள்! இன்று அதே சாரு பரிதாபப்படும்படி நடந்துகொள்கிறாள். தவற்றுக்கு மேல் தவறுகள், எடுத்ததற்கெல்லாம் கோபம், அர்த்தமற்ற குற்றச்சாட்டுகள்.''

''நான் ஒருத்தன் இருந்து என்ன பிரயோஜனம், சொல்லுங்கள்? என்னை அடிக்கடி சந்திப்பதன் மூலம் என்னிடமிருந்துதான் அவள் தன் சாதனைகளுக்குப் பலம் பெறுவதாக ஒப்புக்கொண்டதை அன்று பார்ட்டியின்போது கேட்டீர்கள்.'' வேணுவின் வலக்கரம் இடக் கரத்தில் இருந்த கடிகாரத்தை அன்புடன் தடவிக் கொடுத்தது. ''ஆனால் இன்று நான்கூட உதவ முடியாத அளவுக்கு மனச் சோர்வு அவளை ஒரு பெரும் வியாதியாகப் பிடித்திருக்கிறது போலும்!''

''மனச் சோர்வு என்று அதைச் சொல்ல முடியாது வேணு.''

''அப்செஷன்?''

''அதுதான் சரியான வார்த்தை. மஹிபாலுக்கும் சந்திரபாலுக்கும் கொடுத்து அழ மேலும் மேலும் கறுப்புப் பணம் பண்ணுவது எப்படி என்ற ஒரே பிரச்னை தான். மற்ற எதிலும் மனம் செல்ல மாட்டேனென்கிறது. சென்றாலும் சிந்தித்து நல்ல முடிவுக்கு வர முடியவில்லை அவளால்.''

''பாவம்'' என்றான் வேணுகோபால். காதல் என்ற சொல் சாருவுக்குக் கசக்கக் காரணம் என்ன என்பதைப் புரிந்து கொண்ட தினத்திலிருந்தே அவன் உள்ளத்தில் அலை அலையாகப் பொங்கிய பரிவும் பச்சாத்தாபமும் சாருவின் நினைவைக்கூடத் தாலாட்டிக் கொண்டிருந்தன ஆறுதலாக. 'ப்ளாக் மெய்ல் செய்யப்படும் அளவுக்கு அவளுக்கு மேலும் பல சோதனைகளா? எத்தனை துன்ப நினைவுகளை அந்தப் பேதை உள்ளம் சுமந்து நலிகிறதோ?'

''ஓர் உதாரணம் பாருங்கள்''-சாரங்கன் கூறிக் கொண்டு போனான்: ''பரத்வாஜ் ஷேர்களின் மதிப்புக் குறைந்து வருகிறது என்றும் இது நல்ல தருணம் என்றும் சொல்லி மளமளவென்று வாங்க, ஆரம்பித்தாள். சமீபத்திய பாலன்ஸ் ஷீட்டைச் சரியாக ஆராய்ந்து பார்க்க வேண்டாமா? இவள் வாங்குகிறாள் என்று தெரிந்ததும் விலை கூடியது. எச்சரித்தும் கேட்கவில்லை. யோசிக்காமல் வீம்புத்தனமாகப் பல பங்குகளைக் 'கார்னர்' செய்தாள். கடைசியில் ஒர் உருப்படாத கம்பெனி இவள் தலையில் கட்டப்பட்டிருப்பதுதான் மிச்சம். எக்கச்சக்கமாகக் கடன் பட்டிருக்கிறது அந்தக் கம்பெனி. மோசடிகளும் நடந்திருக்கின்றன.''

''சாருவா இப்படி அசட்டுத்தனமாக நடந்து கொண்டாள்? நம்பவே முடியவில்லையே!''

''அதுவாவது போகட்டும். கம்பெனி விவகாரம். அவள் பணம். லாபமோ, நஷ்டமோ இஷ்டப்படி நடக்க அவளுக்கு உரிமை உண்டு. ஆனால் மற்றவர்களுடைய சொந்த வாழ்க்கையில் இவள் தலையிடலாமா? ராமலிங்கம் மகளை நான் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமாம்! எனக்கு ஒரே கோபம். 'மூளை பிசகிவிட்டதா உனக்கு' என்றே கேட்டு விட்டேன்.''

''கம்பெனி விவகாரங்களையே அவளால் சரியாகக் கவனிக்க முடியாத நிலையில் மற்றவர் மனங்களை எப்படிப் புரிந்து கொள்ள முடியும் சாரங்கன்? நீங்கள் ஆத்திரப்படக் கூடாது. அநுதாபத்துடன் நோக்க வேண்டும்.''

''ரொம்ப சரி, வேணு! அதை உடனேயே நான் உணர்ந்து மன்னிப்புக் கேட்டேன். ஆனாலும் பாருங்கள், மறுநாள் நான் இல்லாதபோது லில்லியைக் கூப்பிட்டுக் கண்டபடி ஏசியிருக்கிறாள். என்னோடு சேர்ந்து கூத்தடிக்கிறாளாம், காதல் நாடகம் போடுகிறாளாம். ஆபீஸில் மொரேல் கெட்டுப் போச்சாம்! லில்லி என்னிடம் சொல்லிக் கதறி விட்டாள். அவளைச் சமாதானப்படுத்துவது பெரும் பாடாகப் போய்விட்டது!''

''லில்லியை நீங்கள் காதலிக்கிறீர்களா?''

''அதில் ஒன்றும் ரகசியம் இல்லை. இதற்குள் கல்யாணமே நடந்து முடிந்திருக்கும். ஆனால் லில்லிதான் ஒத்திப் போட்டு வருகிறாள். அவளுக்குச் சாரு—வேணு, கமலா—குணு திருமணங்கள் நடந்து பார்க்க வேண்டுமாம். 'அப்புறம்தான் நம் திருமணம்' என்கிறாள்.''

''ரொமாண்டிக் ஐடியல்ஸ்! காதல் கதைகளை ரொம்பவும் படிப்பாள் போலிருக்கிறது.''

''காதலென்றாலே கரைந்துருகும் லில்லி ஒரு பக்கம்; காதல் என்றால் விசை என்ன விலை என்று கேட்கும் ராமலிங்கம் மறுபக்கம். நிச்சயித்த தேதியில் மகளுக்குக் கல்யாணம் நடந்தே ஆக வேண்டும் என்று குதிக்கிறார் அவர். மாப்பிள்ளை யார் என்பது அவருக்கு இரண்டாம்பட்சமாக இருக்கிறது. பஞ்சாங்கத்தைப் புரட்டினால் முகூர்த்த நாட்களுக்குப் பஞ்சமே யில்லை என்று அவருக்கு எடுத்துச் சொல்லிச் சமாதானப்படுத்துவதற்குள் போதும் போதுமென்றாகி விட்டது.''

''மத்தளத்துக்கு இரண்டு பக்கமும் இடி!''

''மூன்றாவது பக்கத்தை எங்கே விட்டீர்கள்? அன்று பார்ட்டியில் நீங்கள் காலதாமதமாக வரப்போக, சாரு என் மீது பாய்ந்தாள் பாருங்கள். அத்தனை பேர் பார்வையும் என் பேரில்தான். எனக்கு ரொம்ப அவமானமாகப் போய் விட்டது. அவளிடம் உள்ள அனுதாபம் மதிப்பு இவற்றால்தான் பொறுத்துக் கொண்டு போகிறோம் லில்லியும் நானும்.''

வேணு ஒரு நீண்ட பெருமூச்சுடன் எழுந்து அறையில் குறுக்கும் நெடுக்குமாக நடக்க ஆரம்பித்தான். ''பிரச்னைகளை நன்றாகப் புரிந்து கொண்டாயிற்று. ஆனால் அவற்றைத் தீர்க்க வழி?''

''அது தெரிந்தால் உங்களிடம் ஏன் வந்திருக்கப் போகிறேன்?'' என்று சாரங்கன் முணுமுணுத்தது அவன் காதில் விழுந்தது. அதை லட்சியம் செய்யாமல் நடையைத் தொடர்ந்தான்.

திடுமென்று நின்று சாரங்கனைப் பார்க்கத் திரும்பினான் வேணுகோபால். ''சாரங்கன்! நீங்கள் மட்டும் பரம யோக்கியனாக இருப்பானேன்? நீங்களும் ஏன் சாருலதாவை 'ப்ளாக் மெய்ல்' செய்யக்கூடாது?'' என்று கேட்டான்

(தொடரும்)

• அத்தியாயம் 21

# தற்கொலை முயற்சி

'சாருலதா பில்டிங்ஸ்' முன்னால் காலை பத்து மணிக்குக் காரிலிருந்து இறங்கிய சாருலதா, பத்தடித்து இரண்டு நிமிஷமானபோது எட்டாவது மாடியில் தனது பிரத்தியேகக் காரியாலய அறைக்குள் அடியெடுத்து வைத்தாள். அங்கு, விருந்தினர் வந்தால் அமர்வதற்கென்று போடப்பட்டிருந்த சோபா ஸெட்டில் மூன்று பேர் உட்கார ஏற்றதான நீளமான ஓர் ஆசனம் உண்டு. ரப்பர் குஷன்களுடன் கூடியதும் முழுமையாக உயர் ரகத் தோலினால் மூடப்பட்டு, பாலிஷ் ஏறியதால் பளபளப்பதுமான அந்த ஆசனத்தில், ஒரு மூலையாக முதுகைச் சாய்த்துக் கால்களை எதிரே இருந்த தாழ்வான மேஜை மேல் நீட்டிப் பத்திரிகை படித்துக் கொண்டிருந்தான் ஒருவன். அந்தத் தினசரி அவன் முகத்தையும் உருவத்தையும் கூட மறைத்தது. கால்கள் மட்டுமே தெரிந்தன. நாளிதழின் பின்னாலிருந்து சிகரெட் புகை கிளம்பியது.

அறைக்குள் நுழைந்த சாருலதா இந்தக் கோலத்தில் இத்தனை துணிச்சலுடன் தன் அறைக்குள் அமர்ந்திருப்பது மஹிபால் அல்லது சந்திரபாலாகத்தான் இருக்க வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டாள். வேறு யார் இவ்வளவு மரியாதை இல்லாமல் காலை நீட்டிக் கொண்டு அமர்ந்திருப்பார்கள்? சாருலதா அருகிலில்லை என்றாலும் அவளுடைய அறை, அவள் கையாள்கிற பொருள்கள், அமரும் நாற்காலிகள் எல்லாமே பார்ப்பவர்களிடம் பயபக்தியை உண்டாக்கும் தன்மை வாய்ந்தவைதாம். அந்தச் சிறப்பை அவை சாருலதாவின் திறமை, கௌரவம், செல்வம் ஆகியவற்றின் காரணமாகப் பெற்றிருந்தன. அவளிடம் உள்ள இந்தத் தகுதிகளை மதிக்காதவர்கள் சந்திரபாலும் மஹிபாலும்தாம்.

'ஆனால் இருவரில் ஒருவன்தான் இருக்கிறான் என்றால் இன்னொருவன் எங்கு தொலைந்தான்? 'கிடைத்த மட்டும் போதும், அதிகமாக வாலாட்ட வேண்டாம்' என்று ஓடிவிட்டானா? என்னைப் பிடித்திருக்கும் இரட்டைச் சனியன்களில் ஒரு சனியனை விரட்டிவிட்டேனா நான்?'

இத்தனையையும் இரண்டொரு விநாடிகளில் சிந்தித்துப் பார்த்துச் சந்தோஷமடைந்து விட்டாள் சாருலதா. பியூன் வேதாசலம் கொண்டு வந்த காரியாலயப் பெட்டியைத் தானே வாங்கிக் கொண்டு அவனைக் கதவருகிலேயே திருப்பி அனுப்பி விட்டாள். ''நான் கூப்பிட்டு அனுப்பிய பிறகு வந்தால் போதும் என்று குமாரிடம் சொல்லி விடு'' என்றும் அவனிடம் கூறி அனுப்பினாள். அன்றையத் தபால்களுடன் இடைஞ்சலான ஒரு நேரத்தில் ஸ்டெனோ குமார் வந்து நிற்பதை அவள் விரும்பவில்லை.

மெல்லத் தொண்டையைக் கனைத்துக் கொண்டு அவள் தன் மேஜையை நோக்கி நடந்தாள். கதவு தானாகவே சாத்திக் கொண்டது.

நாற்காலியில் ஏறக்குறைய படுத்தவாறு சாய்ந்து கிடந்தவன் அசைந்து கொடுக்கக் காணோம். சாருலதா மேஜையின் மேலிருந்த பொருள்கள் இரண்டை இடம் மாற்றி வைத்து மறுபடியும் ஓசைப்படுத்தினாள்.

தினசரிக்குப் பின்னாலிருந்து சிரிப்பொலி கேட்டது. குரல் அவளைத் துணுக்குறச் செய்தது. நாளிதழ் தாழ்ந்தது. சாரங்கனின் உருவம் அவள் கண்களுக்குப் புலனாயிற்று. 'பளார்' என்று நெற்றிப் பொட்டில் ஓர் அறை விழுந்தது போல் உணர்ந்தாள் சாருலதா. தலையைச் சுற்ற ஆரம்பித்தது அவளுக்கு. ஆதரவுக்கு மேஜையைப் பற்றிக் கொண்டாள்.

''வந்து விட்டீர்களா சாரு?'' என்றான் சாரங்கன். அவன் கால்கள் நீட்டியது நீட்டியபடியே இருந்தன. ''ஆர்ட்



புஷ்பாவட் எழுதியதைப் படித்துக் கொண்டிருந்தேன். என்னமாய் எழுதுகிறாள் மனுஷி! ஒரு தடவையாவது அவள் கட்டுரையைச் சிரிக்காமல் படிக்க வேண்டும் என்று பார்க்கிறேன்; முடியவில்லை!''

''சாரங்கன்!'' அதட்டுகிற குரலில் அழைத்தாள் அவள். ''மஹிபாலோ அல்லது சந்திரபாலோ உட்கார்ந்திருப்பதாக அல்லவா நினைத்தேன்? மரியாதையை உங்களுக்குக் கூடவா கற்றுத் தர வேண்டும் நான்?''

சாரங்கன் வியப்படைந்தவன் போல் புருவங்களை உயர்த்தினான். ''அடடா, நான் என்ன செய்து விட்டேன் உங்களை?'' தன் கையிலிருந்த சிகரெட்டை அவன் திருப்பித் திருப்பிப் பார்த்தான். ''ஓ! எஜமானி அம்மாள் எதிரே சிகரெட் பிடிக்கக் கூடாது என்கிறீர்களா?'' கடைசி முறையாக அவன் புகையை நீள உள்ளுக்கு இழுத்தான். அப்புறம் உடலை நிமிர்த்தாமலேயே கை நீட்டி மேஜை மீதிருந்த ஆஷ்டிரேயை எடுத்து அதில் சிகரெட்டைத் திருகி அணைத்துப் போட்டான்.

ஒரு முறை கைக் கடிகாரத்தைப் பார்த்துவிட்டு, ''யூ ஆர் லேட்!'' என்று சொல்லிக் கொண்டே நிதானமாகக் கால்களைத் தரையில் ஊன்றி எழுந்தான். அவன் நின்ற பின்தான் சாருலதா, தன் சுய கௌரவத்தைத் திரும்பப் பெற்றவளாக அமர்ந்தாள். திகைப்பு அவளை விட்டு இன்னும் நீங்கவில்லை. முழங்கைகளை மேஜைமேல் ஊன்றி விரல்களைக் கோத்து அவற்றின் மேல் முகவாயைப் பதித்துச் சாரங்களை அருவருப்பும் மிரட்சியும் கலந்த ஒரு பார்வையால் அளந்தாள். 'இத்தனை தைரியத்தை இவன் எங்கிருந்து பெற்றான்? திடுதிப்பென்று எப்படி இவன் மாறிப் போனான்?'

அவன் அவளை நோக்கி அலட்சியமாக நடந்து வந்தவாறே கூறினான்: ''பைதிவே சாரு, மங்களா பாங்கு மானேஜர் ரத்தினசாமி ஃபோன் பண்ணினார். மூன்று லட்சம் ஓவர்டிராப்ட் ஸாங்ஷன் செய்தாரே அது பற்றிப் பேச வேண்டும் என்றார்.''



ஒரு பயங்கரக் கனவை உதறுவது போல் சிலிர்த்துக் கொண்டு நிமிர்ந்தாள் சாருலதா. ''நான் அவரிடம் பேசிக் கொள்கிறேன். நீங்கள் போகலாம்.''

''உங்களுக்கு அந்தச் சிரமத்தை நான் வைக்கவில்லை சாரு. நானே சொல்லி விட்டேன்.''

''என்னவென்று?''

''உண்மையைத்தான்; ஆனால் பயப்படாதீர்கள். பக்குவமாய்ப் பேசி யிருக்கிறேன்.''

சாருலதாவுக்கு இப்பொழுது விவரங்களைத் தெரிந்து கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டு விட்டது. வேண்டாவெறுப்பாக அவள் அவனுடன் சம்பாஷணையைத் தொடர்ந்தாள்:

''இதில் பக்குவமாகப் பேச என்ன இருக்கிறது? நமக்கென்ன தானமா கொடுத்தார்? வட்டிக்குக் கடன் வாங்கிறோம், அவ்வளவுதானே?''

''எந்தத் தைரியத்தில் அவர் கடன் கொடுத்தார்?''

''சாருலதா இன்ஜினீரிங்குக்கு அவர் ஓவர்டிராப்ட் சாங்ஷன் செய்தார். அதற்காக நம் கம்பெனியின் இயந்திரங்கள் பல, மங்களா பாங்குக்கு அடமானம் செய்யப்பட்டுள்ளன.''

''இப்படி வாங்கிய கடன் உண்மையில் சாருலதா இன்ஜினீரிங்குக்கா பயனாகிறது? பரத்வாஜ் கம்பெனி அல்லவா விழுங்கி ஏப்பம் விட்டுக் கொண்டிருக்கிறது?''











# காால்கேட் டென்டல் க்ரீமின் மூலம் வாய் துர்நாற்றத்தைத் தடுத்திடுங்கள்... நாள்முழுவதும் பற்சிதைவை எதிர்த்திடுங்கள்!




கால்கேட், 10க்கு 7 பேர்களில் வாய்துர்நாற்றத்தை உடனடியாக அகற்றுகிறது என்றும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட் முறையில் பற்களைத் துலக்குவதால், இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பேரளவில் ஏராளமானவர்களுக்கு பற்சிதைவு தடுக்கப் படுகிறது என்றும் விஞ்ஞான சோதனைகள் நிரூபித்துள்ளன. ஏனெனில், ஒரே தேய்ப்பில் வாய்துர்நாற்றத்தையும், பற்சிதைவையும் விளைவிக்கும் கிருமிகளை 85சதவீதம் வரை, கால்கேட் டென்டல் க்ரீம் அகற்றிவிடுகிறது. இத்தகைய நிருபணத்தைப் பெற்றிருப்பது கால்கேட் மட்டுமே! அதன் விந்தைமிக்க பெப்பர்மின்ட் சுவையேதனி—கால்கேட் டென்டல் க்ரீம் கொண்டு குழந்தைகள் தவறாமல் பல்துலக்க விரும்புவதில் வியப்பென்ன!




தூய்மையான இனிய மூச்சுடனே, வெண்மையான பற்களையும் பெற்றிடவே... உலகிலேயே அதிக மக்கள் மற்றெந்த பற்பசையையும் விட, கால்கேட் பற்பசையையே வாங்குகிறார்கள்!

DC G.41 TM

''சாரங்கன்!'' — அதட்டினுள் சாரு.

''சாரு!'' — மிரட்டும் பாவனையில் அழைத்தான் அவன். ''நீங்கள் செய்வது மோசடி, சட்ட விரோதமான காரியம்!''

''தொழில் வர்த்தகத் துறையில் முன்னேற்றம் காண்பதென்றால் இந்தக் காலத்தில் இதற்கெல்லாம் துணியவேண்டியதுதான்'' — அலட்சியமாகப் பேசினாள் அவள்.

''ஆலோசனைகளைக் கேளாமல் ஆவேசத்துடன் காரியத்தைச் செய்தீர்கள்! பரத்வாஜ் கம்பெனி ஷேர்களை ஏராளமாய் வாங்கித் தொலைத்தீர்கள்.''

''சாரங்கன்! நான் தவறு செய்தது வாஸ்தவம்தான். என் மனம் ஒரு நிலையில் இல்லாமல் போனதால் அவசரப்பட்டுவிட்டேன்.'' தணிவாகப் பேசினாள் சாருலதா. ''ஆனால் இப்போது எனக்குக் கம்பெனியில் கண்ட்ரோலிங் இன்டரஸ்ட் இருக்கிறது. பெரும்பாலான பங்குகள் என் வசம் இருப்பதுடன் பங்குதாரர்களில் பலர் நான் சொல்வதற்கெல்லாம் தலையாட்டக் கூடியவர்கள். டைரக்டர்களையும் மாற்றியாகி விட்டது. சரிந்து கொண்டிருக்கும் கம்பெனியை எட்டே மாதங்களில் பலமான அஸ்திவாரத்தில் நிலைநிறுத்த என்னால் முடியும். அதை அடுத்து உற்பத்தியிலும் விற்பனையிலும் கணிசமான முன்னேற்றம் காணப் போகிறோம்.''

''ஆனால் அதற்கெல்லாம் முதலில் பணம் போட்டாக வேண்டும். பரத்வாஜ் கம்பெனிக்கு எந்த பாங்கும் கடன் தராது. அது ஏற்கனவே ஏராளமாய்க் கடன் பட்டிருக்கிறது. பல வருஷங்களாக நஷ்டத்தில் இயங்கி வருகிறது. அதனால் சாருலதா இன்ஜினீரிங் பெயரில் கடன் பெற்று அந்தப் பணத்தை இதற்குச் செலவழிக்கிறீர்கள். இந்த விஷயம் தெரிந்தும் தெரியாதது போல் கண்ணை மூடிக் கொண்டிருக்கிறார் ரத்தினசாமி. அது ஏன்?''

''ரத்னசாமியிடம் இந்த விஷயத்தைப் பற்றிக் கேட்டுத் தொலைத்தீர்களா என்ன?''

''கேட்பானேன்? எனக்குத் தெரியாதா? நிதானமாக் விவரித்துச் சொன்னேன். அதோடு இது சம்பந்தமாய் ரிஸர்வ் பாங்குக்கு ஒரு கடிதம் எழுதலாமென்றிருக்கிறேன் என்றும் தெரியப்படுத்தினேன்.''

''அடப் பாவி!''

''இதே வார்த்தையைச் சொல்லித்தான் அவரும் என்னைத் திட்டினார். ஆனால் நீங்கள் இருவரும் நினைப்பது போல் நான் அத்தனை பொல்லாதவன் இல்லை. ஐ ஆம் ரீஸனபிள்! பத்தாயிரம் ரூபாய் கொடுத்தால் கடிதம் எழுதாமல் இருக்கிறேன் என்று ரத்னசாமியிடம் சொன்னேன்.''

சாருலதாவுக்குத் 'திக்'கென் றிருந்தது. கோபம் பொங்கியது. இரண்டுக்கும் மேலாகச் சோர்வு மிகுந்தது. 'ஒரு வேளை விளையாட்டாகப் பேசுகிறானோ, சாரங்கன்?'

''நீங்களும் கற்றுக் கொண்டு விட்டீர்களா பிளாக்மெய்ல் கலையை?''

''ஆனால் அந்தக் கலையில் நான் முழுத் தேர்ச்சி பெறவில்லை சாரு. ரத்னசாமி யமப் பயல். என்ன சொன்னான் தெரியுமா? ரிஸர்வ் பாங்குக்கு நீ எழுதினால் என் உத்தியோகம் பறிபோய்விடலாம்; அல்லது ஒரு வேளை நான் சாருலதாவை நம்பி நல்லெண்ணத்துடன் காரியம் செய்தேன் என்பதால் மன்னிப்புப் பெறலாம். ஆனால் அதே சமயம் சாருலதா செய்த மோசடி வெளியாகிச் சந்தி சிரிக்கும் நிலைக்கு வந்துவிடும் என்பதுமட்டும் நிச்சயம். அதனால் உனக்குத் தேவையான பணத்தை அவளிடமே கேட்டு வாங்கிக் கொள் என்றான். தருகிறீர்களா சாரு?''

சாரங்கன் மேஜையின் ஒரு மூலையில் தனது ஒரு தொடையைத் தூக்கிப் போட்டு, அதில் இடது முழங்கையை ஊன்றினான். வலக் கரம் சாருலதாவிடம் தா என்று கேட்கும் பாவனையில் நீண்டது.

சாருலதா பிரமித்துப் போனாள். அவளுக்கு ஒன்றுமே ஓடவில்லை. எதுவுமே பேசத் தோன்றவில்லை. சிறிது சிறிதாக அவள் துணிவைத் திரட்டிக் கொண்டாள். யுகங்களாகத் தோன்றிய பல நிமிஷங்களுக்குப் பிறகு அவள் பேசும் சக்தியைத் திரும்பப் பெற்றாள். ''சாரங்கன்! வில் யூ கெட் அவுட் ஆஃப் ஹியர்?'' என்று மேஜையைக் குத்தி இரைந்தாள்.

''கோபித்துக் கொள்ளாதீர்கள், சாரு!'' என்று அவள் தோளைப் பற்றி அழுத்தியதுடன், முதுகிலும் தட்டிக் கொடுத்தான் சாரங்கன்.

உச்சந்தலையிலிருந்து உள்ளங்கால்கள் வரை ஆயிரக் கணக்கில் தேள்கள் ஊர்ந்து அத்தனையும் ஒரு சேர ஒரே சமயத்தில் கொட்டி விட்டன போன்று துடிதுடித்துப் போனாள் சாருலதா.

அந்த வேதனைக்கிடையிலும் அவள் எப்படித் துள்ளி எழுந்தாள்; அப்பால் போய் நின்றாள் என்பதொன்றும் அவளுக்குத் தெரியாது.

ஆச்சரியத்துடன் அவன் புருவங்களை உயர்த்தினான். ''ஏன் தொடக்

கூடாதா? ஆண்களைத் தீண்டியதே இல்லையா நீங்கள்?''

சாருலதா பற்களை இறுகக் கடித்தாள். அவள் உதடுகள் நீண்டு விரிந்தன. வலக்கரத்தை முஷ்டியாக்கிக் கொண்டாள். விழிகள் பிதுங்கின.

''ஐ வில் கில் யூ! ஐ வில் கில் யூ!'' அடித் தொண்டையிலிருந்து வந்தன சொற்கள். உரக்கப் பேசவில்லை அவள்; ஆனால் உறுதி தொனித்தது குரலில்.

அவன் சிரித்தான். ''மஹிபாலையும் சந்திரபாலையும் கூட இப்படித்தான் கொன்று விடுவதாகப் பயமுறுத்தினீர்கள். துப்பாக்கியைக் கூட எடுத்துக் காட்டினீர்கள். கடைசியில் பயந்தது யார்? நீங்கள்தான்!''

சாருலதா வெறி கொண்டு பாய்ந்தாள். மேஜை டிராயரைத் திறந்து துப்பாக்கியை எடுத்தாள். கலவரத்துடனேயே பேசினான் சாரங்கன்: ''வேண்டாம் சாரு! அதை உபயோகிக்க உங்களுக்குத் தைரியம் கிடையாது. கொலைக்குற்றம் சாட்டப்பட்டுக் கோர்ட்டில் நிற்க உங்களால் முடியாது!''

மாலை மாலையாகக் கண்ணீர் பெருக்கினாள் சாருலதா. நாத் தழு தழுக்கக் கூறினாள்: ''உங்களைக் கொன்றால் சட்டம் என்னைச் சிறையில் தள்ளும். ஆனால் என்னை நானே சுட்டுக் கொண்டால் என்ன செய்யும்?''

சாரங்கனை நோக்கி நீண்டிருந்த அவள் கரம் மடிந்தது. துப்பாக்கி முனை அவள் நெற்றிப் பொட்டைப் பார்க்கத் திரும்பியது.

விருட்டென்று அவள் பக்கமாய்ச் சாய்ந்து கரத்தைத் தட்டிவிட்டான் சாரங்கன். துப்பாக்கி இயங்கியது. குண்டு, கண்ணாடி ஷோ கேஸில் வைக்கப்பட்டிருந்த ஜப்பானியப் பொம்மையைத் தகர்த்துவிட்டு மேலே சென்று சுவரில் தட்டிக் காரையைப் பெயர்த்துவிட்டுச் சிதறி விழுந்தது.

குண்டு தன் மீது பாயவில்லை என்பதைச் சாருலதா உணருமுன்னரே சாரங்கன், துப்பாக்கி பிடித்திருந்த அவள் கரத்தைப் பற்றிக் கூரையை நோக்கி உயர்த்தி மணிக்கட்டை நெருக்கி உதறினான்.

''முடியாது! நான் தரமாட்டேன்! என்னைச் சாக விடுங்கள்!'' என்று புலம்பினாள் சாருலதா.

சாரங்கன் தன் சக்தியையெல்லாம் பிரயோகித்து அவள் கரத்தை முறுக்கினான். வேதனை தாளாமல் துப்பாக்கியை நழுவ விட்டாள் அவள். ''நான் செத்துப் போனால் உங்களுக்கென்ன? யாருக்குத்தான் என்ன கவலை? ஏன் தடுக்கிறீர்கள்?'' என்று கதறினாள்.

கதவு திறந்து கொண்டது. எல்லாருக்கும் முன்னால் லில்லி கலவரத்துடன் எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவளுக்குப் பின்னால் காரியாலயத்தைச் சேர்ந்த சிலர் நின்றனர். உள்ளே வரலாமோ கூடாதோ என்ற தயக்கம். சாருவுக்கு என்னவோ ஏதோ என்ற பயம்.

சாரங்கன் 'கோ' வென்று கதறிக் கொண்டிருந்த சாருலதாவைக் கையைப் பிடித்து நடத்தி வந்தான். போகிற போக்கில் கதவருகே நின்ற யாரும் கவனியாதவாறு தரையில் கிடந்த துப்பாக்கியை மேஜைக்கு அடியில் உதைத்துத் தள்ளினான்.

''விலகுங்கள், வழி விடுங்கள்'' என்று உத்தரவிட்டுக் கொண்டே வந்தான் வேணுகோபால். அவன் கையில் டாக்டர்களுக்குரிய தோல் பை இருந்தது. அதை ஸோபாக்கள் எதிரேயிருந்த தாழ்வான மேஜையின் மேல் வைத்துவிட்டுச் சாருலதாவைப் பார்த்தான்.

அவனைக் கண்டதும் அவள் புலம்பல் அதிகரித்தது. ''என்னைச் சாக விடுங்கள், பிளீஸ்! நான் செத்துப் போகிறேன். என்னால் இந்த வேதனைகளை இனி மேலும் தாங்க முடியாது. நான் செத்தால்தான் எனக்கு நிம்மதி!'' விம்மி அழுது உரக்கக் கத்தினாள் அவள்.

வேணுகோபால் அவளை அணைத்தவாறு அழைத்துப் போய் ஸோபாவில் படுக்க வைத்தான். பிறகு கதவருகே நின்றவர்களை நெருங்கி, ''ஹிஸ்டீரியா ரொம்ப 'மைல்ட் அட்டாக்' தான்; சரியாகப் போய்விடும். பயப்படாதீர்கள்'' என்றான்.

திரும்பி அவன் சோபா அருகே வருகையில், ''லில்லி! கதவைச் சாத்து'' என்று உத்தரவு போட்டான் சாரங்கன். அவர்வரும் தத்தம் இடத்துக்குத் திரும்ப, கதவு மூடிக் கொண்டது.

டாக்டர் வேணுகோபால் தோல் பையைத் திறந்து மருந்தும் ஸிரிஞ்சும் எடுத்துச் சாருலதாவுக்கு ஓர் ஊசி போட்டான். ஓரிரு நிமிஷங்களில் அது தன் சக்தியைக் காட்ட ஆரம்பித்துவிட்டது. அவள் புலம்பலையும் அழுகையையும் நிறுத்தி அமைதி அடைந்தாள். மேலும் ஓரிரு நிமிஷங்களில் கண்களை மூடித் தூங்கியும் போனாள்.

மௌனமாய் நின்று கொண்டிருந்த சாரங்கன், மேஜைக்கடியில் குனிந்து துப்பாக்கியை எடுத்தான். அதை முன்பிருந்த இடத்திலேயே வைத்துப் பூட்டிப் போனான்.

அப்போது வேணுகோபால், ''சாரங்கன்! அதை இனிமேல் இங்கு விட்டு வைப்பது உசிதமல்ல; [illegible]

கொடுத்துவிடு'' என்ருன். சாரங்கன் வேணு சொற்படி கொடுக்க அதைத் தன் கோட்டின் உள் பாக்கெட்டுக்குள் வைத்துக் கொண்டான் வேணுகோபால்.

* * *

விழிப்புக்கும்தூக்கத்துக்கும் இடைப்பட்ட ஒரு நிலையில் இருந்தாள் சாருலதா. தான் வீட்டுக்கு வந்து சேர்ந்துவிட்ட விவரமே அவளுக்கு இனிமேல் தான் தெரியப் போகிறது. அவளைச் சுற்றிலும் பெருமாள், குணசீலன் டாக்டர் வேணுகோபால் ஆகியோர் அமர்ந்திருந்தனர்.

கவலையுடன் இருந்த அப்பாவையும் பிள்ளையையும் பார்த்து வேணுகோபால் சொன்னுன்: ''குணு வீட்டுக்குத் திரும்பி விட்டான் என்று தெரிந்தாலே போதும், சாரு உடனே குணமடைந்து விடுவாள். தம்பியை வீட்டைவிட்டுத் துரத்திவிட்டோமோ என்று அவளுக்கு இருந்த ஏக்கம் எவ்வளவு தெரியுமா? உணர்ச்சிகளை எளிதில் வெளிக் காட்டாத சுபாவம் அவளுக்கு. ஆனுல் உள்ளுக்குள்ளேயே உருகிப் போவாள்.''

பெருமாள் வழக்கம்போல் மௌனம் சாதித்தார். அவர் கண்கள் மட்டும் கலங்கிக் குளமாகியிருந்தன.

''இவள் எழுந்து உட்கார்ந்ததும், 'எனக்கு 'ஹிஸ்டீரியா' வந்ததே நல்லதாப் போச்சு, தம்பி! அதனுல்தானே நீ மறுபடியும் இந்த வீட்டுக்கு வந்து சேர்ந்திருக்கிருய்' என்று சொல்லப் போகிருள்.''—இதைக் கூறுகையிலேயே குணசீலனுக்கு முகம் சிவந்து விட்டது. மென்று விழுங்கிக் கொண்டான்.

டெலிபோன் மணி அடித்தது. அந்த ஓசை சாருலதாவுக்குத் தொந்தரவு தராதிருக்க வேண்டுமே என்று கவலைப்பட்டவனுய்ப் பாய்ந்து ரிஸீவரைக் கையில் எடுத்தான் வேணுகோபால்.

''எஸ்!.... நோ நோ! நத்திங் ஸீரியஸ்!.... நான் அவங்க ஃபேமிலி டாக்டர்தான் பேசறேன். ஒரு வாரம் பத்து நாட்கள் ஓய்வாக இருந்தாங்கன்ன போதும்.... இல்லே, உடம்புக்கு ஒன்றுமில்லே. நார்மல்தான்.... ஓவர் ஓர்க், டென்ஷன். கொஞ்ச நாளைக்கு ஆபீஸ் கவலைகளை மறந்துட்டு ரெஸ்ட் எடுத்துக் கொண்டாலே போதும். மருந்து வேறு எதுவுமே தேவையில்லே....வேண்டாம். பார்க்க வராதீங்க. நீங்க ஃபோன் பண்ணினதாகச் சொல்லிடறேன். ஓ. கே.!'' வேணுகோபால் ஃபோனை வைத்து விட்டுக் குணுவிடம் கூறினுன்: ''யாரும் சாருலதாவை வந்து பார்த்துத் தொந்தரவு பண்ண அனுமதிக்காதே! மாடியில் இந்த அறையில் டெலிபோன் இல்லாமல் இருப்பதே நல்லது. ஃபோன் வந்தால் கீழே உள்ள எக்ஸ்டென்ஷனிலேயே யாராவது பேசி விடுங்கள்.''

இந்தச் சமயத்தில் சாருலதாவின் வாய் அசைந்தது. தூக்கம் குறைந்து விழிப்பின் எல்லைக்கு அவள் வந்து கொண்டிருக்கும்போது ஏதேதோ எண்ணங்கள், பழைய — புதிய நினைவுகள் மனத்தில் அலை பாய அவள் ஒன்றுக்கொன்று தொடர்பில்லாமல் உளற ஆரம்பித்தாள்:

''டெலிபோன் மணி அடிக்கிறதே! யார் மஹிபாலா பேசுகிறது? இல்லே... டெலிபோனில் ஒன்றுமே கேட்கவில்லையா.... ஹல்லோ.... ஹல்லோ.... டெலிபோன் ரிப்பேர் ஆகியிருக்கு! அம்மா! மணி அடிக்கிறது; ஆனுல் பேசுவது கேட்கலே! இல்லே அம்மா, கோவிச்சுக்காதே! எனக்கு நன்னு ஃபோன் பண்ணத் தெரியும். என் பேரில் தப்பில்லே. ஃபோன்தான் ரிப்பேர். ஐயோ அம்மா! ரொம்ப வலிக்கிறதா? உனக்கென்ன? முகத்தை அப்படி வைச்சுக்காதே அம்மா, எனக்குப் பயமாயிருக்கு! அம்மா! அம்மா!''

சாருலதா விசும்பினுள்.

யுடிகோலோன் விட்ட தண்ணீரில் கர்ச்சிப்பை நனைத்து அனலாய்க் கொதித்த நெற்றியில் போட்டான் வேணுகோபால். பரிவுடன் இதைச் செய்துவிட்டு அவன் நிமிர்ந்தபோது குணசீலனின் கன்னங்களில் கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது. பெருமாள் மேல் துண்டினுல் முகத்தை மூடிக் கொண்டிருந்தார்.

வேணுகோபால் சொன்னுன்: ''இதோ பாருங்கள்; நீங்கள் இருவரும் எனக்கு ஒரு சத்தியம் செய்து தரவேண்டும். அரை மயக்கத்தில் இவள் இப்படிப் பிதற்றியதாக இவளிடம் சொல்லவே கூடாது. சாரு வாழ்க்கையில் ரொம்பத் துயரங்களை அநுபவித்தவள் என்பதை நான் நன்ருக உணர்ந்திருக்கிறேன். ஆனுல் விவரங்கள் ஏதும் தெரியாது. அவற்றைச் சாருவே என்னிடம் மனம் விட்டுச் சொல்ல வேண்டுமே ஒழிய நானுகவே — அரைகுறையாகக் கூடத் தெரிந்து கொண்டதாக இருக்கக் கூடாது. நான் மயக்க ஊசி போட்டதே சில அந்தரங்கங்களைத் தெரிந்து கொள்ளத்தான் என்றுகூட இவள் முடிவு கட்டலாம். அப்புறம் சாரு என்னை மன்னிக்கவே மாட்டாள். புரிகிறதா?''

தந்தையும் மகனும் 'சரி' என்று தலையாட்டினுர்கள். (தொடரும்)

# பத்மினி



அந்த உல்லாச மண்டபத்து ஊஞ்சலில் அமர்ந்து ஆடியவண்ணம் நோக்கிய பத்மினிக்குக் கீழே தென்பட்ட உலகம் மிகவும் கீழே விழ்ந்து விட்டது போலவும், தான் மிகவும் உயர்ந்து ஆகாயத்தைத் தொடப் போவது போலவும் தோன்றியது.

இன்பத்தின் உச்சியிலிருந்தே இன்பத்தைத் தேடுகின்ற பெண்ணின் ஆட்டத்தை அழகுற எடுத்துக் காட்டவே அந்த ஊஞ்சல் ஆடியது போலும்!

'ஓட்டமும் வேகமும் அர்த்தமற்றவை' என்று கற்பனை செய்யும் கவியின் கற்பனை வானில் ஒன்றன்பின் ஒன்றாக ஒளிரும் எண்ணத் துணுக்குகள் ஆகாயத்தில் சுடர் விட்ட விண்மீன்கள் நிலவை ஏறெடுத்துப் பார்க்கவும் வெட்கி இமையா விழிகளைச் சலித்தன.

சந்திர லோகத்திலிருந்து அப்போதுதான் கீழிறங்கி வந்தது போன்ற கம்பீரத்துடன் விளங்கிய அந்த அழகு மாளிகையின் மேல் மாடியின் கைப்பிடியைப் பற்றி நின்ற சேகரனைக் கண்களாலேயே அள்ளி விழுங்க விரும்புகின்றவள் போல் பார்த்துக் கொண்டிருந்தாள் பத்மினி.

''ஊஞ்சலுக்கு வரக் கூடாதா?'' என்று கேட்ட குரலில் பெண் குரலின் வேட்கை ஒலித்தது.

ஆனால் எதிர்க் குரலில் அந்த வேட்கை யில்லை. ''ஆட்டத்தைவிட நிலைத்து நிற்பது சந்தோஷமாக இல்லையா?'' என்றான் சேகரன்.

''திடீர் திடீர் என்று இப்படி உங்களுக்கு என்ன வந்து விடுகிறது? புரியாதபடி ஏதாவது பேச ஆரம்பித்து விடுகிறீர்களே. இங்கே வாருங்கள்!''

நின்ற இடம் விட்டு அவன் அசையவில்லை. அவளுடைய அழைப்பைக் காதில் வாங்காதவனாய், இரவின் மோனத்தோடு அவன் ஒன்றி நின்றான். அவனுடைய அந்த ஒருமையே அவளுடைய கிளர்ச்சியை மேலும் தூண்டி விட்டது. வாரி முடித்த கூந்தலைப் பிரித்துப் பறக்க விட்டு, பறக்கின்ற தலையில் ஒற்றை ரோஜா செருகி, நிலாவின் மணத்தை மேலே தெளித்துக் கொண்டு, காற்றின் பரபரப்பை ஆடைக்கு அணியாக்கி, 'நான் காதல் — நான் இன்பம்' என்று குரல் கொடுக்கும் வடிவெடுத்து, ஊஞ்சலிலிருந்து குதித்து, அருகில் சென்று அவனுடைய தோள் தொட்டு நின்றாள் அவள்.

இரும்பையும் பாகாக்கும் ஆற்றலுடைய அந்தச் சொக்கெழில் நிலையாக நிற்க விரும்பிய அவனை ஆட்டிக் குலுக்கத்தான் செய்தது.

''இந்த அழகான பொழுதைப் பாழாக்க வேண்டுமா? பகல் முழுதும் பணத்துக்குப் பின்னால் ஓடுகிறீர்கள்; நிம்மதியாக இருக்க வேண்டிய இந்த நேரத்தை அர்த்தமற்ற யோசனைகளில் கழிக்க வேண்டுமா? உங்களுக்காகக் காத்திருக்கிற எனக்கு நீங்கள், கொடுக்கின்ற மதிப்பு இதுதானா?'' என்று அவள் கெஞ்சும்போதே இருவரும் ஊஞ்சலில் ஆடிக் கொண்டிருந்தனர்.

ஊடலின் மயக்கத்தில் அவன் மூழ்கினாலும், மனம் அவன் உடலுக்கு வரவில்லை என்பதை அவன் பேச்சு காட்டிக் கொடுத்தது.

''பத்மினி, எனக்கும்தான் புரியவில்லை. பகல் முழுவதும் நீ சொல்வது போல் — பணத்துக்குப் பின்னால் ஓடும்போது, 'இரவு வர வேண்டும், உன்னுடன் களித்திருக்க வேண்டும்' என்று ஏங்குகின்றேன். ஆனால் இரவு வந்ததும், 'பகல் முழுவதும் பணத்துக்குப்




பின்னும், இரவு முழுவதும் பெண்ணுக்குப் பின்னும் ஓட வேண்டியதுதானே?' என்று ஏனோ எனக்குத் தோன்றுகிறது. அமைதியாகத்தான் இருக்கிறேன். உன்னிடம் எனக்கு உள்ள பந்தமும் உறுதியாக இருக்கிறது. ஆயினும், உல்லாச மண்டபத்து அழகான ஏகாந்தத்தில் நான் இப்படி ஏன் நினைக்கிறேன்?''

''ஏன் என்றால், என் மீது உங்களுக்கு உள்ள அன்பு தளர்ந்து விட்டது!'' என்று அவள் சிணுங்கினாள்.

''நீ நினைப்பது தவறு. பகல் முழுவதும், உன் நினைவாகவே இருக்கிறேன். குவியலாகச் சேரும் 'கரன்ஸி' நோட்டுக்களில் ராஜாவின் தலைக்குப் பதிலாக உன் முகம்தான் தென்படுகிறது. என்றாவது ஒரு நாள் அந்தத் தலைக்குப் பதிலாக உன் தலையை அச்சிட வேண்டும் என்று பல முறை நான் யோசித்ததுண்டு. என் மேல் உள்ள வெறுப்பினாலா இப்படி நினைக்கிறேன்?''

''நீங்கள் இப்படியெல்லாம் பேசினால் எனக்குப் பயமாக இருக்கிறது. உங்கள் உடம்பில் ஏதாவது கோளாறு இருக்குமா? நல்ல சமயத்தில் நல்ல விஷயம் பேசாமல்...''

''எனக்கே சந்தேகம் வந்து டாக்டரைக் கலந்தேன் — உடம்பில் மட்டுமல்ல, மனத்தில் கூடக் கோளாறு இல்லை என்று கூறிவிட்டார். எனக்கு என்ன குறை? நோய் நொடி இல்லாத உடல் இருக்கிறது; நினைத்ததை நிறைவேற்றிக் கொள்ளப் பொருள் வலிமை இருக்கிறது; 'அழகு' என்ற சொல்லுக்கு இலக்கணமான நீ என் மனைவி; நம் குலம் விளங்க ஓர் ஆண் குழந்தை இருக்கிறான்; நான் அமைதியாக இருப்பதாய்த்தான் தோன்றுகிறது; ஆனாலும்......''

பத்மினி பெருமூச்சு விட்டபோது ஊஞ்சல் மட்டுமல்ல, விண்மீன்கள்கூட நடுங்கின; மோக நிலா கேலியாக நகைத்தது.

''உங்களுக்குச் சந்தோஷம் உண்டாக்க முடியவில்லை என்கிற கவலை என்னைத் துன்புறுத்துகிறது....''

''உனக்குப் புரியும்படி எப்படிச் சொல்வது என்றே புரியவில்லை; ஏனென்றால், எனக்கே அது புரியவில்லை. உன் உடலின் சொகுசான எழிலும், மனத்தின் நறுமணமும் என்னைப் பரவசப்படுத்துகின்றன. உடல் எடுத்ததன் பயனைக் கண்டுவிட்ட ஒரு நிறைவு உன் அருகில் வந்ததும் என்னுள் தென்படுகிறது. நீ என்னை மகிழ்விக்கவில்லை என்று எப்படிக் கூறுவது? என் ஏக்கம் உடலின் ஏக்கம் அல்ல. என் மனம் வேதனைப்படுவதாகவும் சொல்ல முடியாது.......''

''இப்படித்தான் கவிதை போல் கனவு கண்டு....''

''அடடா, மறந்து விட்டேன். கனவு என்றதும் ஞாபகம் வருகிறது. நேற்று இராத்திரி ஒரு வேடிக்கையான கனவு கண்டேன். மறக்க முடியாத கதை போலவே இருந்தது. ஒரு வேளை, என் மனத்தின் தவமே அந்தக் கனவாக வந்ததோ என்னவோ?''

''என்ன அது?'' என்றாள், பேச்சு மாறுதல் வேண்டிய பத்மினி.

''உனக்கு வருத்தமாக இருக்கும்.....''

''கனவுக்கு வருந்துவார்களா ?''

''வருந்தும்படியாகத் தான் இருக்கும் ; சொல்லட்டுமா ?''

கனவு கேட்கும் காரணம் காட்டி அவனோடு அவள் நெருங்கினாள்.

அவன் கனவைக் கூறத் தொடங்கினான் :

''வெறும் சொப்பனம். இந்த ஆடம்பரமான ஆடைகளுக்குப் பதிலாகக் கிழிந்து கந்தலான அழுக்குத் துணியைக் கட்டிக் கொண்டு, கையில் ஒரு பாத்திரம் ஏந்திய பிச்சைக்காரனாய் முன் பின் அறியாத ஏதோ ஓர் ஊரின் தெருவில், இரவில் அலைந்தேன்.



''வேலைக்காகச் சிவானந்த முதலியாரிடம் ஒரு சிபாரிசுக் கடிதம் வாங்கிறையே, என்ன ஆச்சு ?''

''அவர் வஜ்ஜிரவேலு செட்டியாருக்குச் சிபாரிசுக் கடிதம் கொடுத்தார். செட்டியார் சீநிவாஸ அய்யங்காருக்கு ஒரு கடிதாசு கொடுத்தார். அய்யங்கார் வெங்கடராம அய்யருக்கு காட்டச் சொல்லி ஒரு கடிதம் தந்தார். அய்யர் கடைசியில் சிவானந்த முதலியாருக்கே கடிதாசு கொடுத்து விட்டார்!''

அந்த இரவில் அவ்வூரைப் பாழ்படுத்த விரும்புவது போல் ஆகாயத்தில் மேகங்கள் உறுமிக் கொண்டிருந்தன.

எளியவர்களை வதைக்கும் கொள்ளைக்காரர்களைப் போல், செடிகொடிகளைப் பிடுங்கி எறிந்து, மரங்களை ஆட்டிக் குலுக்கி முறுக்கிய காற்று வீடுகளையும் சுருட்டிக் கொள்ள முயன்று கொண்டிருந்தது.

அந்த அமளிக்கு அஞ்சிய அத்தெரு மக்கள் வீட்டுச் சுவர்களின் பாதுகாப்பில் ஒளிந்து கொண்டார்கள். இடிக்கும் இடி சிரிக்கும் சிரிப்பின் வெளிச்சத்தில் அந்தத் தெரு, 'என்னைக் காப்பாற்று' என்று வானை நோக்கிக் கெஞ்சுவது போல் பரிதாபமாகக் காட்சி அளித்தது.

இவ்வளவு தடபுடலையும் பொருட்படுத்தாமல் வீடு வீடாக ஏறிப் பிச்சை கேட்டுக் கொண்டிருந்தான் சேகரன். இடியையும் சூறாவளியையும் எதிர்த்து நிற்கும் வலிமையை அவனுடைய பசி கொடுத்தது. அவனுடைய பசி மட்டுமல்ல; ஊருக்குப் புறம்பே—அருகில்தான்—ஒரு பாழடைந்த மண்டபத்தில் காய்ச்சலாகப் படுத்துக் கிடந்த, அவனுடைய பிச்சைக்கார வாழ்வின் துணைவியான பத்மினியின் பசிதான் அவனுக்கு அத்தனை துணிச்சல் தந்தது.

அவனுக்கே பசி; காலையிலிருந்து வெறும் நீருண்ட அவன் வயிறு நீருண்ட மேகம் போலவே குமுறியது. மரங்களைக் குலுக்கும் காற்றுத்தான் தன் தலையைச் சுற்றுகிறதா? அல்லது தானாகவே அது சுற்றுகிறதா என்று நிர்ணயம் செய்ய முடியாத நிலையில் அவன் தள்ளாடியவாறு நடந்தான்.

அவ்வூரில் அவன் பிறவிப் பிச்சைக்காரன்; வேலை செய்ய மாட்டான் என்பதில்லை; வேலை கிடைக்கும்போது வேலை; வேலை இல்லாத போது பிச்சை. வேலை செய்வதைவிடப் பிச்சை எடுத்துப் பிழைப்பதே இன்பம் என்று அவன் முடிவு கட்டி வெகு காலம் ஆகிவிட்டது. வயிறு என்கிற தொல்லைப் பொறுப்பைத் தவிர வேறு பொறுப்பற்ற அவனுக்குப் பத்மினி இன்பப் பொறுப்பாக வந்து சேர்ந்தாள். தெருவோடு பிச்சை கேட்டு வந்த அவனுக்கும் அவளுக்கும் இடையில் காதல் என்கிற பிணைப்பு ஏற்படுவதற்கு நிலவோ, தென்றலோ, இசையோ, துணை செய்யவில்லை.

வயிற்றை நிரப்பிக் கொண்டு இரவுக்காகத் தனித்தனியே பாழ்மண்டபத்தில் ஒதுங்கியவர்கள் காலையில் தம்பதியாய்க் கண் விழித்தார்கள். நலிந்த தோற்றம் அளித்தாலும் வீறுள்ள உடல் படைத்தவன் அவன்; அழகே வடிவான பெண் அவள்; பிச்சைச் சோறானாலும் சம பங்கு கண்டு மரத்தடியிலும் திண்ணைகளிலும் இடிந்த மண்டபத்திலும் அவ்விருவரின் குடும்பம் குதூகலமாய் நடந்தது. வயிற்றுக்குக் கிடைக்காத காலத்திலும் அவர்களுடைய மகிழ்ச்சி சிறிதும் சிணுங்கவில்லை என்பதுதான் அதிசயம். ''இன்ப வாழ்வின் பயனை நான்கைந்து மாசங்களில் காணலாம். பிச்சை கேட்பதற்கு ஒரு நல்ல 'காரணம்' கிடைக்கும்'' என்று அவர்கள் ஆசையாக எதிர்பார்த்துக் கொண்டிருந்த போது அன்றைக்கு அவள் காய்ச்சல் என்று படுத்து விட்டாள்.

பகல் முழுதும் அவன் ஏதேதோ பச்சிலை வைத்தியம் செய்தான். பிச்சைக்காரனுடைய கஷ்ட காலத்தில் தர்மவான்களின் தாராளப் புத்தி மங்குகிறது என்று அவன் பழக்கத்தில் அறிந்த உண்மையை அனுசரித்து, அன்று பகலில் கிடைத்த ஆகாரம் அவளுக்கே அரை வயிற்றுக்குப் போதவில்லை. இரவிலாவது இருவருக்கும் நிம்மதியான ஆகாரம் கிடைக்காதா என்று அவன் கிளம்பியபோது ஆகாயமே அவனை எதிர்த்துப் புரண்டது.

அவ்வூரில், அத்தெருவாசிகள் தர்மவான்கள்; பசித்த வேளைக்கு ஏதாவது கிடைக்கும் என்று அவனுக்குத் தெரியும். ஆயினும் இடியும் புயலுமாக இருந்த அந்த நேரம் கெட்ட நேரத்தில் பிச்சைக்காரனுக்குப் பரிந்து வெளிவர யாருக்கும் மனம் இரங்கவில்லை. வெறும் கையோடு கடைசி வீட்டு வாசற்படி ஏறிய அவன் நிலைகுலைந்து போனான்.

''அம்மா ! அம்மா !'' என்று நெருப்புச் சுட்டுப் பதறுகிறவன் போல் அவன் ஓலமிட்டான்.

''யாரது ?'' என்று கேட்டபடி ஒரு குரல் கதவைத் திறந்தது.

''அட பாவி! பிச்சை கேட்கிற லட்சணமா இது ? யாருக்கு என்னவோ ஏதோ என்று அலறிக் கொண்டு வந்தேன் !''

''தாயே, மகாலட்சுமி, நீங்கள்தான் காப்பாற்ற வேண்டும். பாழ்மண்டபத்தில் அவள்



"ஐந்து ரூபா கடன் கேட்கிறீரே, நீங்கள் யாரென்றே எனக்கு முன் பின் தெரியாதே ?"

"அதற்கு நீங்கள் சந்தோஷப்படணும். நான் தெரிஞ்சவங்ககிட்டே குறைஞ்சது ஐம்பதாவது கடன் கேட்பேன் சார் !"

"பிரேமா! ஐந்து ரூபாய் கைமாற்று கொடேன் ! உனக்குச் சம்பளம் வந்ததும் திருப்பிக் கொடுத்து விடுகிறேன்!"



சாகக் கிடக்கிறாள். எனக்கும் பசி மயக்கம் தலை சுற்றுகிறது......"

"பரவாயில்லையே, இரண்டு பேருக்கும் சாப்பாடு கேட்கிறாயே, நல்ல வேடிக்கை, ராத்திரியில்!" என்று சிரித்துக் கொண்டே உள்ளே சென்ற மகாலட்சுமி இலையில் கொண்டு வந்த சோறு உண்மையாகவே இருவருடைய வயிற்றை அடைக்கும் அளவு இருந்தது ! அவளை மனமாற வாழ்த்தி விட்டுத் தெருவில் இறங்கினான் சேகரன்.

சோற்றைக் கையில் வாங்கிய நொடியில் அவனுடைய பசி அடங்கி, பத்மினியின் பசி நினைவுக்கு வர, 'மழைக்கு முன் அவளை அடைந்துவிட வேண்டும்' என்று அவன் வேகமாய்க் காலெடுத்து வைக்கும்போதே, அவனுடைய வழியை மறிப்பது போல் மழை கொட்டத் தொடங்கியது. கையில் உள்ள சோறு வீணாகிவிடக் கூடாது என்று அஞ்சிய அவன் போட்டிருந்த சட்டையை எடுத்துச் சோற்று மூட்டையின் மேல் சுற்றிக் கொண்டு மழையையும் காற்றையும் வெட்டிக்கொண்டு நடந்தான். அவன் வாழ்க்கை ஒளி தங்கியிருந்த மண்டபத்தை அடைந்து, கையிலுள்ள சோற்று மூட்டையை அவள் அருகில் வைக்கும்போது பசியும் ஈரமும் அவனைக் கீழே தள்ளின.

அவன் பத்திரமாக வந்து சேர வேண்டுமே என்ற கவலையோடு காத்திருந்த பத்மினி, பக்கத்தில் வந்து அவன் விழுந்ததும் பதைத்துப் போனாள். அவனுடைய உடலைத் தேய்த்துச் சூடு உண்டாக்கினாள். தான் கட்டியிருந்த எட்டு முழ நீளமுள்ள சேலையைத் தலைப்பிலிருந்து அவன் உடலுக்கும் அவள் சுற்றினாள். இரு தலைகளும், நான்கு கைகளும் உள்ள ஓர் அவதாரம் அங்கு பிறவி எடுத்தது.

அவனுக்கு வெகு நேரம் கழித்து உணர்வு வந்தது; அவளுக்கும் உயிர் வந்தது.

"சாப்பிட்டாயா, பத்மினி ?" என்றான் அவன் முதல் கவலையாக.

"சாப்பிடுவதா ? நன்றாக இருக்கிறதே ! நீங்கள் பிழைத்தால் போதும் என்று இருந்தது. ஒரு நாள் சாப்பிடாவிட்டால்தான் என்ன? இந்த மழை நேரத்தில் ஏன் வெளியே போக வேண்டும் ?"

"போனது போகட்டும். மூட்டையைப் பிரி. கோடி வீட்டு மகாலட்சுமி நிறையச் சோறு கொடுத்தாள். நிம்மதியாகச் சாப்பிடலாம்."

பெண் கை ஆண் வாய்க்கு ஊட்ட, ஆண் கை பெண் வாய்க்கு ஊட்ட வயிற்றில் சென்ற அமுது எவ்வளவு ருசியாக இருந்தது !

"உனக்குக் காய்ச்சல் இல்லையே ?" என்ற சேகரன் குரலில் இருந்த குழைவு — காதல் என்பது அதுதானோ ?

"மழை ஈரத்தில் காய்ச்சல் இருக்குமா?" என்று அவள் கூறிய பதிலைக் கேட்டு இடிகூடச் சற்று ஸ்தம்பித்து விட்டது.

"பத்மினி! நமக்கு வீடு வேண்டாம், வாசல் வேண்டாம்; தோப்பு வேண்டாம்; துரவு வேண்டாம்; இருவருக்கும் இரண்டு வேளை வயிறாரச் சோறு கிடைத்தால் — அப்புறம் நீதான் ராணி."

"இந்த அரண்மனைக்கு நீங்கள்தான் ராஜா."

"அடடா, மறந்து விட்டேன். அரண்மனை என்றதும் ஞாபகம் வருகிறது. மயக்கம், போட்டு விழுந்தேனே, அப்போது ஒரு வேடிக்கையான கனவு கண்டேன்; கதை போலவே இருந்தது. என் மனத்தின் தாபமே அந்தக் கனவாக வந்ததோ என்னவோ !"

"என்ன அது?" என்று ஆவலுடன் கேட்டவாறு அவள் மேலும் நெருங்கினாள்.

"சொல்ல மாட்டேன், ஜோரான கனவு!"

"உங்களோடு நானும் சந்தோஷப்படக் கூடாது இல்லையா?" என்று அவள் குழறினாள்.

"அதற்குள் கோபித்துக் கொள்கிறாயே!" என்றவன் அவள் கன்னத்தைக் கிள்ளினான்.

"சொல்லுங்கள் !" என்று அவள் அவனை அடர்ந்தபோது, அர்த்தநாரீ ரூபத்தில், அவர்கள் காட்சியளித்தனர்.

அவன் கனவைக் கூறத் தொடங்கினான்:

"வெறும் சொப்பனம். ஒரு பெரிய அரண்மனையின் மூன்றாவது மாடியில் நான் நிற்கிறேன். எட்டு முழச் சேலையில் இரண்டு பேர் பதுங்கியிருக்கிறோமே, அந்த மாதிரி அல்ல; விலை சொல்ல முடியாத உயர்ந்த துணி கட்டியிருக்கிறேன். நீ எப்படி இருக்கிறாய் ? ராணி என்றால் ராணிதான் ! அந்த மேல் மாடியிலேயே செடிகொடிகளும் மொட்டும் மலருமாக வாசனை வீசும் ஒரு மண்டபம்; அந்த மண்டபத்துக்கு நடுவே ஓர் ஊஞ்சல்; அதில் உட்கார்ந்தபடி நீ ஆடுகிற ஆட்டத்தை...."

அந்த உல்லாச மண்டபத்து ஊஞ்சலில் அமர்ந்து ஆடியவண்ணம் குனிந்து நோக்கிய பத்மினிக்குக் கீழே தென்பட்ட உலகம் மிகவும் கீழே வீழ்ந்து விட்டது போலவும், தான் மிகவும் உயர்ந்து ஆகாயத்தைத் தொடப் போவது போலவும் தோன்றியது....

• அத்தியாயம் 22

# இன்னும் ஒரு கதை

பங்களா வாசலில் விசாலமான தோட்டம். அதில் பணியாற்றிய ஒரு பட்டாளத்தின் தலைவன் கண்ணுயிரம், உண்மையாகவே அத்தனை கண்களுடையவன் போல் அவற்றுக்குரிய அத்தனை கருத்துடன் கவனித்துக் கொண்டான் தோட்டத்தை. பசேலென்று புல்வெளி. அதில் உடலை உறுத்தும் ஒரு கோரைப் புல் கிடையாது; இலையுடன் கூடிய ஒரு பூண்டு இருக்காது. 'லான் மூவர்' அடிக்கடி புல்லை வெட்டிக் கொண்டே இருந்ததால் பச்சை நிறத்தில் வெல்வெட் கம்பளம் விரித்தாற் போலிருந்தது.

அதில் உதிர்ந்திருந்த சரக்கொன்றை மலர்கள் பசுமையை எடுத்துக் காட்டுவது எனது மஞ்சள் நிறம்தான் என்று மார் தட்டுவதுபோல் திகழ்ந்தன. நிழல் தரும் வேறு ஓரிரு மரங்கள் தவிர, கண்ணுக்கு இனிமையாக ஃப்ளாக்ஸ், ஸ்னுப் டிராகன், ஜினியா முதலானவையும்; முகர்வதற்கு இனிமையாக மனோரஞ்சிதம், துளசி, நைட் குவீன் முதலியனவும்; பூஜைக்கு உகந்ததாகச் செம்பருத்தி காசித் தும்பை முதலியனவும்; தலையில் சூடுவதற்கு ஏற்றதாக முல்லை, மல்லி போன்றவையும்அங்கே ஏராளமாகப்பூத்துக் குலுங்கின. கொடி வீடுகள், செயற்கைச் சுனைகள் ஆகியவையும் இருந்தன.

அவற்றின் அழகை வியப்பதா, அல்லது தோட்டத்தை இன்ன விதமாக அமைத்து எந்தெந்த இடத்தில் என்னென்ன செடிகள் பயிரிடப்பட வேண்டும் என்று திட்டம் வகுத்துக் கொடுத்த தோட்டக் கலை நிபுணரைப் பாராட்டுவதா அல்லது அந்த யோசனைகளை ஏற்று இம்மியும் பிசகாமல் நிறைவேற்றி வைத்த தோட்டக்காரர்களைப் போற்றுவதா என்று புரியாமல் பிரமிக்க வைக்கும் சூழ்நிலை.

புல்தரையில் போடப்பட்டிருந்த நாலு கூடை நாற்காலிகளுள் ஒன்றில் அமர்ந்திருந்தாள் சாருலதா. புல் தரையில் புழு பூச்சிகளைத் தேடித் தத்தித் தத்திச் சென்ற இரு ஹூப்பூ பறவைகள் நீண்ட அலகினால் அடிக்கடி கொத்திய போது அவற்றின் கொண்டைகள் முன்னும் பின்னுமாய்ச் சென்று வந்த காட்சி இன்றைக்கெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கலாம் போல் அத்தனை அழகாய் இருந்தது. வேணுகோபாலின் கார் காம்பவுண்டுக்குள் நுழைந்து தோட்டத்தினூடே வளைந்து வந்த பாதையில் முன்னேறியபோது கொண்டையாட்டிகள் இரண்டும் ஜிவ்வென்று பறந்து சென்று விட்டன.



# சாருலதா

கி. ராஜேந்திரன்

''ஏது, சாருலதாவுக்குக் கூட மலர்களையும் பட்சிகளையும் பார்த்து ரசிக்கலாம் என்று தோன்றி யிருக்கிறதே! அதிசயம்தான்!'' என்றான் வேணுகோபால். கையில் எடுத்து வந்த தோல் பையைப் புல் தரையில் வைத்துவிட்டு ஒரு நாற்காலியில் அமர்ந்தான்.

''வேறு வழி? என்னைத்தான் நீங்கள் கூண்டில் அடைத்து விட்டீர்களே? சுதந்திரமாய்த் திரியும் பறவைகளைப் பார்த்துப் பொறுமையுடன் பெருமூச்சு விட்டுக் கொண்டிருக்கிறேன்.''

''அது சரி, உன் அழகைப் பார்த்து இங்குள்ள மலர்ச் செடிகளுக்கிடையில் மறைந்து வாழும் வனதேவதைகள் பெருமூச்சு விடுகின்றனவே, கேட்கவில்லையா உனக்கு?''

''ஐயோ, போதுமே'' என்றாள் சாருலதா. மகிழ்ச்சியை மறைக்க முயன்று தோல்வி கண்ட தந்த வர்ண முகத்தில் சிவப்பேறியது.

உண்மையிலேயே அவள் வன தேவதைகளும் வணங்கக்கூடிய பேரெழிலுடன்தான் விளங்கினாள். இரண்டு நாட்கள் பூரணமாய் ஓய்வு எடுத்துக் கொண்டதால் அவள் மேனி மெருகேறித் தளதளத்துக் கொண்டிருந்தது. கருமை



யான கேசம் சூழ்ந்திருக்க அவள் முகம் நள்ளிரவு நிலாப் போல் தோன்றியது என்றால் அழுத்தமான வயலெட் வர்ணப் புடவையை அவள் அணிந்திருந்த பாணி காரணமாகக் கரிய மேகக் குவியல்களிடையே மின்னல் பளிச்சிடுவது போல் அவளுடைய இடை தெற்றெனத் தெரிந்தது. பசும் புல் தரையில் அவள் பாதங்களோ இடைவெளியின்றி இலைகள் சூழ்ந்திருக்கப் புதிதாய்ப் பூத்த இரு அல்லி மலர்களாகக் கண்களைப் பறித்தன. மலைச் சரிவில் அருவி விழும் தொலை தூரக் காட்சியை அவள் மடியில் தவழ்ந்த ஒரு வெண்மையான கரம் நினைவூட்டியது.

''ஏன் சாரு, இந்தத் தோட்டத்தில் தேனீக்களை வளர்க்கலாமே, நீ? இத்தனை மலர்கள் இங்கே பூத்துக் குலுங்கும் போது முதல்தரமான தேன் கிடைக்குமே!''

''தேனை என்ன செய்வது? குணுவுக்குக் கல்யாணமாகி நாலு குழந்தைகள் பிறந்தாலாவது ஒன்று மாற்றி ஒன்று ஜுரமாகப் படுத்துக் கொள்ளும்; மாத்திரை பொடி பண்ணித் தேனில் குழைத்துக் கொடுக்கலாம்!''

''தேன், மருந்து சாப்பிட மட்டும் தான் பயன்படும் என்று நினைக்கிறாயா?''

''உடம்பு இளைக்கத் தண்ணீரில் தேன் கலந்து சாப்பிடலாம் என்பார்கள். அந்தக் கவலை எனக்குக் கிடையாது.''

''சாரு, நாளைக்கு நான் வரும்போது நல்ல தேனாக வாங்கி வருகிறேன். முத்துவை இப்போதே கூப்பிட்டுத் தோசைக்குப் போடச் சொல்லு. அரை முறுகலாகத் தோசை வார்த்து அதற்குத் தேனைத் தொட்டுக் கொண்டு சாப்பிட்டால் எப்படி இருக்கும் தெரியுமா?'' வேணு நாவினால் 'டப் டப்' என்று சத்தப்படுத்தினான்.

சாரு கலகலவென்று சிரித்தாள். ''உங்கள் அம்மா உங்களை எப்படி வளர்த்திருக்கிறாளோ தெரியாது; ஆனால் உங்கள் நாக்கை ரொம்ப நன்றாக வளர்த்திருக்கிறாள்!''

''அதில் என்ன தவறு சாரு? வாழ்க்கை இன்ப மயமாவதும் நரகமாவதும் ஒருவனுக்குக் 'கலை உணர்வு இருக்கிறதா, இல்லையா என்பதைப் பொறுத்ததுதான். கலை உணர்வு என்றால் உடனே வீணையை மீட்ட வேண்டும் என்றோ அல்லது நாடகமாட வேண்டும் என்றோ அர்த்தமில்லை. தோட்டத்து மலர்களை ரசிப்பதும் தோசையையும், தேனையையும் சுவைப்பதும் கூடக் கலை உணர்வுகளில் சேர்ந்தவைதாம்.''

''நல்ல டாக்டர் நீங்கள்! பேஷண்டைக் கவனிக்காமல் நாளைய டிபனைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறீர்கள்!''



''பேஷண்டா? யாருக்கு என்ன உடம்பு இங்கே? உன் அப்பா ஏதாவது தலையைக் காலை வலிக்கிறது என்று தெரியப்படுத்தினாரா என்ன?''

''நீங்கள் ரொம்பப் பொல்லாதவர். நான் உங்களுடன் பேசப்போவதில்லை.''

''அடாடா! அப்படிச் சொல்லாதே சாரு! நீ பேச வேண்டும்; நிறைய வாய் ஓயாமல் பேச வேண்டும் என்பதற்காகத்தானே பத்து நாட்களுக்கு ஆபீஸ் விவகாரங்களைக் கவனிக்கக் கூடாது என்று உத்தரவு போட்டுவிட்டு நானும் பேச்சுத் துணைக்கு அடிக்கடி வந்து போய்க் கொண்டிருக்கிறேன்?''

''பேசிப் பேசிப் பொழுதைக் கழிக்க....''

''நேரம் இருக்கிறது! எட்டு நாட்கள் பாக்கி இருக்கின்றன.'' — இடைவெட்டு வெட்டினான் வேணுகோபால்.

''ஐயோ, இன்னும் எட்டு நாட்களா?''

''சுருசுருப்பாகவே இயங்கிப் பழகியவர்களுக்கு ஓய்வெடுப்பதென்றாலே கஷ்டமாகத்தான் இருக்கும். பத்துநாட்கள் ரெஸ்ட் என்பதுதானே என் பிரிஸ்கிரிப்ஷன்.''

''இரண்டு நாட்களிலேயே மருந்து கசந்து விட்டது.''

''கசப்புத் தெரியாமல் இருப்பதற்காகத்தான் மனம் விட்டுப் பேசு என்கிறேன்.''

''என்னத்தைப் பேச?''

''எதை வேணுமானாலும் பேசு. கற்

காலம் முதல், தற்காலம் வரை, அமெரிக்கா முதல் அந்தமான் வரை, அகில உலகம் முதல் அண்ட சராசரம்வரை பேசுவதற்கு விஷயங்களா இல்லை? உன் ஆபீஸ் விஷயமாக மட்டும் பேசாதே, யோசிக்காதே!''

''யோசித்தால் என்ன?''

''உன் உடலுக்கு மட்டுமில்லை, அறிவுக்கும் உள்ளத்துக்கும் கூட இந்தப் பத்து நாட்கள் ஓய்வு அவசியத் தேவை சாரு. என் சொற்படி நீ நடக்காமல் போனால் அப்புறம் என்ன நேருமோ? அவற்றுக்கு நான் பொறுப்பாளி இல்லை. வேறு டாக்டர்களை வேணுமானாலும் அழைத்து அபிப்பிராயம் கேள்; இதையேதான் சொல்வார்கள்.''

''வேணு, எனக்கென்ன உடம்பு? உண்மையைச் சொல்லுங்கள்!''

''தாராளமாய்ச் சொல்கிறேன். உன்னிடம் என்ன கோளாறு தெரியுமா? உனக்கு அன்பு தேவையில்லை — அன்பு செலுத்துவது போல் யாராவது காட்டிக்கொண்டிருந்தால் போதும்; உனக்கு அனுதாபம் வேண்டாம் — அனுதாபப் படுவது போல் யாராவது நடித்துக் கொண்டிருந்தால் போதும்; உனக்குக் காதல் தேவையில்லை — உன்னைக் காதலிப்பதாக நான் சொல்லிக் கொண்டிருக்கிறேனே அதிலேயே நீ திருப்தியடைந்து விடுகிறாய்; உனக்குத் தொழில் வர்த்தகத் துறையில் உண்மையான வெற்றி பற்றிய அக்கறை இல்லை — நீ வெற்றி பெற்று விட்டதாக உன்னைச் சூழ்ந்து நாலு பேர் சதா சொல்லிக் கொண்டே இருக்கிறார்களே அதிலேயே நீ மயங்கி விடுகிறாய். உண்மையான அன்பு, முழுமையான அனுதாபம், தூய்மையான காதல், நியாயமான வெற்றி இவை என்ன என்பதைப் புரிந்துகொள்ளாததுதான் உனக்குள்ள வியாதி.''

''இருக்கிற நோயைச் சரியாகக் கண்டுபிடிக்காமல் இல்லாத நோய்க்கு மருந்து கொடுக்கிற டாக்டர்களும் உண்டு!''

''நான் அப்படிச் செய்யவில்லை, சாரு! உன் மனத்தை எக்ஸ்ரே எடுத்தாகி விட்டது. அதில் நான் காண்பதை உனக்கும் விளக்குகிறேன். தொழில் வர்த்தகத் துறையில் நீ மாபெரும் வெற்றிகளை அடைந்து விட்டதாக எல்லாரும் சொல்கிறார்கள். நீயும் அதைக் கேட்டு நம்பிப் பெருமிதம் அடைகிறாய். ஆனால் உண்மையில் நீ அடைந்தது வெற்றியா? ஓட்டப் பந்தயத்தில் ஈடுபடப் போகிற ஒருவன், மறு நாள் தன்னுடன் போட்டி போடவிருக்கிற ஒரு சாம்பியனின் காலை முதல் நாள் இரவோடு இரவாக யாரு

ஹே ராம்

டிரினிடாட் நாட்டில் இம் மாதம் காந்தி நினைவுத் தபால் தலைகள் இரண்டை வெளியிடப் போகிறார்கள். அவற்றில் ஒன்று காந்தி உருவம் கொண்டதாயும், மற்றொன்று ''ஹே ராம்'' என்ற சொற்களை மட்டும் கொண்டதாயுமிருக்குமாம்!

ஆதாரம் : டாக்தார்,
தகவல் : சுதாகரன்.

---

மறியாதவாறு முறித்துவிட்டு வந்து விடுகிறான். அவன் அடையும் வெற்றியை விஷயம் அறிந்தவன் ஒப்புக் கொள்ள முடியுமா?''

சாருலதா பதில் கூறத் தெரியாமல் தலை குனிந்தாள்.

''உனக்கு உடம்பு சரியில்லை என்றதும் தினம் நாற்பதுபேர் டெலிபோனில் கூப்பிட்டு விசாரிக்கிறார்கள். அந்த அனுதாப வார்த்தைகளில் நீ திருப்தி அடைந்து விடுகிறாய். ஆனால் அவர்களில் மனம் விட்டுப் பேசியவர்கள் எத்தனை பேர்?''

''இங்கே ஃபோனில் விசாரித்த அதே ஆசாமி எலைட் கிளப்பில் வேறுவிதமாக வம்பு பேசுவான். 'சாருவுக்கு ஹிஸ்டீரியா சுவாமி! இன்று நிலைமை ரொம்ப மோசமாகி விட்டது. ஒரேயடியாகப் பிதற்றிக் கொண்டிருக்கிறாள். அதனால்தான் யாருமே அவளை வந்து பார்க்கக் கூடாது என்று தடை விதிக்கிறார்கள்' என்பான். வேணு என்னை இப்படி நீங்கள் சிறைப்படுத்தி வைப்பது எவ்வளவு ஆபத்து பார்த்தீர்களா?''

''பத்து நாட்களுக்குத்தான் போலியான வாழ்க்கையிலிருந்து விடுதலை பெற்று வாழச் சொல்கிறேன். அதுகூட உன்னால் முடியவில்லை. மறுபடியும் அசத்தியத்தில் உழலப் போக அவசரப்படுகிறாய்.''

''சத்தியம் இன்று எங்கே இருக்கிறது? அது காந்தியோடு சேர்ந்து தன் பிராணனையும் விட்டு விட்டது!''

''இல்லை, இல்லவே இல்லை! நீ சுலபமாகச் சத்தியத்தைக் காண முடியும் சாரு. வேண்டுமென்றே கண்களை மூடிக் கொள்ளாமல் இருந்தால் எனக்கு உன்னிடம் உள்ள காதலில் சத்தியத்தை நீ பார்க்கலாம்!''

''வேணு! காதலித்துக் கல்யாணம் செய்து கொள்கிற வயதில்லை எனக்கு.''

''உன் வயதைப் பற்றி நான் கவலைப்படவில்லை. எத்தனையோ கல்யாணங்களுக்குப் போய் மணப் பெண்

களை ஆசிர்வதித்து விட்டு வந்திருக்கிறேன். அவர்கள் அனைவரையும்விட நீ இளமையாகத்தான் என் கண்களுக்குத் தோன்றுகிறாய்.''

''அதற்குக்காரணம் என் மேக்-அப்!''

''நான் உன்னைத்தான் காதலிக்கிறேன், சாரு! நீ பூசிக் கொள்கிற பௌடரையோ அல்லது உடுத்திக் கொள்கிற புடவையையோ அல்ல. இதயபூர்வமாக உன்னைக் காதலித்தும் உன்னை அடைய முடியாமலிருப்பதால் நான் அநுபவிக்கும் வேதனை கொஞ்ச நஞ்சமா? அதை நீ ஏன் உணர மாட்டேனென்கிறாய்? அத்தனை இரக்க மற்றவளா நீ?''

சாருலதாவின் கண்கள் கலங்கிவிட்டன; அதரங்கள் இலேசாகத் துடித்தன.

அவள் மனம் இளகி நெகிழ்வதைக் கண்ட வேணுகோபால் அதனால் ஏற்பட்ட மகிழ்ச்சியை மறைத்துக்கொண்டு மேலும் பேசினான்:

''அருகிலேயே இருந்தும் மிகத் தொலைவில் போய் விட்டது போன்ற இந்த நிலை என்னை எப்படி வருத்தி எடுக்கிறது தெரியுமா? பட்டினி கிடந்து பரிதவிப்பவன் எதிரே அருமையான விருந்து படைத்து விட்டுப் பிறகு அவன் கைகளையும் கால்களையும் கட்டிப் போடுவது போல்! இது கொடுமை, சாரு! சித்திரவதை!''

''வேணு! நீங்கள் உங்கள் வேதனையைச் சொல்கிறீர்கள்! உங்கள் காதலை ஏற்க இயலாத நிலையில் இருப்பதால் நான் அடைந்து வரும் மனத் துயரம் உங்களுடைய எக்ஸ்ரே கண்களுக்கு ஏன் தெரியாமல் போயிற்று?'' சாருலதாவின் நாத் தழுதழுத்தது.

''ஏன் அப்படி ஒரு கஷ்டத்தை நீ சுமக்க வேண்டும் சாரு? எதற்காக என் காதலைப் புறக்கணிக்க வேண்டும்? ஓ! அன்றைக்கு ஒரு கதை — சிறு வயதில் உனக்கு நேர்ந்த ஓர் அநுபவத்தைச் சொன்னாயே, அதனாலா?''

''அது ஒரு கதை. அதைப் போல் இன்னும் பல கதைகள்!''

''எனக்குக் கதை கேட்பதென்றால் ரொம்பப் பிடிக்கும் சாரு.'' ஆர்வத்துடன் முன்னுக்குச் சாய்ந்தான் வேணுகோபால்.

* * *

தடதடவென்று ஓர் ஓசை.

''கோமளி!'' வேதனை நிரம்பிய ஒரு குரல் அலறுகிறது.

முற்றத்தில், ''நாலோண் நாலு; நாலு ரெண்டெட்டு'' என்று உருப் போட்டுக் கொண்டிருக்கும் சிறுமி கோமளா வாய்ப்பாடு புத்தகத்தைப் பறக்க விட்டு விட்டு விழுந்தடித்துக் கொண்டு ஓடி வருகிறாள். உக்கிராண அறையில் ஏணி சரிந்துவிடத் தரையில் கோமளியின் தாயார் அபயம் கோணல் மாணலாக விழுந்து கிடக்கிறாள். பரண் மேல் எதையோ எடுக்கப் போனவள் ஏணி வழுக்கிச் சரிய விழுந்து விட்டாள் என்பது கோமளாவுக்குப் புரிகிறது. புரண்டு கொடுத்து வசதியாகவும் படுக்க முடியாமல் எட்டு மாதக் கர்ப்பத்தில் கனத்திருந்த வயிறு தடை செய்கிறது. இடுப்பில் ஏற்படும் குடைந்தெடுக்கும் வலி காரணமாக அபயத்தின் முகம் விகாரமாக மாறி இருக்கிறது. அடி உதட்டை அவள் மேல் வரிசைப் பற்களால் அழுத்திக் கடிக்க வாயோரமாக ரத்தம் குபுகுபு வென்று பெருகி வருகிறது. ''ஐயோ! செத்தேன்!'' என்று வீறிட்டு அலறுகிறாள் அபயம்.

இந்தக் களேபரத்தினிடையில் வாசல் அறையில் தூங்கிக் கொண்டிருக்கும் குழந்தை குமரேசன் அரைத் தூக்கத்தில் விழித்துக் கொண்டு அழுகிறான். மழலையாகக் கூடப் பேசத் தெரியாத வயது அவனுக்கு.

கோமளா தம்பியைச் சமாதானப் படுத்துவதா, அம்மாவைக் கவனிப்பதா என்று ஒருகணம் தயங்குகிறாள். அம்மாவுக்கு உதவுவதுதான் முக்கியம் என்ற முடிவுக்கு வந்து, ''என்னம்மா செய்கிறது?'' என்று தட்டுத் தடுமாறிக் கேட்கிறாள். ஏழரை வயதுப் பெண் கோமளா, பயந்து போயிருப்பதை வெளிறிய முகமும் நடுங்கும் உடலும் தெளிவுபடுத்துகின்றன.

''சனியனே! ஏண்டி தூணாட்டம் நிற்கிறே? ஓடு! வாலம் மாமியை வரச் சொல்லு சீக்கிரம்!.... ஐயோ, ஆ! அம்மா ஆ ஆ!''

நாலாம் நெம்பர் வீட்டுக்குத் தலை தெறிக்க ஓடுகிறாள் கோமளா. அமைதியே உருவான அம்மா இன்று ஏன் அலறித் துடிக்கிறாள்? அன்பே வடிவானவள் தன்னை ஏன் வைகிறாள்? கோமளாவுக்கு ஒன்றும் புரியவில்லை. அழுகை பொத்துக் கொண்டு வருகிறது.

வாலாம்பாள் மருத்துவச்சி என்று பெயர் பெற்றவள். பிரசவம் பார்த்துப் பழக்கப்பட்டவள். கோமளாவும் குமரேசனும்கூடப் பிறந்ததும் முதல் அடியை அவளிடம் வாங்கிக் கொண்டு அழுது மூச்சுவிடத் தொடங்கியவர்கள் தாம். இப்போது அபயத்தை அவள் பார்த்த கணமே அபாயத்தைப் புரிந்து கொண்டு விடுகிறாள். 'இது தன்னால் ஆகக்கூடிய காரியமில்லை!'

''கோமளி, ஓடு! உன் அப்பாவுக்கு ஃபோன் போட்டு, அம்மாவுக்கு ரொம்ப

உடம்பு சரியில்லே; உடனே வான்னு சொல்லு, போ !''

வாலம் அவளை விரட்டுகிருள்.

திக்பிரமை பிடித்து நிற்கிருள் கோமளா.

''ஏண்டி, ஆணி அறைஞ்சாப்போல் நிற்கிறே? போயேண்டி! நீயே எனக்கு எமஞ வாய்ச்சுடுவே போலிருக்கே !'' வேதனை தாங்காமல் மகளை வைது துரத்துகிருள் அபயம்.

இரைக்க இரைக்கப் பக்கத்துத் தெரு பங்கஜம் மாமி வீட்டுக்கு ஓடுகிருள் கோமளா. ''ஆண்டவனே ! அம்மாவுக்கு நான் எமஞகப்படாது ! சுவாமி அம்மாவைக் காப்பாத்து !''

பங்கஜம் மாமியின் கார் கேட்டைத் தாண்டித் தெரு ஓரமாய் நின்று கொண்டிருக்கிறது. வாசல் கதவைப் பூட்டியாகி விட்டது. கேட்டிலும் சங்கிலியைச் சுற்றிப் பூட்டிக் கொண்டிருக்கிருள் பங்கஜம். வீட்டுக்காரர் ஐந்தரைக்கு வீடு திரும்புவார். குழந்தைகள் நாலரை மணிக்குப் பள்ளிக்கூடத்திலிருந்து விடுதலே பெறுவர். அது வரையில் மாதர் சங்கத்தில் அவள் கவனிக்கக் காத்திருந்த விஷயங்கள் பலப்பல.

மூச்சு வாங்க வந்து நின்ற கோமளா, ''மாமி, மாமி, ஒரு ஃபோன்'' என்கிருள்.

''போடி! நேரம் போது தெரியாமே இதுவே ஜோலியாய்ப் போச்சு, உங்களுக்கு !'' அவள் காரில் ஏறிக் கதவைச் சாத்திக் கொண்டு விடுகிருள். தனக்குக் கார் ஓட்டத் தெரியும் என்பதிலேயே அவளுக்கு ரொம்பப் பெருமை. கணவரையும் குழந்தைகளேயும் ஆபீஸிலும் பள்ளிக்கூடத்திலும் 'டிராப்' பண்ணி விட்டுக் காரை எடுத்துக் கொண்டு வந்து விடுவாள். மத்தியானம் லேடீஸ் கிளப்புக்குப் போகக் கார் வேணுமே !

''இல்லே, மாமி! அம்மாவுக்கு ரொம்ப உடம்பு சரியில்லே; அப்பாவுக்கு ஃபோன் பண்ணணும்.''

பங்கஜம் மாமியின் பங்களாவுக்கு அபயம் அடிக்கடி வருவதுண்டு. அப்பளம் இடுவது; தோசைக்கு அரைப்பது, ஊறுகாய் போடுவது என்று இப்படிப் பட்ட சிரமமான காரியங்களைப் பங்கஜம் மாமி செய்ய மாட்டாள். அவற்றை அபயம் செய்து கொடுத்து எட்டணு, நாலணு என்று சம்பாதிப்பாள். அவர்கள் குடும்பத்தின் தலைவனது வருவாயுடன் இந்தச் சம்பாத்தியமும் தேவையாகத்தான் இருந்தது.

''அபயத்துக்கு என்னடி உடம்பு இப்போ? நேற்றைக்குக்கூடக் கல்லாட்டமாத்தானே இருந்தா ?''



நாற்பது வயதானவர்கள் சந்திரனுக்கே சென்று வந்து விட்டார்கள். ஆனுல் சில வேலைகளுக்கு அப்ளிகேஷன் கேட்கும் விளம்பரங்களில் ''வயது முப்பதுக்கு மேல் இருக்கக் கூடாது'' என்று சொல்லுகிருர்களே - இது ஏன்?

: விக்கெண்ட். —முத்து

''ஒரேயடியா வலிக்கிறதாம் மாமி!'' என்கிருள் சிறுமி கோமளா கண்களைக் கசக்கியபடியே.

''போடி! எனக்குக் கணக்குத் தெரியாதா ? பிரசவத்துக்கு இன்னும் ஒரு மாசத்துக்கு மேல் டைம் இருக்கே ! இடுப்பிலே அரிச்சாக்கூட வலி எடுத் துடுத்துன்னு கத்தி ஊரைக் கூட்டிவிடுவாள் உன் அம்மா. அது பிரசவ வலி இல்லே; 'ஃபால்ஸ் பெய்ன்'ஸுன்னு அதுக்குப் பேரு. அம்மாகிட்டே நான் சொன்னேன்னு சொல்லு !'' மண வாழ்க்கை, பிரசவம், குழந்தை வளர்ப்பு இவற்றைப் பற்றியெல்லாம் ஆங்கில நூல்களை நிறையப் படித்தவள் பங்கஜம் மாமி. அவளது இடது கால் கிளச்சை விடுகிறது; வலது கால் ஆக்ஸிலேட்டரை அழுத்துகிறது. கார் நகர்கிறது, விரைகிறது, மறைகிறது.

''மாமி! சித்தே கேளுங்கோ மாமி! அம்மா கீழே விழுந்துட்டா, அடிபட்டுடுத்து !'' என்று கோமளா கத்துகிருள். காரின் உறுமல் ஒலியில் அது ஒன்றும் மாமி காதில் ஏறவில்லே. அல்லது ஒரு வேளை கேட்டும் கேளாதது போல்தான் போகிருளோ ? காரை விட்டுக் கீழே இறங்கி, கேட்டைத் திறந்து, வாசல் கதவுகளைத் திறந்து, மறுபடியும் அவற்றையெல்லாம் பூட்டி.... வேண்டாத அவஸ்தை !

கோமளா தெருவில் ஓடுகிருள். கண்ணில் தென்பட்டவர்களை யெல்லாம் நிறுத்தி, ''மாமா, உதவி பண்ணுங்கோ, மாமா!'' என்று சொல்லி அழுகிருள். அவளை யாரும் சரியாகப் புரிந்து கொள்ளவேயில்லே. ஒருவர் அரையணு கொடுக்கிருர். மற்ருெருவர், ''சீ போ! மேலே விழுந்து ஏன் பிடுங்கறே ?'' என்கிருர். மூன்ருவதாக ஒருவர், ''சில்லறை இல்லே'' என்று கூறி விட்டுப் பரபரவென்று நடையைக் கட்டுகிருர்.

(தொடரும்)

# சுமை தாங்காமல்...

"மஹி"

சுமை! சுமை!! சுமை!!!

அப்பா! நெஞ்சில் நிறைந்து வடிந்து வழிந்த கவலைகளின் சுமை. அரக்கு உருக்கிக் கொட்டியது போலச் சூடிட்ட கவலைகளின் கொத்தாக; பெருமூச்சு, பெருமூச்சு என்று விம்மி வெடித்து நெஞ்சின் எலும்புகள் வலிக்கும் படியாகச் சுமையேறிவிட்ட மனம். இன்னும் கொஞ்சம் சேர்ந்தால் 'மளக்'கென்று முறிந்து விழுந்து விடும்போல, முருக்கம் போத்தின் கிளையாக மனம் சுமந்தது. ம்!... இதற்கும் பெருமூச்சுத்தான். இந்தப் பெருமூச்சு எப்போதுதான் தீருமோ?

''ஏன்டி! கமலி! தூங்கிட்டியா?...'' என்ற ஒலி எங்கிருந்தோ கேட்கிறது. சுற்றிலும் இருள். இந்த மாதிரி இருள்... அப்பா!.. நான் என்றுமே பார்த்ததில்லை. இருளிலே இருளைப் போட்டுப் பிசைந்து அப்பிறாற்போல் ஒட்டிக் கொண்டுவிடும் இருட்டு. மாவாய் அரைத்து, மையாய்க் குழைத்துத் தடவிக் கொண்டு... கறுப்பாக... கூர்ந்து கூர்ந்து பார்த்ததில் கண்ணைத்தான் வலித்தது. பார்ப்பதற்கு என்ன தெரிகிறது?

'ஜிவு ஜிவு' என்று சுவர்க் கோழிகள் சுருதி சுத்தமாக முழங்கிக் கொண்டிருந்தன. அது தான் இருளின் சுருதியோ?

''இருட்டின அப்புறம் வெளியே எங்கேடி போறே? ஒனக்கு ஒடம்பிலே கொஞ்சமாவது இது...இருக்கா?'' என்ற அம்மாளின் தடுப்புச் சுவர் என்னை இருள் பார்க்காமல் இருக்க வைத்து விட்டிருந்தது. அந்தப் பழக்கம், அப்படி அப்படியே வந்து விட்டது. இன்றைக்கு இருட்டைப் பார்க்கப் புதுசுபோல் இருக்கிறது.

ஏதோ ஓர் இராப் பட்சி மேல் பஞ்சமத்தில் ஒரு கார்வை கொடுத்தது. வயிற்றை ஒரு கலக்குக் கலக்கத்தான் செய்தது. இந்தச் சத்தத்துக்குப் பயந்தால் முடியுமா? நடக்கிறேன், நடக்கிறேன். வழக்கமான வழி இத்தனை நீளமா? தினமும் அதிகாலையில் காவேரி ஸ்நானத்துக்குப் போகிற வழிதானே? வைத்த அடியின் சத்தம் அடுத்த அடியிலே எதிரொலி ஆகி, அதற்கு அக்ஷரங்களாக இருதயம் விரல் அசைத்துப் படபடக்க நடக்கிறேன்; என்னுடைய நடைக்கு என்றுமே முடிவு கிடையாது. நடந்து நடந்தே வாழ்வை நடத்தி வந்திருக்கிறேன்.

''வாத்தியார் பொண்ணு கமலி வந்திருக்காம்மா... பாவம்! இத்தனை தூரம் நடந்து வந்திருக்கா!'' என்று அங்கலாய்க்கும் அந்தப் பங்களா மாமி அளந்த படி அடுத்த நாள் வயிற்றை நிரப்பும். கிழிந்த மேலாக்கு உடம்பை மூடவே கஷ்டப்படும்போது குடும்ப மானத்தை முன்றானையாலே மூடிக் காப்பாற்றக் கடன் பொருளைக் கக்கத்தில் இடுக்கி அதற்கும் மேலாக்குப்போர்வை போர்த்தி வரவேணும். வருகிற வழியிலே எத்தனை கழுகுக் கண்கள் பார்க்கும்? சும்மாவா பார்க்கும்? உடம்புக்குள்ளேயே புகுந்து மானமெல்லாம் ரெத்தமாகக் கரைந்து ஓடுகிறவரைக்கும் பார்க்கும். பாழும் கடவுள் பசிக்கு உணவு போடாத அரைப் பட்டினி உடம்புக்கும் வஞ்சனை இல்லாமல் வாலிபம் வழங்கிவிடுகிறான். ஏன் வயது ஆகிறது? ஏன் நாளுக்கு நாள் உடம்பு வளருகிறது? என்ற தவிப்பு ஈரத் துணியாகக் கிடந்து நெஞ்சில் கனக்கும்.

பாவம், அப்பா! ஏதோ சம்பாதித்தார்; பள்ளிக்கூட வாத்தியார். மூத்த பெண்ணுக்கு ஆமாம். எங்க அக்கா கல்யாணம் பண்ணிக் கையைப் பிடிச்சுக் கொடுத்த பிறகு கடன் சுமையைத் தூக்க முடியாமல் தூக்கிச் சுமந்தார். தலைச் சுமைக்கு வழி நெடுகச் சுமைதாங்கி கட்டி வைத்திருக்கிறார்கள் தர்மவான்கள். கடன் சுமைக்கு என்று எந்தத் தர்மவான் சுமைதாங்கி கட்டி வைத்திருக்கிறான்?

கடன் சுமையைச் சுமக்கமுடியாமல் 'தொபுகடீர்' என்று கீழேபோட்டுவிட அப்பா நினைத்தாலும்கூடக் கடன் கொடுத்தவன் எல்லாம் கீழே விழாமல்

### அத்தியாயம் 23

## அந்த நாள்!

கோமளா சந்தித்த நாலாவது நபர் இரக்கத்துடன் ''என்ன விஷயம் குழந்தே?'' என்று கேட்கிறார்.

''அம்மாவுக்கு ரொம்ப உடம்பு சரியில்லே; அப்பாவுக்கு ஃபோன் போடணும்; உதவி பண்ணுங்கோ மாமா!'' என்று சொல்லி அழுகிறாள் கோமளா.

கருணை உள்ளம் படைத்த அந்த மனிதர், சிறுமியைத் தூக்கிக் கொண்டு, ஓட்டமும் நடையுமாக விரைகிறார். இரண்டு பர்லாங் தூரத்தில் 'பப்ளிக் டெலிபோன்' பூத் ஒன்று இருக்கிறது.

''சில்லறை வச்சிருக்கியா பாப்பா?''

தன் அசட்டுத்தனத்தை அப்போது தான் உணருகிறாள் கோமளா. 'பங்கஜம் மாமி வீட்டிலிருந்து ஃபோன் போடுவதானால் கூடக் காசு வேண்டுமே. தப்பாமல் இரண்டணா வாங்கிவிடுவாளே அவள். அஞ்சறைப்பெட்டியைத் துழாவிப் பார்த்துச் சில்லறை கொண்டு வந்திருக்க வேண்டாமோ? அவசரத்தில் முக்கியமான விஷயத்தை மறந்து போனேமே?' இப்போது அவள் கையில் அரையணா பிச்சைக் காசுதான் இருக்கிறது. 'காசு இல்லே' என்று சொல்லக் கூச்சப்படும் தன் முட்டாள்தனத்தை எண்ணியதும் கோமளாவுக்கு மறுபடியும் அழுகை பீறிட்டுக் கிளம்புகிறது.

''அடாடா! அழாதே பாப்பா! காசு நான் தரேன்'' என்கிறார் அந்த நல்ல மனிதர். ''அப்பாவுடைய ஆபீஸ் டெலிபோன் நம்பர் என்ன சொல்லு!''

கோமளா கூறுகிறாள்.

''தேவலையே. இதை யெல்லாம் தெரிஞ்சு வச்சிருக்கியே! சமர்த்துத் தான்!'' ஃபோன் போட்டுக் கொடுக்கிறார் அவர். ரிஸீவரைக் கையில் வாங்கிக் கொண்டு 'ஹல்லோ' என்கிறாள் கோமளா. மணி அடிக்கிறது. யாரோ ஃபோனை எடுக்கிறார்கள். ''ஹல்லோ, ஹல்லோ'' என்கிறாள் கோமளா. அவர்கள் பேசுவது இவளுக்குக் கேட்கிறது. இவள் பேசுவது அவர்களுக்குக் கேட்கவில்லை. நிமிஷங்கள் ஓடிச் செல்கின்றன. கோமளாவின் புதிய நண்பர் ரிஸீவரை வாங்கிக் காதில் வைத்துக் கொண்டு ''ஹல்லோ ஹல்லோ'' என்கிறார். பயனில்லை. ''பாப்பா சரியான நம்பர்தான் சொன்னியா?''

''ஆமாம் மாமா, நானே எத்தனையோ தடவை அப்பாவை இதே நம்பரில் கூப்பிட்டுப் பேசியிருக்கேனே.''

''என்ன கோளாறோ தெரியலையே! அவர் ஆபீஸ் டெலிபோன் ரிப்பேராகி இருக்கோ என்னவோ?''

''மறுபடியும் போட்டுப் பாருங்கோ, மாமா!''

மறுபடியும் ஃபோன் போட்டுப் பார்க்கும் முன்னர் சட்டைப் பையைத் துழாவிப் பார்க்கிறார் அந்த மனிதர். இன்னும் இரண்டணா காசுதான் அவரிடம் பாக்கி யிருக்கிறது. அதையும் வீணாக அடிக்க அவருக்கு மனம் வரவில்லை.

''பாப்பா! அம்மாவுக்கு ரொம்ப உடம்பு சரியில்லேன்னு ஆஸ்பத்திரிக்கு அழைச்சுண்டு போக ஆம்புலன்ஸ் வண்டிக்கு ஃபோன் போடுகிறேன். அதுக்குக் காசு கிடையாது.''



# சாருலதா

**கி.ராஜேந்திரன்**

''சரி மாமா.''

''விலாசம் என்ன?''

கோமளா சொல்லுகிறாள்.

''கெட்டிக்காரி!'' என்று பாராட்டுகிறார் அவர். ஆம்புலன்ஸுக்கு ஃபோனில் சொல்லியானதும், ''நீ வீட்டுக்குப் போ பாப்பா. அம்மாவை ஆஸ்பத்திரிக்கு அழைச்சுண்டு போக மோட்டார் வண்டி வரும்'' என்கிறார். ''வழி தெரியுமில்லையா உனக்கு?''

கோமளா தலையாட்டுகிறாள். ''மாமா! உங்களுக்குக் கோடிப் புண்ணியம்!'' என்று இதயபூர்வமாக

வாழ்த்தி விட்டுச் சிட்டாகப் பறந்த அந்தக் குழந்தையைப் பார்த்தபடி சற்று நேரம் கண் கலங்கி நிற்கிறார் அந்த மனிதர். பிறகு தம் வழியே செல்கிறார்.

கோமளா வீடு திரும்பியபோது வாசலிலும் முற்றத்திலும் பெண்கள் பலர் நின்று சளசளவென்று பேசிக் கொண்டிருக்கிறார்கள். அவற்றை மீறி அபயத்தின் முனகல் சத்தம் கேட்கிறது. தெருவில் இருந்த எல்லா வீடுகளுக்கும் விஷயம் பரவிவிட அத்தனை பேரும் இங்கு வந்து கூடியிருக்கிறார்கள். ஆனால் ஒருவராவது உருப்படியாக ஒரு காரியம் செய்யக் காணோம். யாரோ ஒரு பெண்மணி மட்டும் தன்னாலான கைங்கரியம் என்று குமரேசனுக்கு வாழைப்பழத்தை உரித்துக் கொடுத்துச் சமாதானப்படுத்திக் கொண்டிருக்கிறாள்.

கோமளாவைப் பார்த்ததும் அபயத்தின் முகத்தில் வேதனையையும் மீறி ஒரு தெளிவு பிறக்கிறது. "அப்பா வராரா?" என்று கேட்கிறாள்.

குழந்தை கோமளி பொய் பேசும் கலையை இன்னும் கற்கவில்லை. "ஆபீஸ் ஃபோன் ரிப்பேராகி இருக்கு அம்மா. இப்போ ஆஸ்பத்திரியிலிருந்து வண்டி வந்துடும்."

"மூதேவி! ஒரு ஃபோன் கூடப் பண்ணத் தெரியாமல் வந்து பொறந்தியே எனக்கு!"

மாற்றாந் தாயிடமிருந்து விடுதலை கிடைத்ததாக மகிழ்ந்து கல்யாணத்துக்குப் பிறகு கணவன் இல்லத்துக்கு வந்து சேர்ந்தவள் அபயம். தாய், தந்தை, கணவன், தெய்வம் எல்லாம் அவளுக்குப் பத்மநாபன்தான். வாழ்வா சாவா என்று போராடுகிற நிலையில் கணவனைப் பார்க்க முடியவில்லை என்ற எண்ணத்தையே சகிக்க மாட்டாமல் பெண்ணை வைகிறாள் அவள்.

ஆம்புலன்ஸ் வண்டி வருகிறது. அபயத்தை ஸ்ட்ரெச்சரில் தூக்கிக்கொண்டு போய் வண்டியில் ஏற்றுகிறார்கள். "எப்படியாவது அப்பாவை ஆஸ்பத்திரிக்கு வரச் சொல்லுடீ" என்று கோமளாவைப் பரிதாபமாகப் பார்த்துக் கேட்டுக் கொள்கிறாள் அபயம்.

அதுதான் அவள் மகளுடன் கடைசியாகப் பேசிய வார்த்தைகள். பத்மநாபனுக்கு விஷயம் தெரிந்து அவர் மருத்துவ மனைக்குப் போய்ச் சேருவதற்குள் காரியம் முடிந்து விடுகிறது. தாய் — குழந்தை இரண்டுமே பிழைக்கவில்லை.

அபயத்தைப் பற்றிய பேச்சு அந்தத் தெருவில் நீண்ட நாட்களுக்கு அடிபடுகிறது. துக்கம் விசாரிக்க வந்த பெண்கள் ஒருவர்மாற்றி ஒருவர் கோமளாவை அவள் விருப்பத்துக்கு விரோதமாய்க் கட்டிக் கொண்டு சமாதானப் படுத்துகிறார்கள். மூக்கைச் சிந்தி முற்றத்தில் வீசுகிறார்கள். தேவையில்லாத புலம்பல். வேண்டாத அழுகை. போதாக்குறைக்குக் கோமளாவின் எதிரேயே கதையும் கற்பனையுமாக வளர்த்து வளர்த்துப் பேசித் திருப்தி அடைகிறார்கள்.

"கொடி சுற்றிப் பிறந்ததாம். அதுதான் இரண்டு பேருமே தக்கலை!"

"தலை இறங்கலையாம்! ஒற்றைக் கால் முதல்லே நீண்டு போச்சாம்! உயிரைக் குடிக்க வேறென்ன வேணும்?"



"ராட்சதக் குழந்தைடீ அது! வயத்தைக் கிழிச்சுத் தானே எடுத்துப்போட்டா? நல்ல வேளையாகப் பிழைக்காமலிருந்ததே, அதைச் சொல்லு! அதை வேறே வைச்சுண்டு இவா அவஸ்தைப் படறதுக்கு இல்லாமே..."

இப்படித் தலைக்குத் தலை சுவாரசியம் கண்டு ரசித்துப் பேசுகிறார்கள். "நீ ஒண்ணுக்கும் பயப்படாதே கோமளி. நாங்களெல்லாம் எதுக்கு இருக்கோம்? கவனிச்சுக்க மாட்டோமா?"



என்று சொல்லி அவள் பீதியை அதிகப் படுத்துகிறார்கள்.

இந்தச் சித்திரவதைக்கும் நாளா வட்டத்தில் முடிவு ஏற்படுகிறது. ஊர் வாய் ஓய்கிறது.

இரண்டு குழந்தைகளைத் தன் பொறுப்பில் விட்டு விட்டுப் போய் விட்டாளே என்று நினைத்துக் கண்ணீர் விடுகிறார் பத்மநாபன். ஆனால் அபயம், கோமளாவின் பொறுப்பில்தான் பத்மநாபன், குமரேசன் என்ற இரண்டு

# 'ஆஸ்ப்ரோ'

# மட்டுமே மைக்ரோஃபைண்ட் செய்யப்படுகிறது அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக










சாப்பிடும் அளவு:
வயது வந்தவர்கள்: இரண்டு மாத்திரைகள் தேவையானல் மீண்டும் சாப்பிடவும்
குழந்தைகள்: ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டர் சொற்படி



மேல் கண்டவைகளுக்கு புதிய மைக்ரோ ஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்:
நோவு • தலைவலி • உடல்வலி • ஃப்ளூ • ஜுர வேகத்துடன் கூடிய ஜலதோஷம் • மூட்டுவலி • தொண்டை அழற்சி • பல்வலி.

புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' இப்பொழுது கிடைக்கும் அதி நவீனமான வலி நிவாரணியாகும்.

**புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' அதிவேகமாக வலியை வெளியே இழுத்துவிடுகிறது.**

நிகோலஸ் ® தயாரிப்பு

குழந்தைகளையும் விட்டுச் சென்றிருக்கிறாள் என்பதைப் பத்மநாபனே வெகு சீக்கிரம் புரிந்து கொள்கிறார். அத்தனை கருத்துடன், பொறுப்புடன் அப்பாவையும் தம்பியையும் கவனித்துக் கொள்கிறாள், கோமளா. அம்மாவின் கடைசி விருப்பத்தைப் பூர்த்தி செய்ய முடியாமல் போன குற்ற உணர்ச்சி, அவளை வாட்டுகிறது. அதற்கு ஈடு கட்டுவது போல் அம்மாவை நினைத்து நினைத்து உருகிக்கொண்டே குழந்தை கோமளா தன் அப்பாவுக்குப் பணி விடைகள் செய்கிறாள்; தம்பியைப் பாசத்துடன் வளர்க்கிறாள்.

## அத்தியாயம் 24

# இயற்கை வெல்லுமா?

சாருலதா இந்தக் கதையைக் கூறி வருகையிலேயே அவள் மேனி பழைய நினைவுகளில் நடுங்குவதையும் முகத்தில் பயம், இரக்கம், பரிதாபம், வைராக்கியம், வேதனை போன்ற பல பாவங்கள் தோன்றுவதையும் கவனித்தான் வேணு கோபால். அனுதாபம் நிறைந்த உள்ளத்துடன் பரிந்து பேசினான்:

''எவ்வளவு சின்ன வயசில் எப்படிப் பட்ட பயங்கரமான அனுபவங்கள் உனக்கு!''

''யாருக்குமே நேர வேண்டாம் இப்படி!''

''சாரு, என்னை நீ மன்னித்துவிட வேண்டும். என் காதலை ஏற்காமல் என்னை நீ வதைப்பதாகக் குற்றம் சாட்டினேன் அல்லவா? அது ரொம்பப் பிசகு. இந்தக் கதை யெல்லாம் எனக்கு ஏற்கெனவே தெரிந்திருந்தால் அப்படி உன்னைக் கோபித்துக் கொண்டிருக்க மாட்டேன்!''

'' 'நீயே எமனாக வந்து சேர்ந்துடுவே போலிருக்கே' என்று என் அம்மா என்னைத் திட்டினாள். அப்படியே நடந்து விட்டது!''

''அதெப்படிச் சொல்ல முடியும்? அந்த மாதிரி ஒரு நெருக்கடி நிலைமையில் பெரியவர்களுக்கே வெலவெலத்துப் போய்விடும். நீ அப்போது குழந்தையாக இருந்தும் எவ்வளவோ நிதானத்துடன் நடந்து கொண்டாய். சமய சஞ்சீவியாகச் செயல்பட முயன்றாய்.''

''பிள்ளையார் பிடிக்கப் போய்க் குரங்காக முடிந்த கதையாகச் சஞ்சீவியாகச் செயல்பட ஆரம்பித்து முடிவில் எமனாக விளங்கினேன்!''

''இதென்ன அசட்டுத்தனமான எண்ணம்? பகுத்தறிவுக்குப் பொருந்தாத பேச்சு? சாருலதாவா இப்படிப் பேசுகிறாள்?''

''சரி. நான் இல்லை என்றால் என் தங்கை என்று வைத்துக் கொள்ளுங்களேன். அம்மாவின் உயிரைக் குடித்து விட்டு அவளும் போய்ச் சேர்ந்தாள், ஆகக்கூடி அம்மாவுக்குப் பெண் எமன்!''

வேணு திடுக்கிட்டான். ''என்ன சாரு! இப்படிப் பொதுப்படையாகப் பேசுகிறாய்?''

''பேசினால் என்ன? ஒவ்வொரு பிரசவமும் ஒரு கண்டம்தானே பெண்ணுக்கு? இல்லையென்று மறுப்பீர்களா டாக்டர்?''

''உன் அம்மாவுக்கு ஒரு குழந்தை எமனாக வந்து சேர்ந்தது என்பதால் உனக்கும் ஒரு குழந்தை எமனாக வந்து சேரும் என்று நிஜமாகவே நீ 'நம்பு கிறாயா என்ன?''

சாரு வேறு பக்கம் திரும்பிக்கொண்டாள். ''என் கேள்விக்குப் பதில் சொல்ல முடியாமல் மாற்றுக் கேள்வி தொடுக்கிறீர்கள்!''

''உன் தங்கை இறந்து பிறந்திருந்தாலும் உன் அம்மாவேனும் வீடு திரும்பியிருந்தால் நீ இவ்வளவு அதிர்ச்சி அடைந்திருக்க மாட்டாய். உன் தாயார் உனக்கு விஷயங்களைப் பக்குவமாக எடுத்துச் சொல்லி யிருப்பாள். தாய்மைப் பேற்றின் பெருமையை ஒரு தாய் தான் மகளுக்கு முழுமையாக உணர்த்த முடியும். தந்தை எவ்வளவுதான் பிரியமாக இருந்தாலும் இந்த விஷயத்தில் அவர் கையாலாகாதவர்தான்.''

''பெற்றுப் போடுவதில் பெருமை என்ன இருக்கிறது? கஷ்டமும் வேதனையும்தான்!''

''அப்படி நீ எண்ணிப் பயப்படுவதில் அர்த்தம் இருக்கிறது சாரு. காதல், கல்யாணம் என்றெல்லாம் பேச்செடுத்தாலே நீ வெறுத்து ஒதுங்குவது ஏனென்றும் எனக்குப் புரிகிறது. ஆனால் தாய்மை என்பது வேதனை மட்டுமில்லை; அதற்கு மேலாக அளவிட முடியாத ஆனந்தமும் உண்டு.''

''எனக்கு அந்த வேதனையும் வேண்டாம்; ஆனந்தமும் வேண்டாம்.''

''உன் தீர்மானம் இயற்கைக்கு விரோதமானது. இயற்கை வேகத்தை வெல்ல யாராலும் முடியாது.''

''நான் அதை அடக்கி ஆண்டு எத்தனையோ காலம் ஆகிவிட்டது.''

''நீ மனத்தில் சிறைப்படுத்தி வைத்திருக்கும் தாய்மை உணர்ச்சியை விடுவிக்கத்தானே நான் வந்திருக்கிறேன். இயற்கையின் வெற்றிக்கு ஆண்டவன் இங்கு என் மூலமாகச் செயல்படுகிருர்!'' வேணு சிரித்தான்.

அவள் எழுந்தாள். ''எனக்குத் தலையை வலிக்கிறது. நான் போய்ப் படுத்துக் கொள்கிறேன்!''

''ஒரு நிமிஷம்!'' என்ருன் வேணு. தோல் பையைத் திறந்து ஒரு பாட்டிலை எடுத்தான். மாத்திரைகளைப் பெற்றுக் கொள்ள நீண்ட சாருலதாவின் வலக் கரத்தைத் தன் இடக்கரத்தால் பிடித்துக் கொண்டு, பாட்டிலைச் சாய்த்து விரலால் தட்டி, அவள் உள்ளங்கையில் இரண்டு மாத்திரைகளை விழச் செய்தான். கூடவே, ''உன் தலைவலிக்கு மாத்திரை கொடுப்பது போல் உன் மனத்துக்கு நானே மருந்தாக இருக்க ஆசைப்படுகிறேன், சாரு!'' என்ருன்.

அவள் உடம்பு நடுங்கியது. ''வேணு! என்னைத் தொந்தரவு செய்யாதீர்கள்!''- கெஞ்சுகிற தோரணையில் சொன்னுள்.

''இல்லை, சாரு! நான் உன்னை அவசரப்படுத்தவில்லை. என்னுடைய வாதங்களை உன்னிடம் சமர்ப்பிக்க அனுமதி கேட்கிறேன். அவ்வளவுதான். முடிவெடுக்கும் பொறுப்பு உன்னுடையது.''

''நீங்கள் என்னை ஒரு முடிவுக்கு வரச் சொல்லவில்லை; என் முடிவை மாற்றிக் கொள்ளச் சொல்கிறீர்கள்!''

''சாரு! நீ பயப்படுவதில் அர்த்தமே இல்லை. நூற்றுக்கு ஒன்று அல்லது இரண்டு கேஸ்கள் கோளாருகப் போகலாம். பாக்கி தொண்ணூற்று எட்டுப் பிரசவங்கள் எந்தவிதமான சிக்கலுமின்றி நடக்கின்றன. மேலும் ஒரு டாக்டரையே கணவனுக அடையப்போகிற உனக்கு இதைப் பற்றி என்ன கவலை?''

பேசியபடியே தோட்டத்திலிருந்து வீட்டு வாசலை நோக்கி மெல்ல நடந்தார்கள்.

''இரண்டு மாத்திரைகளையும் சாப்பிட்டு விட்டுப் படுத்துக் கொள். நான் சொன்னவற்றை நன்ருக யோசித்துப் பார்த்தபடியே தூங்கு'' என்று அவளுடைய அழகிய அகன்ற கண்களைக் கனிவு ததும்பக் கூர்ந்து நோக்கியவாறே கூறி, விடை பெற்றுக் கொண்டான் வேணுகோபால்.

*

''என்ன டாக்டர், சாரு எப்போது ஆபீசுக்கு வருவாள்? பல முக்கியமான ஃபைல்கள் அப்படி அப்படியே இருக்கின்றன'' என்ருன் சாரங்கன். வேணுகோபாலோடு பேச வேண்டும் என்று ஃபோனில் அவன் தெரியப்படுத்தவே எலைட் கிளப்பின் டென்னிஸ் கோர்ட்டுக்கு வரச் சொல்லி யிருந்தான் வேணுகோபால். 'டர்க்கி டவ'லால் முகத்தில் வழிந்த வியர்வையைத் துடைத்துக் கொண்டே வேணு கூறினுன்: ''ஒன்றும் குடி முழுகிப் போய் விடாது. இன்னும் நாலு நாளைக்குப் பல்லைக் கடித்துக் கொண்டிருங்கள்.''

''ஏதாவது முன்னேற்றம் உண்டா? புதிதாக ஏதாவது தெரிந்து கொண்டீர்களா?''

வேணு உதட்டைப் பிதுக்கினுன். ''சில விஷயங்கள் தெளிவாயின, வேறு பல இன்னும் மர்மமாகவே உள்ளன!''

''கடைசியில் எனக்குச் சீட்டுக் கிழிவதுதான் மிச்சம்!''

''ஏன் எதற்கு நீங்கள் பலியாக வேண்டும்?'' ஒரு வாய் நீர் பருகி விட்டுக் கேட்டான் வேணுகோபால்.

''பின்னே, அன்று நான் அவ்வளவு தூரம் மரியாதை இல்லாமல் நடந்து கொண்ட பிறகு என்னைத் தொடர்ந்து வேலையில் வைத்துக் கொள்வாளா சாரு? ராஜிநாமாக் கடிதம் தயாராக வைத்திருக்கிறேன்.''

வேணு சிரித்தான். ''டோண்ட் வொர்ரி! அதையெல்லாம் நான் சரிக்கட்டி விட்டேன்.''

''என்னைத் திட்டாமல் விட்டிருக்க மாட்டாளே!''

''திட்டவில்லை; ஆச்சரியப்பட்டாள்! 'மீசையை எடு என்ருல் வழித்தெறிவான்; குடுமி வைத்துக் கொள் என்ருல், 'ஆகட்டும்' என்று தலையாட்டுவான்! அப்படிப்பட்டவன் எப்படி மாறிப் போனுன்!' என்று வியந்தாள்.''

சாரங்கனின் முகம் சிவந்தது. ''புதிய எஜமானி அம்மாள் ஆயிற்றே என்று அவள்விருப்பப்படி நடந்துகொண்டேன். அந்த அவள் இன்னும் மறக்கவில்லை!''

''சாருவைப்போன்ற நிலையில் இருப்பவர்களுக்கு அப்படிப்பட்ட ஓர் அந்தரங்கக் காரியதரிசிதான் தேவை. பதில் பேசாமல், சரியா தப்பா என்று யோசிக்காமல் உத்தரவுகளை நிறைவேற்றிக் கொண்டு போகிறவர்களாயிருக்க வேண்டும்.''

''ஆனல் இப்போது என்னிடம் அந்த நம்பிக்கை தகர்ந்திருக்குமே அவளுக்கு?''

''இல்லை. 'சாரங்கன் உனக்குத் துரோகம் செய்யவில்லை; நான் [illegible]விக் கொடுத்தபடி நடித்தான். அவ்வளவுதான்' என்று அவளிடம் [illegible] விட்டேன் நான்.''

கோபம் தணிந்தது. [illegible] சாருவுக்கு[illegible] [illegible]ம், அப்படியானல் [illegible] [illegible]க்கைப் பற்றி நான் [illegible]

அழகிய பூந்தோட்டச் சூழலில் சாருலதாவையும் [illegible]

# வாழ்வில் இன்பம் பன்மடங்காகும் உமக்கென ஒரு ஜெம் இருந்தால்

வாங்கிக்கொள்ளுங்கள் ஒரு ஜெம்...போகமயமான ஒரு புத்துலகம் உங்களை வரவேற்கும்...கடை கண்ணிக்குப் பல நடைகள் போக வேண்டியிராது...உணவுகள் அதிக நேரம் புதுமையோடு இருக்கும்... திடீர் விருந்தாளிகளைக் கண்டு திடுக்கிட வேண்டியதில்லை...அக்கம் பக்கத்தோரின் மெச்சும் விழிகள் உங்கள் மீது படரும் (பொறுமைக் கண்களும் கூட!) ஆம், உமது இல்லத்திற்கென ஒரு ஜெம் இருந்தால் இன்பம் பன்மடங்காகும். இழைவான எழிலும் இடவசதியும் மிகுந்தது ஜெம். சேவைத்திறனும் சிக்கனமும் மிக்கது. சுருங்கக் கூறின், நல்ல ரெப்ரிஜிரேட்டருக்கு உள்ள எல்லாப் பண்புகளும் இதற்கு உண்டு. மேலும் உண்டு!

எடுப்பான இதர ஜெம் சிறப்புகள்:

▼ ரெப்ரிஜிரேட்டர்-டிப் ஃப்ரீஸர் இரண்டுமிணைந்தது ▼ தானாக இறுக மூடிக்கொள்ளும் புதிய ஆட்டோமேட்டிக் காந்தக் கதவு ▼ குறைந்த மின் செலவு. ▼ சேமிப்புக்கென அதிக அதிக இடப் பரப்பு ▼ ஐஸ், ஐஸ் க்ரீம் இரண்டையும் அதிவிரைவில் உருவாக்கும். ▼ ஓசையற்ற இயக்கம் ▼ உத்தரவாதமாகக் கட்டிறுக்கமாக மூடிய யூனிட்.

**286 லிட்டர் மற்றும் 175 லிட்டர் கொள்ளளவுகளிலே கிடைக்கிறது. விலைவிகித ஒப்பந்தப்படி D.G.S. & D.யிடமும் கிடைக்கிறது.**






விற்பனைக்கு விடுப்போர்:
**ஜெனரல் எக்விப்மெண்ட் மர்சென்ட்ஸ் லிட்.**
பம்பாய் • கல்கத்தா • சென்னை • அகமதாபாத் • பெங்களூர் • சண்டிகார் • எர்ணாகுளம்-கொச்சின் • ஜெய்ப்பூர் • லக்னௌ • செகந்தராபாத்
ரிஜி. ஆபீஸ்: N-75 கன்னுட் ஸர்க்கஸ், நியூ டெல்லி-1

AIYARS GEM 35 TM

தப்பவில்லை' என்று சொல்லிச் சந்தோஷப்பட்டாள்.''

''அன்றைக்கே அவள் கூர்ந்து கவனித்திருந்தால் என் கண்கள் கலங்கியிருப்பதைப் பார்த்திருக்கலாம். ரத்னசாமிக்குப் ஃபோன் பண்ணியிருந்தாலும் நான் அவரிடம், மங்களா பாங்க் கடன் கொடுத்த விஷயமாக எதுவுமே பேசவில்லை என்பதைத் தெரிந்து கொண்டிருக்கலாம்.''

''அவளுக்கு ஹிஸ்டீரியா மாதிரி வந்து கூச்சலிட, சொல்லி வைத்தாற் போல் அந்தச் சமயத்துக்கு நான் எப்படி அங்கு வந்து சேர்ந்தேன் என்பதைக் கொஞ்சம் யோசித்துப் பார்த்திருந்தால் புரிந்து கொண்டிருக்கலாம். ஆனால் அன்று எதையுமே சரியாகச் சிந்தித்துப் பார்க்கும் நிலையில் அவள் இல்லை.''

''இப்போது எல்லாவற்றையும் தெரிந்து கொண்டு விட்டாளல்லவா? அப்புறமும் ஆபீசுக்கு வராமல் எப்படி இருக்க முடிகிறது அவளால்?''

''அவள் ஒற்றைக் காலில்தான் நிற்கிறாள்; நான்தான் தடுத்துக் கொண்டிருக்கிறேன்.''

''சீக்கிரமாக அவளுக்கு விடுதலை அளிக்கும் வழியைப் பாருங்கள். கவனிப்பாரில்லாமல் வேலைகள் குவிந்து கொண்டே போகின்றன.''

''வீட்டிலேயே அடைந்து கிடந்தால் அதுவும் அவளுடைய இப்போதைய மன நிலையில் பாதகமாக முடியக்கூடும். அதனால்தான் இன்று ஒரு புதிய யுக்தியைக் கையாளப் போகிறேன்.''

''என்ன அது?''

''அவளுடைய சிறு பிராயத்தில் நிகழ்ந்த சம்பவங்களைக் கேட்டதிலிருந்து கடந்த ஐந்தாறு நாட்களாக மிகவும் அன்பாகவும் அனுதாபத்துடனும் அவளிடம் நடந்து கொண்டு வந்திருக்கிறேன். இப்போது அந்த 'டெக்னி'க்கை மாற்றிக் கோபமாகப் பேசப் போகிறேன்!''

இப்படிச் சொல்லிவிட்டு வேணுகோபால் டென்னிஸ் கோர்ட்டுக்குத் திரும்பினான். சாருவிடம் கோபப்படத் தைரியத்தைத் திரட்டிக் கொள்கிறவன் போல் பந்தை ஓங்கி அறைந்து வெளுத்துக் கட்டினான். முக்கால்வாசி ஷாட்கள் 'அவுட் ஸை'டாகிப் போனது பற்றி அவன் கவலைப்படவேயில்லை! **(தொடரும்)**

# ஆதன் தந்தை ஆந்தை



● அவர் 'கம்'மென்றிருக்கிறார் என்றால் ஒரு தொழிலும் செய்யாமல் சும்மா இருக்கிறார் என்றுதான் நாம் பொருள் கொள்ளுவோம். ஆனால் இந்த 'கம்'மிற்கு நாம் கொள்ளும் பொருளுக்கு நேர் எதிரிடையாக தொழில் என்று பொருளாம் அந்தக் காலத்தில்! சுவையாக இல்லையா? இதுபோல் வேறு பல சுவைகளையும் பார்க்கலாம்:

● 'செவிடு' என்ற பெயர் நம்முடைய காலத்தில் ''காது இல்லாதவன் செவிடன்'' என்ற பாலர் பாட வாக்கியத்தைத்தான் நினைப்பூட்டும். அக்காலத்தில் செவிடு என்பது ஒரு வகை முகத்தல் அளவைப் பெயராக வழங்கி வந்தது. ஆழாக்கில் ஐந்தில் ஒரு பங்குக்குச் செவிடு என்று பெயர்.



● 'ஆந்தை' என்ற பெயர் பழைய காலத்தில் மனிதர்களுக்கு வழங்கி வந்தது. கோட்டானில் ஒரு ஜாதிக்குப் பெயராகிய அது மனிதனுக்கு எப்படி வந்தது என்று நீங்கள் யோசிக்கலாம். ஆந்தை போல இருப்பார்களென்று வியாக்கியானம் செய்யலாம். அதெல்லாம் காரணம் அன்று. தொல்காப்பியர் காலத்தில் 'ஆந்தை' என்று ஒருவனை அழைத்தால் அவனுக்கு நிச்சயமாகப் பிள்ளை இருக்கிறான் என்று தெரிந்து கொள்ளலாம். அந்தப் பிள்ளையின் பெயர் 'ஆதன்' என்றும் தெரியலாம். ஆம். அந்த மனிதன் ஆதன் தந்தை. அவனை அவனுடைய மகனது பெயரைக் கொண்டு குறிப்பித்தார்கள். ஆதன் தந்தை ஆந்தை என்று மாறும். இப்படியே பூதன் தந்தைக்குப் ''பூந்தை'' என்று பெயர் வந்தது. சாத்தன் தந்தையைச் சாத்தந்தை என்று அழைத்தார்கள்.



● தமிழர்கள் தொல்காப்பியர் காலத்தில் பொழுது போக்குக்குப் பல விளையாட்டுகளை விளையாடி வந்தார்கள். சதுரங்கம் போன்ற சூதாட்டம் ஒன்றை அவர்கள் ஆடினார்கள். அதை ''வல்'' என்று சொல்லி வந்தார்கள். பலகையில் கட்டம் கிழித்து ஆடும் விளையாட்டு அது. அந்தப் பலகைக்குப் பல்லப் பலகை என்று பெயர். அவ்விளையாட்டில் உபயோகப்படும் காய்களை ''நாய்'' என்று வழங்கினர். இப்பொழுதும் கட்ட விளையாட்டில் காய்களை நாய் என்று சொல்வது வழக்கம்.



**திரு கி. வா. ஜ.வின் '[illegible]' என்ற நூலிலிருந்து.**

**தகவல்: வி. ச. வாசுதேவன்.**

## அத்தியாயம் 25

# காந்தீயம் தோற்றதா?

நீண்ட வராந்தாவில் ஒரு சாய்வு நாற்காலியில் சற்று ஒய்வாக அமர்ந்திருந்த சாருலதா, எதிரே இருந்த உயரக் குறைவான ஸ்டூலில் கால்களை நீட்டிக் கொண்டிருந்தாள். அவள் கன்னத்தில் ஒரு கட்டை விரலும் நெற்றியில் மற்ற நான்கு விரல்களும் பதிந்திருந்தன. கண்கள் மூடியிருக்க அமைதியாகச் சுவாசித்துக் கொண்டிருந்தாள். அவள் நெஞ்சில் ஒரு பத்திரிகை கவிழ்ந்த வாக்கில் கிடந்தது.

வராந்தாவின் ஒரு மூலையில் நிழலில் தழைக்கும் இரு செடிகள் தொட்டிகளில் வைக்கப்பட்டிருந்தன. அலமாண்டா கொடி யொன்று அதே ஓரத்தில் வெளிப்புறம் படர விடப்பட்டு அழுத்தமான மஞ்சள் நிறத்தில் பெரிய பெரிய பூக்களை வாரி வழங்கிக் கொண்டிருந்தது.

காரை நிறுத்தி விட்டுப் படியேறி வந்த வேணுகோபால், சாருலதா அப்போது இருந்த நிலையில் அளித்த அழகுத் தோற்றத்தைச் சில விநாடிகள் ரசித்துக் கொண்டு நின்றான். சாதாரணமாக எப்போதுமே சாருலதாவைச் சரி சமானமாகக் கருதிப் பழகியிருந்த வேணுகோபாலுக்கு இன்று அவள் பௌதிக ரீதியில்தான் என்றாலும் தாழ்வான ஒரு நாற்காலியில் இருந்ததும் அவள் அருகே தான் உயர்ந்து நின்றதும் ஏதோ இனம் புரியாத ஒரு கிளுகிளுப்பை ஏற்படுத்தியது. உரியவர் வந்து அள்ளிக்கொண்டு போகக் காத்திருக்கும் ஒரு பூமாலையாக அவள் படுத்துக் கிடந்தாள்.

அவளுக்கு உடம்பு சரியில்லாதபோது தயங்காமல், யோசியாமல் அவளைத் தொட்டுச் சிகிச்சை செய்த வேணுகோபாலுக்கு இப்போது அருகில் நின்று அவளைப் பார்வையால் தழுவவே தயக்கமாக இருந்தது. அவள் அழகை அளவெடுப்பதை நிறுத்திப் பேச்சில் கவனத்தைத் திருப்பினான்.

''பகல் தூக்கமா?'' என்று கேட்டான்.

''இல்லை, தீவிர யோசனை'' என்றாள் சாரு, கண்களைத் திறவாமலே. சுண்டு விரல் நெற்றியின் மையத்தில் தாளம் போட ஆரம்பித்தது.

''எதைப் பற்றியோ?''

''எல்லாம் உங்களைப் பற்றித்தான்.''

''ஆகா அடியேன் தன்யனானேன்!''

''என்ன யோசித்துக் கொண்டிருந்தேன் என்று தெரிந்தால் அப்படிச் சொல்ல மாட்டீர்கள்.''

''நல்லதோ, கெட்டதோ எதுவானாலும் சரி; என்னைப் பற்றி நினைத்துக் கொண்டிருந்தாயல்லவா, அதுவே போதும்.''

சாருலதாவின் இமைகள் படபடத்தன. அவள் நிமிர்ந்து உட்கார்ந்து தன் கரிய விழிகளை அவன்மீது செலுத்தினாள். குற்றம் சாட்டுவது போல் சுட்டியபடியே, ''நீங்கள் செய்த காரியம் உங்களுக்கே நன்றாக இருக்கிறதா?'' என்று கேட்டாள்.

''நீ எப்போது இதைக் கேட்கப் போகிறாய் என்றுதான் நான் பயந்து கொண்டே யிருந்தேன்.''



# சாருலதா

## கி.ராஜேந்திரன்

''இவ்வளவுதான் உங்கள் பதிலா?''

''வேறு பதில் என்னிடம் இல்லையே!'' என்றான் வேணுகோபால் பரிதாபமாக. சாருலதாவிடம் கோபமாகப் பேச வேண்டும் என்று தீர்மானம் செய்து கொண்டு வந்தவன், இப்போது சாருலதாவின் கேள்விக் கணைகளிலிருந்து தன்னைத் தானே காத்துக் கொள்ள வேண்டிய நிலையில் இருந்தான். இதை நினைத்து அவனுக்குச் சிரிப்பு வந்தது.



"என்ன சிரிக்கிறீர்கள்? அலட்சிய மாயிருக்கிறதா உங்களுக்கு? சாரங்கனை என்னை பிளாக்மெயில் செய்வது போல் நடிக்கச் சொன்னீர்கள்; கூசாமல் பொய் பேசத் தூண்டினீர்கள்; அவமரியாதையாகத் தொட்டுப் பேசத் தைரியத்தை அளித்தீர்கள்; நான் தற்கொலை செய்து கொள்ளுமளவுக்கு என்னை வதைக்கச் செய்தீர்கள். குண்டு என்மீது குறி பிசகாமல் பாய்ந்திருந்தால்...? ஒரு கண நேரத் தாமதம் என் உயிரைக் குடித்திருக்குமே?"

"அப்படி ஏதாவது நேர்ந்திருந்தால் எனக்கு மன்னிப்பு ஏது? உன்னைப் பின்தொடர்ந்து நானும் வரவேண்டியதுதான்."

"எதற்கு இப்படி ஒரு பயங்கரமான பரிசோதனை?"

"உனக்கு அதிர்ச்சி வைத்தியம் செய்வது நல்லது என்று எனக்குப் பட்டது. நீ சொல்வதற்கெல்லாம் தலையாட்டிக் கொண்டிருக்கும் சாரங்கனை உனக்கு விரோதமானவனுக்கி விட்டால் பிறகு உனக்கு என்னைத் தவிர வேறு யாருமில்லை என்று ஏற்பட்டு விடும். உன் மனத்தில் நீ மூடி மறைத்துக் குமைந்து கொண்டிருக்கும் விஷயங்களை என்னிடம் சொல்லி ஆறுதல் பெற நினைப்பாய். பிறகு நாம் இருவருமாகச் சேர்ந்து யோசிக்கலாம். உன் உள்ளத்தைக் குடையும் நினைவுகளாலும் உன்னை பிளாக்மெயில் செய்யும் கயவர்களாலும் நீ துன்பமடைவதற்கு ஒரு முடிவு காணலாம். இப்படியெல்லாம் எண்ணித்தான் இந்தக் காரியத்தில் இறங்கினேன்."

"டாக்டர்கள் கையாளும் முறையா இது?"

"இல்லை, உன் வழியிலேயே சென்று உன்னை வளைத்துப்போட நினைத்தேன்."

"உங்கள் நடத்தையைப் பற்றி மெடிக்கல் கவுன்ஸிலுக்கு நான் எழுதினுல், என்ன ஆகும்?"

"ஒரு டாக்டருக்குரிய பண்புகளை மறந்து நான் வரம்பு மீறி நடந்து



சேர்ந்து உன்னை ரொம்பவும் சங்கடப் படுத்திக் கொண்டிருந்தன. இவற்றையெல்லாம் மனம் விட்டு என்னிடம் பேச உனக்குச் சந்தர்ப்பம் ஏற்படுத்தித் தராவிட்டால உனக்குப் பைத்தியமே பிடித்திருக்கும்.''

''எனக்குப் பைத்தியம் பிடிக்காமலிருக்க என்னைப் பைத்தியமாக அடித்திருக்கிறீர்கள்!''

''நான் வலிய உன் உதவிக்கு வந்திருந்தால் நீ சுருண்டு கொண்டிருப்பாய். அதனுல் என் உதவியை நீ நாடும் நிலைக்கு உன்னைக் கொண்டு வந்தேன்.''

''பயங்கரமான சதித் திட்டம்!''

''நீ கோபப்படுவது நியாயம்தான்.''

''கோபமா? நான் சந்தோஷப்பட்டுக் கொண்டிருக்கிறேன்'' என்ருள் சாருலதா. புன்னகை அரும்பிச் சிரிப்பாக வெடித்தது அவள் ரோஜா இதழ்களில். ''எதற்கு என்று சொல்லுங்கள் பார்க்கலாம்!''

புதிரை விடுவிக்கத் தெரியாமல் தலையசைத்தான் வேணுகோபால்.

''காந்தீயம், காந்தீயம் என்று அடிக்கடி எனக்கு லெக்சர் அடிப்பீர்களே! காந்திஜி உங்கள் செயல்களை அங்கீகரிப்பாரா? காந்தீயம் தோல்வி அடைந்துவிட்டதாகத்தானே அர்த்தம்? அதை நீங்கள் இப்போது ஒப்புக்கொண்டுதானே ஆக வேண்டும்?''

வேணுகோபால் தடுமாறினுன். அதுவரை நின்றபடியே பேசிக் கொண்டிருந்தவனுக்கு இப்போது அமர ஆசனம் தேவைப்பட்டது. சாருவின் பாதங்கள் இதுவரை நீண்டிருந்த ஸ்டூலில் அவன் உட்கார்ந்து கொண்டதாகக் கண்டனத் தீர்மானம் நிறைவேற்றுவார்கள்.''

''அவமானமில்லையா அது?''

''அதை விட நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாகலாம்!''

''அப்படிப்பட்ட காரியத்தை ஏன் செய்தீர்கள்?''

''இதுகூடத் தெரியவில்லையா உனக்கு? நான் டாக்டராக அப்போது இயங்கவில்லை. உன்னை அடையத் துடிக்கும் காதலனுக இருந்தேன். உன் உடலும் உள்ளமும் என்னிடம் தஞ்சமடைந்து விட வேண்டும் என்று ஆசைப்பட்டேன்.''

''நான் பிளாக்மெய்ல் செய்யப்படுகிறேன் என்று யார் சொன்னது உங்களுக்கு?''

''சாரங்கன் சொன்னுன். நீயும்தான் கூறினுய், அரை மயக்க நிலையில். உனது இளம் பிராய நினைவுகள் மட்டுமில்லை; குணுவுக்குக் கல்யாணம் நடக்காதது, அவன் வீட்டை விட்டுப் போனது, மணியின் மரணம், வேலைச் சுமை, நீ பிளாக்மெய்ல் செய்யப்பட்டது, உருப்படாத கம்பெனி ஒன்றை உன் வசமாக்கிக் கொண்டது — எல்லாமாகச்

# டிவிஎஸ்
# கட்டும் பாடிகள்
# பலவகையான
# டிசைன்களை
# உங்களுக்கு
# அளிக்கிறது





நீங்கள் தேர்ந்தெடுக்கும் எந்த டிசைன் வேண்டுமானாலும் டிவிஎஸ் கவலைக்கு இடமில்லாமல் கட்டித்தரும். ஒவ்வொரு பாடியின் அமைப்பும் மிக நேர்த்தியானது. உறுதியானது. அவை அதிர்ச்சியையும், ஆட்டத்தையும் தாங்கக்கூடியது. மிகக் குறைந்த எண்ணெய்ச் செலவிற்கும், டயர் அதிகமாகத் தேயாத வகையில் இயங்கும் அமைப்பு கொண்டது. அசைவு இல்லாதது. வசதி நிறைந்தது. இவை அனைத்தும் பல்லாண்டுகளுக்கு நீடித்திருக்கக்கூடியவை.

டிவிஎஸ்ஸில், பாடி கட்டுவதில் முன்னேற்றம் காணுவதற்குரிய சிறப்புப்பகுதி ஒன்று செயல்படுகிறது. அதில் இடைவிடாத சிந்தனையின்மூலம் குறைந்த எண்ணெய்ச் செலவில் ஓடுவதற்கான எடையுடன், கவர்ச்சிமிக்கதாயும், பார்வைக்கு அழகாகவும், சுலபமான ஓட்டச்சக்தியைக் கொண்டதாயும் உள்ள சிறிய முறைகளுடனும், அமைப்புக்களுடனும் நிபுணர்கள் பாடிகளை அமைக்கிறார்கள்.

டிவிஎஸ்-பாடிகள் கட்டுவதற்கு நாம் சோதிக்கப்பட்ட கச்சாப் பொருட்களையே உபயோகப்படுத்துகிறது. நீடித்து உழைக்கும் பாஸ்பேட்டட் MS ஷீட்டுகளையும், உயர்தர மரச்சாமான்களையும் உபயோகித்து. உறுதித்தன்மை கெடாமல் இருக்க கோட்டிங் செய்கிறார்கள். புதிய டிசைன்களை சாலைகளில் செயல்முறைச் சோதனை செய்த பின்னரே பாடி அமைப்பிற்கு தேர்ந்தெடுக்கப்படுகிறது.

ஒவ்வொரு பாடியையும் எல்லாவிதமான மிகக்கடினமான சோதனைகளுக்குப் பின்னரே டெலிவரி செய்கின்றனர்.

நீங்கள், டிவிஎஸ்ஸில் பஸ் பாடி கட்ட ஆர்டர் கொடுத்தால் அவர்களுடைய பாடி கட்டும் தொழிலின் 45 ஆண்டு பழுத்த அனுபவத்தின் பயனையும் அடைவீர்கள்.

**டிவிஎஸ் — இந்தியாவிலேயே மிகப்பெரிய பாடிகள் கட்டும் ஸ்தாபனம்.**






உங்கள்
நம்பிக்கைக்குரியது
டிவிஎஸ்

**சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிமிடெட்**
மதுரை (இது ஒரு டிவிஎஸ் ஸ்தாபனம்)

SI-5300

டான். அதே கணத்தில் பௌதிக ரீதியில் மட்டுமின்றி மனப் போக்கிலும் கூட அவள் திடுதிப்பென்று உயர்ந்து விட்டது போலவும் தான் தாழ்ந்து போய்விட்டது போலவும் அவனுக்குத் தோன்றியது.

அவன் தவிப்பைப் புரிந்து கொண்டு அவள் மேலும் நையாண்டியாக நகைத்தாள். ''காந்தீயக் காவலரே! ஏன் மௌனம்?''

வேணுகோபால் சற்று நேரத்துக்குப் பின் பேசும் துணிவு பெற்றான். ''சாரு, காந்தீயத்தைக் கடைப்பிடிக்க முயன்ற வேணுகோபாலுக்குப் படுதோல்வி என்பதை ஒப்புக் கொள்ளுகிறேன். ஆனால் காந்தியத்துக்குத் தோல்வி என்பதை நான் ஒருநாளும் ஒப்புக் கொள்ளவே மாட்டேன்.''

''இரண்டும் ஒன்றுதான்!''

''அதெப்படி? காந்தி இன்று நம்மிடையே வாழவில்லை; ஆனால் காந்தீயம் என்றும் வாழும்.''

'' ஸஹாரா பாலைவனத்தில்தான் அது வாழ முடியும்! பணப் பசியில் கொடிய புலியைப் போன்றவர்களும், குயுக்தியில் நரிகளைப் போன்றவர்களும் வாழும் நாட்டில் காந்தீயத்துக்கு இடமில்லை, வேணு!'' என்றாள் சாருலதா.

## அத்தியாயம் 26

# வாழ்க்கை ஒப்பந்தம்

ஐலண்டு மைதானத்துக்கு அருகே மரங்களிலெல்லாம் வண்ண விளக்குகள் சரம் சரமாகப் படர்ந்திருக்க, அப்பால் தாஜ்மகாலின் மாதிரித் தோற்றம் மின் விளக்கொளியில் ஜொலிக்க, ஏதோ சொப்பனபுரிக்கு வந்துவிட்டது போல் தோற்றமளித்தது சென்னையின் அந்தப் பகுதி.

''நாளை முதல் நீ ஆபீஸுக்குப் போகலாம், சாரு. அப்புறம் உனக்கு இதற்கெல்லாம் நேரம் இருக்காது. அதனால் தான் இன்றைக்கே இதைப் பார்க்க உன்னை அழைத்து வந்தேன்'' என்றான் வேணுகோபால். காரை மெதுவாக ஓட்டி வந்து சாலை ஓரமாக நிறுத்தினான்.

''டூரிஸ்ட் எக்ஸிபிஷனா? அட்டை தாஜ்மஹாலும் மூங்கில் ஐஃபெல் டவரும் அமர்க்களப்படுகிறதே!''

''வெளியே இருந்து பார்க்க அழகாக இருக்கிறது. உள்ளே விசேஷமாக ஏதுமில்லை என்கிறார்கள்.''

''எல்லாமே அப்படித்தான். வெளித் தோற்றம் வேறு, மனத்துக்குள் இருப்பது வேறு! பேச்சு வேறு, செயல் வேறு!''

''காந்தீயத்தைப் பற்றி அடிக்கடி உனக்கு உபதேசம் செய்து விட்டு நான் அந்தப் பாதையில் நடக்கவில்லை என்றுதானே மறுபடியும் குத்திக் காட்டுகிறாய்?''

''நான் பொதுப்படையாகச் சொன்னேன். உங்களுக்கு நெஞ்சம் குறுகுறுக்கிறது'' என்று கூறிச் சிரித்தாள் சாருலதா. ''உங்கள் பேரில் தப்பில்லை; சகவாச தோஷம். என்னுடன் பழகினால் அப்புறம் நல்லவராகவே நீடிக்க முடியுமா நீங்கள்? பொய், பித்தலாட்டம் எல்லாம் அத்துபடியாகி விடாதா?''

''சாரு! ஒரு விஷயத்தை நீ மறந்துவிட்டுப் பேசுகிறாய். நான் என்னுடைய நற்பெயருக்கு ஏற்படக் கூடிய களங்கத்தைக்கூடப் பொருட்படுத்தாமல் அப்படி நடந்து கொண்டது எதனால்? மெடிக்கல் கவுன்ஸிலில் 'அன்புரொபஷனல் காண்டக்ட்' என்று சொல்லி என்னைக் கண்டனம் செய்தார்களென்றால் என் மானம் கப்பலேறி விடாதா? அதற்கெல்லாம் நான் துணிந்தது உன் மீதுள்ள அசைக்க முடியாத காதலால் தான் என்பது புரியவில்லையா?''

''என் கதையையெல்லாம் கேட்ட பிறகு அந்தக் காதல் கரைந்து போயிருக்க வேண்டுமே!''

''இல்லை, சாரு, உன் கதையை, சிறுமியாக இருந்தபோது உனக்கு நேர்ந்த துன்பங்களைத் தெரிந்து கொண்டபிறகு என் காதல் மேலும் கெட்டிப்பட்டிருக்கிறது. வேண்டுமானால் அதோ அந்தத் தாஜ்மஹால் மீது ஆணையிட்டுச் சொல்கிறேன்.''

இந்தச் சமயத்தில் ஒரு போலீஸ்காரர் அருகில் வந்தார். ''ஸார்! இங்கே வண்டியை நிறுத்தக் கூடாது. எக்ஸிபிஷனுக்குப் போகணும்னா 'கார் பார்க்'கில் வண்டியை நிறுத்திவிட்டு வாங்க. இல்லேன்னா போய்க்கிட்டே இருங்க.''

வேணுகோபால் காரைக் கிளப்பி மன்ரோ சிலையை வலம் வந்து பிறகு பீச் சாலையோடு செலுத்தினான். ''சமய சந்தர்ப்பம் தெரியாமல் இந்தப் போலீஸ்காரன் வேறு இடைஞ்சலாக வந்து சேர்ந்தான் பார்!''

''நான் அவனை வாழ்த்திக் கொண்டிருக்கிறேன். போயும் போயும் அந்த அட்டை தாஜ்மகால் மீது ஆணையிட்டுச் சொல்ல நினைத்தீர்களே! உங்கள் காத

ளுக்கும் அவ்வளவு மதிப்புத்தானே கொடுக்க முடியும்?'' சாரு சிரித்தாள்.

''வேண்டாம் சாரு! இந்த அட்டை தாஜ்மஹால் வேண்டவே வேண்டாம். நிஜ தாஜ்மஹாலுக்குப் போவோம். அப்புறம் தில்லிக்குச் சென்று அங்கிருந்து விமானம் மூலம் அயல் நாடுகளுக்குப் பறப்போம். நான் மருத்துவத் துறையில் ஆராய்ச்சி செய்யப் போகிறேன். நீ வியாபார நிமித்தமாக என்னுடன் வந்து சேர்ந்து கொள். இருவருமாக உலகச் சுற்றுப் பயணம் செய்வோம். காதலர்களுக்கு உகந்ததென்று கருதப்படுகின்ற இடங்கள் ஒன்றுவிடாமல் பார்ப்போம். அப்படி நாம் பார்க்கும் ஒவ்வொரு காட்சி எதிரேயும் நான் சத்தியம் செய்கிறேன். உன்னை மனமாரக் காதலிப்பதாக. ஐஃபெல் டவர் எதிரேயும் ட்ரபால்கர் சதுக்கத்தின் மத்தியிலும் ஸ்விஸ் ஆல்ப்ஸின் பனி படர்ந்த மலைச் சரிவுகளிலும் எகிப்திய ஸ்பிங்க்ஸுக்கு எதிரேயும் டிஸ்னி லாண்டின் அற்புதங்களுக்கு இடையேயும் எம்பயர் ஸ்டேட் பில்டிங்கின் உச்சியிலும் ஹவாய் கடற்கரையின் அழகில் அமிழ்ந்திருக்கும்போதும் உன் கைகளைப் பற்றியபடி ஆணை இடுகிறேன்!''

''அவற்றையெல்லாம் பார்க்க விமானம் ஏறிப் போக வேண்டும். ஆனால் நயாக்ரா நீர்வீழ்ச்சி மட்டும் இங்கேயே வந்து விட்டது—உங்கள் பேச்சாக மாறிக் கொட்டுகிறது.'' சாருலதா பெரிதாகச் சிரித்தாள்.

''வெறும் வார்த்தைகள் இல்லை சாரு! உணர்ச்சி வெள்ளம்! அது உனக்குப் புரியவில்லை; புரியவேயில்லை!'' அவன் ஆத்திரமடைந்து காரின் முன்புறம் 'டாஷ்போர்ட்'டில் பல முறை இடக் கரத்தால் குத்தினான்.

அவன் கோபம் சாருலதாவை மருளச் செய்தது. விளையாட்டுப் பேச்சை அவள் தொடராமல் தடுத்தது. சில விநாடிகளுக்குப் பிறகு அவள் சொன்னாள்: ''வேணு! உங்களை நம்பத்தான் நான் முயலுகிறேன். ஆனால்... ஆனால்...''

''ஆனால் என்ன சாரு? என்ன சந்தேகம் உனக்கு?''

''திருமணம் என்று நடந்து விட்டால் கொஞ்ச காலத்துக்குப் பிறகு உங்கள் குழந்தையைக் கையிலெடுத்துக் கொஞ்ச வேண்டும் என்ற நியாயமான ஆசை உங்களுக்கு ஏற்படுமே!''

சாலை ஓரமாக வண்டியை நிறுத்தினான் வேணுகோபால். ''சாரு! உன்னிடம் நான் பொய் சொல்ல விரும்பவில்லை. எனக்குக் குழந்தைகள் ஒன்றல்ல, இரண்டல்ல; நாலைந்து குழந்தைகள் வேண்டும் என்ற ஆசைதான். ஆனால் சாரு, சத்தியமாகச் சொல்கிறேன்; நீயே குழந்தை வேண்டும் என்று ஏங்கும்வரை நான் என் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ள நினைக்க மாட்டேன். சரிதானா?''

''என்றைக்குமே — வாழ்நாள் முழுவதுமே நான் பிள்ளைப் பேற்றை விரும்பா விட்டால்?''

''பிரசவம் பற்றி உனக்கு இருக்கும் பயம் அர்த்தமற்றது. இதை நீ போகப் போக நிச்சயம் உணர்ந்து கொள்வாய்.''

''ஒருவேளை உணர்ந்து கொள்ளாவிட்டால்....?''

''நானும் குழந்தைகள் வேண்டும் என்ற என் ஆசையை, அடியோடு தியாகம் செய்து விடுகிறேன்.''

''அத்தனை பெரிய தியாகத்தை எதற்காக நீங்கள் செய்ய வேண்டும்?''

''உன்னிடம் எனக்குள்ள காதலுக்காகத்தான்.''

''காதலுக்காக ஒருவர் இவ்வளவு பெரிய தியாகத்தைச் செய்ய முடியும் என்று என்னால் நம்ப முடியவில்லை.''

''நீ என்றைக்குத்தான் என்னை நம்பியிருக்கிறாய், சாரு?'' என்று இரைந்தான் வேணுகோபால். ''கணக்குப் பார்த்துப் பார்த்து உன் மனம் கல்லாகி விட்டது. பணத்தை எண்ணி எண்ணி உன் மனத்தில் மனித உணர்ச்சிகளுக்கே இடமில்லாமல் செய்து கொண்டு விட்டாய். ஸ்டாம்புப் பேப்பரில் எழுதித் தருகிறேன், உன்னைக் காதலிக்கிறேன் என்று. வர்த்தக ரீதியில் ஒப்பந்தப் பத்திரம் எழுதிக் கையெழுத்துப் போட்டுத் தந்தால் அப்போதாவது நம்புவாயா? இன்னின்ன ஷரத்துக்களின் அடிப்படையில் நம்முடைய வாழ்க்கை ஒப்பந்தம் ஏற்பட்டிருக்கிறது என்று வியக்தமாக எழுதிப் பத்திரத்தை ரிஜிஸ்தர் செய்து விடலாமா?''

இப்படிக் கேட்டுவிட்டு வேணுகோபால் காரைக் கிளப்பிக்கொண்டு கோபத்தில் வேகமாக ஓட்டிச் சென்றான்.

சாருலதாவிடமிருந்து விசும்பல் ஒலி கேட்டது.

''எதற்கு அழுகிறாய்? பயப்படாதே! காரை மோதிவிட மாட்டேன்; உன்னைப் பத்திரமாகக் கொண்டு போய்ச் சேர்த்து விடுகிறேன், வீட்டில்!''

''நான் அதற்காக அழவில்லை வேணு; உங்களுக்கு இத்தனை துன்பத்தைத் தர வேண்டிய நிலையில் இந்தப் பாவி இருக்கிறேனே என்றுதான் அழுகிறேன்.''

''அழு! அழு! உனக்கு அது நல்லதுதான்'' என்றான் வேணு இரக்கமற்றவனாக. வீடு நெருங்கிக் கொண்டிருந்தது.

''வேணு!'' அவன் இடக் கரம் மீது தன் விரல்களைப் பதித்தாள் அவள். ''கொஞ்சம் நிறுத்துங்கள். அழுது வடியும் முகத்துடன் என்னை வீட்டில் யாரும் பார்க்க வேண்டாம்.''

கார் நின்றதும் அவள் விளக்கைப் போட்டுத் தன் முக ஒப்பனையில் கவனம் செலுத்தினாள். பவுடர் பஃப்பை நாசூக்காகப் பயன்படுத்தியவள் கூறினாள்: ''இந்த அளவுக்கு என்மீது காதலை நீங்கள் வளர்த்துக் கொண்டது பிசகு. இனியும் உங்களிடம் உண்மையை மறைத்தால் அது பாவமாகும்.''

''கதையில் பாக்கி இருக்கிறது என்பது எனக்குத் தெரியும்'' என்றான் வேணுகோபால் அமைதியாக. ''நீ பிளாக்மெயில் செய்யப்படுவது ஏன் என்பதை இன்னமும் நீ எனக்குச் சொல்லவில்லையே?''

''சொல்கிறேன். இவ்வளவு தூரம் என் கதையைத் தெரிந்து கொண்ட பிறகு பாக்கியையும் நீங்கள் அறிந்து கொள்வதால் என்னவாகிவிடப் போகிறது? ஆனால் யாரிட்மும் இது பற்றி மூச்சு விடக் கூடாது நீங்கள். சத்தியம் செய்யுங்கள்.''

''அதற்கு அவசியமே இல்லை. நோயாளி கூறும் எதையுமே பரம ரகசியமாகப் பாதுகாக்க வேண்டியது ஒரு டாக்டரின் புனிதக் கடமை.''

சாருலதா சிரித்தாள். ''இப்படி நீங்கள் சொன்னதாகவும் மெடிக்கல் கவுன்ஸிலுக்கு எழுத வேண்டியது தான்!''

சுருக்கென்று தைத்தது வேணுகோபாலுக்கு. ''எழுது, சாரு! அவசியம் எழுது! என் நற்பெயரைக் காப்பாற்றிக் கொள்ள அங்கே யாருக்கும் லஞ்சம் கொடுக்க முடியாது; மதுவை வழங்கியாரையும்மயக்கவும்முடியாது!''

அவன் குத்திக் காட்டியதை அவள் ஒதுக்கிவிட்டுக் கூறினாள்: ''காதல் என்ற சொல்லே எனக்கு 'அலர்ஜி'யாக விளங்குவது ஏனென்றும் பிரசவம் என்ற நினைப்பே எனக்குப் பயத்தை உண்டு பண்ணுவது ஏனென்றும் தெரிந்து கொண்டீர்கள். இந்த இரு நிகழ்ச்சிகளின் பின் விளைவாக நேர்ந்த மூன்றாவது சம்பவத்தைச் சொல்கிறேன். ஆபீஸுக்கு விடுங்கள் காரை!''

''ஆபீசுக்கா? இந்த அகால நேரத்திலா?''

''ஆமாம், இப்போதேதான்'' என்றாள் சாருலதா.

* * *

எஜமானி அம்மாளைக் கண்டதும் மரியாதையுடன் சல்யூட் அடித்துப் பரபரப்புடன் கேட்டையும் சாருலதா பில்டிங்ஸின் வாசல் கதவையும் திறந்துவிட்டான் கூர்க்கா. இரவு எட்டு மணிக்கு மேல் அவள் ஆபீசுக்கு வந்தது அவனுக்கு வியப்பாக இருந்தது. வேணுவும் அவளுமாக லிஃப்டில் எட்டாவது மாடிக்குப் போன பிறகு அவன் எதையோ புரிந்து கொண்டு விட்டவன் போல், தனக்குத் தானே மெல்லச் சிரித்துக் கொண்டான்.

சாருலதா என்டர்பிரைஸஸ் — சேர்மன்ஸ் ஆபீஸில் எல்லாக் கதவுகளையும் திறக்கக் கூடிய சாவி சாருலதாவிடம் இருந்தது. ஏதாவது ஓர் அவசரத்துக்குத் தேவைப்படும் என்பதால் இப்படி ஒரு 'மாஸ்டர் கீ' வைத்திருந்தாள் அவள்.

தன் காரியாலய அறையை அடைந்ததும் வேணுவைச் சோபாவில் உட்கார வைத்துவிட்டு, ''சற்று இருங்கள், இதோ வந்து விடுகிறேன்'' என்றாள். காரியாலய அறையை ஒட்டினாற்போல் அவளுடைய பிரத்தியேக 'டிரஸ்ஸிங் ரூம்' இருந்தது. அதற்குள் சென்றாள் அவள். பத்து நிமிஷங்களுக்குப் பிறகு அந்த அறைக் கதவு மீண்டும் திறந்தது. நிலைவாசல், சட்டம் போட்டது போல் சாருலதாவின் தோற்றத்தைத் தெற்றென எடுத்துக் காட்டியது. அந்தக் காட்சியைக் கண்டு திகைத்தான் வேணுகோபால்.

விதவைக் கோலத்தில் நின்றாள் அவள்!

(தொடரும்)

## வயது ஏறினால் உயரம் குறையுமா?

க்ரிஸ்டோபருக்கு இப்பொழுது வயது பத்தொன்பது. உயரம் ஐந்தடி 8 அங்குலம். அவன் சென்ற ஆண்டு ஐந்தடி 9 அங்குலம் உயரம் இருந்தான். டாக்டர்களுக்கு ஆச்சரியமாக இருக்கிறது. லண்டன் போலீசைச் சேர்ந்த இவருக்கு உயரம் குறைந்ததால் வேலை போய்விட்டது. போலீஸார் குறைந்த பட்சம் ஐந்தடி ஒன்பதங்குல உயரம் இருக்க வேண்டும் என்று விதி.

- டெய்லி மிரர்

---

| | |
|---|---|
| காரி கூப்பர்<br>ஜான் வேன்<br>ஹம்ப்ரி போகார்ட்<br>ராபர்ட் டெய்லர் | இந்த ஹாலிவுட் நடிகர்களின் பெயர்கள் இங்கு ஏன் இடம் பெற்றிருக்கின்றன? |

இந்த நான்கு ஹாலிவுட் நடிகர்களும் புற்று நோயால் இறந்தவர்கள். இதில் ஜான் வேன் நாள் ஒன்றுக்கு நூறு சிகரெட் பிடிப்பார்.

- 'டிட்பிட்ஸ்' - 'பாபு'

குப் போவோம்?' என்று கேட்கிறான் குமரேசன்.

வீடு என்று ஒன்றிருந்தால் அல்லவா பத்மநாபனுக்கு அந்த நினைவு வரும்? அவர்தாம் வீட்டையே காலி செய்து விட்டுக் கிளம்பியிருக்கிறாரே! பழனிக்குப் போனால், 'சுவாமிமலைக்குப் போக வேண்டாமா' என்று அங்கே சிலர் கேட்கிறார்கள். ஸ்ரீரங்கத்தில், 'திருவனந்தபுரம் பத்மநாப ஸ்வாமியைத் தரிசிக்க வேண்டும்' என்று சிலர் யோசனை சொல்கிறார்கள்.

துடிக்கிறார். காரியாலயத்துக்குப் போய் வந்து கொண்டிருந்த வரை அடங்கிக் கிடந்த ஆர்வம், வீட்டில் சும்மா இருக்கையில் கட்டுக்கடங்காமல் பெருகி அவரை ஆட்டிப் படைக்கிறது.

சிறிதும் பெரிதுமாகப் பலப் பல ஸ்தலங்களுக்குப் போகிறார்கள். ஆரம்பத்தில் ஊர் ஊராகப் போவது கோமளாவுக்கும் தம்பி குமரேசனுக்கும் வேடிக்கையாகவும் உற்சாகமாகவும் இருக்கிறது. மாதக்கணக்கில் சுற்றிய பிறகு சலிப்புத் தட்டுகிறது. 'எப்போ வீட்டுக்

'காஞ்சி காமாட்சியைக் கண் குளிரப் பார்த்த கண்கள் காசி விசாலாட்சியை யும் கண்டு களிக்கக் கொடுத்து வைத் திருக்க வேண்டுமே' என்று சிலர் ஆசை யைத் தூண்டுகிருர்கள்.

இப்படிப் போகுமிடங்களிலெல்லாம் புதிது புதிதாக க்ஷேத்திர மகிமைகளைத் தெரிந்துகொண்டு அடுத்தது, அதற்கடுத் தது என்று பிரயாணத்தைத் தொடர்ந்து கொண்டேயிருக்கிருர் பத்மநாபன்.

கிட்டத்தட்ட ஒரு வருஷ காலம் நிதானமாகப் பல ஸ்தலங்களுக்கும் போய்க் கையிலிருந்த பணமெல்லாம் அநேகமாகக் கரைந்துவிட்ட நிலையில் அவர்கள் காசிக்கு வந்து சேருகிருர்கள்.

அங்கேதான் கோமளாவின் வாழ்க் கையில் எதிர்பாராத ஒரு திருப்பம் ஏற் படுகிறது. கங்கையில் நீராடிப் பாபங் களைத் தொலைத்து விட்டுக் கரை யேறிய மன்சுக்லால் கலகலவென்ற சிரிப் பொலி கேட்டுத் திரும்புகிருர். தம்பி குமரேசன் நீரைக் கரங்களால் மோதி அடிக்கப் படித்துறையில் அமர்ந்திருந்த அக்கா கோமளா, அந்தத் தண்ணீர்த் தாக்குதலில் சிக்குண்டு சிரித்துக் கொண்டிருக்கிருள். நனைந்த உடை, நாணமற்ற உவகைச் சிரிப்பு, நளின மான உடல். உல்லாசத்தைத் தவிர வேறு எதையும் அந்தச் சமயத்தில் உணரும் சக்தியற்ற ஓர் எழிலுருவம். பால் வடியும் வதனம், பருவப் பூரிப்பு, நதிப் பிரவாகத்தை அளையும் பட்டுப் பாதங்கள். அவள் மேனியில் முத்து முத்தாக நின்ற நீர்த் துளிகள், அவள் சிரித்தபோது முத்து முத்தாகப் பளிச்சிட்ட பற்கள், அள்ளியெடுத்த நன்முத்துக்களைச் சிதற விட்டாற் போன்ற அவள் உற்சாகம் எல்லாம் சேர்ந்து மன்சுக்லாலைக் கிறங்க வைக்











கதவை இழுத்துப் பூட்டினாள் லக்ஷ்மி. அடுத்து, அவள் அழைப்புக் கேட்டதும், எதிரே வந்து நின்றான் அந்தச் சிறுவன். "சினிமாவுக்கா மாமி.... சாவியை மாமா கிட்டக் கொடுக்க வேண்டுமா?" ஒரு கையில் பம்பரக் கயிற்றுடன், நழுவும் நிக்கரைப் பிடித்தபடி, மறு கையில் கொட்டைப் புழுதியும் வியர்வையும் வழிய அவன் கை நீட்டி அவள் தந்த சாவியை வாங்கித் தன் நிக்கர் பாக்கெட்டில் திணித்துக் கொண்டான்.

நிம்மதியாகப் படி இறங்கினாள் அவள். அவளுக்குத் தெரியும் தன்னைச் சுற்றி மொய்க்கும் விழிகளின் குறும்பும், விஷமமும்! ஆனால், அதை ஏன் அவள் லட்சியம் செய்ய வேண்டும்?

"கரிய லங்கபனம் தப்பினாலும் இவள் சினிமா தப்ப விடுவதில்லையே! அதிலும் அந்த 'சக்ரபாணி ஜெமினி' நடிப்பென்றால் இவளுக்கு உயிராம். அதற்காக, அவன் நடித்த படங்களுக்கே அலைவாள் போகிறாளாம்!" காமாட்சி, பக்கத்துப் போர்ஷன்காரி கிசுகிசுத்தாள்.

"சீ... குடும்பப் பெண்ணைப் லட்சணமாய் இல்லாமல்... இதென்ன!" குப்பு தன் கன்னத்தைத் தோளில் இடித்து நொடித்தாள்.

"என்ன மாமி, சினிமாவுக்குப் போனால் தப்பா? குடும்பப் பெண்கள் சினிமா பார்க்கக் கூடாதா? அப்படி ஒரு சட்டம் வந்தால் சினிமா உலகமே அஸ்தமித்து விடுமே!...." வனஜா வேண்டுமென்றே உரக்கச் சிரித்தாள். எந்தச் சினிமா, எந்தக் குப்பையானாலும் இடுப்பில் ஒரு ரூபாயை முடிந்துகொண்டு போய் விடும் காமாட்சியிடம் அவளுக்கு என்றுமே 'காட்டம்'தான்.

ஆனால் வனஜா பேச்சுக்கு அர்த்தம் தங்க லோக் கண்டுபிடிப்பதைவிட இன்னும் கிண்டி விடுவதுதான் என்பதும் குப்பு அறியாததல்ல.

"போகலாம், மாதம் ஒரு முறை, தப்பினால் இரண்டு முறை போகலாம். அட, நம்மைத்தான் யாரையாவது அவள் துணைக்குக் கூப்பிட்டாளா பாரேன்! சரியாகக் கதவைப் பூட்டிக் கொண்டு போகிறது! பாவம், அவர் மாமி!"

"சாவியை வாங்கிக் கதவைத் திறந்து குனிந்த தலை நிமிராமல் அவர் உள்ளே நுழையும் பரிதாபம்! வயிற்றெரிச்சல்.... அப்பாவி மனிதர், இப்படிக் கண்டிப்பு இல்லாதிருப்பாரா ஒரு புருஷன்!"

"இப்போது மட்டும் இவள் 'புருஷனோடு போகவில்லை' என்பது என்ன நிச்சயம்?" வனஜாவின் நொடிப்பை அவர்கள் ஜீரணிக்குமுன்னால் வாசல்புறம் நிழலாடியது. கயிறு சுற்றிப் பம்பரத்தை வலக் கையில் பிடித்தபடி அச்சிறுவன் இடக்கையால் சாவியை எடுத்துத் தர 'அவர்' கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தார்.

## அத்தியாயம் 27

# புனர்ஜன்மம்

மதுரை. பத்மநாபன் தாம் ரிடைய ராவதற்குச் சில மாதங்கள் இருக்கையி லேயே லீவு நாட்கள் தம் கணக்கில் பாக்கி இருப்பதால் ஆபீஸுக்குப் போவதை நிறுத்திக் கொள்கிறார்.

அபயம் காலமானது முதல் அவ ருக்கு மன நிம்மதி இல்லை. அவள் நினை வும் கடைசிக் காலத்தில் அவள் அருகில் தாம் இல்லாத குறையும் அவர் நெஞ் சைக் குடைந்தெடுக்கின்றன. அவர் க்ஷேத்திராடனம் கிளம்புவதென்று தீர் மானிக்கிறார். மகள் கோமளா எஸ். எஸ். எல். சி. முடிக்க இன்னும் ஆறு மாதங்கள் பாக்கி இருக்கின்றன. பரீட்சை எழுதியானதும் புறப்பட்டு விட வேண்டியதுதான். அதற்குள் அவர் பயணத்துக்குத் தேவையானவற் றைக் கவனிக்கிறார்.

உத்தியோகத்திலிருந்து ரிடையரான தும் அவருக்கு மொத்தமாக ஒரு தொகை கிடைக்கிறது. அதையெல் லாம் ரொக்கமாக்கிக் கொள்கிறார். பூட்டிக் கிடக்கப் போகிற வீட்டுக்கு வாடகை கொடுத்துக் கொண்டிருப்பா னேன் என்று சாமான்கள் பலவற்றை விற்று விடுகிறார்; விற்கக் கூடாத சில அத்தியாவசியப் பொருள்களை ஒரு பெரிய கள்ளிப் பெட்டி தயார் செய்து அதில் வைத்துப் பூட்டுகிறார். கள்ளிப் பெட்டியை ஒரு நண்பர் வீட்டில் போட்டு விட்டுப் போக அனுமதி கோரிப் பெறுகிறார். வீட்டைப் பத்ம நாபன் காலி செய்யப் போகிறார் என்று தெரிந்ததும் கடன் கொடுத்த வர்கள் பயந்துபோய் அவரை முற்றுகை யிடுகின்றனர். வட்டியும் முதலுமாகக் கொடுத்துக் கணக்குத் தீர்த்த பிறகு கையிருப்பு கணிசமாகக் குறைந்து போயிருக்கக் காண்கிறார். எதிர்காலம் பற்றிய சிந்தனை இன்றி, இருப்பதை க்ஷேத்திராடனத்துக்குப் பயன்படுத்தி விடத் தீர்மானிக்கிறார். அருமை மகள் பரீட்சை எழுதி முடிக்கக்காத்திருக்கிறார்.

கல்யாணமாகி ரொம்பக் காலத்துக் குப் பிறகு பிறந்தவள் கோமளா. செல்லமாக வளர்ந்தவள். சுடுசொல் லையே பெற்றோரிடம் கேட்டறியாத அவள் உள்ளம் தாய், மரணத் தறு வாயில் திட்டியதைப் பொறுக்க முடி யாமல் இன்றளவும் துடித்துக் கொண் டிருக்கிறது. அடிக்கடி அந்த நாளை நினைத்துக் கொண்டு அழும் அவளுக்குத் தந்தை கூறும் ஒரே ஆறுதல் மொழி : '' கவலைப்படாதே! எல்லாம் நான் செய்த பாபம். க்ஷேத்திராடனம் போய் எல்லாப் பாபத்தையும் துடைத்து விட்டு வந்து விடலாம்!'' ஆறு வயது முதலே இதைக் கேட்டுக் கேட்டுப் பழகிய கோமளா, ஆறுதல் அடையாவிட் டாலும் ஸ்தல யாத்திரையை ஆர்வத் துடன் எதிர்பார்க்கத் தொடங்குகிறாள். அப்புறம் 'நாம் எங்கே போகப் போகி றோம்' என்று அலுத்துக் கொள்ளும் நிலைக்கும் வந்து விடுகிறாள். இப்படிப் பட்ட சமயத்தில் நிஜமாகவே தகப்ப

**சாருலதா**

**கி. ராஜேந்திரன்**



னார் க்ஷேத்திராடனம் போக ஏற்பாடு களைக் கவனிப்பதைக் கண்டதும் கோமளாவின் மனம் குதூகலத்தால் தளும்பி நிற்கிறது.

பரீட்சை எப்படி எழுதினாய் என்று கூடப் பத்மநாபன் கேட்கவில்லை. புறப் படப் பறக்கிறார். அபயத்தின் மறைவுக் குப் பிறகு அவருக்கு எதிலுமே சிரத் தையோ பற்றுதலோ இல்லை. மதுரையி லிருந்து, அபயத்தின் வேதனைக் குரல் ஒலித்த அந்த வீட்டிலிருந்து கிளம்பித் துன்ப நினைவுகளுக்கு மாற்றுக் காணத்

துடிக்கிருர். காரியாலயத்துக்குப் போய் வந்து கொண்டிருந்த வரை அடங்கிக் கிடந்த ஆர்வம், வீட்டில் சும்மா இருக்கையில் கட்டுக்கடங்காமல் பெருகி அவரை ஆட்டிப் படைக்கிறது.

சிறிதும் பெரிதுமாகப் பலப் பல ஸ்தலங்களுக்குப் போகிருர்கள். ஆரம்பத்தில் ஊர் ஊராகப் போவது கோமளாவுக்கும் தம்பி குமரேசனுக்கும் வேடிக்கையாகவும் உற்சாகமாகவும் இருக்கிறது. மாதக்கணக்கில் சுற்றிய பிறகு சலிப்புத் தட்டுகிறது. 'எப்போ வீட்டுக்குப் போவோம்?' என்று கேட்கிருன் குமரேசன்.

வீடு என்று ஒன்றிருந்தால் அல்லவா பத்மநாபனுக்கு அந்த நினைவு வரும்? அவர்தாம் வீட்டையே காலி செய்து விட்டுக் கிளம்பியிருக்கிருரே! பழனிக்குப் போனுல், 'சுவாமிமலைக்குப் போக வேண்டாமா' என்று அங்கே சிலர் கேட்கிருர்கள். ஸ்ரீரங்கத்தில், 'திருவனந்தபுரம் பத்மநாப ஸ்வாமியைத் தரிசிக்க வேண்டும்' என்று சிலர் யோசனை சொல்கிருர்கள்.

'காஞ்சி காமாட்சியைக் கண் குளிரப் பார்த்த கண்கள் காசி விசாலாட்சியை யும் கண்டு களிக்கக் கொடுத்து வைத் திருக்க வேண்டுமே' என்று சிலர் ஆசை யைத் தூண்டுகிறார்கள்.

இப்படிப் போகுமிடங்களிலெல்லாம் புதிது புதிதாக க்ஷேத்திர மகிமைகளைத் தெரிந்துகொண்டு அடுத்தது, அதற்கடுத் தது என்று பிரயாணத்தைத் தொடர்ந்து கொண்டேயிருக்கிறார் பத்மநாபன்.

கிட்டத்தட்ட ஒரு வருஷ காலம் நிதானமாகப் பல ஸ்தலங்களுக்கும் போய்க் கையிலிருந்த பணமெல்லாம் அநேகமாகக் கரைந்துவிட்ட நிலையில் அவர்கள் காசிக்கு வந்து சேருகிறார்கள்.

அங்கேதான் கோமளாவின் வாழ்க் கையில் எதிர்பாராத ஒரு திருப்பம் ஏற் படுகிறது. கங்கையில் நீராடிப் பாபங் களைத் தொலைத்து விட்டுக் கரை யேறிய மன்சுக்லால் கலகலவென்ற சிரிப் பொலி கேட்டுத் திரும்புகிறார். தம்பி குமரேசன் நீரைக் கரங்களால் மோதி அடிக்கப் படித்துறையில் அமர்ந்திருந்த அக்கா கோமளா, அந்தத் தண்ணீர்த் தாக்குதலில் சிக்குண்டு சிரித்துக் கொண்டிருக்கிறாள். நனைந்த உடை, நாணமற்ற உவகைச் சிரிப்பு, நளின மான உடல். உல்லாசத்தைத் தவிர வேறு எதையும் அந்தச் சமயத்தில் உணரும் சக்தியற்ற ஓர் எழிலுருவம். பால் வடியும் வதனம், பருவப் பூரிப்பு, நதிப் பிரவாகத்தை அளையும் பட்டுப் பாதங்கள். அவள் மேனியில் முத்து முத்தாக நின்ற நீர்த் துளிகள், அவள் சிரித்தபோது முத்து முத்தாகப் பளிச்சிட்ட பற்கள், அள்ளியெடுத்த நன்முத்துக்களைச் சிதற விட்டாற் போன்ற அவள் உற்சாகம் எல்லாம் சேர்ந்து மன்சுக்லாலைக் கிறங்க வைக்



# உங்கள் குழந்தையின் வளர்ச்சிவேகத்திலே பரிபூரணமான திருப்தி காண்கிறீர்களா?

## சுயேச்சையான டாக்டர்கள் தரும் இந்த அறிக்கையைப் படியுங்கள்

'எல்லாக் குழந்தைகளுக்கும் லீவர்ஸ் குழந்தை உணவு தரப்பட்டது...நம்மவர் குழந்தைகள் ஐரோப்பிய, அமெரிக்கக் குழந்தைகளுக்கு ஈடான வளர்ச்சியை நிரூபித்தன ... 5-6 மாதங்களிலே எடை இரு மடங்குக்கு மேலாகியது, ஒரு வயதிற்குள் மும் மடங்கை மிஞ்சிவிட்டது.'*

பாரத நாட்டுக் குழந்தைகளுக்கென்றே ஆக்கம்பெற்றது லீவர்ஸ் குழந்தை உணவு.

*அறிக்கையின் ஒரு பகுதியே இது. முழு அறிக்கையின் இலவசப் பிரதிக்கு எழுதுங்கள் : நியூ ஃபுட்ஸ், இந்துஸ்தான் லீவர் லிமிடெட், போஸ்ட் பாக்ஸ் 995, பம்பாய்-




## லீவர்ஸ் குழந்தை உணவு

தலைசிறந்த டாக்டர்களால் தகுதி நிரூபணம் பெற்ற பாலுணவு

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

லின்டாஸ்-LF,14-140 TM

கின்றன. அவர் மனம் நழுவுகிறது. அந்தத் தடுமாற்றத்தில் காலும் வழுக்கி விடுகிறது. பொதேலென்று அவர் கங்கையில் விழுகிருர். கரையோரம் ஆழம் அதிகமில்லேதான். ஆனுல் கோமளா பருமனுன சரீரத்துடன் வயதான ஒருவர் விழுந்ததைப் பார்த்ததும் சற்றும் யோசியாமல் ஆபத்துக்கு உதவக் கை நீட்டுகிருள். கண்ணுல் தீண்டிய அவளே அதற்குள் மெய்யாலும் தீண்டும் வாய்ப்புக் கிட்டும் என்று மன்சுக்லால் எதிர்பார்க்கவேயில்லே. உதவி தேவையில்லே என்ற உண்மையை மறைத்து அவர் அவள் கரங்களேப் பூப்போலக் கருதிப் பற்றிக் கரையேறுகிருர். குளிரிஞல் அவர் நடுங்குவதாக மற்றவர் நினேக்கையில் அவர் மெய் சிலிர்த்துக் கொண்டிருக்கிருர்.

ஆசை அவர் மனத்தில் விசுவரூபமெடுக்கிறது. 'இப்போது உள்ளது போல் இந்தப் பெண்ணே எப்போதுமே தம் பக்கத்தில் வைத்துக் கொள்ள முடியுமாஞல்?...' நன்றி கூறும் அவர், பேச்சை வளர்க்கிருர். பத்மநாபனிடம் வலியச் சென்று அறிமுகம் செய்து கொண்டு அன்பாகப் பழகுகிருர். பேச்சினிடையே பத்மநாபன் கையில் இருந்த நூற்றைம்பது ரூபாய் தவிர அவருக்கு வேறு சொத்து ஏதுமில்லே என்று தெரிந்து கொள்கிருர். இதனுல் அவருக்கு நம்பிக்கை பிறக்கிறது. இரண்டு நாட்களில் காசியை விட்டுக் கிளம்பிவிட நினேத்திருந்த பத்மநாபனே நாலு நாட்கள் தாமதிக்கச் செய்கிருர் மன்சுக்லால். விருந்து வைக்கிருர்; கோமளாவுக்கு வெகுமதிகளே வாங்கிக் கொடுக்கிருர், 'என் உயிரைக் காத்தவள்' என்று சொல்லி. பிறகு வெட்கத்தை விட்டுத் தம் விருப்பத்தையும் தெரியப்படுத்தி விடுகிருர்.

பத்மநாபனின் முகத்தில் புயல் வீசுகிறது. மின்னல் பார்வை, பெருமூச்சு, துடிக்கும் கன்னங்கள், நெரிந்த புருவங்கள். இடிமுழக்கக் குரலில், "என்ன தைரியம் உனக்கு?" என்று கேட்கிருர்.

"கல்யாண வயதில் பெண்ணே வைத்துக் கொண்டு கையில் நூற்றைம்பது ரூபாய் ரொக்கத்தைத் தவிர வேறு ஏதும் இல்லாமல் இருக்கிருயே, அந்தத் தைரியத்தை விடவா?" என்று திருப்பிக் கேட்கிருர் மன்சுக்லால். "கல்யாணத்தை நடத்தக் கடன் வாங்குவாயா? ரிடையரான உன்னே நம்பி எவன் கடன் கொடுப்பான்?"

"அதற்காக? பூதாகாரமான உன் தோற்றத்தை நீயே பார்த்துக் கொள்! கோமளாவுக்கு ஏற்றவன்தாஞ நீ?"

"பருமஞுயிருந்தால் என்ன? நான் ஐந்து லட்சத்துக்கு அதிபதி" என்கிருர் மன்சுக்லால் அமைதியாக.

"நான் ஒன்றும் அப்படி மானங்கெட்ட நிலேக்கு வந்து விடவில்லே" என்று சீறுகிருர் பத்மநாபன்.

"எனக்கு நெருங்கிய பந்துக்கள் யாரும் கிடையாது. என் சொத்து முழுவதையும் கோமளாவுக்கே எழுதி வைத்து விடுகிறேன்" என்று ஆசை காட்டுகிருர் மன்சுக்லால்.

"கிட்டத்தட்ட என் வயது இருக்குமே உனக்கு?" என்று பரிகசிக்கிருர் பத்மநாபன்.

"அதனுல்தான் சிசுரூஷை செய்ய ஒரு மனேவி வேண்டும் என்று நினேக்கிறேன்" என்கிருர் மற்றவர் விட்டுக் கொடுக்காமல்.

"பேச்சை வளர்த்தாதே, இது ஒரு நாளும் நடக்காது" என்று பத்மநாபன் வைத்த முற்றுப்புள்ளியை அழித்து விட்டு, "எதற்கும் உன் மகளேயும், கேட்டுக் கொண்டு வந்து சொல்லு" என்று 'தொடரும்' போடுகிருர் மன்சுக்லால்.

'இதில் கேட்பதற்கு என்ன இருக்கிறது' என்று நினேத்தபடியே ஆனுல் அவர் தொந்தரவு செய்ததன் காரணமாகக் கோமளாவிடம் செல்கிருர் பத்மநாபன்.

"நான் எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டுதான் இருக்கிறேன், அப்பா!" என்கிருள் பக்கத்து அறையில் இருக்கும் அவள்.

"பைத்தியம் ஏதோ உளறுகிறது; நீ ஒன்றுக்கும் கவலேப்படாதே!" என்கிருர் தந்தை.

"இல்லே, அப்பா! அவர் உளறவில்லே; நல்லெண்ணத்துடன்தான், பேசுகிருர். நான் அவரைக் கல்யாணம் செய்து கொள்கிறேன்" என்கிருள் கோமளா.

வானமே இடிந்து விழுந்திருந்தால் கூட அத்தனே அதிர்ச்சி ஏற்பட்டிராது பத்மநாபனுக்கு. "அசடு! என்ன பிதற்றுகிருய்?" என்று கோபித்துக் கொள்கிருர். கதைகளில் மகளின் விருப்பத்துக்கு விரோதமாக அவளே இரண்டாந்தாரமாகத் தள்ளிவிட்ட தந்தையைப் பற்றி அவர் படித்ததுண்டு. இங்கே அதற்கு நேர்விரோதமாக அல்லவா இருக்கிறது?

"பிதற்றலா? பாங்குப் பாஸ் புத்தகத்தை என்னிடம் அவர் காட்டினுர். நானே என் கண்ணுல் பார்த்தேன் இரண்டு லட்சத்து எண்பதாயிரம் கையிருப்பு என்று போட்டிருக்கிறது" என்கிருள் கோமளா.

பத்மநாபனுக்கு அதிர்ச்சிக்கு மேல் அதிர்ச்சியாக இருக்கிறது. காதல் குடி புக வேண்டிய கோமளமான இதயத்தினைப் பணத்தாசை ஆக்கிரமிப்பதென்பதும் உண்டா? கேள்விப்பட்டதே இல்லையே! வாயடைத்துப் போகிறார் அவர்.

கோமளா போட்ட கணக்கு அவருக்குத் தெரியாததால் அதன் விடையும் அவருக்குப் புரியவில்லை. தாயார் காலமான நாள் முதலே பிரசவம் என்ற நினைவே அவளைக் கதி கலங்க வைக்கிறது. என்றைக்கு எவனுக்குக் கழுத்தை நீட்டி இந்தச் சரீரத்தை அடிமைப்படுத்தப் போகிறேமோ என்ற பீதி வயதாக ஆக வளர்ந்து கொண்டே போகிறது. மன்சுக்லாலை மணந்து கொள்வதன் மூலம் இந்தப் பிரச்னைக்குச் சுலபமான விடை காணலாம் என்று அவளுக்குத் தோன்றுகிறது. அவருடைய அடிமையாகத் தான் இருப்பதற்குப் பதில் தன்னுடைய அடிமையாக அவர் விளங்குவார் என்பது புரிகிறது. மேலும் பெண்ணாகப் பிறந்தவள் என்றாவது ஒருநாள் எவனுக்காவது வாழ்க்கைப்பட்டுத்தானே ஆக வேண்டும்? சீதனம் ஏதும் இல்லாத தன்னை எந்த ராஜகுமாரன் வந்து பாணிக் கிரஹணம் செய்து கொள்ளப் போகிறான்? வறுமைப் பேயையும் சேர்த்துக் கல்யாணம் செய்துகொண்டதாகத்தான் தன் கதை முடியும். குழந்தைகள் பிறப்பதையும் தவிர்க்க முடியாது. அதற்கு இது எவ்வளவோ தேவலாம்; தம்பியையும் படிக்க வைக்கலாம்; அப்பாவுக்கும் கவலையில்லாத நிம்மதியான வாழ்க்கை...

மகள் அழுத்தம் திருத்தமாக இந்தத் திருமணத்துக்குச் சம்மதம் தெரிவித்துவிட்ட பிறகு, பத்மநாபனுக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. 'எல்லாம் தெய்வ சங்கல்பம்; இல்லாவிட்டால் க்ஷேத்திராடனம் செய்து கொண்டிருக்கும்போது இப்படி ஒரு சந்திப்பு நிகழ்வானேன்?' என்று எண்ணித் தம்மைத் தாமே சமாதானப் படுத்திக் கொள்கிறார்.

வாரணசியிலேயே கல்யாணத்தை முடித்துக் கொண்டு அவர்கள் அலகாபாத்துக்கு வந்து சேருகிறார்கள். தானாகவே விரும்பி மணந்துகொண்ட கணவனுக்கு வஞ்சனையில்லாமல் பணிவிடைகள் செய்கிறாள் கோமளா. மன்சுக்லாலின் மனம் பேரானந்தத்தில் திளைக்கிறது. கண்ணுக்கினிய மனைவி, அவளது மனப்பூர்வமான பணிவிடை, மதுரமான சங்கீதம், ருசியான உணவு எல்லாவற்றையும் ஐந்து வருஷங்கள் ஆனந்தமாக அனுபவிக்கிறார். ஏற்கெனவே பருமனான சரீரம் மேலும் பூரிக்கிறது. அத்தனை பெரிய பரப்பளவுள்ள உடலின் எல்லாப் பாகங்களுக்கும் ரத்தத்தைப் பாய்ச்ச அவரது இருதயம் அதிகமாகச் சிரமப்பட்டு உழைக்கிறது. கடைசியில் ஒருநாள் வேலைச் சுமை தாங்க முடியாமல், பொக்கென்று 'ஸ்ட்ரைக்' செய்து விடுகிறது.

மன்சுக்லாலின் மாணத்துக்குப் பிறகு எதிர் காலம் பற்றித் தந்தையும் மகளும் கலந்தாலோசித்துக் கொண்டிருக்கவில்லை. என்னென்ன செய்ய வேண்டும் என்று மகள் தந்தைக்கு உத்தரவிடுகிறாள். மன்சுக்லால் வட்டிக்குப் பணம் கொடுத்துப் பணக்காரரானவர். அவருடைய வீட்டையும் பலசரக்குக் கடை ஒன்றையும் விற்கிறார்கள். அத்துடன் பாங்கில் இருந்த பணத்தையும் சேர்த்துப் பார்த்தபோது நாலு லட்சத்துக்குக் கொஞ்சம் அதிகமாக இருக்கிறது. வசூலாக வேண்டிய கடன் பாக்கி பத்தாயிரம் இருந்ததையும் பொருட்படுத்தாமல் மூவரும் ரயிலேறிச் சென்னைக்கு வந்து சேருகிறார்கள்.

குடும்பத் தலைவியாகிவிட்ட கோமளாவும் அவள் தம்பியும் தந்தையும் சென்னையில் புது வாழ்வு தொடங்குகிறார்கள். கடந்த காலத்தை யெல்லாம் அடியோடு மறந்துவிடத் தீர்மானிக்கிறாள் கோமளா. அதற்காக வர்த்தகத் துறையில் ஈடுபட நினைக்கிறாள். முழுமூச்சுடன் வியாபாரத்தில் ஈடுபட்டு வெற்றி காண முயன்றால் பழைய நினைவுகள் எழாது.

புனர்ஜன்மம் எடுத்தது போன்ற இந்த வாழ்வில் நினைவின் நிழல் நீளக்கூடாது என்பதற்காக மட்டுமின்றி வியாபார நோக்கில் பார்க்கும்போது கூடப் பெயர்மாற்றம் செய்துகொள்வது நல்லதென்று தோன்றுகிறது. அதன்படி குமரேசன் குணசீலன் ஆகிறான், பத்மநாபன் பெருமாளாகிறார். கோமளாவின் பெயர் சாருலதா என்று மாறுவதுடன் அவள் தோற்றமே பெயருக்கேற்ப 'மாடர்'னாக மாறுகிறது. தான் ஒரு விதவை என்பதை இருட்டடிப்புச் செய்துவிட வேண்டும், தன் அழகுக்கு வெளிச்சம் போட்டுக் காட்டவேண்டும், பழகும் விதத்தால் 'கிளாமர் கேர்ல்' என்று பட்டப் பெயர் பெற வேண்டும்—இவற்றைச் செய்தால் வர்த்தகத் துறை வெற்றிகள் சுலபமாகும் என்பதை எளிதில் புரிந்து கொள்ளுகிறாள் சாருலதா. பணம் தரும் பக்கபலம் தன்னம்பிக்கையும் சேர்ந்து கொள்ளுகின்

றன. நாளாவட்டத்தில் பல தொழில்களையும் தொடங்குகிறாள். பகுத்தறிவு, ஆற்றல், அதிருஷ்டம், அனுபவம், விடாமுயற்சி, ஆர்வம் எல்லாம் கூடி வந்ததால் மன்சுக்லாலின் நாலு லட்சம் இன்று ஐந்து கோடி மதிப்புள்ள சாருலதா என்டர்பிரைஸஸ்ஸாக விரிவடைந்திருக்கிறது.

* * *

பேசும் ஆற்றலைத் திரும்பப் பெற்றதும், ''சாரு! இது என்ன வேஷம்?'' என்று கேட்டான் வேணுகோபால்.

சாருலதா அமைதியாகச் சிரித்தாள். ''இதுதான் சாருலதாவின் உண்மையான கோலம்; இதுவரை நீங்கள் பார்த்துப் பேசிப் பழகி வந்தீர்களே, அந்தச் சாருலதாதான் வேஷமணிந்து எல்லாரையும் ஏமாற்றிக் கொண்டிருந்தவள்!''

''சாரு! உனக்கா இந்தக் கதி?'' என்று கண் கலங்கினான் அவன்.

''ஏன்? நம்புவது கஷ்டமாக இருக்கிறதா? அல்லது பார்ப்பதற்கு வெறுப்பாயிருக்கிறதா?'' இப்படி அவள் கேட்டபோது குரலில் ஏளனம் தொனித்தது.

'வெறுப்பளிக்கிறதா? இந்தத் தோற்றத்தை எனக்குப் பிடிக்கவில்லையா?' என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டு சாருலதாவை உன்னிப்பாய் நோக்கினான் வேணுகோபால்.

வெள்ளை வெளேரென்று ஒரு புடவை. ஒரு சின்ன எம்ப்ராய்டரி வேலைப்பாடு கூட இல்லாத அது, அவள் உடலைச் சுற்றி வளைத்ததுடன் தலையையும் முக்காடிட்டு மறைத்தது. தலைப்பை முன்புறம் இழுத்துப் பிடித்துக் கொண்டிருந்தாள் அவள். முழங்கைவரை நீண்ட கையுடன், வெள்ளை ரவிக்கை. 'தூய்மையானது என்று கருதப்படும் வெள்ளை நிறத்துக்கு இத்தனை கொடுமை எங்கிருந்து வந்து சேர்ந்தது?'

சூன்யமான கழுத்து, மூளியான காதுகள், கரங்கள்; பாழும் நெற்றி, நீர் படர்ந்த கண்கள். மேக்-அப் இல்லாத முகத்தில் கண்களின் ஓரத்தில் தெரிந்த சில சுருக்கங்கள், முப்பத்திரண்டு வயதுக்குக் குறைவில்லை என்பதை எடுத்துக் காட்டின. வேலைச் சுமையாலும் மனக் கவலையாலும் ஏற்பட்ட சில வெள்ளி இழைகள், 'ஹேர் டை'யினால் கருமையாக்கப்படாமல் எட்டிப் பார்த்தன.

இப்படிப்பட்ட ஒரு சோகச் சித்திரமாக அவள் காட்சி அளித்தாலும் அதிலும் அலாதியான, அமைதியான ஓர் அழகு இல்லாமல் போகவில்லை. 'மைக்கிலான் ஜெலோ வடித்த பளிங்குச் சிலை போல' என்று எண்ணினான் வேணுகோபால். 'முன்பு நான் பார்த்திருக்கும் சாருலதாவின் அழகு நுங்கும் நுரையுமாகப் புது வெள்ளத்துடன் சுழித்தோடும் ஆற்றின் அகங்கார அழகு! இவளுடைய இந்த அழகு இரவு நேரத்தில் தோற்றம் அளிக்கும் அல்லிக் குளத்தின் அடக்கமான அழகு! இதை அழகு இல்லை என்று சொல்லிவிட முடியுமா?'

சாருலதா வேணுகோபாலுக்கு எதிரே வந்து உட்கார்ந்து கொண்டாள். ''இந்தக் கோலத்தில் என்னைப் பார்த்தபடியே நான் சொல்லப் போகும் என் கதையைக் கேட்க வேண்டும் நீங்கள். அவ்விதம் கேட்டபிறகு உங்களுக்கு என்மீதுள்ள காதல், தப்பித்தோம், பிழைத்தோம் என்று தலை தெறிக்க ஓடி விடும் பாருங்கள்!'' என்றாள்.

வேணுகோபால் பரிவும் அநுதாபமும் மிக அவள் கூறிய கதை முழுவதையும் கேட்டான். **(தொடரும்)**

---

**கணவன்:** பையனை எங்கே காணோம்...

**மனைவி:** நான்தான் அவனைப் பொருட்காட்சி ஆபீசுக்குப் போய் அப்பா, அம்மாவைக் கூட்டத்திலே தவற விட்டு விட்டேன்னு சொல்லச் சொல்லி இருக்கிறேன்.

**கணவன்:** எதற்காக?

**மனைவி:** பின்னே நாம் எக்ஸிபிஷனுக்கு வந்திருப்பது நாலு பேருக்குத் தெரிய வேண்டாமா?



---



# இன்னொரு மகனா?
# பொறும் ஐயா

# மூணுக்குப் பிறகு
# போறும் ஐயா



# சாருலதா

## கி.ராஜேந்திரன்



### அத்தியாயம் 28

## தர்க்கமா? குதர்க்கமா?

ஏர்கண்டிஷன் செய்யப்பட்டிருந்த அறையானாலும் திடீரென்று புழுக்கமாக இருந்தது வேணுகோபாலுக்கு. வியர்த்துக் கொட்டி உடலெல்லாம் நனைந்து விட்டது.

''கிளம்பலாமா?'' என்று கேட்டான்.

''இந்தக் கோலத்திலா?'' அவள் சிரித்தாள். ''கோமளா மறுபடியும் சாருலதாவாக மாற வேண்டும், வேணு! அப்புறம்தான் நான் வெளியே தலை காட்ட முடியும்!''

''சரி. நான் வாசலில் இருக்கிறேன். நீ உடை மாற்றிக் கொண்டு வா.''

வேணு இப்படி அவசரமாக வெளியேறியதைக் கண்டு அவள் சிறிதும் ஆச்சரியப்படவேயில்லை. ஆனாலும் அவள் கண்கள் கலங்கத்தான் செய்தன. அவ்விதம் தன் மனம் துயர் அடைவதினால் அவளுக்குக் கோபம் வேறு வந்தது. அதன் விளைவாக டிரெஸ்ஸிங் ரூம் சற்று நேரம் திமிலோகப்பட்டது.

வாசலுக்குப் போன வேணு கோட்டைக் கழற்றிப் பின் ஸீட்டில் போட்டான். டையைத் தளர்த்தி விட்டுக் கொண்டான். சாருலதா வரக் காத்திருந்த நேரத்தில் 'கார் பார்க்'கில் குறுக்கும் நெடுக்குமாக அலைந்தான்.

மவுண்ட்ரோட் இரவு நேரத்தில் ஜொலித்துக் கொண்டிருந்தது. பகல் போலவே சிரமமின்றிக் கார் ஓட்ட வசதியாகச் சாலைக்கு வெளிச்சம் போட்ட விளக்குகள் தவிர, பலப் பல நிறங்களில் விளம்பர விளக்குகள் ஒளிர்ந்தன. ஸாரிடோன் விளம்பரம் ஒன்றில் ஒரு கணம் ஒரு மனிதன் வாய் கிழியச் சிரித்தான். அடுத்த கணம் வேதனையுடன் முகம் சுளித்தான். தன்னைப் பார்த்துத் தான் அவன் கேலி செய்கிறானோ?

சாரு வந்தாள். கூர்க்கா கதவைத் திறந்து பிடித்தான். வேணுகோபால் காரைக் கிளப்பினான்.

''வீட்டுக்குத்தானே?''

''ஆமாம்.''

அண்ணா சிலையைச் சுற்றிக் கொண்டு சேப்பாக்கம் தாண்டி பீச் சாலையோடு சென்றது கார். மௌனம் நீடிப்பதைப் பொறுக்க முடியாமல், ''ஐ ஆம் ஸாரி வேணு!'' என்றாள் சாருலதா.

''அழகுதான், எதற்காக நீ என்னிடம் மன்னிப்புக் கேட்க வேண்டும்?''

'' நீங்கள் உருவாக்கி வைத்திருந்த சாருலதா 'இமேஜ்'ஜை உடைத்துவிட்டேன் இல்லையா?''

''அசல் சாருலதாவே பக்கத்தில் இருக்கும்போது மனக் கண்ணாடியில் கண்ட பிம்பத்தைப் பற்றி யாரேனும் கவலைப்படுவார்களா?''

''உண்மை சொரூபத்தைவிட நீங்கள் சிருஷ்டித்திருந்த பிம்பம் இன்னும் அழகாக இருந்ததல்லவா?''

''அது இனிமேல்தான் எனக்குப் புரிய வேண்டும்.''

'' என்ன ச ந் தே க ம் உங்களுக்கு? கேளுங்கள்!''

''உன்னை பிளாக்மெயில் செய்ய வருகிறார்களே, இருவர்? அவர்கள் 'புனிதமான கங்கை நதிக் கரையில் யாரேனும் பாபம் புரியத் துணிவார்களா?' என்று உன்னைக் கேட்கச் சொன்னார்கள் இல்லையா? இதன் பின்னர்தானே அவர்களைச் சந்தித்துப் பேச நீ சம்மதித்தாய்?''

''ஆமாம்.''

''அதற்கென்ன அர்த்தம்?''

''பணத்துக்காக ஆசைப்பட்டு நான் கிழவனைக் கல்யாணம் செய்துகொண்டதாக அவர்கள் நினைக்கிறார்கள்.''

''அது எவ்வளவு தூரம் உண்மை?''

''திருமணம் ஆகும்வரை எனக்குப் பணத்தாசை இருக்கவில்லை. அப்பாவை வழிக்குக் கொண்டுவர பாங்கு பாஸ் புத்தகத்தை நான் பார்த்ததாகப் புளுகினேன். லட்சக்கணக்கில் அவரிடம் கையிருப்பு உள்ளதாகச் சொல்லிச் செல்வத்தில் மயங்கியது போல் நடித்தேன்.''

''ஆக, குழந்தைப் பேற்றைத் தவிர்க்கலாம் என்ற ஒரே காரணத்துக்காகத்தான் நீ கிழவனைக் கல்யாணம் செய்து கொண்டாய்.''

''கல்யாணம் ஆகும்வரை அந்த ஓர் எண்ணம்தான்; ஆனால் பின்னால் என்னைப் பணத்தாசையும் பிடித்துக் கொண்டு விட்டது. கணவனைக் காதலிக்க முடியாமல் நான் அவரிடம் இருந்த பணத்தின்மீது காதல் கொண்டேன்!''

''ஷாக்கிங்!''

''மிச்சத்தையும் கேளுங்கள்! சிலருக்கு விஸ்கியும் ஜின்னும் அருந்தினால் போதை ஏற்படுகிறதே, அப்படி எனக்குப் பணம் பண்ணுவதில் போதை உண்டாகிறது! என் அழகு, தொழில் வர்த்தகத் துறையில் பல காரியங்களைச் சுலபமாக்கி மேலும் மேலும் செல்வம் திரட்ட எளிதாக உதவுவதைப் பார்க்கும்போது கர்வம் ஏற்படுகிறது. ஓட்டு வீட்டில் வசித்த நான் இன்று எட்டாவது மாடியிலிருந்து எட்டிப் பார்க்கும்போது அகம்பாவம் உண்டாகிறது!''

''இதனாலெல்லாம்தான் உன் தம்பி உன்னை மதிக்க மாட்டேனென்கிறான்.''

''என்னை மதிக்க வேண்டாம்; பணத்தை மதிக்கக் கூடாதா?''

''ஏதேதோ மோசடிகள் செய்து நீ பணம் பண்ணுவதைக் கண்டு அவனுக்குப் பணத்தின்மீதே வெறுப்பு ஏற்பட்டிருக்கிறது.''

''போதாக்குறைக்கு அக்காவாகிய நான் கன்னிப் பெண்ணாக வேறு நடிப்பதால் அவன் கல்யாணத்துக்கு இடையூறாக வேறு நிற்கிறேன். விதவைக் கோலத்தை நான் மறைக்காமல் இருந்தால் இந்நேரம் இரண்டு குழந்தைகளுக்குத் தந்தையாகி யிருப்பான்!''

''அல்லது நீ மறுமணம் புரிந்து கொண்டாவது அவனுக்கும் கமலாவுக்கும் கல்யாணம் நடக்க வழி செய்யலாம்.''

''இரண்டும் நடக்காத காரியங்கள்.''

''என்ன ஆச்சரியம் பார், சாரு! உன் பணப் பித்தை வெறுக்கும் குணசீலனால் உன்னை வெறுக்க முடியவில்லை! நீ நடந்து கொள்ளும்விதம் பிடிக்காமல் வீட்டை விட்டு வெளியேறும் அளவுக்கு அவனுக்கு நெஞ்சுறுதி இருக்கிறது. ஆனால் அக்காவின் வாழ்க்கைப் பிரச்னை தீராத முன்னர் தன் கல்யாணத்தை நடத்திக் கொள்ளத் தைரியம் இல்லை! பாசம்! அது அவனை அப்படிப் பாடாய்ப் படுத்துகிறது!''

''அதற்கு இன்னொரு பெயர் முட்டாள்தனம்!''

''உணர்ச்சிகளைக் கொன்று வாழ நினைக்கிற உனக்கு உன் அப்பாவின் போக்கும் மடத்தனமாகத்தான் தோன்றுகிறதோ? இவ்வளவு சிக்கல்களையும் சகிக்க மாட்டாமல் வீட்டிலேயே ரிஷிகேசத்தைச் சிருஷ்டித்துக் கொண்டு காலத்தை ஓட்டுகிறாரே அவர்!''

''இமயமலைச் சாரலுக்கே போய்விட அவருக்கு ஆசைதான். என்னைத் தனியாக விட்டு விட்டுப் போகத் தயக்கம். எவ்வளவுதான் நான் 'மாடர்ன்' ஆனாலும் அவருக்கு நான் மகள்தானே? குணசீலனிடம் என்னை ஒப்படைத்துவிட்டுப் போகவும் பயம். அவனிடம் நம்பிக்கை இல்லை.''

''ஆமாம், திடீரென்று அவன் உன் மீதோ அல்லது உன்னிடமுள்ள பணத்தின் மீதோ கோபித்துக் கொண்டு வீட்டை விட்டுப் போய் விடலாம் அல்லவா? அந்த விதமாகத்தானே நடந்து கொள்கிறான் அவன்? உனக்கு அப்போதே நல்ல புத்தி சொல்லிப் பெருமாள் உன் கல்யாணத்தைத் தடுத்திருக்கலாம்.''

''அதைச் செய்யாது போனோமே என்று வருத்தப்பட்டுத்தான் பிராயச்சித்தமாகப் பகவான் நாமாவைத் தவிர வேறு எதையும் கூறுவதில்லை என்று விரதம் எடுத்துக் கொண்டிருக்கிறார். நான் இளம் வயதிலேயே விதவையானதற்குத் தாமும் ஒரு காரணம் என்று அவர் நினைக்கிறார்.''

சாருலதாவின் வீடு வந்து விட்டது. காரிலிருந்து கீழே இறங்கினார்கள். ''குட் நைட் சாரு'' என்றான் அவன்.

''என்ன அவசரம்? நாளை முதல் உங்களை இப்படி அடிக்கடி சந்திக்க முடியாதே? ஆபீஸில் ஆளை விழுங்கும் அளவுக்கு வேலைகள் இருக்கும்.'' அவள் அவன் அருகில் வந்து நின்றாள்.

அமைதி சூழ்ந்திருந்தது. வீட்டின் வாசல்

அறையில் மட்டும் எரிந்த விளக்கின் ஒளி தோட்டத்தில் படிந்திருந்த நிலவுப் போர்வையின் காந்திக்கு முன்னுல் மங்கிப் போயிற்று. அவர்கள் நின்ற இடத்திலிருந்து பார்த்தபோது தென்னங் கீற்றுக்களை ஆடையாகக் கொண்ட முழுமதி, அதனுல் மறைக்கப் பட்டும் மறையாமல் காட்சி தந்து இன்ப வெறியூட்டியது. இருவாட்சியின் மணம் கம்மென்று எழுந்து உண்மையாகவே அந்த இரவை ஆட்சி புரிந்து கொண்டிருந்தது.

''வேணு! உங்களுக்கு நன்றி சொல்ல வேண்டும், நான். பிடிவாதமாகப் போராடி என் கதையை யெல்லாம் கேட்டுத் தெரிந்து கொண்டீர்கள். என் மனம் எவ்வளவு இலேசாகி யிருக்கிறது தெரியுமா? பிடித்துக் கொள்ளுங்கள். இல்லாவிட்டால் கனம் குறைந்திருப்பதால் இந்த நிலவு வெள்ளத்தில் மிதந்து நான் உயரே போய்விடுவேன்!'' சிரித்தபடியே அவனது வலக் கரத்தை வலியச சென்று பற்றினுள் சாருலதா.



# இவரால் முடியுமா?

வண்டியோடடிச் செல்லும் வேளையில் ஒவ்வொரு டிரைவரும் எந்த நிமிஷமும் உஷாராக இருநது, சரியான முடிவுகளைச் சட்டென எடுப்பது அவசியம்.

ஸதர்ன் ரோட்வேஸின் மறறவாகளின் தரததிற்கேறப இவர் இருககவேணடுமானால் டிரைவரிடம் மெய்யான தரம் இருநதாக வேணடும்; முடிவுகளை உடனுக்குடன் எடுததாக வேணடும்.

அதனால்தான வேலைக்கு நியமிக்கு முன் ஒவ்வொருடிரைவரையும்நாங்கள் நன்கு சோதிககிறோம். பிறகும் அவ்வப்போது இவர்கள சோதிக்கப்படுகிறார்கள்.

உடலியலையும், உளவியலையும் பொறுத்து நாங்கள் நடத்தும் பூரணப் பரிசோதனைகள், தூரத்தைப்பற்றிய துல்லியமான மதிப்பீடு, பக்கவாட்டில் முழுமையாக பார்க்கும் திறன், வண்ணங்களை நன்கு பகுத்தறியும்பான்மை, பிரகாசமான ஒளியால் கூசும்கண்களை விரைவில் மறுபடி இயக்கும் வல்லமை, கண்—கால்களிடை கச்சிதமான ஒத்துழைப்பு ஆகிய அனைத்தும் டிரைவரிடம் பொருந்தியிருக்குமாறு பார்த்துக் கொள்கின்றன.

தனது திறமையான சேவையானது தனது டிரைவர்களின் திறமையையும் சார்ந்துள்ளது என்பதை ஸதர்ன் ரோட்வேஸ் எப்போதும் உணர்ந்து இருக்கிறது.

இதன் லாரிகள் இரவு 11 மணியிலிருந்து அதிகாலை 4-மணிவரை ஓட்டப்படுவதில்லை — ஏனெனில், இந்த நேரம்தான் மனிதனுக்கு ஆழ்ந்த உறக்கம் வரும் நேரம்; இந்த சமயததில்தான் பெரும்பாலான சாலை விபததுகள் நடக்கின்றன என்பதும் கண்டறியப்பட்டுள்ளது.

தமிழ்நாடு, ஆந்திரப்பிரதேசம், மைசூர், கேரளம் முதலிய மாநிலங்களின் மக்களிடை ஸதர்ன் ரோட்வேஸ் பெரு நம்பிக்கை பெற்றிருப்பதற்கான காரணங்களில் இது ஒன்று.

உங்கள் நம்பிக்கைக்கு உரியது டிவிஎஸ்






**ஸதர்ன் ரோட்வேஸ் பிரைவேட் லிமிடெட்**

(இது ஒரு டிவிஎஸ் ஸ்தாபனம்)

மதுரை

''உன்னை விட்டு ஓடிய மனச் சுமை வேறு உருவத்தில் என் நெஞ்சில் குடி யேறி விட்டது சாரு!''

''உங்களுக்கென்ன கவலே?''

''என் அம்மாவைப் பற்றி. அவளை எப்படிச் சமாளிப்பது? மடியில் போட் டுக் கொஞ்சப் பேரக் குழந்தை இல்லேயே என்று அவள் ஏங்கினுல் அது ஆண்ட வன் செயல் என்று சமாதானம் சொல் லித் தப்பிக்கலாம். வரப் போகும் நாட் டுப் பெண்ணுக்கு இத்தனை வயதாகி விட்டதே என்ருல் எனக்கும் அப்படி ஒன்றும் யௌவன வயதில்லே என்று சுட்டிக் காட்டலாம். ஆனுல் இதை எப்படிச் சொல்லி எவ்வாறு சம்மதம் வாங்குவது?''

வேணுகோபாலின் கரத்தை உதறி யது போல் நழுவ விட்டாள் சாருலதா. ''ஆமாம்; விதவை என்ற சொல்லே உச் சரிக்கவே கூசி, 'இதை' என்று குறிப் பிடும் உங்களுக்கு இந்த விஷயமாக அம்மாவிடம் பேசத் தைரியம் வராது தான்!''

''குதர்க்க வாதம் பண்ணத்தான் உனக்கு எப்போதுமே பிடிக்கும்.''

''தர்க்க ரீதியாகவே கேட்கிறேன்: ஏதோ நான் உங்களைக் கல்யாணம் பண் ணிக் கொள்ளச் சம்மதமளித்துவிட்டது போலல்லவா நீங்கள் உங்கள் அம்மா வைச் சமாளிப்பது பற்றிப் பேசு கிறீர்கள்?''

''சாரு!''

''கவலேப் படாதீர்கள்! உங்கள் அம்மாபேரில் பழியைப் போட்டு நீங்கள் தப்பித்துக் கொள்ள வேண்டிய சங்கட மான நிலேயை உங்களுக்கு நான் ஏற் படுத்தப் போவதில்லே.'' இவ்வாறு கூறி விட்டுச் சாருலதா வாசற் படிகளைக் கடந்து உள்ளே போய்விட்டாள்.

## அத்தியாயம் 29

# சுதந்திரப் பறவை!

பத்து நாட்களுக்குப் பிறகு 'சாரு லதா என்டர்பிரைஸஸ் – சேர்மன்ஸ் ஆபி'ஸுக்குள் அதன் தலைவி நுழைந்த போது அங்கு பணியாற்றிய சுமார் இரு பது இருபத்தைந்து பேர்களும் ராணுவ மரியாதை அணிவகுப்பு போன்று வரி சையாக நிற்பதைக் கண்டு ஆச்சரியப் பட்டாள். அவள் முன்வாசலேக் கடந்து வந்ததும் எல்லாருமாகச் சேர்ந்து ஐந்து விநாடிகளுக்குக் கைதட்டினர்கள். அனை வருக்கும் முன்னுல் நின்றவள் லில்லி. ஆகவே, ''என்ன இதெல்லாம்?'' என்று சாரு கேட்டதும் பதில் சொன்னவளும் லில்லிதான்:

''நீங்கள் உடம்பு நன்ருகக் குணமா கித் திரும்பியதில் எங்களுக்குள்ள மகிழ்ச்சியைத் தெரிவிக்கத்தான் இந்த ஏற்பாடு.''

சாருலதாவுக்கு உள்ளம் நெகிழ்ந்தது. ஆனுல் அதை வெளியே காண்பித்துக் கொள்ளாமல், நன்றி கூருமல், ''பூமாலே ஒன்றுதான் பாக்கி'' என்ருள். ஓரளவு மகிழ்ச்சியைக் காண்பித்துக் கொள்கிற மாதிரியும் கொஞ்சம் கேலி யாகவும் இப்படிக் கூறினுள்.

''நான் சொன்னேனுங்க, பூமாலே வாங்கிப் போடணும் அம்மாவுக்குன்னு. குமார்தான் வேண்டான்னுட்டாரு!''— பியூன் வேதாசலம் குற்றம் சாட்டுவது போல் பேசினுன்.

''அது ரொம்ப ஃபார்மலாகப் போய் விடும் என்று நினைத்தேன்'' என்ருன் குமார், தயக்கமும், பயமுமாக. ஒரு வேளை மலர்மாலே வரவேற்பைச் சாரு லதா விரும்பி ஏற்றிருப்பாளோ என்று அவனுக்குச் சந்தேகம் வந்துவிட்டது!

''தேங்க் காட்! தத்துப் பித்தென்று அப்படி ஒரு காரியம் பண்ணுமல் இருந் தீர்களே! பத்து நாட்கள் லீவுக்குப் பிறகு ஆபீசுக்கு வந்தால் அதற்கு இப்படி ஓர் ஆர்ப்பாட்டமா?''

''வீ மிஸ்ட் யூ சாரு! காரியாலயம் வெறிச்சென்றிருந்தது'' என்ருள் லில்லி.

இதற்குப் பதில் கூருமல் சாரு மேலே நடந்தாள். அந்த வரிசையில் சாரங்கன் இல்லே என்பதை அவள் இதற்குள் கவனித்திருந்தாள். தன் அறைக்குள் சென்றதும், ''சாரங்கன் எங்கே? வரச் சொல்லு'' என்ருள் வேதாசலத்தி னிடம்.

இந்த அழைப்பை எதிர்பார்த்துத் தயாராகக் காத்திருந்த சாரங்கன், பியூன் வெளியேறிய மறுகணமே உள்ளே நுழைந்தான்.

''எங்கே கார்ட் ஆஃப் ஆனரில் உங் களைக் காணேம்?'' என்ருள் சாருலதா கிண்டலாக.

''நான் அங்கு நின்ருல் உங்களுக்குப் பிடிக்காது: அங்கு மட்டுமென்ன? இந் தக் காரியாலயத்தில் நான் எங்கு நின்ரு லும் உங்களுக்குப் பிடிக்காது. அதனுல் ராஜினாமாக் கடிதம் தயாராக வைத் திருக்கிறேன்.'' பாக்கெட்டிலிருந்து ஓர் உறையை எடுத்து நீட்டினுன் அவன்.

சாரு அதை வாங்கிப் பிரித்துக்கூடப் பார்க்காமல் கிழித்துக் குப்பைத் தொட்டியில் போட்டாள். ''வேணு கோபால் எனக்கு எல்லாம் சொன்னர். டோண்ட் வொர்ரி; கேரி ஆன்!''

''அதற்கில்லை சாரு...''

அவள் இடைமறித்தாள். ''நீங்கள் என் நலனைக் கருதித்தான் வேணுவிடம் பேசினீர்கள்; அவர் சொற்படி நடந்தீர்கள். லெட் அஸ் ஃபர்கெட் இட்!''

''மறந்துவிடுவது அவ்வளவு சுலபமா? நாளைக்கு ஏதாவது அந்தரங்கமான கம்பெனி விவகாரத்தை என்னிடம் ஒப்படைக்க நீங்கள் முற்படும்போது, இவனை நம்பலாமா என்ற எண்ணம் உங்களுக்கு எழாதா? இதை இவன் வேறு யாரிடமாவது உளறிக் கொட்டி வைத்தால் என்ன செய்வது என்று சந்தேகப் படமாட்டீர்களா?''

''மாட்டேன். இன்ஃபாக்ட் நீங்கள் என்னைப் பற்றி வேணுவிடம் பேசியதில் எனக்கு மகிழ்ச்சிதான்.''

''நிஜமாகவா?''

''ஆமாம். உங்களுக்குத் தெரியாத விஷயமல்ல — வேணு லவ்ஸ் மி. ஆனல் அந்தக் காதலை ஏற்க முடியாத நிலையில் நான் இருக்கிறேன். ஏன் அப்படி என்ற விவரங்களை அவரிடம் சொல்லத் தயங்கித் தவித்துக் கொண்டிருந்தேன். ஆனல் இப்போது மனம் விட்டு அவரிடம் பேசியாகி விட்டது. அதற்கு வழி ஏற்படுத்திக் கொடுத்தீர்கள். வேணுவிடம் எந்த ரகசியத்தையும் நான் ஒளிக்கவில்லை என்பதால் என் உள்ளம் இலேசாகி யிருக்கிறது. கவலை இன்றிச் சுதந்திரமாகப் பறக்கும் பறவைபோல ஒரு குதூகல உணர்ச்சி. தாங்க்ஸ் டு யூ!''

ஓரிரு விநாடிகளுக்குப் பிறகு சாரங்கன் பேசினன்: ''இதற்கு நான் என்ன பதில் சொல்ல முடியும்? ஐ ஆம் கிரேட்ஃபுல்.''

''நன்றி காட்டுவதுடன் விசுவாசமாகவும் இருப்பீர்கள், எனக்குத் தெரியும். சரி, ஒருவரை ஒருவர் தட்டிக் கொடுத்துக் கொண்டது போதும்; காரியங்களைக் கவனிப்போம்.'' சாருலதா இப்படிச் சொல்லிவிட்டு மேஜை எதிரே அமர்ந்தாள். அவளுக்கு முன்னல் அடுக்கி வைக்கப்பட்டிருந்த ஃபைல்களை ஒவ்வொன்ருக எடுத்துப் பார்த்தாள்.

முழுவதும் படிக்க வேண்டிய அவசியமில்லாதபடி ஒவ்வொரு ஃபைலிலும் உள்ள பிரச்னையைச் சுருக்கிச் சொன்னன் சாரங்கன். மேலே எடுக்க வேண்டிய நடவடிக்கையைச் சாருலதா கூறவும் அதைத் தன் பாக்கெட் டேப் ரிக்கார்டரில் வழக்கம்போல் பதிவு செய்து கொண்டான். சில ஃபைல்களில் சாருலதா நோட்ஸ் எழுதினள். ''இதைக் கைலாசத்தினிடம் அனுப்பி விடுங்கள்—அவர் கவனிப்பார்; இதைச் சாருலதா ஸெமென்ட்ஸ் ஜனர்த்தனனுக்கு அனுப்புங்கள்'' என்று இப்படிப் பலர் மீது பொறுப்புக்களைச் சுமத்தினள்.

ஏழாவது ஃபைலை அவள் ஆராய்ந்து கொண்டிருந்தபோது டெலிபோன் மணி அடித்தது. சாரங்கன் எடுத்தான்.

லில்லியின் குரலில் கலக்கம் தொனித்தது. ''மஹிபாலும் சந்திரபாலும் வந்திருக்கிருர்களே, என்ன செய்யட்டும்?'' பரபரப்புடன் அவள் கேட்டாள். ''இவர்களை அதிக நேரம் தாமதிக்கச் செய்ய என்னல் முடியாது!''

''என் அறைக்கு அழைத்துப் போ, லில்லி. நான் இதோ வருகிறேன்.''

''யார் அது?'' என்று சாருலதா கேட்டாள்.

''உங்களுக்கு இப்போது அந்தக் கவலை வேறு வேண்டாம். 'உடம்பு சரியில்லை, சாருவுக்கு. பத்து நாட்களுக்குப் பிறகு வாருங்கள்' என்று சொல்லி அனுப்பி விடுகிறேன்.''

சாருலதா புரிந்து கொண்டாள். ''நோ, நோ! ஐ ஆம் ஆல்ரைட்! யார், மஹிபால், சந்திரபால்தானே? வரச் சொல்லுங்கள்!''

சற்று நேரத்தில் அவர்கள் கதவைத் திறந்து எட்டிப் பார்த்தார்கள். ''கம் இன், கம் இன்! என்ன தயக்கம்?'' என்ருள் சாருலதா. கதவு மூடிக் கொண்டதும், ''வழக்கம்போல் பிளாக் மெய்ல் செய்யத்தானே வந்திருக்கிறீர்கள்? உட்காருங்கள்'' என்று சொல்லி உபசரித்தாள்.

இந்த வரவேற்பு அவர்கள் எதிர்பாராத ஒன்று. அடித்துப் பேச வந்தவர்களைக் குழைந்து கேட்க வைத்தது அது. ''அவசரமாகப் பத்தாயிரம் ரூபாய் தேவை. அதனல்தான் வந்தோம்.''

''அடிக்கடி உன்னைத் தொந்தரவு செய்ய வேண்டி யிருக்கிறது. ஆனல் வேறு வழியில்லை.''

''பத்தாயிரம் தர முடியாது என்ருல்?''

சாருலதா இப்படிக் கேட்டதும் அடங்கியிருந்தவர்களுக்குத் திடீரென்று ஆத்திரம் வந்தது. ''விளையாடுகிருயா சாரு? பணம் தர முடியாது என்ருல் என்ன நடக்கும் என்று உனக்கே தெரியும்!''

''உன்னிடம் காட்டிய போட்டோவின் ஒரிஜினல் நெகடிவ் ஒரு பாங்கில்

ஸேஃப் டெபாஸிட் வால்ட்டில் பத்திரமாக இருக்கிறது. மறக்காதே!''

சாரு சிரித்தாள். ''பயந்து போனீர்களா என்ன? 'பத்தாயிரம் தர மாட்டேன் பதினையாயிரமாகத் தருகிறேன்' என்று சொல்ல வந்தேன். அதற்குள் பயப்படுகிறீர்களே!''

''நீ அசட்டுத்தனமாக நடந்து கொள்ள மாட்டாய் என்று எங்களுக்குத் தெரியும்!''

''பதினைந்து நாட்கள் கழித்து வாருங்கள். பதினையாயிரம் தருகிறேன்.''

பத்தாயிரம் கேட்டு வந்தவர்கள் பதினையாயிரத்துக்கு உறுதி மொழி பெற்றுச் சென்றனர். சாரங்கன் கேட்டான்: ''என்ன இது, இந்த அயோக்கியர்களை அடித்து விரட்டாமல் ஆதரவு காட்டுகிறீர்கள்? இப்படி 'என்கரேஜ்' பண்ணலாமா?''

''சாரங்கன்! பதினையாயிரம் என்ன பெரிய விஷயம்? நடப்பு ஆண்டில் பதினைந்து லட்சம் சம்பாதித்துக் காட்டுகிறேன், பாருங்கள்! இப்போ பணம் பண்ணுகிற 'மூட்' எனக்கு!'' அவளிடம் காணப்பட்ட இந்தப் புதிய உற்சாகம் அவனைத் திணற அடித்தது. சற்று முன் அவள் சொன்னது போல் மனச் சுமை இறங்கிவிட்டதால் ஏற்பட்ட புத்துணர்ச்சியா இது?

''மேலே வேலைகளைக் கவனிப்போமா?'' என்று கேட்டு மளமளவென்று ஏழெட்டு ஃபைல்களைப் பைசல் செய்தாள் சாருலதா.

அடுத்ததாக அவள் கையிலெடுத்த ஃபைலின் மீது 'பரத்வாஜ் அண்டு கம்பெனி' என்று எழுதப்பட்டிருந்தது. அதைப் பார்த்ததுமே ''எப்படி இருக்கிறது? எனி இம்ப்ரூவ்மெண்ட்?'' என்று கேட்டாள்; பிரிக்கவில்லை.

''முன்னேற்றம் இல்லாமல் இல்லை; ஆனால் கூடவே ஏகப்பட்ட பிரச்னைகளும் முளைக்கின்றனவே?''

''புதிதாக நம் வசம் வந்த கம்பெனியின் பிரச்னைகளை ஃபைலைப் பார்த்துத் தெரிந்து கொள்வதை விட நேரடியாகப் போய்ப் புரிந்து கொள்வதுதான் நல்லது. வண்டியை எடுக்கச் சொல்லுங்கள்.''

''நாலு நாளைக்கு நீங்கள் அதிகமாக அலைய வேண்டாமே. தொழிற்சாலையிலிருந்து மானேஜர், ஃபோர்மென் முதலியவர்களை இங்கு வரச் செய்கிறேன். இங்கேயே 'டிஸ்கஸ்' பண்ணலாமே?''



''உங்க ஆபீஸ் லட்சுமிகரமாக விளங்குகிறது என்று கேள்விப் பட்டேன்.''

''ஆமாம். ஜெயலட்சுமி, கஜலட்சுமி, சந்தானலட்சுமி, பாக்கியலட்சுமி, தனலட்சுமி, ஆனந்தலட்சுமி ஆகியோருக்கு உத்தியோகம் கொடுத்து விட்டேன்!''

''நோ! நோ! அது பிரயோஜனப்படாது. தொழில் துறை வெற்றிக்கு அடிப்படைத் தேவை என்ன தெரியுமா, சாரங்கன்? பிரச்னைகளை அணுகித் தீர்ப்பது மட்டுமில்லை; என்னென்ன பிரச்னைகள் உருவாகலாம் என்று முன் கூட்டியே ஊகித்தறிந்து அவற்றைத் தவிர்க்க முன்னேற்பாடுகளைச் செய்ய வேண்டும். அதற்குத் தொழிலை நன்றாக அறிந்திருக்க வேண்டும். ஃபைல்களைக் கட்டிக் கொண்டு அழுதால் தொழிலைத் தெரிந்து கொள்ள முடியாது!''

சாரங்கன் மேலே வாதாடாமல் போர்டிகோவில் கார் தயாராக நிற்க ஏற்பாடு செய்தான்.

''நீங்கள் என்னோடு வர வேண்டிய அவசியமில்லை. நான் சொல்லியிருக்கிற காரியங்களைக் கவனியுங்கள். சாயந்திரம் நேரமிருந்தால் இந்தப் பக்கம் வந்து எட்டிப் பார்த்து விட்டுப் போகிறேன். இல்லையானால் நாளைக்குத்தான்.''

சாருலதா சென்ற பிறகு சாரங்கன் தன் அறைக்குத் திரும்பினான். அவளிடம் காணப்பட்ட சுருசுருப்பு அவனிடமும் தொத்திக் கொண்டிருந்தது. கிடுகிடுவென்று அவளுடைய உத்தரவுகளை நிறைவேற்றக் கருதி, அந்த உத்தரவுகள் பதிவாகியிருந்த டேப் ரிகார்டரை இயக்கினான்.

''வழக்கம்போல் ப்ளாக்மெயில் செய்யத்தானே வந்திருக்கிறீர்கள்?'' — சாருலதாவின் குரல் டேப் ரிகார்டரில் ஒலித்ததும் சாரங்கனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. 'மஹிபாலும் சந்திரபாலும் வந்திருந்தபோது ரிகார்டரை நிறுத்த மறந்துவிட்டேன் போலும்!'

ரிகார்டர் மேலும் பேசியது: ''பத்தாயிரம் தர முடியாது என்றால்...?''

''விளையாடுகிறாயா சாரு? பணம் தர முடியாது என்றால் என்ன நடக்கும் என்று' உனக்கே தெரியும்!''

சாரங்கன் அவசரம் அவசரமாக ரிகார்டரை நிறுத்தினான், அக்கம் பக்கத்து அறைகளில் இருப்பவர்களின் காதில் விழுந்து வைக்கப் போகிறதே என்று பயந்தவனாக. (தொடரும்)

கார்ன் ப்ராடக்ட்ஸ் தேர்ந்தெடுத்த
பரிசு பெற்ற பக்குவ முறை

# பூசனி

அனுப்பியவர்: திருமதி ஹேஸல் ட்ரேகோ.

# பிரவுன் & போல்ஸன்

## கஸ்டார்டு பவுடர் கொண்டு தயாரிக்கப்பட்டது



பிரவுன் & போல்ஸன் கஸ்டார்டு பவுடர் மென்மையானது, செழுமையானது, சத்தானது. பிர்னி, ஐஸ்க்ரீம், ட்ரிபிள் போன்ற பல வகைப் புட்டிங்குகளையும், பழவகைத் தின்பண்டங்களையும் தயாரிக்க அது எப்போதும் கைவசமிருக்கட்டும். தவிர, ஜெல்லி ப்ரூட் ஸாலட்டுகளுடன் சேர்க்கும்போது இன்சுவை பெருகும். அருமையான பொருள்களிலிருந்து மிகுந்தகவனத்துடன் பக்குவப்படுத்தப்பட்ட பிரவுன் & போல்ஸன் கிடைக்கும் கஸ்டார்டு பவுடர்களில் மிகவும் சிறந்தது.

பிரவுன் & போல்ஸன் கஸ்டார்டு பவுடர் சைவ உணவுக்குக் குந்தகமற்றது—முட்டை கலவாதது.



## அத்தியாயம் 30

# கயவரை விரட்ட வழி

ஒரு நோயாளியின் பழைய எக்ஸ்ரே படம் வேணுகோபாலுக்குத் தேவையாக இருந்தது. புதிய எக்ஸ்ரே படத்துடன் ஒப்பிட்டுப் பார்த்துக் குறிப்பிட்ட கால அளவில் எவ்வளவு தூரம் முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது என்று நிர்ணயிக்க விரும்பினான்.

''பழைய எக்ஸ்ரே படத்தை உங்களிடம்தான் விட்டு விட்டுப் போய் விட்டேனுங்க'' என்று நோயாளி சொல்லவே, மேஜை டிராயர்களை ஒவ்வொன்ருக இழுத்துப் பார்க்க ஆரம்பித்தான். தேடியது கிடைத்தது. அதற்கு முன்னுல் சுருட்டி வைக்கப்பட்டிருந்த ஒரு காலண்டரும் அகப்பட்டது.

அதை எடுத்துப் பிரித்தான். காந்திஜியின் ஆறு படங்களுடன்கூடிய காலண்டர் அது. ஊட்டியில் சாருலதாவின் பங்களாவில் அந்தக் காலண்டர் தொங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்துத் தனக்குக் கோபம் வந்ததும், காந்திஜியின் படங்கள் அந்த வீட்டில் மாட்டப்படுவது பொருத்தமாயில்லை என்று தனக்குத் தோன்றவே, அதனைக் கழற்றிச் சுருட்டிப் பெட்டியில் போட்டுக் கொண்டு வந்ததும் அவன் நினைவுக்கு வந்தன. சென்னை திரும்பிய பிறகு, தலைசிறந்த ஓர் ஓவியர் தீட்டிய அந்த ஆறு வண்ணப் படங்களையும் ஃபிரேம் போட்டு மாட்ட வேண்டும் என்று நினைத்து டிராயரில் வைத்துப் பூட்டியவன் அதைப் பற்றி அப்பால் மறந்தே போனுன்.

இப்போது காலண்டரைப் பிரித்துப் பார்த்தபோது காந்திஜி அவனை நோக்கிப் பொக்கை வாய் திறந்து சிரித்தார். 'ஒரு வேளை ஏளனப் புன்சிரிப்பா அது?' இல்லை, அனுதாபத்துடன் கூடிய அன்புச் சிரிப்புதான் என்ற முடிவுக்கு வந்தான் வேணுகோபால்.

எக்ஸ்ரேக்களை ஆராய்ந்து பார்த்து, அன்றையக் கடைசி நோயாளிக்கு மருந்துகளைத் தொடர்ந்து சாப்பிடுமாறு கூறி, தைரியமும் சொல்லி அனுப்பிவிட்டு அமர்ந்தவன், சுருண்டிருந்த அந்தக் காலண்டரை மறுபடியும் எடுத்துப் பிரித்தான்.

''மே ஐ கம் இன்?'' என்று குரல் கேட்டது.

வேணுகோபால் நிமிர்ந்தான். ''வாங்க, சாரங்கன்! வாங்க!'' என்று வரவேற்ருன். காலண்டரை மேஜையின் மேல் போட்டு விட்டு எழுந்து போய்க் கைகுலுக்கினுன்.



# சாருலதா

கி. ராஜேந்திரன்

''ஒரு பர்ஸனல் மேட்டர்'' என்ருன் சாரங்கன்.

''என்ன விஷயம்? உள்ளே போய்ப் பேசுவோம்'' என்ற வேணுகோபால், கைக் கடிகாரத்தைப் பார்த்தான். ''கன்ஸல்டிங் அவர்ஸ் முடிந்து விட்டது; கதவைச் சாத்தி விட்டு வருகிறேன்.''

சற்று நேரத்துக்குப் பின் அவர்கள் வேணுகோபாலின் வீட்டு வரவேற்பு அறையில் இரண்டு கண்ணுடி டம்ளர்களில் நிரம்பியிருந்த மோரை உறிஞ்சியபடி அமர்ந்திருந்தார்கள். ''என்னிடம் வருகிற பேஷண்டுகளில் முக்கால் வாசிப் பேர்களுக்கு நான் கொடுக்கிற அட்வைஸ் 'மோர் சாதம் சாப்பிடு; மற்றதையெல்லாம் விலக்கு' என்பது தான்.''

''ஆரோக்கியமான டிரிங்க்!'' என்று ஆமோதித்தான் சாரங்கன்.

''சரி, நீங்கள் வந்த காரியத்தைச் சொல்லுங்கள். பத்து நாளைக்குப் பிறகு சாரு ஆபீசுக்கு வந்தாளில்லையா?''

சாரங்கன் தான் எடுத்து வந்திருந்த சிறிய டேப் ரிகார்டரை மேஜையின் மேல் வைத்தான்.

''உங்களைப் பொறுத்தவரை சாருலதாவைப் பற்றிய ரகசியம் ஏதுமில்லை என்று அவளே சொல்லியிருக்கிருள்.

அந்தத் தைரியத்தில்தான் இதனை எடுத்து வந்தேன்.''

''என்ன இது? டிரான்ஸிஸ்டர் ரேடியோவா?''

''இல்லை, டிரான்ஸிஸ்டரைஸ்ட் டேப் ரிகார்டர். இதைக் கேளுங்கள்!'' இப்படிச் சொல்லி விட்டுச் சாரங்கன் ரிகார்டரை இயக்கினுன். சாருலதாவின் குரல் ஒலித்தது. மஹிபாலும் சந்திரபாலும் கொச்சைத் தமிழிலும் அரை குறை ஆங்கிலத்திலும் பேசுவதும் கேட்டது.

''யதேச்சையாக ரிகார்ட் ஆகிவிட்டது இந்தச் சம்பாஷணை. நான் சாருலதாவின் உத்தரவுகளை இதில் பதிவு செய்து கொள்வது வழக்கம். ஒன்ரு, இரண்டா? மேலே மேலே காரியங்களைச் சொல்லிக் கொண்டே போவாள். மறக்காமலிருக்க அவ்வப்போது ரிகார்ட் செய்து விடுவேன். நேற்று மஹிபாலும் சந்திரபாலும் வந்திருந்த போது, இயங்கிக் கொண்டிருந்த இதை நிறுத்த மறந்து விட்டேன் போலிருக்கிறது.''

''அவர்களும் இதைக் கவனிக்கவில்லை!''

''பார்த்திருந்தால்கூட இதை டேப் ரிகார்டர் என்று நினைத்திருக்க மாட்டார்கள். சற்று முன் நீங்கள் தவருன முடிவுக்கு வந்தது போல் அவர்களும் இதை டிரான்ஸிஸ்டர் ரேடியோ என்றே எண்ணி யிருப்பார்கள்.''

''கரெக்ட்! ஏமாந்து போய்ப் பேசி விட்டார்கள்; அவர்கள் குரல் பதிவாகி விட்டது.''

''முன்னுலேயே அவர்களுக்குத் தெரியாமல் இந்தவிதமாக நான் அவர்கள் பேச்சை ரிகார்ட் செய்திருக்கலாம். ஏனே தோன்ருமல் போய் விட்டது. எதிர்பாராதவிதமாக இந்த ரிகார்டிங் கிடைத்த பிறகு, 'அடடா! இதை முன்னுடியே திட்டமிட்டு நாம் செய்திருக்கலாமே' என்று எண்ணிப் பார்க்கிறேன்.''



''முன்னாலேயே தோன்றியிருந்தாலும்கூட அதனால் என்னத்தைச் சாதித்துவிட முடியும் உங்களால்?''

''அதைப் பற்றி யோசனை கேட்கத் தான் உங்களிடம் வந்தேன், வேணு! இதை வைத்துக் கொண்டு அந்த மஹிபாலையும் சந்திரபாலையும் விரட்டி அடித்துவிட முடியாதா ?''

''அதாவது பிளாக்மெயில் செய்கிறவர்களையே பிளாக்மெயில் செய்து விடலாம் என்கிறீர்கள்!''

''எக்ஸாட்லி!''

வேணுகோபால் சில விநாடிகள் சிந்தித்தான். பிறகு, ''நீங்கள் சொல்வது சரிப்பட்டுவரும் என்று எனக்குத் தோன்றவில்லை'' என்றான். ''பிளாக்மெய்ல் செய்வதென்பது பெருங் குற்றம்தான். அந்தக் குற்றத்தை அவ்விருவரும் புரிகிறார்கள் என்பதற்குச் சான்றும் இதில் இருக்கிறது.''

''பின்னே என்ன? டேப் ரிகார்டர் சாட்சியம் கோர்ட்டில் செல்லுபடியாகாதா ?''

''அந்தச் சட்ட பாயிண்டெல்லாம் எனக்குத் தெரியாது. கோர்ட்டில் இதைச் சாட்சியமாக எடுத்துக்கொள்ளா விட்டாலும் போலீஸார் மஹிபால் — சந்திரபால் மீது நடவடிக்கை எடுக்க ஆரம்பிப்பதற்கு இந்தச் சாட்சியமே போதும். பிறகு தேவையான சாட்சியங்களைத் தேடிக் கண்டுபிடித்துக் கேஸை உருவாக்குவது அவர்கள் பொறுப்பு.''



''பிறகு வேறு என்ன இடைஞ்சல்?''

''சாரங்கன்! நமக்கு இருக்கும் உற்சாகத்தில் சில சமயம் அடிப்படையான விஷயங்களை மறந்து போய் விடுகிறோம். போலீஸாரிடம் இதைக் கொடுத்து, 'ஆக்ஷன்' எடுக்கச் சொல்கிறோம் என்று வையுங்கள். கோர்ட்டில் கேஸ் வரும்போது எதற்காகச் சாருலதாவை இவர்கள் பிளாக்மெயில் செய்கிறார்கள் என்ற விவரமும் வெளியாகுமல்லவா? அதைச் சாரு பொருட்படுத்த மாட்டாள் என்றால் இப்போது இவர்களுக்கு ஏன் அவள் பணத்தை அள்ளி அள்ளிக் கொடுத்துத் தொலைக்க வேண்டும் ?''

''ஹௌ ஸ்டுபிட் ஆஃப் மி'' என்றான் சாரங்கன். அவனுக்கு வெட்கமாய்ப் போய்விட்டது. ''நான் கிளம்புகிறேன்'' என்று சொல்லி விடைபெற்றான்.

''சாரங்கன் ! இந்த ரிகார்டரை என்னிடம் கொடுத்துவிட்டுப் போங்கள். சாரு, 'ரிகார்டர் எங்கே?' என்று கேட்டால் 'ரிப்பேராகி விட்டது; பழுது பார்க்கக் கம்பெனியில் கொடுத்திருக்கிறேன்' என்று சொல்லி விடுங்கள்.''

''இதை வைத்துக் கொண்டு நீங்கள் என்ன செய்வீர்கள்?''

''இது ஒரு முக்கியமான சாட்சியம் என்பதை மறுப்பதற்கில்லை; பத்திரமாகப் பாதுகாக்க வேண்டும்.''

''ரிப்பேராகி இருப்பதாகச் சாரு விடம் எத்தனை நாளைக்குச் சொல்லிச் சமாளிக்க முடியும் நான்?''




பாதுகாப்பிற்கு ஒரு பூட்டு உள்ளதெனில் அது நவ-தால் ஒன்றே ஒன்றுதான் !

# நவ-தால்

நம்பிக்கையானது. அதனால் தான் பாங்குகளும் தொழிற்சாலைகளும், கிடங்குகளும் நவ-தால் பூட்டையே உபயோகிக்கின்றனர். அதிநுட்பமான தயாரிப்பு! ஒவ்வொரு பூட்டுக்கும் மாறுபட்ட இணைப்புமுறையில் வெட்டப்பட்ட சாவிகள். உடைத்து திறக்க இயலாதபடி அதிக பாதுகாப்பு அளிப்பதற்கேற்ற முறையில் செய்யப்பட்டது நவ-தால். பித்தளை, எஃகினாலான இரட்டைக்கூடு அதை மிகமிக உறுதியாக்குகிறது. தயாரிப்பவர்கள் : கோத்ரெஜ்-பாதுகாப்பு உபகரணங்களைத் தயாரிப்பதில் 70 ஆண்டுகளுக்கும் மேலான அனுபவமுடையவர்கள்.

4 சைஸ்கள் :
40 mm (5 லீவர்கள்)
50 mm (6 லீவர்கள்)
67 mm (7 லீவர்கள்)
85 mm (8 லீவர்கள்)

Godrej கோத்ரெஜ்

''ஒரு வாரம். பத்து நாட்கள்?''

''அதற்குள் ஏதாவது நடக்கும் என்று எதிர்பார்க்கிறீர்களா?''

''ஆமாம்.''

''என்ன நடக்கும்?''

''மஹிபாலேயும் சந்திரபாலேயும் ஒழித்துக் கட்ட எனக்குத் தெரிந்த வரையில் இரண்டே வழிகள்தான் இருக்கின்றன.''

''என்ன அவை ?''

''ஒன்று, சாருலதா தன் கடந்த கால வாழ்க்கை பற்றிய ஒரு சில விவரங்கள் வெளியானல் பரவாயில்லே என்று தைரியத்துடன் போலீஸாரை அணுக வேண்டும்.''

'' அது நடக்கப் போவதில்லே ; இரண்டாவது ?''

''அவள் என்னேக் கல்யாணம் செய்து கொண்டுவிட வேண்டும்.''

''திருமணம் நடந்துவிட்டால் அந்த இரண்டு ராஸ்கல்களும் வாலேச் சுருட்டிக் கொண்டு விடுவார்களா?''

''நிச்சயமாக !''

''அது எப்படி?''

''எப்படி, எதனுல் என்று சாருலதாவிடம் மட்டும்தான் விவரித்துக்கூறலாம் நான். உங்களிடம் சொல்லும் உரிமை எனக்கு இல்லே.''

''அப்படியாளுல் சீக்கிரமாகக் கல்யாணச் சாப்பாடு போடுங்கள். பெஸ்ட் ஆஃப் லக்!''

''தாங்க்யூ'' என்று கூறிச் சாரங்கனே வழி அனுப்பி வைத்த வேணுகோபாலின் குரலில் நம்பிக்கை தொனிக்கவில்லே.

## அத்தியாயம் 31

# "நான் தேவதை அல்ல!"

'அபிலாஷை' என்ற பொருத்தமான பெயர் கொண்ட குதிரை முதல் ரேஸில் முதலாவதாக வந்தது. 'ஃபோட்டோ ஃபினிஷ்' தீர்ப்பு. ஜாக் பாட்டில் வெற்றி பெறக் கூடியவர்களின் எண்ணிக்கை ஒரு லட்சத்துக்கு மேல் என்று இந்தக் கட்டத்தில் அறிவிப்புப் பலகை கூறியது.

'பாக்'ஸை விட்டுக் கிளம்பிக் கீழே இறங்கி வந்தாள் சாருலதா.

''ஹல்லோ சாரு! எனி டிப்ஸ்?''

''நாலு—ஆறு என்று வாங்குங்கள். அதையே திருப்பிப் போடுங்கள்.''

''ஹேர் கிங்கா?''

''ஏன் என்ன சந்தேகமாகக் கேட்கிறீர்கள்? வேங்கடாசலபதி கைவிட மாட்டார்.''

''சுவாமி பெயரை இதில் எதற்கு இழுக்கிறீர்கள்?''

''திருப்பதியில் முடியைக் 'காண்ட்ராக்ட்' எடுத்து, ஏற்றுமதி செய்து கிடைத்த பணத்தில் குதிரை வாங்கியிருக்கிருன்.''

''இஸ் இட்?''

''சிலபேருக்கு யார் எதைச் சொன்னுலும் சந்தேகம்தான்!''

சாருலதா மேலே நடந்தாள். அடுத்த ரேஸுக்கான குதிரைகளே ஒரு வட்டப் பாதையில் சகலரும் காண மெல்ல நடத்திச் சென்று கொண்டிருந்தனர். அவற்றைக் கூர்ந்து ஆராய்ந்தாள் சாருலதா. சில சமயங்களில் குதிரையின் தோற்றம், நடை போன்றவை அவளுக்கு உபயோகமான தகவல்களேத் தெரிவித்து வெற்றி பெறும் வாய்ப்புக்களே அதிகரித்ததுண்டு.

மரத்தடிக் கடையில், ''கோல்ட் ஸ்பாட் குதிரைதான் காலே வாரிவிட்டது; கோல்ட் ஸ்பாட் டிரிங்கையாவது குடித்து வைப்போம்'' என்று ஒரு நண்பரிடம் சொல்லிக் கொண்டே, காசு கொடுத்துப் பாட்டிலே வாங்கிய டாக்டர் முதலியார் சாருவைப் பார்த்துவிட்டார்.

''என்ன சாரு, உன் குதிரை எப்போ ஓடுது?'' என்ருர்.

''ஆருவது ரேஸில்; வாட்ச் ஃபார் இட்!''

''என்ன சொல்கிருன் உன் டிரெயினர்?''

''அவரைத்தான் தேடிக்கொண்டிருக்கிறேன். ஆளேக் காணும். இப்போ வருவார்.''

மர நிழலில் ஒரு நாற்காலியை 'டிராக்'கை நோக்கி இழுத்துப் போட்டுக்கொண்டு உட்கார்ந்தாள் சாருலதா. கையில் இருந்த ரேஸ் புக்கைப் பிரித்து 'டிரிபிள் ஈவெண்ட்'டுக்குக் குதிரைகளேப் பொறுக்க ஆரம்பித்தாள்.

* * *

கார் பாஸ் இல்லாததால் வேணுகோபாலின் வாகனம் போலீஸாரால் வலது பக்கம் திருப்பி விடப்பட்டது. கிண்டி ரயில்வே ஸ்டேஷன் அருகே வண்டியை நிறுத்திப் பூட்டிவிட்டுச் சுற்றுமுற்றும் பார்த்தான் அவன்.

ரேஸ் ஆரம்பித்து விட்டது என்றுலும் நெருக்கி அடித்துக் கொண்டு

ஜனத் திரள் இன்னமும் வந்துகொண்டே இருந்தது. அவசரம் அவசரமாய் ரேஸ் கோர்ஸ் வாசலை நோக்கி நடந்த அந்தக் கூட்டத்தில் முக்காடிட்ட மாமிகள் இருவரும் இருந்தனர்.

அவர்களில் ஒருத்தி தன் வீட்டுக்கு மூன்றாவது வீட்டில் சமையல் வேலை செய்து மாதம் முப்பது ரூபாய் சம்பாதிப்பவள் என்பது வேணுகோபாலுக்குத் தெரியும். அவன் மனம் வேதனைப் பட்டது. 'அக்ஸெப்டன்ஸ்' வெளியான வெள்ளிக்கிழமை முதல் காரியாலய வேலைகள் எதையும் கவனிக்காமல் ரேஸ் புத்தகத்திலேயே கண்ணையும் கருத்தையும் செலுத்தியிருந்த குமாஸ்தாக்களும் அந்தக் கூட்டத்தில் இருந்தனர். குபேரர்களுடன் போட்டியிடக் கூடைக்காரிகளும் முன்வரும் இந்த அபத்த நிலை அவனை ஆச்சரியத்திலும் விசனத்திலும் ஆழ்த்தியது. இத்தனைக்கும் மேலாக அவன் சிந்தனையை ஆக்கிரமித்த ஒரு பிரச்னை: 'சாருலதாவை இந்தக் கூட்டத்தில் எப்படிக் கண்டுபிடிப்பது?' நாலா பக்கமும் நோட்டம் விட்டவனுடைய கண்களுக்குப் பத்து ரூபாய் கேட்டும் ஐந்து ரூபாய் கேட்டும் தனித் தனியே இருப்பது தென்பட்டது.

பத்து ரூபாய் டிக்கெட் வாங்கிக் கொண்டு உள்ளே சென்றான் அவன்.

புக்கீஸ் அவனுக்குப் புரியாத பாஷையில் ஏதோ சொல்லிக் கொண்டிருக்க அவர்களைச் சுற்றிலும் ஏகக் கூட்டம்.

''வெல்கம் வேணு! எங்க கோஷ்டியில் சேர்ந்துட்டே! குட் பாய்!''

''டேய், நல்லவேளை உன்னைப் பார்த்தேன்.''

''நீ எங்கேடா என்னைப் பார்த்தாய்? நானல்லவோ உன்னைப் பார்த்தேன்?''

''அது எப்படியாவது இருக்கட்டும்; எனக்கு அவசரமா சாருலதாவைத் தேடியாகணும்.''

''அவளைப் பார்க்கணும்னு சொல்லிக்கிட்டு இங்கே நின்னா? மெம்பர்ஸுக்கு உண்டான ஸ்பெஷல் என்கிளோஷருக்குப் போ!''

''அப்படி ஒண்ணு இருக்கா?''

''அது கெட்டுது போ! ஆமாம்; உனக்குத்தான் ரேஸிங் பற்றி ஏ.பி.ஸி. தெரியாதே! அதோ அந்தப் பக்கம் போகணும்.''

வேணுகோபால் விரைவாக நடக்க ஆரம்பித்தான்.

''நில்லு, நில்லு! கிளப் மெம்பரா நீ? கெஸ்ட் பாட்ஜ் வைச்சிருக்கியா?''

''இல்லையே; இரண்டும் இல்லை.''

''பின்னே? உள்ளே விட மாட்டார்களே?''

''நீதான் ஒரு வழி சொல்லணும்.''

''நான் என்ன பண்ண முடியும்? இங்கேயே நில்லு. யாராவது ரேஸ் கிளப் மெம்பர் உனக்குத் தெரிந்தவரு இந்தப் பக்கம் வரச்சே அவனைப் பிடிச்சுக்கோ. பதினைந்து ரூபாய் பணம் கொடு. அவன் கையெழுத்துப் போட்டு உனக்கு பாட்ஜ் வாங்கிக் கொடுப்பான்.''

நண்பன் புக்கீஸிடம் பணம் கட்டப் போய் விட்டான்.

வேணுகோபாலுக்கு வெறுமனே நின்று கொண்டிருப்பது என்னவோ போலிருந்தது. நல்ல வேளையாகச் சில நிமிஷங்களில் அவனுக்குத் தெரிந்த டாக்டர் ஒருவர் ரேஸ் கிளப் மெம்பர் மெடலை மாட்டிக் கொண்டு அந்தப் பக்கமாக வந்தார். அப்புறம் காரியம் சுலபமாய் முடிந்தது.

மின்னி ஸ்கர்ட் முதல் மடிசார் உடுத்திய புடவை வரை பலதரப்பட்ட நாகரிகங்களை மெம்பர்ஸ் என்க்ளோஷரில் காண முடிந்தது. குதிரைப் பந்தயத்துக்கு இத்தனை பெண்மணிகள் வரக் கூடும் என்று வேணுகோபாலிடம் அன்றுவரை யாரேனும் சொன்னால் கூட நம்பியிருக்க மாட்டான். குதிரை வால் கொண்டை முதல் பந்துக் கொண்டை வரை; சரசரக்கும் பட்டுப் புடவை தொடங்கி மெல்லிய நைலான் ஸாரி வரை; கருங்காலிக் கட்டையில் செதுக்கியது போன்ற கரிய எழில் மேனி முதல் தந்தத்தில் கடைந்தெடுத்தது போன்ற வனப்பு மிக்க பாவை வரை; அழகுப் போட்டியில் முதல் பரிசு வாங்கக்கூடிய மங்கைமுதல் அலங்காரப் போட்டியில் முதலிடம் பெறக் கூடிய நங்கைவரை அங்கே விதம் விதமான காட்சிகள், கோலங்கள். 'இது என்ன குதிரைப் பந்தயமா? அல்லது ஃபாஷன் பரேடா?' வேணுகோபால் திகைத்தான்.

மூன்றாவது ரேஸ் கோடம்பாக்கம் பிளேட் முடிந்ததும் ஜாக்பாட்டைப் பகிர்ந்து கொள்ளப் போகிறவர்கள் எண்ணிக்கை இருநூற்று சொச்சத்துக்குக் குறைந்து விட்டது.

சாருலதாவுக்குப் பக்கத்தில் நாற்காலியை இழுத்துப் போட்டுக்கொண்டு உட்கார்ந்தான் வேணுகோபால்.

அவள் திரும்பிப் பார்த்துத் திடுக்கிட்டாள். ''வேணு! நீங்களா? இங்கேயா?''

''என்னை இங்கு சந்தித்தால் உனக்கு ஆச்சரியமாகத்தான் இருக்கும் சாரு. உன்னிடம் உடனே பேச வேண்டும் என்று தோன்றியது. வந்தேன்.''

''அப்படி என்ன அவசரம்?''

''அவசரம்தான்; வா போவோம்.''

''எங்கே?''

''எங்கே வேணுமானாலும் போக லாம். இந்தக் கூட்டத்தை விட்டுக் கிளம்பினால் சரி.''

சாருலதா கடிகாரத்தைப் பார்த்தாள். ''மணி மூன்றே முக்கால் ஆகிறது. ஆறு மணிவரையில் காத்திருக்கக் கூடாதா?''

''காத்திருப்பதானால் நான் இங்கே ஏன் ஓடி வருகிறேன்? உன்னிடம் மனம் விட்டுப் பேசத் துடித்துக் கொண்டிருக்கிறேன் நான். புரிய வில்லையா உனக்கு?''

''குட் ஆப்டர்நூன் சாரு!'' என்றான் அப்போது அங்கு வந்த அண்டோனி.

''எப்படி இருக்கிறது நிலைமை? ஒன்பதாயிரம் சம்பாதித்துத் தருவீர்களா?'' என்று டிரெய்னரைக் கேட்டாள் சாரு.

''நீங்க ஏன்ஜெல்லாக நடந்துகொண்டிருக்கிறீர்களா?'' என்று கேட்டான் அவன்.

''நானா? ஆர் யூ கிட்டிங்? வர்த்தக உலகில் புகுந்த பிறகு தேவதையாக விளங்குவதாவது? 'டெவில்'லாகத்தான் இயங்கலாம்.''

''நீங்க ஏன்ஜெல்லாக இல்லாதவரை 'ஐ ஆம் நோ ஏன்ஜெல்' ஜெயிக்கும், கவலைப்படாதீர்கள்!''

''வேணு, என் குதிரையின் பெயரைக் கேட்டீர்களா? பொருத்தமாயில்லை?''

''எனக்கு இந்த ஜோக் பிடிக்க வில்லை'' என்றான் வேணுகோபால்.

சாருலதா சிரித்தாள். ''டாக்டர் வேணுகோபால் எப்பவுமே ரொம்ப ஸீரியஸ்தான்'' என்றாள் அண்டோனியைப் பார்த்து. ''வேணு! மீட் அண்டோனி.''

அறிமுகப் படலம் முடிந்ததும் அவள் டிரெய்னரை நோக்கிச் சொன்னாள்: ''இன்று நம் குதிரை முதலாவதாக வந்தால் உங்களுக்கு ஒரு விசேஷப் பரிசு வைத்திருக்கிறேன், தருவேன். இரண்டாவதாக வந்தால் கிடையாது!''

''இதென்ன அநியாயம்? கொண்டு வந்த பரிசை யாராவது திருப்பி எடுத்துச் செல்வார்களா?'' வேணுவிடம் புகார் செய்தான் அவன்.

''அப்படியானால் ஜாக்கிக்குக் கொடுத்து விடுகிறேன். முதலாவதாக வந்தால்தான் உங்களுக்கு. என்ன சொல்கிறார் ராஜ்?''

''ராஜ் என்பவர்தான் ஜாக்கியா?'' வேணுகோபால் கேட்டான்.

''ஆமாம்'' என்று அவனுக்குப் பதிலளித்து விட்டு அண்டோனி சாருலதா பக்கம் திரும்பினான். '''வெய்ட் ஏற்றி விட்டார்கள். ஆனாலும் தாக்குப் பிடிக்கலாம்' என்று ராஜ் நம்பிக்கையுடன்தான் பேசுகிறான். பாக்ஸுக்குப் போவோமே.'' இப்படிச் சொல்லி விட்டு லிஃப்டுகள் இருந்த திசை நோக்கி நடந்தான் அண்டோனி.

அவனை முன்னே போகவிட்டுத் தாமதித்து நின்ற வேணுகோபால், சாருவின் கையைப் பிடித்தான். ''என்னோடு வா, சாரு.''

''பிளீஸ், வேணு! இந்த ஒரு ரேஸ் முடியும் வரையாவது பொறுமையாக இருங்கள். 'கோல்ட் கப் ஈவெண்ட்.' எலிஸபெத் ராணி சென்னைக்கு விஜயம் செய்தபோது ஏற்படுத்தப்பட்ட பரிசு. பார்க்க வேண்டாமா? வாருங்கள் போவோம்'' என்றாள். (தொடரும்)

---




## டாக்டரின் ஆசை!

மேற்கிந்தியக் கிரிக்கெட் பந்து வீச்சு நிபுணர் ஜில்கிரைஸ்ட் கொஞ்சம் கரடுமுரடான ஆசாமி என்று பெயர் பெற்றவர். அவர் பல தடவை வேண்டுமென்றே சண்டையை விலைக்கு வாங்கிக் கொள்வார். அவருடைய வெளிப்படையான விமர்சனங்கள் அவருக்குப் பல கஷ்டங்களை ஏற்படுத்தியுள்ளன. அவரது பந்து வீச்சு சரியானது தானா என்பது பற்றிக் கிரிக்கெட் உலகமே கூடி விவாதித்தது. அவரது மூர்த்தி சிறிதானாலும் கீர்த்தி பெரிது. அவர் ஒவ்வொரு ஓவர் பந்து வீச்சின்போதும் சளைக்காமல் எந்தவித கடுமையான வெய்யிலிலும் களைப்பின் அறிகுறியே தென்படாமல் பந்து வீசுவது அனைவருக்கும் வியப்பைக் கொடுக்கிறது. இந்த அமானுஷ்ய சக்தி இவருக்கு எப்படி வந்தது என்பது கிரிக்கெட் ரசிகர்களுக்குள் அடிபடும் பிரச்னை. ஏன், தலைசிறந்த டாக்டர்களுக்குக்கூட இது வியப்பைத் தந்துள்ளது. ஒருதடவை இதய நிபுணரான டாக்டர் ஒருவர் மேற்கிந்திய கிரிக்கெட் ஆட்டக்காரர்களுக்கு அளிக்கப்பட்ட வரவேற்பு விருந்தில் கில்கிரைஸ்டையே உற்று நோக்கிக் கொண்டிருந்தார். இதைக் கண்டு மேற்கிந்திய கிரிக்கெட் ஆட்டக்காரர் கன்ஹாய் டாக்டரிடம், ''கில்கிரைஸ்டையே பார்த்துக் கொண்டிருக்கிறீர்களே காரணம் என்ன?'' என்று கேட்டார்.

''இந்தச் சின்ன மனிதர் கில்கிரைஸ்டைச் சோதனை செய்ய விரும்புகிறேன். இந்த அதிசய மனிதருக்கு என்ன பரிசு வேண்டுமானாலும் தரச் சித்தமாக இருக்கிறேன். இவர் மட்டும் இவரிடமுள்ள இருதயத்தைப் பரிசோதிக்க என்னை அனுமதித்தால்!'' என்றார், இருதய நிபுணர். -- குண்டுமணி

MOD
MODE
MODERN
MODERNBRE
MODERN BREAD

# வளமுடன் வைட்டமின் 'ஏ' ஊட்டம் செய்யப்பட்டது 'மாடர்ன் ரொட்டி' ஆரோக்கியமான கண்களுக்கு இதுவே தேவை

வைட்டமின் 'ஏ' பற்றாக்குறையினால் அநேக இந்திய மக்கள் கண்கள் வலிமை குன்றி பார்வை இழந்துள்ளனர். 800 கிராம் எடையுள்ள ஒரு மாடர்ன் ரொட்டி மட்டிலுமே ஒருவருக்கு ஒரு நாளைய வைட்டமின் 'ஏ' தேவையைப் பூர்த்தி செய்கிறது. தவிர வைட்டமின் பி1, பி2 மற்றும் நயசினும் சேர்ந்தது அது. சுட்ட மணம் மாறாத மாடர்ன் ரொட்டியில் புரதச் சத்துக்கள், வைட்டமின்கள் மற்றும் தாதுப் பொருள்கள் அதிகமாகவே சேர்க்கப் பட்டிருக்கின்றன. இந்திய உணவில் இவை அனைத்தும் மிகவும் தேவை.

எந்த உணவுடனும் இணைந்து சுவை கூட்டுகிறது மாடர்ன் ரொட்டி.
சிறந்தவையே உங்கள் குடும்பத்திற்கு உகந்தவை.
அவர்களுக்குக் கொடுங்கள் மாடர்ன்—ஒரு மகத்தான ரொட்டி.

modern
Sliced white SANDWICH BREAD

# மாடர்ன்

இந்தியாவிலேயே
மெத்தவும் சத்துள்ள ரொட்டி

மாடர்ன் பேகரீஸ் (இந்தியா) லிமிடெட். (ஒரு இந்திய அரசின் நிறுவனம்)
பேகரீஸ்:
அகமதாபாத் . பெங்களூர் . பம்பாய் . கல்கத்தா . கொச்சி . டெல்லி . ஹைதராபாத் . கான்பூர் . சென்னை.

## அத்தியாயம் 32

# நாலு நாள் அவகாசம்

தன்னுடைய பிரத்தியேக 'பாக்ஸ'க்குப் போகச் சாருலதா 'லிஃப்'டை நெருங்கியபோது அவளைப் பார்த்து விட்ட கிருஷ்ணசாமி அவசரம் அவசர மாகக் கிட்டத்தில் வந்தான். ''உன்னுடைய ஃபோர்காஸ்ட் என்ன, ராணி அம்மா கோப்பைக்கு?''

''ஒன்பது'' என்றாள் அவள்.

''லட்ச ரூபாய் கொடுத்து வாங்கிய குதிரை ஓடுகிறதே?''

''அப்போ அதன் பேரிலேயே கட்டுங்கள்; என்னைக் கேட்பானேன்?''

''நீ கொடுக்கிற டிப்ஸ் ஐந்துக்கு மூன்று பழுதில்லாமல் பலிக்கிறதே, அதனால்தான்.''

''சொன்னால் நம்ப மாட்டீர்கள். நான் நியூமராலஜி பிரகாரம் குதிரைகளைத் தேர்ந்தெடுக்கிறேன். அஸ்ட்ராலஜியை விட அதிகப் பலன் தருகிறது!''

''அஸ்ட்ராலஜி பார்த்து அரசியலில் நிலைக்க நினைப்பவர்களைப் பின்பற்றுவதானால் ஒண்ணும் நம்பர் குதிரை மேல் தான் கட்ட வேண்டும்.''

சாருலதா சிரித்தாள். ''யங் டர்க்கைச் சொல்கிறீர்களா? மண்ணைக் கவ்வப் போகிறது ஜாக்கிரதை!'' என்று கூறியபடியே லிஃப்டில் நுழைந்தாள்.

மாடிக்கு வந்ததும் வராந்தாவில் நின்று எந்தெந்தக் குதிரைக்கு எந்த அளவுக்கு மெர்க்குரி ஏறி இருக்கிறதென்று சில விநாடிகள் ஆராய்ந்தாள். அப்போது அங்கு வந்த பணியாளிடம் டிபன் காப்பிக்கு ஆர்டர் செய்து முடிப்பதற்குள் குதிரைப் பந்தயம் ஆரம்பமாகிவிட்டது. பைனகுலர்ஸைக் கண்களுக்கு உயர்த்தி நோக்கினாள் சாருலதா. அவள் ஊகம் பொய்க்கவில்லை. 9ம் நம்பர் குதிரை பென்ட்ரகன் முதலாவதாக வந்தது.

''ஐ ஆம் ஸோ எக்ஸைட்டட்'' என்றாள் அவள் அன்டொனியைப் பார்த்து. ''நாலு ஜாக்பாக்ட் டிக்கட்டுகள்தான் வாங்கினேன். இரண்டு இதுவரை பிழைத்திருக்கிறது.''

''யூ வில் மேக் இட்'' என்றான் அவன்.

''ட்ரிபிள் ஈவெண்டுக்கு யாரையாவது அனுப்பி ஒரு சீட்டு வாங்கிவர ஏற்பாடு பண்ணுங்கள். உங்கள் மூலமாகப் போனால் அதிர்ஷ்டம் அடிக்கிறதா, பார்ப்போம்.''

''நெம்பர்களைச் சொல்லுங்கள்.''

சாருலதா கூறினாள்.

''ஜெயித்தால் ஐம்பது சத விகிதம் எனக்கு.''

''எண்பதோ நூறோ கொடுக்கப் போகிறான். அதில் பங்கு வேறேயா?''

ஐந்தாவது ரேஸ் முடிந்ததும் ஜாக் பாட்டில் ஜெயிக்கக் கூடியவர்களின் எண்ணிக்கை இரண்டு இலக்கத்துக்கு வந்து விட்டது.

''சாரு! நீ என்னுடன் வரப்போகிறாயா இல்லையா?'' பொறுமை இழந்து கேட்டான் வேணுகோபால்.

''ஐந்து ரேஸ் முடிந்தும் என் ஜாக்பாட் டிக்கட்டுக்கு உயிர் இருக்கிறது. ட்ரிபிள் ஈவெண்டில் ஃபர்ஸ்ட்



சாருலதா

கி.ராஜேந்திரன்

லெக்கில் ஜெயித்திருக்கிறேன். அடுத்த ரேஸில் என் சொந்தக் குதிரை ஓடுகிறது. இத்தனைக்கிடையில் என்னை இங்கிருந்து கிளம்பச் சொல்வது நியாயமா?''

''டாம் தி ஜாக்பாட்!'' என்று உரக்கவே கத்தி விட்டான் வேணுகோபால் கோபத்துடன். பத்துத் தலைகள் திரும்பிப் பார்த்தன.

வேணுகோபாலின் கண்கள் சிவந்திருப்பதையும், அவன் விரல்களைச் சொடுக்குவதையும் பார்த்த சாருலதா அதற்கு மேல் தான் அங்கு தாமதித்தால் நிலைமை ரசாபாசமாகப் போய் விடுமோ என்று பயந்தாள். ''அன்டொனி! ரிஸல்ட்களை ஃபோனில் எனக்குச் சொல்லுங்கள். நான் அவசரமாகப்

போக வேண்டி யிருக்கிறது. ஜெயித்தாலும் பணத்தை நாளைக்கு வந்து தான் வாங்கிக் கொள்ள வேண்டும்'' என்று கூறிவிட்டுப் புறப்பட்டாள்.

காரில் போகும்போது, '' வேணு! ரொம்ப 'எம்பாரஸ்' பண்ணி விட்டீர்களே என்னை'' என்று குற்றம் சாட்டினாள் சாருலதா.

''எனக்கு இந்த ரேஸ்கோர்ஸுக்குள் நுழைவதே ஒரு சங்கடமான காரியமாக இருந்ததே. முக்கியமான விஷயமாக உன்னிடம் பேச வேண்டும் என்று தானே அதைப் பொருட்படுத்தாமல் வந்தேன்?''

''அப்படி என்ன தலை போகிற காரியம்?''

''அதை இப்போ சொல்ல மாட்டேன். நேரே போல்ஸ்டார் ரெஸ்டாரண்டுக்குப் போய் ஒரு மூலையில் அடக்கமாக உட்கார்ந்து கொண்டு இரண்டு பீச்மெல்பாவுக்கு ஆர்டர் கொடுத்து விட்டு அப்புறம் நிதானமாகப் பேச வேண்டும்.''

''இது நியாயமே இல்லை. அவசரம் அவசரம் என்று ஆவலைத் தூண்டினீர்கள். இப்போ நிதானம், அமைதி என்று நேரத்தைக் கடத்துகிறீர்கள்.''

''அடக்கமாட்டாத ஆர்வத்துடன் நீ இருக்கிறாய் என்றால் இப்போதே கூறி விடுகிறேன்.''

''பிளீஸ் வேணு! இது என்ன விளையாட்டு, பச்சைக் குழந்தை போல?''

''ஆல் ரைட். சொல்லட்டுமா ? அம்மா சம்மதமளித்து விட்டாள்.''

''சம்மதித்து விட்டாளா? எதற்கு?''

''புடலங்காய்க் கறி பண்ண! கேள்வியைப் பார்!''

''வேணு, எனக்குப் புரியவில்லை.''

''நம் கல்யாணத்துக்குச் சம்மதித்து விட்டாள் சாரு! வீ வில் பி மான் அண்ட் ஒய்ஃப்!''

சாருலதா மௌனமானாள்.

''என்ன யோசனை?''

''யோசிக்க வேண்டிய விஷயம் அதனால் யோசிக்கிறேன். உங்கள் அம்மாவிடம் என்னைப் பற்றிய முழு விவரங்களையும் சொன்னீர்களா?''

''இல்லை, சாரு. ஒரு விதவையை நான் மணந்து கொள்ளப் போகிறேன் என்ற விஷயத்தை மட்டும்தான் சொன்னேன்.''

''இதை வேறு யாரிடமும் சொல்வதில்லை என்று வாக்களித்திருந்தீர்களே?''

''என் தாயாரை நான் வேறு யாரோ என்று கருத முடியுமா சாரு? அவளை ஏமாற்ற எனக்கு மனம் வராது. திருமணம் என்பது நம் இருவரையும் மட்டும் பொறுத்த விஷயம்தான். ஆனால் பெற்றோரின் மனப்பூர்வமான ஆசிகளையும் பெற்றால் நமக்கு நல்லதுதானே?''

''காந்தீயம் பற்றி வாய் கிழியப் பேசும் நீங்கள் சத்தியத்தை மீறியிருக்கக்கூடாது.''

''சாரு! நான சத்தியத்தைப் பற்றி நிறையப் பேசுகிறேனே ஒழிய காந்தியாகவே மாறிவிடவில்லை. காந்தீயத்தைக் கடைப்பிடிக்க முயலும் சாதாரண மனிதன் நான். குற்றங் குறைகள் உள்ளவன். தவறுகள் செய்து விட்டுக் கையைப் பிசைகிறவன். வெற்றிகளைக் கண்டு அளவுக்கு மீறிய ஆனந்தத்தில் ஆழ்ந்து போகிறவன். இப்போது நான் ஒரே குதூகலமாக இருக்கிறேன். அந்த 'மூடை'க் கெடுக்காதே நீ!''

''உங்கள் சந்தோஷத்தை என்னால் பகிர்ந்து கொள்ள முடியவில்லை; ஐ ஆம் ஸாரி.''

''ஸாரி சொல்லித் தப்பித்துக் கொள்ள முடியாது. நீயும் சந்தோஷப் பட்டுத்தான் ஆக வேண்டும். இல்லாவிட்டால் உன்னை விட மாட்டேன்.''

பிரபலமானதும், அலங்காரமானதும் தரமானதுமான 'போல்ஸ்டார்' ரெஸ்டாரண்டுக்குள் இருவரும் சென்று அமர்ந்தார்கள். பீச்மெல்பாவுக்கு ஆர்டர் கொடுத்தான் வேணுகோபால். சாருலதா எதிரே யிருந்த கண்ணாடி டம்ளரை எடுத்து ஒரு வாய் நீர் பருகினாள். ''என்ன சொன்னாள் உங்கள் அம்மா?''

''மனப்பூர்வமாகச் சம்மதம் தெரிவித்து விட்டாள், சாரு! என்னுடைய சந்தோஷம்தான் அவளுடைய வாழ்க்கை. 'இந்தத் திருமணம் உனக்கு மகிழ்ச்சியைத் தரக் கூடும் என்றால் குறுக்கே நிற்க மாட்டேன்' என்றாள். மருமகளை அன்புடன் வரவேற்கக் காத்திருக்கிறாள்.''

''இருக்கலாம். ஆனால் இந்தக் கல்யாணத்துக்கு நான் சம்மதம் அளிக்கும் முன்னர்



உங்கள் அம்மாவிடம் நீங்கள் அனுமதி பெற்று வந்தது விசித்திரம்!''

'' ஆரம்பித்து விட்டாயா மறுபடியும்?''

''புதிதாக எதை ஆரம்பித்தேன்? என்றைக்கோ தொடங்கிய ஆட்சேபணைகள் இன்னும் தொடர்கிறது.''

''எந்த விதமாகப் பார்த்தாலும் திருமணம் தான் நம் இருவருக்கும் ஏற்ற நல்ல முடிவு. முதலாவதாக...''

''நீங்கள் திருமணம் நல்ல முடிவு என்பதற்காக எட்டுக் காரணங்களை அடுக்கினுல், நான் அது நல்லதல்ல என்பதற்குப் பத்துக் காரணங்களைச் சொல்ல முடியும்.''

பீச்மெல்பாக்கள் வந்தன.

''சொல்லு, கேட்கிறேன். உன்னை இன்று வாதத்தில் வெல்லாமல் விடப்போவதில்லை நான்.''

''வாதத்தில் வெல்பவன் நல்ல அரசியல் வாதி

யாகலாம் அல்லது வக்கீலாகலாம்.''

''ஆனால் நல்ல குடும்பத் தலைவனாக முடியாது. உண்மை. சாரு! உன் மனத்தை நான் ஏற்கெனவே வென்றுவிட்டதென்றும் வாருந்தில் உன் அறிவை வெல்ல வேண்டியதுதான் பாக்கி என்றும் நினைத்துக் கொண்டிருக்கிறேன். நான் அப்படி எண்ணுவது தவறா?''

சாருலதா விசும்பி விசும்பி அழ ஆரம்பித்து விட்டாள். அந்த நேரத்தில் உணவு விடுதியில் அதிகக் கூட்டம் இல்லை. என்றாலும் அவளுக்கு வெட்கமாக இருந்தது. அழுகையை அடக்கிக் கொள்ளவும் முடியவில்லை. தவித்துப் போனாள்.



'' பயில்வான் காங்கிங்கிடம் மல் யுத்தப் பயிற்சி பெற்று விட்டேன். இனி நான் பாராளுமன்றத்தில் யாருக்கும் பயப்படாமல் தைரியமாகப் பேசுவேன் !''



''நால் கண்டு வாங்கிட்டு வந்திருக்கிறீர்களே! எதற்கு?''
''ஓட்டலில் காராசேவு பொட்டலம் நாலு வாங்கினேன். வழியில் தின்றது போக பாக்கி இதுதான் !''

அவளுடைய அந்த நெகிழ்ந்த மனநிலையைத் தனக்குச் சாதகமாக்கிக் கொண்டு பேசினான் வேணுகோபால். ''கல்யாணம் உனக்குள்ள பல பிரச்னைகளையும் தீர்த்து வைக்கும் சாரு. உன்னைப் பிளாக்மெயில் செய்கிறார்களே இரு தடியன்கள், அவர்கள் வாலைச் சுருட்டிக் கொண்டு ஓடி விடுவார்கள். நீ ஒரு விதவை என்பதை வெளியில் சொல்லி விடுவதாகத்தானே பயமுறுத்துகிறார்கள்?''

'''அவர்கள் மன்சுக்லாலுக்குத் தூரத்து உறவினர்கள். ரொம்ப நாட்களுக்குப் பிறகு அவரைப் பார்க்க அலகாபாத்துக்கு வந்திருக்கிறார்கள். வீடு கைமாறி யிருப்பதைக் கண்டதும் விசாரித்திருக்கிறார்கள். மன்சுக்லால் காலமாகி விட்டாரென்றும் அதன்பின் நான் சொத்துக்களை யெல்லாம் விற்று விட்டு ரொக்கத்துடன் கிளம்பிவிட்டேனென்றும் கேள்விப்பட்டிருக்கிறார்கள்.''

''இருந்தாலும் அவர்கள் உன்னைத் தேடிக் கண்டுபிடித்தது ஆச்சரியம் தான்!''

''எனக்கு அப்படித் தோன்றவில்லை. இதில் என்ன கஷ்டம்? தமிழ் நாட்டைச் சேர்ந்த ஒருத்தி, ஐந்து லட்ச ரூபாயுடன் வடக்கே இருந்து கிளம்பியவள் ஏதாவது குக்கிராமத்தில் போயா குந்தி யிருப்பாள்? சென்னையில்தான் தேட வேண்டும் என்று வந்திருக்கிறார்கள்.''

''ஆனால் அப்போது பிளாக்மெயில் செய்யும் நோக்கம் அவர்களுக்கு இல்லையோ?''

''கரெக்ட். மன்சுக்லாலின் சொத்தில் பங்கு கேட்டுப் பார்க்கலாம் என்று நினைத்து வந்திருக்கிறார்கள். அவர் உயில் எழுதி வைத்திருந்தாலும் கூட நான் ஆயிரம் இரண்டாயிரமாவது கொடுத்து அனுப்புவேன் என்பது அவர்கள் எண்ணம்.''

''இங்கே தாங்கள் தேடி வந்தவள் சாருலதா என்ற பெயரில் பிரபலமாகியிருப்பதாக அவர்களுக்குச் சந்தேகம் ஏற்பட்டது. கூடவே பிளாக்மெயில் செய்யும் எண்ணமும் தோன்றிவிட்டது. அந்த முறையில் அதிகமாகப் பணம் பண்ணலாமே!''

''சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ளவும் பிளாக்மெய்லுக்கு ஓர் ஆதாரத்தைத் தேடவும் அலகாபாத்துக்குத் திரும்பிப் போனார்கள். முன்பு ஒரு தடவை வீட்டுக்கு வந்தபோது, கல்யாணத்துக்குப் பிறகு நான் கணவருடன் எடுத்துக் கொண்ட புகைப்படம் சுவரில் சட்டம் போட்டு மாட்டப்பட்டிருப்பதைப் பார்த்திருக்கிறார்கள். அதில் ஒரு மூலையில் ஸ்டூடியோ பெயரைப் படித்த ஞாபகம் அவர்களில் ஒருவனுக்கு இருந்திருக்கிறது. நேராக அங்கே போய்ப் பழைய நெகடிவ்களையெல்லாம் தேடித் தங்களுக்குத் தேவையானதை எடுத்துக் கொடுக்கவும் சில பிரிண்டுகள் போட்டுத் தரவும் ஐம்பது ரூபாய் கொடுத்திருக்கிறார்கள்.''

''இதையெல்லாம் அந்த அயோக்கியர்களே உன்னிடம் சொன்னார்களாக்கும். திருட்டு ராஸ்கல்ஸ். ஐம்பது ரூபாய் முதலீடு ஐம்பதாயிரம் கிடைக்க வழி வகுத்திருக்குமே!''

''கன்னிப் பெண்ணாக வேஷம் போடுவதற்கு நான் கட்டும் அபராதம்!''

''நமக்குக் கல்யாணம் ஆன பிறகு நீ அபராதம் செலுத்தவும் வேண்டாம்;



## ந(டை)கச்சுவை ஷாக்!

நகத்தை அடிக்கடி கடிக்கும் பழக்கமுள்ளவர்களை மாற்றுவதற்காக அமெரிக்காவில் ஒரு புதுக் கருவி கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. இச்சிறிய கருவியைப் பொருத்திக் கொண்டால், நகத்தைக் கடித்ததும் 'ஷாக்' அடிக்கும். இப்படிச் செய்வதால், சில நாட்களில் நகம் கடிக்கும் பழக்கமே மறந்து விடுமாம்!

ஆதாரம்: ''டிட்பிட்ஸ்''
தகவல்: வி. எஸ். குமாரி

---

வேஷம் போடவும் வேண்டாம். இப்போதிருப்பது போலவே எப்போதும் லட்சுமிகரமாகத் தோற்றமளிக்கலாம். உன் கடந்த கால வாழ்க்கை எனக்குத் தெரியும்; 'தெரிந்துதான் கல்யாணம் செய்து கொண்டேன் என்று மஹிபால், சந்திரபாலிடம் சொல்லிவிட்டுப் போகிறேன். கழுத்திலே தாலி ஏறிய பிறகு உன்னைப் பற்றிய பழைய விவரங்களை அவர்கள் வெளியிட்டாலும் சமூகத்தில் உனக்கிருக்கும் அந்தஸ்தோ, கௌரவமோ, செல்வாக்கோ குறைந்து போக வழியில்லை. தைரியமாக நீ எல்லாரிடமும் வழக்கம் போல் பழகலாம். இதையெல்லாம் புரிந்துகொண்டதும் 'பிளாக் மெய்ல் செய்ய நமக்கு இனி ஆதாரம் ஏதுமில்லை; இனி நம் ஜம்பம் சாயாது' என்று அந்த இருவரும் வந்த வழியே திரும்பி விடுவார்கள். சரிதானா நான் சொல்வது?''

''நூற்றுக்கு நூறு சரி!''

''நம் கல்யாணம் நடந்து விட்டால் பிறகு குணசீலன் — கமலா திருமணமும் தடையின்றி நிறைவேறும் இல்லையா?''

''வாஸ்தவம்தான்.''

''உன் அப்பா ரொம்ப மன அமைதி பெறுவார். தமது விருப்பம் போல் அவர் ரிஷிகேசமோ, ராமேசுவரமோ எங்கு வேணுமானாலும் போகலாம்.''

''அதுவும் சரிதான்.''

''அப்படியானால் கிளம்பு.''

''எங்கே?''

''நாள் பார்க்கப் போகலாம், ஜோஸியரிடம்!'' அவன் எழுந்து நின்று அவள் கையைப் பற்றி இழுத்தான்.

''எனக்கு அழுவதா சிரிப்பதா என்று தெரியவில்லை. என்ன அவசரம்? உட்காருங்கள்.''

''இன்னமும் என்ன தயக்கம்? ஒரு வேளை உன் தொழில் வர்த்தக விவகாரங்களில் கணவன் என்ற முறையில் நான் தலையிட்டுத் தொந்தரவு கொடுப்பேன் என்று நினைக்கிறாயா?''

''உங்களுக்கு அதிலெல்லாம் சிரத்தை இருக்காது என்பது எனக்குத் தெரியும்.''

''பிறகு?''

''வேணு! உங்களுக்கு என்னைவிடச் சிறந்தவளாக ஒரு பெண் மனைவியாக அமைய வேண்டும் என்று நான் ஆசைப்படுகிறேன். நீங்கள் மிகவும் உயர்ந்த பண்புகளை உடையவர்; லட்சிய நோக்குக் கொண்டவர். நான் விதவை என்பது மட்டுமில்லை; பணத்தாசை பிடித்துத் தரக் குறைவான காரியங்களையும் செய்துள்ளவள். உங்களுக்கு நான் தகுதியானவள் அல்ல.''

சுற்றுச் சூழ்நிலை பற்றிக் கவலைப்படாமல் சட்டென்று அவள்கரத்தைப் பற்றித் தன் அதரங்களில் ஒரு விநாடி ஒற்றி எடுத்தான் வேணுகோபால். நாத் தழுதழுக்கக் கூறினான்: ''சாரு! நீ இப்படிப் பேசியதிலிருந்தே உன்னிடம் உயர் பண்புகளும் உள்ளன என்பது வெளியாகவில்லையா? சந்தர்ப்பச் சூழ்நிலைகள் சிலரைச் சில விதமாக இயக்குகின்றன; அவ்வளவுதான். உன்னைவிடச் சிறந்த பெண்கள் இந்த உலகத்தில் இருக்கிறார்கள். ஆனால் நான் காதலிப்பது குற்றங் குறைகள் உள்ள இந்தச் சாருலதாவைத்தானே! அவ்வாறு இருக்க என்னை மணக்கத் தகுதியுள்ளவள் என்று வேறு ஒருத்தியை நான் எப்படித் தேடிப் போக முடியும்? கல்யாணத்துக்கு நீ சம்மதம் தெரிவிக்காவிட்டால் வாழ்நாள் முழுதும் பிரும்மச்சாரியாக நான் காலம் கடத்த வேண்டியது தான்.''

''இப்போது இப்படித்தான் சொல்வீர்கள். நாளைக்கு ஒரு விதவையை நீங்கள் மணந்து கொண்டதாக எல்லோருக்கும் தெரிந்து விட்டால்? ஒரு ஸெகண்ட்ஹாண்ட் காரை நீங்கள் வாங்கினால்கூட, 'வேணுவுக்கு ஸெகண்ட்ஹாண்ட் சரக்கில் எப்போதுமே அலாதி மோகம்' என்று உங்களை யாராவது கிண்டல் செய்வார்கள். அப்போது உங்கள் மனம் வேதனை அடையும், இல்லையா?''

''அப்பா! அவ்வளவு தூரம் யோசிக்க வேண்டுமா? ஆனால் சரி, அதற்கும் பதில் சொல்லுகிறேன். நிச்சயம் எனக்கு மனக் கஷ்டம் ஏற்படத்தான் செய்யும்; ஆனால் அது ஒரு நண்பன் இப்படிப் பேசினானே என்பதற்காகத் தான் இருக்குமே ஒழிய உன்னை மணந்து கொண்டதற்காக என் மனம் வேதனைப் படாது. திருப்திதானா?''

சாருலதாவின் இமைகள் தாழ்ந்தன. அவனை ஏறிட்டுப் பார்க்க, அவனுடைய தீவிரத்தைக் காணப் பயந்தாள்.

அவன் தொடர்ந்தான்: ''நீ ஒரு விதவை என்பதை முதன் முதலாக

அறிந்து கொண்டபோது எனக்கு அதிர்ச்சியாகத்தான் இருந்தது சாரு. அதை நான் ஒளிக்க விரும்பவில்லை. ஆனால் அதனால் உன்மீது எனக்கிருந்த காதல் பாதிக்கப்படவில்லை என்பது சத்தியம்.''

''வேணு! அவசரப்படாமல் சில நாட்கள் யோசித்துப் பாருங்கள். உங்களுக்கு என்மீது ஏற்பட்ட அனுதாபத்தைக் காதல் என்று தவறாகப் புரிந்து கொண்டு பின்னால் அவதிப்படப் போகிறீர்கள்!''

''நான்ஸென்ஸ்'' என்றான் வேணுகோபால். ''உன்மீது அனுதாபம் எனக்கு எப்போது பிறந்தது? நீ சிறுமியாக இருந்தபோதும், பதினைந்து வயதுக் குமரியாக இருந்தபோதும் உனக்கு ஏற்பட்ட அனுபவங்களைத் தெரிந்து கொண்ட பிறகு. ஆனால் அதற்குப் பல மாதங்களுக்கு முன்பே உன்மீது எனக்குள்ள காதலை நான் வாய் விட்டுச் சொன்னதில்லையா? வா, போகலாம்.''

அவளைக் காரில் ஏற்றிக் கொண்டு கிளம்பினான் வேணுகோபால்.

''எங்கே போகிறோம் நாம்?''

''மயிலாப்பூர் அலமேலுமங்காபுரத்தில் எனக்குத் தெரிந்த ஒரு ஜோஸியர் இருக்கிறு[illegible] அவரிடம் நான் ஜோஸியம் பார்க்க [illegible]வதில்லை என்று அவருக்கு ரொம்பக் குறை. என் ஜாதகமே என்னிடம் கிடையாது; நான் அவரிடம் எதற்குப் போகப் போகிறேன்? இப்போது 'முகூர்த்த நாள் குறித்துக் கொடுங்கள்' என்று கேட்டுத் தட்சிணை கொடுத்தால் சந்தோஷப் படுவார்! பாவம், நல்ல மனுஷன்!'' உற்சாகமாகப் பேசினான் வேணுகோபால்.

சாரு பதில் கூறவில்லை.

''கொஞ்சம் சிரித்துத்தான் வையேன். கல்யாணப் பெண் எதையோ பறிகொடுத்து விட்டது போல் உட்கார்ந்திருக்கலாமா?''

''வேணு! நீங்கள் ஒரு காந்தியவாதி என்பதை நிரூபிக்க இந்த விதவையை மணந்து கொள்ள வேண்டிய அவசியமில்லை.''

''உன் சந்தேகங்களுக்கு ஓர் எல்லையே கிடையாதா, சாரு? நான் பெரிய ஹீரோவாக விளங்க வேண்டும் என்பதற்காக இந்தக் காரியத்தைச் செய்யவில்லை. உன்மீதுள்ள அநுதாபத்தாலோ அல்லது காந்திஜியின் நூல்களை நான் படித்திருப்பதாலோ இப்படி நான் இயங்கவில்லை. உன்னை மனைவியாக அடைய வேண்டும் என்ற ஒரே ஆசைதான்




## ஹங்கேரிக்கு நஷ்டம் ஸ்பெயினுக்கு லாபம்!

உலகக் கால்பந்தாட்டக்காரர் புஷ்காஸ் 1953ல் இங்கிலாந்தில் சர்வதேசக் கால்பந்தாட்டப் போட்டியில் வெகு நன்றாக ஆடி அனைவரது கவனத்தையும் கவர்ந்தார். ஹங்கேரி நாட்டைச் சேர்ந்த புஷ்காஸ் புதாபெஸ்ட் புரட்சியின்போது ஹங்கேரியை விட்டு ஓடி ஸ்பெயினில் அடைக்கலம் புகுந்தார். அவரைச் சிறைப்பிடிக்க முயன்று தோல்வி கண்டதும் ஹங்கேரி ரேடியோ அவர் இறந்துவிட்டதாகவே கதை கட்டியது. புதாபெஸ்ட் புரட்சியினால் புஷ்காஸை இழந்ததுடன் ஹங்கேரி ஆட்டக்காரர்கள் உலகக் கோப்பையையும் கோட்டை விட்டார்கள்! ஹங்கேரிக்கு நஷ்டம்; ஸ்பெயினுக்கு லாபம்! தலைசிறந்த கால்பந்தாட்டக்காரர் புஷ்காஸை ஸ்பெயின் நாடு பெற்று விட்டது!

-- குண்டுமணி

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

எனக்கு. உன்னைக் கல்யாணம் செய்து கொள்ளா விட்டால் என் வாழ்க்கை நிறைவு பெறாதே என்ற சுயநல நோக்கம்தான்.''

''உங்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன். இத்தனை நாட்கள் பொறுத்தீர்கள். இன்னும் கொஞ்சம் 'டைம்' கொடுங்கள்.''

''இந்த விஷயத்தில் மட்டும் நீ யோசிக்க ஆரம்பித்தால் வாழ்நாள் முழுதும் கழிந்தாலும் முடிவெடுக்க மாட்டாய். அதனால் உனக்காக நானே தீர்மானித்து விடுகிறேன்.''

''வேண்டாம்; சீக்கிரமே உண்டு இல்லை என்று நானே சொல்லிவிடுகிறேன்.''

''சரி என்று நீ தலையாட்டிச் சந்தோஷத்துடன் சம்மதமளிக்க நாலு நாள் அவகாசம் தருகிறேன், சாரு! ஆனால் இல்லை என்ற பேச்சை மட்டும் எடுக்காதே. அதை நான் ஒரு நாளும் ஒப்புக் கொள்ளவே மாட்டேன்'' என்றான் வேணுகோபால். (தொடரும்)

“யாருக்காக நான் வாழ்கிறேன்? எதற்காக இந்த உடலுக்கு ஊட்டம் கொடுத்து உயிரை இதில் பிடித்து வைத்துக் கொண்டிருக்கிறேன்? எனக்கு இருந்த ஒரே உயிர்ப் பிடிப்பு என்னை விட்டுப் பிரிந்து போய்விட்ட பிறகும் எந்த சாம்ராஜ்யத்தைக் காப்பாற்றுவதற்காக நான் உயிர் வாழ்ந்து கொண்டிருக்கிறேன்? ஓடியாடி, உழைத்து ஒவ்வொன்றும் தேடி என் கையாலேயே சமையல் செய்து, நானே என் கையால் எடுத்துப் போட்டுக் கொண்டு தனியே உட்கார்ந்து சாப்பிட்டு... சேச்சே! இதைவிட... இதைவிட....”

சட்டென்று திடுக்கிட்டு நின்றது சிரௌதிகளின் சிந்தனை. நெஞ்சை ஏதோ அடைப்பதுபோலிருந்தது. சுரீரென்று வலி! கண நேரத்துக்குத்தான். பிறகு அது மறைந்து விட்டது. இப்போதெல்லாம் இருந்தாற் போலிருந்து இந்த மாதிரி வலி தோன்றுகிறது, ஜீரண சக்திக் குறைவுதான் நெஞ்சு வலிக்குக் காரணம் என்று டாக்டர் சொன்னதை அவர் ஒப்புக்கொள்ளவில்லை. பாரு அவர் நெஞ்சில் எவ்வளவு பலமான அதிர்ச்சியை ஏற்படுத்தி விட்டுச் சென்றுளென்று டாக்டருக்கு எப்படிப் புரிய வைப்பது? அப்போதே நின்றுபோயிருக்க வேண்டிய நெஞ்சுதானே இன்னும் வெட்கமில்லாமல் இயங்கிக்




கொண்டிருக்கிறது! இந்த வலிகூட வராமல் இருக்குமா என்ன?

எழுந்து தாம்பூல வாயைக் கொப்பளித்து விட்டு டாக்டர் கொடுத்திருந்த மாத்திரை ஒன்றை எடுத்துப் போட்டுக் கொண்டு மீண்டும் ஈஸிசேரில் சாய்ந்து கொண்டார் சிரௌதிகள். பாருவின் நினைவு அவர் நெஞ்சில் முள்ளாகத் தைத்து வேதனை செய்தது. பாசத்தை யெல்லாம் கொட்டி உயிருக்குயிராக வளர்த்த ஒரே பெண் எப்படி ஒரே படியாக அவர் உறவைத் துண்டித்துக் கொண்டு போய்விட்டாள்! இனி தந்தையின் முகத்தில் விழிக்கவே முடியாதென்ற நிலையை ஏற்படுத்திக் கொண்டு சென்றுவிட அவள் மனம் எப்படித் துணிந்தது? அவள் தாயாரை இழந்த நாளிலிருந்து தாயாருக்குத் தாயாராய், தந்தைக்குத் தந்தையாய் அவளுடைய எதிர்கால நலம் ஒன்றையே கருத்தில் கொண்டு அவர் பட்ட பாடெல்லாம் விழலுக்கிறைத்த நீராகிவிட்டதே!

ஒவ்வொரு விதத்திலும் பாரு மேன்மையாயிருக்க வேண்டுமென்று அவர் எப்படியெல்லாம் தன்னலத் தியாகம் செய்து வந்தார். தம்முடைய சொக்களுடைய குத்தல் பேச்சுக்களைப் பொருட்படுத்தாமல் பாருவைப் படிக்க வைத்தார். யார் யாரிடமோ மன்றாடிச் சிபாரிசு பிடித்து அவளுக்கு மருத்துவக் கல்லூரி நூல் நிலையத்தில் வேலையும் வாங்கிக் கொடுத்தார். ஆயிற்று, அவளுக்குத் தகுந்த இடமாகப் பார்த்துக் கலியாணம் செய்து வைப்பதுதான் பாக்கி. அதற்கும் சீக்கிரம் வழி பிறக்க வேண்டும் தெய்வமே, என்று அவர் பிரார்த்தனை செய்து கொண்டிருந்த வேளையில்... பாருவின் அந்தக் கடிதம்... அவர் நெஞ்சைச் சுக்கு நூறாக்கி வாழ்விலேயே அவரை நம்பிக்கை இழக்கச் செய்தது அந்தக் கடிதம்... அந்தக் கடிதத்தை எழுதுவதற்கா அவளை அவ்வளவெல்லாம் படிக்க வைத்தார்!

கடிதத்தை அவர் சுக்குநூறாக் கிழித்தெறிந்து விடவில்லை. ஒரு வருஷமாக அது அவர் பெட்டிக்கடியில் பத்திரமாக இருந்தது. தன்னுடைய அன்பை மகள் உதறி எறிந்து விட்டுப் போய் விட்டாள் என்ற நிராசையை



மறக்க நினைத்தவர் அவளுடைய துரோகத்தின் சின்னத்தை மட்டும் ஏன்தான் அவ்வளவு கருத்துடன் காப்பாற்றி வந்தாரோ! அந்த நிராசையைத் தாம் பாராட்டவில்லை என்று தம்மைத் தாமே ஏமாற்றிக் கொள்ளவா? அந்தக் கடிதத்தின் வாசகம் அவருக்கு மனப்பாடமாகி யிருந்தது. ஒரு தடவை இரண்டு தடவையா அதைப் படித்திருப்பார்!

“என்னுடைய முடிவு உங்களுக்கு எவ்வளவு வேதனை அளிக்கும் என்று எனக்குப் புரிகிறது. நான் மன்னிக்க முடியாத குற்றம் செய்து விட்டதாகவே நீங்கள் நினைப்பீர்கள் என்றும் நான் அறிவேன். ஆனால் நான் செய்த முடிவே சரியானதென்று நாளடைவில் நீங்கள் உணர முடியுமென்றே நம்புகிறேன். என்னுடைய எதிர்காலம் உங்கள் மனத்தில் ஒரு சுமையாய் இருப்பதை நான் விரும்பவில்லை. பெண்ணைப் பெற்றவர்களை

அத்தியாயம் 33

# தீயவர்க்கும் நன்மை

சாருலதா பில்டிங்ஸை விட்டுச் சந்திரபாலும் மஹிபாலும் வெளியே வந்தார்கள். இருவரிடமும் இரு தோல் பைகள் இருந்தன. ஒவ்வொரு தோல் பையிலும் ஏழாயிரத்து ஐந்நூறு ரூபாய்.

மவுண்ட் ரோட்டில் அவர்கள் ஒரு டாக்ஸியைப் பிடிக்கும் நோக்கத்துடன் மெல்ல நடந்த போது சாலை ஓரத்தில் நிறுத்தப்பட்டிருந்த ஒரு காரிலிருந்து வேணுகோபால் கீழே இறங்கிப் பிளாட்ஃபாரம் பக்கமாக வந்து பின்பக்கம் கதவைத் திறந்து பிடித்தான். அவர்களை ஏறிக் கொள்ளுமாறு சைகை காட்டினான்.

அவர்கள் விழித்தார்கள்.

"ஏறுங்கள்" என்றான் வேணுகோபால்.

"எதற்கு?"

"எல்லாம் உங்கள் நன்மையை உத்தேசித்துத்தான்."

அவர்கள் மேலே நடந்தார்கள். கை நீட்டித் தடுத்த வேணுகோபால் கூறினான்: "நீங்கள் இரண்டு பேர். நான் ஒண்டி ஆள். நீங்கள் பல சாலிகள். என்னைப் பாருங்கள். உங்களை நான் என்ன செய்துவிட முடியும்? அநாவசியமாக எதற்குப் பயப்படுகிறீர்கள்?"

தெம்பு பெற்று இருவரும் காரின் பின்பக்கம் ஏறிக் கொண்டார்கள்.

கார் கிளம்பியது.

"நாம் எங்கே போகிறோம்?" மஹிபால் கேட்டான்.

"பாங்குக்கு."

"எந்த பாங்குக்கு?"—சந்திரபால்.

"நீங்கள் சாருலதாவின் கல்யாண ஃபோட்டோ, நெகடிவ்களை எந்த பாங்கில் ஸேஃப் டெபாஸிட் வால்டில் பத்திரப்படுத்தி வைத்திருக்கிறீர்களோ அந்த பாங்குக்கு."

"அது எந்த பாங்கு என்று உனக்கு எப்படித் தெரியும்?"

"நீங்கள் சொன்னால்தான் தெரியும்."

கொச்சைத் தமிழும் ஆங்கிலமும் கலந்த மணிப் பிரவாள நடையில் மஹிபாலும் சந்திரபாலும் மாறி மாறிப் பேசினார்கள். இடையில் சில இந்தி வார்த்தைகள் புகுவதையும் அவர்களால் தடுக்க முடியவில்லை.

"எந்த பாங்கு என்று நாங்கள் எதற்காக உனக்குச் சொல்லப் போகிறோம்?"

"ஏனென்றால் நீங்கள் ஒரு தர்மசங்கடத்தில் அகப்பட்டுக் கொண்டிருக்கிறீர்கள்! அதனால் கட்டாயம் சொல்வீர்கள் என்று எதிர்பார்க்கிறேன்."






"என்ன சங்கடம் வந்துவிட்டது எங்களுக்கு?"

"பிளாக் மெயில் செய்வது பெரிய குற்றம். தெரியுமல்லவா?"

அவர்கள் சிரித்தார்கள். "பயமுறுத்துகிறாயா?"

"இல்லை. நான் போலீஸாரிடம் போகப் போவதுமில்லை. நீங்கள் யோக்கியமாக வாழ ஒரு சந்தர்ப்பம் அளிக்க விரும்புகிறேன்."

"அடாடா! எவ்வளவு பெருந்தன்மை!" என்றான் மஹிபால்.

"உன் அனுதாபம் தேவையில்லை" என்றான் சந்திரபால். "போலீஸில் சொல்லிக் கொள். அவர்கள் எங்கள் மீது நடவடிக்கை எடுக்க எந்தவித சாட்சியமும் கிடையாது!"

"சாட்சியம் இருக்கிறது."

"என்ன அது?"

''ஒரு டேப் ரிகார்டர். அதை இயக்கினால் நீங்கள் சாருலதாவைப் 'பிளாக் மெயில்' செய்து பேசுவது கேட்கும்.''

''யார் எங்கள் குரலைப் பதிவு செய்தது?'' திடுக்கிட்டுக் கேட்டான் மஹிபால். ''எப்படி எங்களுக்குத் தெரியாமல் நடந்தது இது?''

''உண்மையைச் சொல்வதானால், எதிர்பாராமல் நிகழ்ந்துவிட்ட செயல் தான். உங்களைத் தண்டிக்கத் தெய்வமே தீர்மானித்து இப்படி ஓர் ஏற்பாட்டைச் செய்ததாக நினைக்கத் தோன்றுகிறது.''

''அந்த டேப் ரிகார்டரை வைத்துக் கொண்டு போலீஸார் என்ன செய்வார்கள் ?''

''அதைச் சாட்சியமாகக் கோர்ட்டில் சமர்ப்பிக்க முடியுமா என்பது எனக்குத் தெரியாது. ஒரு வேளை அது சாத்தியமாகலாம். இல்லா விட்டாலும் போலீஸார் உங்கள் மீது சந்தேகப்பட்டு நடவடிக்கை எடுக்க அது போதுமான ஆதாரமாகும். பெரிய அளவில் பிளாக்மெயில் செய்யத் துணிகிறவர்கள் ஏற்கனவே மோசடி, கொள்ளை போன்ற காரியங்களிலும் ஈடுபட்டிருக்கலாம் என்று கருதுவார்கள். லாக்அப்பில் தள்ளி விசாரிப்பார்கள். பூர்வோத்திரத்தைக் கேட்பார்கள். அது சம்பந்தமாய் விவரம் அறிய உத்தரப்பிரதேசப் போலீஸாருடன் தொடர்பு கொள்வார்கள்.''

''ஆனால் நீ போலீசுக்குப் போகப் போவதில்லை என்று சொன்னாயே ?'' என்றான் மஹிபால்.

''எப்படிப் போவான் ? அங்கே போனால் நம் கதையுடன் சாருலதாவைப் பற்றிய பழைய கதைகளும் வெளியாகி விடாதா ? இவன்தான் அவளைக் காதலிக்கிறானே! அவள் மனம் கஷ்டப்படுவதை இவன் விரும்ப மாட்டான். அதை இவனால் சகிக்க முடியாது!'' என்றான் சந்திரபால்.

''நீ தினந்தோறும் அவளுடன் காரில் ஊர் சுற்றுவதை நாங்கள் பார்க்கவில்லை என்று நினைக்கிறாயா ?'' என்றான் மஹிபால்.

''நீங்கள் தப்புக் கணக்குப் போடுகிறீர்கள். அவள் விதவை என்பது தெரிந்தும் நான் சந்தோஷத்தோடு அவளைக் கல்யாணம் செய்து கொள்ளக் காத்திருக்கிறேன். அவளும் சம்மதித்து விடுவாள் என்றே எதிர்பார்க்கிறேன். இன்னும் நாலு நாட்களில் பதில் சொல்வதாக வாக்களித்திருக்கிறாள்.''

''உனக்கு அவளைப் பற்றித் தெரியும் ; அது உலகுக்கும் தெரிய வேண்டுமா ?''

''அவள் ஒரு விதவை என்று வீதி வீதியாகப் போய்த் தம்பட்டம் அடியுங்கள்; கவலை இல்லை. நான் அவள் கணவனான பிறகு அவள் சுமங்கலித் தோற்றம் யார் கண்ணையும் உறுத்தாது. அவள் கல்யாணப் படங்கள் உங்களிடம் இருப்பதால் ஒரு நஷ்டமுமில்லை.''

சற்று நேரம் மௌனம் நிலவியது. மஹிபால், சந்திரபால் இருவருமே அவன் கூறியதை ஜீரணித்து உட்பொருளை உணர்ந்தார்கள்.



''நாங்கள் எந்த ஆதாரத்தின் மீது நின்று சாருலதாவைப் பிளாக் மெய்ல் செய்தோமோ அது நழுவிப் போய் விட்டது!'' என்று பரிதாபமான குரலில் சொன்னான் மஹிபால்.

''ஆனால் நாங்கள் பிளாக் மெயில் செய்தோம் என்பதற்கான ஒரு சாட்சியம் உன்னிடம் அகப்பட்டுக் கொண்டிருக்கிறது'' என்று பயத்துடன் பேசினான் சந்திரபால்.

''ஆபத்தான நிலைமை'' என்று இருவரும் ஒரு சேர ஒத்துப் பாடினர்.''

''உங்களுக்கு ஓர் ஆபத்தும் இல்லை. ஆரம்பத்திலேயே நான் சொன்னேனே, போலீஸாரிடம் போகப் போவதில்லை என்று. உங்களுக்கு நன்மை செய்ய நினைக்கிறேன். டேப் ரிகார்டரை உங்களுக்கே தந்து விடுகிறேன்.''

''அதற்குப் பதிலாகச் சாருவின் கல்யாணப் படங்களையும் நெகடிவ்களையும் நாங்கள் உன்னிடம் தந்துவிட வேண்டும் என்று எதிர்பார்க்கிறாயா?''

''நான் ஒரு நிபந்தனையும் விதிக்கவில்லை. நீங்களாகவே நெகடிவ்களையும் ஃபோட்டோக்களையும் என்னிடம் கொடுத்தால் வேண்டாம் என்றும் சொல்லப் போவதில்லை. உங்கள் மனம் மாறி விட்டது. நீங்கள் நல்லவர்களாகி விட்டீர்கள் என்பதை அந்தச் செயல் எனக்கு உணர்த்தும். சந்தோஷம் அடைவேன்.''

''உன்னுடைய காரில் எதற்காக ஏறினேம் என்று வருத்தமாயிருக் கிறது. சாருலதாவைப் பார்க்க வரப் போகிறேம் என்று உனக்கு எப்படித் தெரியும்? வாசலில் காத்திருந்தாயே நீ?''

''சாரங்கனிடம் சொல்லி வைத் திருந்தேன். அவன் ஃபோன் பண்ணி இடத்தில் ரகசியமாய் வைத்திருக் கிறேன். அழைத்துப் போகட்டுமா, அங்கே ?''

''முதலில் பாங்குக்குப் போ !''

வேணுகோபாலின் உள்ளம் குதூ கலத்தால் துள்ளியது. ''எந்த பாங்கு?' என்று கேட்டான்.



ஞன். மத்தியானம் இரண்டரை மணிக்கு உங்களேச் சாருலதா வரச் சொல்லியிருக்கிருள் என்று தகவல் கொடுத்தான்.''

''அந்த டேப் ரிக்கார்டர் எங்கே இருக்கிறது?''

''நீங்கள் நெகடிவ்களேப் பத்திரப் படுத்தி யிருப்பது போல் நானும் டேப் ரிகார்டரை யார் கண்ணிலும் படாத

''மயிலாப்பூர் ஸ்டேட் பாங்கு. நெகடிவ்கள், ஃபோட்டோக்கள் எல்லா வற்றையும் கொண்டு வருகிறேம். பிறகு டேப் ரிக்கார்டர் இருக்குமிடத்துக்குப் போவோம். பண்டமாற்று செய்து கொள்ளலாம்.''

'ஸேஃப் டெபாஸிட் வால்ட்'டி லிருந்து அவற்றை எடுத்துக் கொண்டு வந்தார்கள். வேணுகோபால் காரை


LIFEBUOY
for health
LIFEBUOY SOAP
லைப்பாய்
இருக்குமிடம்: அதுவே
ஆரோக்கியம்
இருக்குமிடம்
புத்துணர்ச்சி தருவதிலே ஈடிணையற்றது லைப்பாய் ஸ்நானம். உற்சாகப் பெருக்கு. உல்லாச ஊற்று. ஆரோக்கிய மிதப்பு. நல்ல சோப்புக்குரிய நன்மைகள் யாவும் பெறுவீர், மேலும் பெறுவீர் லைப்பாய் துணையால்...
அழுக்கிலுள்ள கிருமிகளைக்
கழுவிக் களைவது
லைப்பாய்

அடையாறு, திருவான்மியூர் தாண்டி முத்துக்காடு சாலையில் ஓட்டிச் சென்றான். அவன் மனத்தில் உற்சாகம் கரை புரண்டதால் பிரபலமான சினிமாப் பாடல் ஒன்றினைச் சீழ்க்கை அடித்தபடி வண்டியைச் செலுத்திக் கொண்டு போனான். காரின் வேகத்துக்கேற்ப கிலோ மீட்டர் கல்கள் ஒன்றன்பின் ஒன்றாய் காரை நெருங்கிப் பின்னால் சென்று மறைந்தன.

## அத்தியாயம் 34

# ஏமாற்றம்!

திருவான்மியூரிலிருந்து பத்தாவது கிலோமீட்டர் கல் தாண்டி இடது பக்கம் திரும்பியது கார்.

''இது என்ன அமானுஷ்யமான பிரதேசமாயிருக்கிறதே!'' என்றான் மஹிபால்.

''ஞாயிற்றுக்கிழமை அதிகாலையில் கிளம்பி வந்தால், இருட்டுகிற சமயம் தான் இதை விட்டுப் புறப்படுவேன். அதுவரை கடலில் குளிக்க வேண்டியது, மணலில் நடக்க வேண்டியது, பின்னோடு கொண்டு வந்த சாப்பாட்டுப் பொட்டலங்களைக் காலி செய்ய வேண்டியது, படுத்தபடி படிக்க வேண்டியது, தூங்க வேண்டியது. விழித்துக் கொண்டதும் மீண்டும் கடல் ஸ்நானம், மறுபடியும் சாப்பாட்டுப் பொட்டலம்....''

''அன்றாட 'டல் ரொட்டீனி' லிருந்து ஒரு மாறுதல்!''

''போது விடிந்தால் போது போனால் நோயாளிகளைத் தட்டிக் கொட்டிப் பார்த்து அலுத்து விடுகிறது. வீட்டிலிருந்தால் ஞாயிற்றுக்கிழமை கூடச் சும்மாவிட மாட்டார்கள். அதனால் தான் ஓடி வந்து விடுகிறேன். இங்கே நான் டாக்டர் என்பது யாருக்கும் தெரியாது.''

''அந்த விஷயம் பரவி விட்டால் இங்கேயும் ஞாயிற்றுக்கிழமைகளில் நீண்ட 'கியூ' நிற்குமே!'' என்றான் மஹிபால்.

''ஆமாம், சுற்று வட்டாரத்தில் உள்ள சேரி மக்களெல்லாம் குஞ்சு குட்டிகளுடன் திரண்டு வருவார்கள்'' என்றான் சந்திரபால்.

''கடற்கரையை ஒட்டினாற் போல் பத்து கிரவுண்டு நிலம் வாங்கினேன். நகரத்துடன் ஒப்பிடும்போது விலை மலிவுதான். ஆனால் நாளுக்கு நாள் இங்கேயும் கூடி வருகிறது. இரண்டே அறைகள் கொண்ட சின்ன வீடு கட்டினேன். தோட்டத்தைக் கவனிக்க ஓர் ஆள். வீட்டுக்குப் பெயர் என்ன தெரியுமா?' 'வீக்கெண்ட்!' ''

''அச்சா! பொருத்தமான பெயர் தான். ஆனந்தமாகப் பொழுது போகும் இங்கே.''

''போன ஞாயிற்றுக்கிழமை மட்டும் அத்தனை ஆனந்தமாக இல்லை.''

''ஏன் அப்படி?''

''உங்கள் குரல் பதிவாகி யிருந்த டேப் ரிகார்டரை இயக்கி முற்பகலில் திரும்பத் திரும்பக் கேட்டுக் கொண்டிருந்தேன். எப்படி உங்களிடம் மன மாற்றத்தை ஏற்படுத்தலாம் என்று யோசித்தபடி இருந்தேன். வீடு திரும்பும்போது ரிகார்டரை எடுத்துப் போக மறந்து விட்டேன். இங்கேயேதான் இருக்கிறது.''

கரடு முரடான குண்டும் குழியுமான சாலையில் எவ்வளவு தூரம் முன்னேற முடியுமோ அவ்வளவு தூரம் சென்று விட்டது கார். ''இதற்கு அப்பால் சாலை இல்லை. நடந்துதான் போக வேண்டும்.'' வேணுகோபால் கீழே இறங்கினான்.

ஒரு சவுக்குத் தோப்பைக் கடந்து சென்றார்கள். ''இது குறுக்கு வழி. லே அவுட் பிளானில் சாலை இருக்கிறது. ஆனால் பாதை போட நான்தான் செலவழிக்க வேண்டும். ஏகப்பட்டது ஆகும்; அப்புறம் பார்த்துக் கொள்ளலாம் என்று விட்டு விட்டேன்.''

'வீகெண்ட்' என்று போர்டு போட்டிருந்த இடத்துக்கு வந்து சேர்ந்தார்கள். வேணுகோபால் பூட்டியிருந்த கேட்டைத் திறந்தான்.

''தோட்டக்காரன் இருப்பதாய்ச் சொன்னாயே?''

''ஐயா ஞாயிற்றுக்கிழமைகளில்தான் வருவார் என்று அவனுக்குத் தெரியும். அப்படியிருக்க வேலை செய்ய உடம்பு வணங்குமா? வேறு எங்கேயாவது கூலி வேலை செய்யப் போயிருப்பான். அல்லது குப்பத்தில் தன் குடிசையில் படுத்துத் தூங்கிக் கொண்டிருப்பான்.''

''ஆகக்கூடி இந்தப் பிரதேசத்தில் நாம் மூவர்தான் இப்போது இருக்கிறோம்!'' என்று உறுதிப்படுத்திக் கொள்ள விழைவது போல் கேட்டான் மஹிபால்.

''என்னைப் போலவே இந்தப் பக்கத்தில் வேறு பலரும் 'பிளாட்' வாங்கிப்

போட்டிருக்கிறார்கள். ஆனால் 'எல்லா ருமே சனி, ஞாயிறில்தான் வருவார்கள்'. 'ஹாலிடே ரிஸார்ட்' இது.''

நாலு தூண்களை எழுப்பி அதன் மேல் உயரத்தில் அலங்காரமாய்க் கட்டப்பட்டிருந்தது வீடு. ஏணி போன்று ஆனால் வசதியாக அமைக்கப் பட்டிருந்தன படிகள்.

''மரத்துக்கு மேலே கட்டின வீடு மாதிரி, இது என்ன ஃபாஷன்?''

''பர்ப்பஸும் உண்டு. இந்தப் பக்கத்தில் ஓநாய், நரிகள் நிறைய இருக்கின்றன. சில சமயங்களில் சனிக்கிழமை இரவே இங்கே வந்து படுத்து விடுவேன். அதிகாலையில் சூரியோதயத்தைப் பார்க்க ரொம்ப ஜோராக இருக்கும். ஆனால் இரவு நேரத்தில் நரிகள் ஊளையிடுவது கேட்கச் சகிக்காது. பாம்புகளுக்கோ பஞ்சமேயில்லை. அதனால்தான் பாதுகாப்புக்காக இப்படித் தூண்களின் மேல் வீடு கட்டுவது.''

''உயரமாக இருந்தால் 'வியூ'வும் நன்றாக இருக்குமே?'' என்றான் மஹிபால்.

''ஆமாம், சவுக்குத் தோப்பு பார்வையை மறைக்காது. நெடுந் தூரத்துக்கு 'நெடுந்தூரம் கடற்கரை மணலும் அலைகடலும் நன்றாகத் தெரியும்.''

படிகளில் ஏறி வாசல் கதவு பூட்டைத் திறந்தான் வேணுகோபால். அந்த உயரத்தில் காற்று பிய்த்துக் கொண்டு போயிற்று. ''உள்ளே ஒரே இருட்டாக இருக்கும்; சற்று இருங்கள்; ஜன்னல் கதவுகளைத் திறக்கிறேன். இங்கே மின்சாரம் கிடையாது. இரவு நேரத்தில் தங்கினால் அரிக்கேன் விளக்குத்தான்.''

ஜன்னல்களைத் திறந்ததும் அந்தச் சிறிய அறையில் ஒளி வெள்ளம் பரவியதுடன் காற்றுச் சுழலும் நிரம்பியது. 'ஹோ'வென்ற அலைகடலின் ஆரவார இரைச்சலுடன் சவுக்குத் தோப்பில் புகுந்து செல்லும் காற்றின் 'உய்' என்ற அட்டகாசக் கூச்சல் போட்டியிட்டது.

''உட்காருங்கள்'' என்று அங்கிருந்த இரு நாற்காலிகளைக் காட்டி விட்டுப் படுக்கை விரிக்கப்படாத நாடாக் கட்டிலில் அமர்ந்தான் வேணுகோபால். கட்டிலின் ஒரு மூலையில் டன்லப்பில்லோ தலையணை மட்டும் இருந்தது. அதன் மேல் முழங்கையை ஊன்றிச் சாய்ந்தான்.

''வாரத்தில் ஒரு நாள்தானே வரப் போகிறோம் என்பதால், சேர்பார், கட்டில் என்று எந்தயும் வாங்கிப் போடவில்லை நான். வசதியாக இராது. பக்கத்து அறையில் ஒரு ஸ்டவ் மட்டும் வைத்திருக்கிறேன். இன்ஸ்டண்ட் காப்பியும் பௌடர் பாலும் பயன்படுத்திக் காப்பி போட்டுக் கொள்ளலாம்.''

''அதெல்லாம் கிடக்கட்டும். டேப் ரிகார்டர் எங்கே? எதற்காக அதை இன்னும் மறைத்து வைத்துக் கொண்டிருக்கிறாய்?''

தலையணையைத் தட்டி வேணு கோபால் சிரித்தான். ''காரியத்திலேயே கண்ணாய் இருக்கிறீர்கள்!''

''உன்னிடமிருந்து டேப் ரிகார்டரை வாங்கிக் கொண்டு பிறகு நெகடிவ்களையும் ஃபோட்டோக்களையும் கொடுக்காமல் ஏமாற்றி விடுவோம் என்று பயமா?''

''எனக்கு ஒரு பயமும் இல்லை. நான்தான் முன்பே சொன்னேனே. நீங்கள் நெகடிவ்களையும் ஃபோட்டோக்களையும் கொடுத்தால் சந்தோஷத்தோடு வாங்கிக் கொள்கிறேன். அவற்றை நீங்கள் தராவிட்டாலும் நான் டேப் ரிகார்டரை உங்களுக்குத் தந்துவிடப் போகிறேன்.''

''நீ ஒரு பைத்தியக்காரன்'' என்றான் மஹிபால்.

''இல்லை, இல்லை! இவன் காந்தித் தாத்தா கதையைப் பேசுகிறான்'' என்றான் சந்திரபால்.

''ஓ தீயவர்க்கும் நன்மை செய்யும் நோக்கமா?''

''எவ்வளவு கர்வத்தோடு உட்கார்ந்திருக்கிறான், பார்த்தாயா?''

அவர்கள் மாறி மாறிப் பேசிக் கொண்டேயிருக்கையில் வேணு கோபால் தலையணையைத் தூக்கித் தரையில் போட்டான். அதனடியில் பாட்டரியால் இயங்கும் சின்னஞ்சிறிய டேப் ரிகார்டர் இருந்தது. அதை இயக்கினான். சாருலதா, மஹிபால், சந்திரபால் ஆகியோர் குரல்கள் ஒலித்தன. அதைக் கேட்டு அவ்விருவர் முகத்திலும் கலவரம் நிலவியது. ரிகார்டரை நிறுத்திவிட்டு எழுந்து அவர்களை நெருங்கி டேப் ரிகார்டரை நீட்டினான் வேணுகோபால். மஹிபால் வாங்கிக் கொண்டு, ''இது ஒரிஜினல் டேப்தான், டியூப்ளிகேட் இல்லை என்பதற்கு என்ன அத்தாட்சி?'' என்றான்.

வேணுகோபால் பெரிதாக ஏளனமாகச் சிரித்தான். ''நீங்கள் சாருலதாவை ஏமாற்றியது போல் நானும் இதற்கு நகல் எடுத்துக் கொடுத்து உங்களை ஏமாற்றுவேன் என்று நினைத்

திர்களா ? கவலைப்படாதீர்கள், இது ஒரிஜினல் டேப்தான். சத்தியம்.''

''நீ ஒரு முட்டாள்'' என்றான் சந்திரபால்.

''பாங்குக்குப் போய் நெகடிவ்களை யும் புகைப்படங்களையும் எடுத்து வந்தோமே ஒழிய அதை உன்னிடம் கொடுக்கும் உத்தேசம் எங்களுக்கு ஆரம்பத்திலிருந்தே இல்லை'' என்றான் மஹிபால்.

''நிஜமாகவா ?'' என்றான் வேணு கோபால். அவன் ஏமாற்றம் முகத்தில் தெரிந்தது.

இப்போது அவர்கள் சிரித்தார்கள். ''இங்கே வந்த பிறகு நீ ஏதாவது முரண்டு பிடிக்கப் போகிறாயே என்ப தால் எதற்கும் கையில் இருக்கட்டும் என்று கொண்டு வந்தோம். ஆனால் தரப் போவதில்லை.'' — மஹிபால்.

''நீதான் அதனால் பரவாயில்லை என்று சொன்னாயே?'' — சந்திரபால்.

''படங்களும் நெகடிவ்களும் எனக் குக் கிடைக்கவில்லையே என்ற கவலை இல்லை எனக்கு. என்னை நீங்கள் நம்ப வில்லையே என்பதுதான் ஏமாற்றம். இங்கு வந்த பிறகு நெகடிவ் — ஃபோட்டோ எங்கே என்று கேட்டுத் தகராறு செய்வேன் என்று நினைத் தீர்கள் அல்லவா ? அதைவிடப் பெரிய ஏமாற்றம்: உங்கள் மனத்தை மாற்றி நல்லவர்களாக்கி விட்டதாக நினைத்து அவசரப்பட்டுச் சந்தோஷ மடைந்து விட்டேன்.''

''நாங்களாவது மனம் மாறுவ தாவது ?'' — மஹிபால் கேட்டான்.

''எங்களைப் பற்றி உனக்கு ஒன்றும் சரியாகத் தெரியாது'' என்றான் சந்திர பால். இவ்விதம் சொல்லிக் கொண்டே சரேலென்று வலது முழங்காலை உயர்த்தி வேணுகோபாலை அவனது தொடை களுக்கிடையில் தாக்கினான். வேணு கோபால் துடிதுடித்துக் குனிந்தபோது அவன் கழுத்தில், விரிந்த உள்ளங் கையின் ஓரத்தால் ஒரு வெட்டு ; முதுகில் ஒரு குத்து. கீழே விழுந்து தரையில் உருண்டவனைக் காலால் உதைக்க ஆரம்பித்தான்.

மஹிபாலும் டேப் ரிகார்டரை நாற் காலி மேல் வைத்து விட்டுச் சந்திர பாலுடன் சேர்ந்து கொண்டான். லாடம் அடிக்கப்பட்ட கனமான பஞ் சாபி ஸாண்டல்கள் அணிந்த இருவரது கால்களும் மாறி மாறிக் கண் மூக்கு என்று பாராமல் வேணுகோபால் மீது விழுந்தன.

''ஐயோ ! என்னை ஏன் வதைக் கிறீர்கள்? நான் உங்களுக்கு நன்மை தானே செய்தேன் ?'' என்று வேணு

## லேட்டாக வருவதைத் தடுக்க

சிப்பந்திகள் அடிக்கடி லேட்டாக வருவதைத் தடுக்க பிரிட்டிஷ் கம்பெனி ஒன்று புதிய வழியைக் கண்டுபிடித்துள்ளது. நேரப்படி அலுவலகம்வரும் சிப்பந்திகளின் மனைவிமார்களுக்கு 'போனஸ்' கொடுக்கப் போவதாக அறிவித்தது! இதற்கு நல்ல பலன் ஏற்பட்டுள்ளது. மனைவியர் போனஸ் பெறுவதற்காகத் தங்கள் கணவன்மாரை நேரத்துடன் வீட்டிலிருந்து துரத்துகிறார்கள் அலுவலகத்துக்கு!

ஆதாரம்: டிட்பிட்ஸ் - 'கரிகாலன்'

கேட்ட போது அவன் வாயிலிருந்து ரத்தம் வழிந்தது.

''எதுடா நன்மை ?' அயோக்கிய ராஸ்கல் ! நாங்கள் இந்தப் பிளாக் மெயில் டீலில் ஐந்து லட்சமாவது பணம் பண்ணத் திட்டமிட்டிருந்தோம். அதைக் கெடுத்தாயே, நாயே! இன் னும் ஐம்பதாயிரம்கூட முழுசாகக் கைக்கு வரவில்லையே!'' என்றான் மஹிபால் உதைத்துத் துவைத்தபடியே.

''உனக்குக் காதலும் கல்யாணமும் இப்போ என்ன கேடு ! உங்களுக்குக் கல்யாணம் ஆகிவிட்டால் எங்களுக்குப் பணம் எப்படிக் கிடைக்கும்?'' என்று கேட்ட சந்திரபால் வேணுகோபாலின் நெஞ்சிலே அளவற்ற ஆத்திரத்துடன் மேலும் உதைத்தான்.

'மளுக்'கென்று ஓர் ஓசை. விலா எலும்பு ஒன்று முறிந்துவிட்டதென் பது டாக்டராகிய வேணுவுக்குப் புரிந்தது. ஆனால் அந்த அசுரர்களுக்கு அது தெரியவில்லை. அதை உணர்ந் திருந்தாலும் இரக்கம் காட்டியிருக்கப் போவதில்லை. அவர்களுக்குக் கிடைக் காத ஐந்து லட்சம் ரூபாய்களுக்காக ஐந்து லட்சம் உதைகளைக் கொடுக்கத் தீர்மானித்து விட்டவர்கள் போல் அள வற்ற கோபவெறியுடன் மூர்க்கத்தன மாகச் செயல்பட்டார்கள்.

சில நிமிஷங்கள் கழித்துக் களைத்துப் போய் அவர்கள் கிளம்பினார்கள். நெகடிவ்களும் புகைப்படங்களும் அடங் கிய உறை பாக்கெட்டில் பத்திரமாக இருக்கிறதா என்று தட்டிப் பார்த்துக் கொண்டான் மஹிபால். டேப் ரிகார்ட ரைக் கையில் எடுத்துக் கொண்டான் சந்திரபால். பணம் இருந்த தோல் பைகளுடன் படிகளில் இறங்கிச் சென் றார்கள்.

வேணுகோபால் அழுவதற்குக்கூடச் சக்தியற்றுக் கிடந்தான். (தொடரும்)

# இன்ப வாழ்வு, இனிய குடும்பம், இந்நலமெலாம் விவசாயி முருகனுக்கு வாய்த்தது எப்படி?



## ஏராள விளைச்சல் தாராளமாக அளித்திடும் ஒர்த்திங்டன்-சிம்ப்ஸன் பம்புசெட் அளித்த வளமையிது.

**முருகன் வாழ்வில் ஈடில்லாத இன்பநாள், ஒர்த்திங்டன்-சிம்ப்ஸன் பம்புசெட் பொருத்திய அந்தநாள். குறைந்த செலவில் நிறைந்த பயன் தரும் முதலீடு, ஒர்த்திங்டன்-சிம்ப்ஸன் பம்புசெட். பெஸ்ட் அண்ட் கம்பெனியின் ஓர் ஒப்பற்ற தயாரிப்பு அது.**

ஈடு இணையற்றது என்று புகழ் பெற்ற 'மானோபிளாக்' பம்பு செட்டுகள் உட்பட பலவகை சென்டிரிப்யூகல் பம்புகளையும் பெஸ்ட் அளிக்கிறது. ஒர்த்திங்டன்-சிம்ப்ஸன் பம்பு செட்டுகள் கண்டிப்பான தரக்கட்டுப்பாட்டுடன் தயாரிக்கப்படுபவை. விற்பனைக்குப் பிறகும் சேவை செய்ய, நாடெங்கும் ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. மேலும், தக்க பம்புகளை தேர்ந்தெடுப்பதற்கு ஆலோசனைகளையும் அளிக்கிறது பெஸ்ட் !







**பெஸ்ட் & கம்பெனி பிரைவேட் லிட்.**

(ஸ்தாபிதம்: 1879)
13/15 நார்த் பீச்ரோடு, சென்னை-1.

தமிழ் நாட்டில் கிளைகள்:
6/434, திருச்சிரோடு, கோயமுத்தூர்.
49-D, மதுரைரோடு, திருச்சி-1.

Focus-BC-193 Tam (2)

# சாருலதா

## கி.ராஜேந்திரன்



### அத்தியாயம் 35

# வாழத் துடிப்பவன்

'உனக்கே இப்படி ஒரு சரீர உபாதை நேர்ந்தால்தானே உன்னிடம் வரும் நோயாளிகளின் அவதியும் உனக்குப் புரியும்? — இப்படி நினைத்துத்தான் ஆண்டவன் என்னை இந்த வேதனையை அநுபவிக்கச் செய்கிறாரோ' — வேணுகோபால் பல்லைக் கடித்துக் கொண்டான். ஆயினும் தாங்க முடியாது போகவே, ''ஆ! ஐயோ, அம்மா !'' என்று வாய் விட்டுக் கூறி முனகினான்.

உடல் அநுபவித்த வேதனையைக் காட்டிலும் அவன் மனம் அதிகமாகத் துன்பப்பட்டுக் கொண்டிருந்தது. இரண்டையும் சகித்துக் கொண்டு மெல்ல ஊர்ந்து நகர முற்பட்டான். விண் விண்ணென்று தெறித்தது வலி.

'ஈ காக்காய் கிடையாது இந்த இடத்தில். டெலிபோன் வசதியும் இல்லை. தன்னந் தனியாக என்னை இந்த நிலையில் விட்டு விட்டுப் போய் விட்டார்களே அந்த அயோக்கியர்கள்! இங்கிருந்து காருக்கு எப்படிப் போவேன் ? காரை அவர்கள் ஓட்டிக் கொண்டு சென்று விட்டால்? அப்படி அவர்கள் செய்யவில்லை என்றாலும் நான் எப்படி அதைச் செலுத்த முடியும்? சென்னைக்கு எவ்வாறு போய்ச் சேரப் போகிறேன்? இங்கேயே கிடந்து சாக வேண்டியதுதான். ஆனால் நான் சாக விரும்பவில்லை. ஆண்டவனே, என்னைக் கொன்று விடாதே !'

மாடிப் படிகளில் யாரோ அவசரம் அவசரமாக ஏறி வரும் சத்தம் கேட்டது. வேதனையையும் மீறி வியப்பு மேலிட்டது வேணுகோபாலுக்கு. மஹிபாலின் தலை தென்பட்டபோது அவனுக்கு மகிழ்ச்சி பொங்கியது. 'திருந்தி விட்டானா இவன்!'

''உன் உதவி தேவை'' என்றான் மஹிபால், வேணுகோபாலின் அருகில் வந்து நின்று.

ஏமாற்றத்துடன் வேணுகோபால் கரத்தைத் தலையணையாக்கிச் சிரத்தை அதன் மீது சாய்த்தான். ''யாருடைய உதவி யாருக்குத் தேவை ?'' என்று முணுமுணுத்தது அவன் வாய்.

''சந்திரபாலைப் பாம்பு கடித்துவிட்டது'', என்றான் மஹிபால்.

''கோ டு ஹெல் !''

''அவன் செத்துப் போய் விடுவான், டாக்டர் !''

வேணு வேதனையையும் மீறிச் சிரித்தான். ''அவன் செத்துப் போய்விடுவானா? இங்கே நான் செத்துக் கொண்டிருப்பது உன் கண்களுக்குத் தெரியவில்லையா ?''

''நீ ஒரு டாக்டர். அவனுக்கு உதவ வேண்டியது உன் கடமை.''

''பாம்பு எப்படிக் கடிக்கும்? பஞ்சாபி சப்பல் அணிந்திருந்தானே அவன்?''

''அதுதான் விதி! சவுக்குத் தோப்பில் சில மரங்களை விறகுக்காக வெட்டியிருக்கிறார்கள். வேர்க்கட்டையைத் தோண்டி எடுக்காமல் அடி மரத்தை அப்படியே விட்டிருக்கிறார்கள். அதைக் கவனியாமல் நடக்கவே தடுக்கி விட்டது. கீழே விழுந்து விட்டான். பைஜாமாவும் அப்போது மேலே வயண்டு கொள்ளத் தரையில் சருகுகளுக்கிடையில் சுருண்டு படுத்திருந்த பாம்பு வகை ஏகக் கொத்தி விட்டது, கணுக்காலுக்கு மேலே. கட்டு விரியன் என்று நினைக்கிறேன். விஷமில்லையா அது?''

''ஓடிப் போய்ப் பாம்பு கடித்த இடத்தில் வாயை வைத்துக் கடி. ரத்தத்தை



உறிஞ்சித் துப்பு. காயத்துக்கு நாலு அங்குலம் மேலே இறுக்கமாய்க் கட்டுப் போடு.''

''அதை நீ செய்!'' என்றான் மஹிபால்.

''என்னால் நகர முடியவில்லை.''

''நான் உதவுகிறேன்.'' மஹிபால் அவனைத் தூக்கி நிறுத்தினான். வலக் கரத்தைத் தன் தோளைச் சுற்றிப் போட்டுக் கொண்டான். தொய்ந்தபடி படி இறங்கி நடந்தான் வேணு கோபால்.

சவுக்குத் தோப்பில், பாம்பு கடித்த இடத்தில் கடுப்புப் பரவ வீறிட்டு அலறியபடியே இருந்தான் சந்திரபால். வேதனையைக் காட்டிலும் பயத்தால் அதிகக் கூச்சல் போட்டுக் கொண்டிருந்தான்.

வேணுகோபால் அருகில் வந்து மண்டியிட்டு அமர்ந்ததும் மஹிபால் காலைத் தூக்கிப் பிடிக்க, பாம்பு கடித்த இடத்தில் வாயை வைத்துக் கடித்து ரத்தத்தை உறிஞ்சித் துப்பினான் வேணுகோபால். கூரிய ஆயுதத்தால் நெஞ்சையே துளைப்பதுபோல் வேணுகோபாலுக்கு அப்போது வலித்தது. சந்திரபாலோ, சந்திரலோகத்துக்கே எட்டக்கூடிய அளவுக்குக் கத்தினான். இரு கைக்குட்டைகளைச் சேர்த்து முடிந்து முழங்காலுக்குமேல் இறுகக் கட்டுப் போட்டான் மஹிபால். டாக்டர் வேணு

கோபால் இருமினான். தன் நெஞ்சிலிருந்து வாய் நிறைய வந்து சேர்ந்த ரத்தத்தை வெளியே துப்பினான். முறிந்த மார்புக் கூட்டு எலும்பு, தன் நுரையீரலைப் பொத்து விட்டிருக்கிறதென்பது உடனே அவனுக்குத் தெளிவாயிற்று.

''இதை நீயே செய்திருந்தால் என்ன?'' என்று வாயில் இருந்த ரத்தத்தைத் துடைத்துக்கொண்டே கேட்டான் வேணுகோபால். ''எவ்வளவுக்கெவ்வளவு சீக்கிரம் இதைச் செய்கிறோமோ, அவ்வளவுக்கு அவன் உயிர் பிழைக்கும் வாய்ப்பு அதிகமாகிறது தெரியுமல்லவா?''

''எனக்குப் பயமா யிருந்தது'' என்றான் மஹிபால்.

''என்ன பயம்?'' என்று சந்திரபால் கேட்டான்.

''விஷ ரத்தத்தை உறிஞ்சப் போக என் உடலிலும் விஷம் பரவிவிட்டால்?''

''தூ'' என்று வெறுப்புடன் காரி உமிழ்ந்தான் சந்திரபால். ''மனுஷனா நீ?''

'அப்படி அவனைப் பார்த்து நீ கேட்கிறாயா? பேஷ்!' என்று நினைத்துக் கொண்டான் வேணுகோபால். அவனால் அதிகமாக எதுவும் பேச முடியவில்லை.

''நீ ஒன்றும் சாக மாட்டாய். உன் உயிர் கெட்டி. எழுந்து நட'' என்றான் மஹிபால். சந்திரபாலைக் கைத் தாங்கலாகப் பற்றிக் காருக்கு அழைத்துப் போனான். ''உடனே ஆஸ்பத்திரிக்குப் போய் விஷ முறிவுக்கு ஊசி போட்டுக் கொள்ள வேண்டும்'' என்றான் வேணுகோபால்.

முன் ஸீட்டில் சந்திரபாலை உட்கார வைத்த மஹிபால், இரண்டு தோல் பைகளையும் டேப் ரிகார்டரையும் பின் ஸீட்டில் போட்டான். டிரைவர் ஸீட்டில் அமர்ந்து காரைக் கிளப்பினான். வேணுகோபால் இருந்த பக்கம் அவர்கள் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை. 'என்னையும் அழைத்துப் போகக் கூடாதா?' என்று அவர்களைக் கெஞ்சிக் கேட்க வேணுகோபாலின் மனம் இடம் தரவில்லை.

அவன் தட்டுத் தடுமாறி மெல்ல எழுந்து நடந்தான். சவுக்குத் தோப்பைக் கடக்கும் வரை ஒவ்வொரு மரமாகப் பிடித்துக் கொண்டு நடக்க முடிந்தது. அதன் பிறகு, திருவான்மியூர் நெடுஞ்சாலையை அடையும்வரை அரைஃபர்லாங் தூரம் நடப்பது நரக வேதனையாக இருந்தது. கடைசி பத்துப் பதினைந்தடி தூரம் அவன் தவழ்ந்துதான் சென்றான். வாழ வேண்டும் என்ற பேரவா அவனை இழுத்துக் கொண்டு போய்ச் சாலையில் தள்ளியது.

ஏகாந்தமான இடத்தை நாடிக் காரில் வந்த காதலர் இருவர் மனித உருவம் ஒன்று சாலையின் குறுக்கே விழுந்து கிடப்பதை ஒரே சமயத்தில் கண்டனர்.

''ஒன்றுமில்லை, பயப்படாதே! காக்காய் வலிப்பு. கொஞ்ச நேரத்தில் எழுந்து நடக்க ஆரம்பித்து விடுவான்'' என்றான் காதலன். காரின் வேகத்தைக் குறைத்துச் சாலையின் ஓரமாக ஓட்டிக் கடந்து சென்றுவிடத் திட்டம் போட்டான் அவன்.

'' ரத்தம்! ரத்தம்! அடிபட்டிருக்கிறது அவனுக்கு!'' என்று பதறினாள் காதலி.

வேணுகோபாலைக் கடந்து போன கார், 'கீச் கீச்' சென்று பிரேக் போடப்பட்டு நின்றது.





உறிஞ்சித் துப்பு. காயத்துக்கு நாலு அங்குலம் மேலே இறுக்கமாய்க் கட்டுப் போடு.''

''அதை நீ செய்!'' என்றான் மஹிபால்.

''என்னால் நகர முடியவில்லை.''

''நான் உதவுகிறேன்.'' மஹிபால் அவனைத் தூக்கி நிறுத்தினான். வலக் கரத்தைத் தன் தோளைச் சுற்றிப் போட்டுக் கொண்டான். தொய்ந்தபடி படி இறங்கி நடந்தான் வேணு கோபால்.

சவுக்குத் தோப்பில், பாம்பு கடித்த இடத்தில் கடுப்புப் பரவ வீறிட்டு அலறியபடியே இருந்தான் சந்திரபால். வேதனையைக் காட்டிலும் பயத்தால் அதிகக் கூச்சல் போட்டுக் கொண்டிருந்தான்.

வேணுகோபால் அருகில் வந்து மண்டியிட்டு அமர்ந்ததும் மஹிபால் காலைத் தூக்கிப் பிடிக்க, பாம்பு கடித்த இடத்தில் வாயை வைத்துக் கடித்து ரத்தத்தை உறிஞ்சித் துப்பினான் வேணுகோபால். கூரிய ஆயுதத்தால் நெஞ்சையே துளைப்பதுபோல் வேணுகோபாலுக்கு அப்போது வலித்தது. சந்திரபாலோ, சந்திரலோகத்துக்கே எட்டக்கூடிய அளவுக்குக் கத்தினான். இரு கைக்குட்டைகளைச் சோதனு முடிந்து முழங்காலுக்குமேல் இறுகக் கட்டுப் போட்டான் மஹிபால். டாக்டர் வேணு

கோபால் இறுமினன். தன் நெஞ்சிலிருந்து வாய் நிறைய வந்து சேர்ந்த ரத்தத்தை வெளியே துப்பினன். முறிந்த மார்புக் கூட்டு எலும்பு, தன் நுரையீரலைப் பொத்து விட்டிருக்கிறதென்பது உடனே அவனுக்குத் தெளிவாயிற்று.

''இதை நீயே செய்திருந்தாலென்ன?'' என்று வாயில் இருந்த ரத்தத்தைத் துடைத்துக்கொண்டே கேட்டான் வேணுகோபால். ''எவ்வளவுக்கெவ்வளவு சீக்கிரம் இதைச் செய்கிறோமோ, அவ்வளவுக்கு அவன் உயிர் பிழைக்கும் வாய்ப்பு அதிகமாகிறது தெரியுமல்லவா?''

''எனக்குப் பயமா யிருந்தது'' என்ருன் மஹிபால்.

''என்ன பயம்?'' என்று சந்திரபால் கேட்டான்.

''விஷ ரத்தத்தை உறிஞ்சப் போக என் உடலிலும் விஷம் பரவிவிட்டால்?''

''தூ'' என்று வெறுப்புடன் காரி உமிழ்ந்தான் சந்திரபால். ''மனுஷனு நீ?''

'அப்படி அவனைப் பார்த்து நீ கேட்கிருயா? பேஷ்!' என்று நினைத்துக் கொண்டான் வேணுகோபால். அவனுல் அதிகமாக எதுவும் பேச முடியவில்லை.

''நீ ஒன்றும் சாக மாட்டாய். உன் உயிர் கெட்டி. எழுந்து நட'' என்ருன் மஹிபால். சந்திரபாலைக் கைத் தாங்கலாகப் பற்றிக் காருக்கு அழைத்துப் போனுன். ''உடனே ஆஸ்பத்திரிக்குப் போய் விஷ முறிவுக்கு ஊசி போட்டுக் கொள்ள வேண்டும்'' என்ருன் வேணுகோபால்.

முன் ஸீட்டில் சந்திரபாலை உட்கார வைத்த மஹிபால், இரண்டு தோல் பைகளையும் டேப் ரிகார்டரையும் பின் ஸீட்டில் போட்டான். டிரைவர் ஸீட்டில் அமர்ந்து காரைக் கிளப்பினன். வேணுகோபால் இருந்த பக்கம் அவர்கள் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை. 'என்னையும் அழைத்துப் போகக் கூடாதா?' என்று அவர்களைக் கெஞ்சிக் கேட்க வேணுகோபாலின் மனம் இடம் தரவில்லை.

அவன் தட்டுத் தடுமாறி மெல்ல எழுந்து நடந்தான். சவுக்குத் தோப்பைக் கடக்கும் வரை ஒவ்வொரு மரமாகப் பிடித்துக் கொண்டு நடக்க முடிந்தது. அதன் பிறகு, திருவான்மியூர் நெடுஞ்சாலையை அடையும்வரை அரைஃபர்லாங் தூரம் நடப்பது நரக வேதனையாக இருந்தது. கடைசி பத்துப் பதினைந்து தூரம் அவன் தவழ்ந்துதான் சென்ருன். வாழ வேண்டும் என்ற பேரவா அவனை இழுத்துக் கொண்டு போய்ச் சாலையில் தள்ளியது.

ஏகாந்தமான இடத்தை நாடிக் காரில் வந்த காதலர் இருவர் மனித உருவம் ஒன்று சாலையின் குறுக்கே விழுந்து கிடப்பதை ஒரே சமயத்தில் கண்டனர்.

''ஒன்றுமில்லை, பயப்படாதே! காக்காய் வலிப்பு. கொஞ்ச நேரத்தில் எழுந்து நடக்க ஆரம்பித்து விடுவான்'' என்ருன் காதலன். காரின் வேகத்தைக் குறைத்துச் சாலையின் ஓரமாக ஓட்டிக் கடந்து சென்றுவிடத் திட்டம் போட்டான் அவன்.

''ரத்தம்! ரத்தம்! அடிபட்டிருக்கிறது அவனுக்கு!'' என்று பதறினள் காதலி.

வேணுகோபாலைக் கடந்து போன கார், 'கீச் கீச்' சென்று பிரேக் போடப்பட்டு நின்றது.



காதலன் கீழே இறங்கிப் போய்ப் பார்த்தான். குப்புற விழுந்து கிடந்த வேணு கோபாலின் முகத்தருகே குனிந்தான். 'செத்துப் போய் விட்டானோ?' என்று அவனுக்குச் சந்தேகம். வேண்டாத வம்பை' விலைக்கு வாங்கிக் கொண்டதாகி விடுமோ என்று பயம். தயக்கத்துடன் நோக்கிய அவனுக்கு வேணு கோபாலின் வாயசைவு கொஞ்சம் தெம்பு அளித்தது. மண்டியிட்டுத் தலை சாய்த்துக் கவனமாகக் கேட்டான்.

''மயிலாப்பூர், எட்வர்ட் எலியட்ஸ் ரோடு, டாக்டர் மல்லிகார்ஜுனன் — நர்ஸிங்ஹோம்'' என்று வீங்கிய உதடுகள் முணுமுணுத்தன.

காதலி காரை விட்டு இறங்கி அருகில் வந்தாள். ''ஸாரி, டார்லிங்! இது எமர்ஜென்ஸி கேஸ். நம்ம 'பிக்நிக்'கை இன்னொரு நாளைக்கு வைத்துக் கொள்ள வேண்டியதுதான்'' என்றான் காதலன்.

இருவருமாக மெல்ல வேணுவைத் தூக்கிக் காரின் பின் ஸீட்டில் படுக்க வைத்தார்கள்.

கார் திரும்பியது; பறந்தது.

''ஹனி! டாக்டர் மல்லிகார்ஜுனனுக்கு ஒரு பேஷண்டை நாம் கொண்டு போனால் போதும். மூன்று பேருக்குச் சேர்ந்த மாதிரி அவரால் வைத்தியம் பண்ண முடியாது'' என்றாள் காதலி.

வேகம் சற்றுத் தணிந்தது.

டாக்டர் மல்லிகார்ஜுனன் சொன்னார் : ''இது போலீஸ் கேஸ் வேணு!''

''டாம் இட்!'' என்றான் வேணு கோபால். ''நான் கம்ப்ளெய்ண்ட் கொடுத்தால்தானே அதற்கு?''

''இந்தக் காயமெல்லாம் விளையாடும் போதோ அல்லது சறுக்கி விழுந்ததாலோ பட்டிருக்க முடியாது என்று எனக்குத் தெரியும். ஆகவே, போலீசுக்குத் தகவல் கொடுக்க வேண்டியது என் டியூட்டி.''

கூடாது என்று தலையசைத்தான் வேணு. ''உன் முதல் கடமை, என்னைக் காப்பாற்றுவதுதான்.''

''நீ ஜி. எச்.சுக்குப் போவது நல்லது. ரிப்ஸ் ஃபிராக்ச்சர் ஆகியிருக்கு. என்னிடம்போதுமானஎக்விப்மெண்ட்இல்லை.''

மெல்லிய குரலில் பேசினான் வேணு: ''எல்லா உபகரணங்களும் இருக்கு. உன்னிடம் இல்லாதது தைரியம் ஒன்றுதான். போலீஸ் விசாரணையை நினைத்துத் தயங்குகிறாய். நீ காலத்தைக் கடத்தினால் நான் செத்துப் போவேன். பிசாசாக வந்து உன்னை ஆட்டிப் படைப்பேன்.'' வேணு இருமினான். 'குபுக்'கென்று வாயிலிருந்து ரத்தம் வடிந்தது.

''பேசாதேடா பாவி! நானே உன்னைக் கவனிக்கிறேன்'' என்றார் மல்லிகார்ஜுனன்.

''மல்லி! ஐ வாண்ட் டு லிவ். எப்படியாவது என்னைக் காப்பாற்றுடா!... சாக விடாதே!'' என்று கேட்டுக் கொண்டான் வேணுகோபால்.

## அத்தியாயம் 36

# மனமாற்றம்

தன்னை அலங்கரித்துக் கொள்வதில் சாருலதா இன்று வழக்கத்தைவிட அதிகமான சிரத்தை காட்டியிருந்தாள். வித்தியாசமான வர்ணத்தில் கரையோ தலைப்போ இல்லாத குறையை அந்த அழுத்தமான மஞ்சள் நிறப் பட்டுப் புடவையின் சரிகை வேலைப்பாடுகள் இட்டு நிரப்பின. நிற வித்தியாசத்தின் சாயல்கூட இல்லாத வகையில் ஜாக்கெட் துணி தேர்ந்தெடுத்திருந்தாள். உயிர் பெற்று எழுந்து வந்த தங்கப் பதுமை, புதிதாய்க் கிடைத்த இந்த அநுபவத்தை ஆசை தீர அநுபவித்து மகிழ்வதுபோல் அவள் நடையில் ஒரு துள்ளலுடன் சாப்பாட்டு அறைக்குள் நுழைந்து அப்பாவுக்கு அருகே அமர்ந்தாள்.

இரவு நேரச் சாப்பாட்டுக்காக வரும்போது சாருலதா சாதாரணமாக இந்த அளவுக்கு அலங்கரித்துக் கொள்வதில்லை. 'சாப்பிட்ட பிறகு எங்கேயோ வெளியே போக வேண்டிய அவசியம் நேர்ந்திருக்கிறது போலிருக்கிறது' என்று நினைத்துக் கொண்டார் பெருமாள்.

ஆயினும் அவளிடம் காணப்பட்ட ஒரு புதுமைப் பொலிவும் மெருகேற்றப்பட்டது போன்ற அவள் சருமத்தின் பளபளப்பும் கண்களில் மின்னிய கிளுகிளுப்பும் அவரைச் சிந்திக்கச் செய்தன.

'என்ன இன்றைக்கு இவ்வளவு உற்சாகம்?' என்பதுபோல் அவர் கேள்விக் குறியாகப் புருவங்களை உயர்த்தினார்.

''அப்பா! குஞ்சுவின் கல்யாணப் பிரச்னையைத் தீர்த்துவைக்க ஒரு வழி கண்டு பிடித்து விட்டேன்'' என்றாள் சாருலதா. வெட்கத்தில் அவள் முகம் குப்பென்று சிவந்து, மொட்டுப்




''நம்ம கடையில் வாங்கின புடவைக்குப் பாக்கி தர முடியாமல் இருப்பதற்கு அந்தப் புடவையே தான் காரணம் என்கிருங்களே இந்த அம்மா, அது எப்படி இருக்க முடியும்?''

(53ம் பக்கம் பார்க்க)

போன்ற அவள் உதடுகள் மலர்ந்தன. முத்துப் போன்ற பற்களிடையே ஒரிதழ் சிக்கியது.

''கொஞ்ச நாட்களாக அதைப்பற்றிப் பேசாமல் இருந்தோம்; நிம்மதியாக இருந்தது'' என்று சூள் கொட்டிய பிறகு சொன்ஞன் குணசிலன்.

ஆனல் பெருமாளுக்குச் சாருலதாவின் தவிப்பு எதையோ உணர்த்துவது போலிருந்தது. அவர் தட்டை ஒதுக்கி விட்டு மேஜை மேல் கை நீட்டி அவள் விரல்களைப் பற்றி வருடினர். அவளை ஆர்வத்தோடு பார்த்தார். 'அம்மா! என் வயிற்றில் பாலை வார்க்க வேண்டும், தாயே!' என்று கேட்டுக் கொள்வது போலிருந்தது அந்தப் பார்வை.

அப்பாவின் கரத்தை அவள் குழந்தை போல் எடுத்துக் கன்னத்தில் ஒற்றிக் கொண்டாள். கண்ணீரால் நனைத்து முத்தம் கொடுத்தாள்.

''அப்பா! வேணுவை நான் கல்யாணம் செய்து கொள்வதில் உங்களுக்கு ஆட்சேபணை ஏதுமில்லையே?''

''உய்!'' என்று கத்தியபடி மடியிலிருந்த 'நாப்கின்'னை மேலே வீசினுன் குணசீலன். அவனுடைய சந்தோஷத்தைப் பகிர்ந்து கொண்டது போல் அந்தத் துணியும் படபடத்துப் பறந்து பிறகு மேஜையின் மையத்தில் வந்து அமர்ந்தது. 'டர்ர்' என்று நாற்காலியைப் பின்னுக்குத் தள்ளிவிட்டுப் பரபரப்புடன் சாருவுக்குப் பக்கத்தில் விரைந்து வந்து உட்கார்ந்தான் குணசீலன்.

''சாரு ! சாரு ! உன் வாழ்நாளில் நீ செய்துள்ள காரியங்களில் ரொம்ப ரொம்ப நியாயமான, புத்திசாலித்தனமான காரியம் இதுதான். அடாடா ! எப்போது நீ இவ்வளவு சமர்த்தாக மாறினுய் ?''

''உனக்காகத்தான் இந்த முடிவுக்கு வந்தேன்'' என்றுள் அவள். அவள் நெஞ்சு படபடத்தது.

''ஆ ! தியாகம், அது இது என்றெல்லாம் கதை அளக்காதே ! உனக்கு வேணுவை மணந்து கொள்ள ரொம்ப நாளாகவே ஆசை! ஆனல் இப்போதுதான் உனக்குத் தைரியம் வந்திருக்கிறது அதற்கு!''

தம்பியை ஏறிட்டுப் பார்க்க வெட்கப்பட்டுக் கொண்டிருந்த அவளை, ''சாரு !'' என்று மெதுவாக அழைத்தார் பெருமாள்.

''அப்பா! நீங்களா பேசினீர்கள்?''

ஆச்சரியமும் அளவு கடந்த ஆனந்தமும் பொங்க அப்பாவைப் பார்த்தாள் அவள்.

''மௌன விரதம் இன்ஞேடு முடிய வேண்டியது தானே? ஆண்டவனிடம் நான் எதற்காக இத்தனை நாட்களாகப் பிரார்த்தித்துக் கொண்டிருந்தேனே, அது நடந்து விட்டதே!''

மூவருக்குமே எத்தனையோ விஷயங்கள் பேச வேண்டியிருந்தன. கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டியவை இருந்தன. ஆனல் எதை முதலில் கேட்பது, சொல்வது என்று புரியாமல் மூவரும் பேசாதிருந்தார்கள். இன்ப வேதனை மூவர் உள்ளங்களிலும் தளும்பி நின்றது.

சாருலதா. மௌனத்தைக் கலைத்தாள். ''அப்பா ! நான் ரிஜிஸ்தர் கல்யாணம் செய்து கொள்வது என்று தீர்மானித்து விட்டேன். அப்புறம் ஒரு 'ரிஸப்ஷன்' நடத்தி விடலாம்.''

''நோ! நோ! அதெல்லாம் கூடாது! மூன்று கல்யாணங்களும் ஒரே பந்தலில் நடக்கட்டுமே!'' என்றுன் குணசீலன்.

பெருமாள் ஒருகணம் யோசித்து விட்டு, ''ஓ! சாரங்கனையும் சேர்த்துச் சொல்கிருயா?'' என்று கேட்டார். பிறகு, ''சாரு சொல்வதுதான் சரி, அவளைச் சங்கடத்துக்குள்ளாக்கக் கூடாது நாம்'' என்ருர்.

''என்ன சங்கடம் ?''

''போடா, அசடு !'' என்று தந்தை கடிந்து கொண்டார். ''சுட்டியும் ராக்கோடியும் வைத்துக் கொண்டு மணப் பந்தலில் சாரு உட்காருவாளா ? அல்லது நலங்கு விளையாட்டில்தான் அவளால் ஈடுபட முடியுமா? அதெல்

லாம் காலா காலத்தில் நடக்கிற கல்யாணங்களுக் குத்தான் பொருந்தும். உனக்கும் சாரங்கனுக்கும் எல்லாம் சம்பிரதாயப்படி நடக்கட்டும். நாங்கள் பார்த்துச் சந்தோஷப்படு கிறோம். சாருவை அவள் இஷ்டப்படி விட்டு விடு.''

''கமலாவின் கழுத்தில் தாலி கட்டப் போகிறோம் என்பதால் குழுவுக்குத் தலைகால் புரியவில்லை'' என்று கூறிச் சிரித்தாள் சாருலதா.

''சாரு!'' என்று அழைத்து, பிறகு தயங்கி ஞர் பெருமாள். தொண்டையைக் கனைத்துக் கொண்டு, ''வேணுவுக்கு விவரமெல்லாம் தெரியுமா, அம்மா?'' என்று கேட்டார்.

''தெரியும். என் கதை முழுவதையும் சொல்லி விட்டேன். எல்லாவற்றை யும் கேட்ட பிறகும் என்னை மணந்து கொள்வதில் துடி யாய் நிற்கிறார். நான்தான் தட்டிக் கழித்துக்கொண்டே வந்தேன். அவர் அம்மா கூட மனப்பூர்வமாய் ஆசீர் வதித்து விட்டாளாம்.'' சாருலதா விழியோரத்தில் தேங்கிய கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள்.



''எப்படி இருக்க முடியும்னு சொல்றேன். அவ்வளவு விலையில் நான் புடவை வாங்கினதைக் கேள்விப்பட்டதும் என் கணவருக்கு ரத்தக் கொதிப்பு வந்து, அதனாலே அவரை ஆஸ்பத்திரியில் சேர்க்கும்படியாகி, அங்கே ஏகப்பட்ட ரூபாய் செலவு. அப்படி செலவானதினாலே தான் உங்க புடவை பாக்கியைத் திருப்பித் தர முடியவில்லை, புரிஞ்சுதா?''

என்று கூறிச் சிரித்தான் குணசீலன்.

''எல்லாருமே அப்படி என்று சொல்ல முடியாது. சிலருக்கு நாம் இன்னார் என்பது தெரிந்திருக்கும். ஆனால் கிட்டத்தில் நெருங்கத் தயங்கி ஒதுங்கி யிருப்பார்கள். செல்வம் ஒரு விதத்தில் சிறைதான்!''

''நல்லதாய்ப்போயிற்று; உறவு முறை கொண்டாடி இழைந்து வேண்டாத கேள்விகளைக் கேட்டுச் சிரமப் படுத்துவதை விட இது மேல்'' என்றாள் சாருலதா. ''சாருலதாவின் திறமையும் சாமர்த்தியமும் தான் இந்தக் குடும்பத்தின் செல்வச் செழிப்புக்குக் காரணம் என்று கருதுபவர்கள் அப்படியே தொடர்ந்து நினைத்துக்கொண்டிருக்கட்டும்.''

'அந்த எண்ணத்திலும் தவறு ஏதுமில்லையே, சாரு! சந்தர்ப்பங்கள் எத்தனையோ பேர்களுக்கு ஏற்படுகின்றன. அந்தச் சந்தர்ப்பங்களை எல்லாருமே நல்ல முறையில் பயன்படுத்திக் கொண்டு முன்னேறி விடுகிறார்களா, வாழ்க்கையில்? கிண்டி குதிரைப் பந்தயத்தில் இரண்டு லட்சம் ரூபாய் ஜாக்பாட் அடிக்கிறான் ஒருவன். அது விரும்பத் தகாத முறையில் கிடைத்த பணம்தான். ஆனால் அதன்பிறகு அந்தப் பணத்தைச் சாமர்த்தியமாகக் கையாண்டு முன்னுக்கு வராமல் கெட்டலைபவன் முட்டாள். வாய்ப்புக்களை நழுவவிடாமல் உயர் நிலைக்கு வருபவர்கள் ரொம்ப சொற்பம்.''

''இப்போ நீ எடுத்திருக்கிற முடிவு தான் சரியானது சாரு. சந்தேகமே யில்லை. நான் செய்த பூஜாபலன்தான் வேணுவைப் போன்ற ஒரு தங்கமான மாப்பிள்ளை இந்த வீட்டுக்குக் கிடைத்திருக்கிறான்.'', பெருமையோடு பேசினார் பெருமாள்.

''அப்பா! குணுவின் கல்யாணத்துக்கு நமது உறவினர்கள், பழைய நண்பர்கள் எல்லாரையும் அழைக்கலாம் என்று நினைக்கிறேன். நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?''

''அவர்களில் பலருக்கு நம்மை மறந்தே போயிருக்கும். ஆனாலும் உறவு முறைகளைக் கத்திரித்துக் கொள்ளாமல் சந்தர்ப்பம் ஏற்படும்போது அணைத்துக் கொண்டு போவதுதான் சரி.''

''நம்மை மறந்திருக்கலாம், ஆனால் சாருலதாவைத் தெரிந்திருக்கும். அவள் தங்களுக்கு உறவு என்று அறியும்போது எவ்வளவு ஆச்சரியப்படுவார்கள்!''

டெலிபோன் மணி அடித்தது.

சாருலதா ரிஸீவரைக் கையில் எடுத்தாள். ''ஹல்லோ?''

மறுபுறம் ஆண் குரல் ஒலித்தது. ''யார்? சாருவா? நான் டாக்டர் மல்லிகார்ஜுனன் பேசுகிறேன்.''

''ஓ! யெஸ், டாக்டர்! குட் ஈவினிங்!''

''சாரு, நீ பயப்படக் கூடாது. அதிர்ச்சி தரக்கூடிய ஒரு செய்தி சொல்லப் போகிறேன். நீ தைரியமாக இருக்க வேண்டும். என்ன புரிந்ததா?'' என்றார் டாக்டர் மல்லிகார்ஜுனன். (தொடரும்)

# பிரும்ம கான சபா (Regd.)

மயிலாப்பூர் - போன்: 72767 - சென்னை-4

"முதல் ஆண்டு விழா"

யுனிவர்ஸிடி சென்டினரி ஹாலில்

11-4-70 செவ்வாய் தமிழ்ப் புத்தாண்டு திருநாளில்
மாலை 5-45 மணிக்கு

## ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி - பாட்டு

| | | | |
|---|---|---|---|
| வி. வி. சுப்பிரமணியம் | -வயலின் | வி. நாகராஜன் | -கஞ்சிரா |
| டி. கே. மூர்த்தி | -மிருதங்கம் | டி. எச். விநாயக்ராம் | -கடம் |

---

**மியூஸிக் அகாடமி ஹாலில்**

| | |
|---|---|
| 18-4-70 சனி & 19-4-70 ஞாயிறு மாலை 6-30 மணிக்கு | கலா நிலையம் (திருவல்லிக்கேணி) அளிக்கும் 99-வது & 100-வது நாடகம் "வாஷிங்டனில் திருமணம்" By: சாவி |
| 24-4-70 வெள்ளி & 25-4-70 சனி மாலை 6-30 மணிக்கு | சேவா ஸ்டேஜ் நாடக சபா S. V. சகஸ்ரநாமம் அளிக்கும் "சத்திய தரிசனம்" |
| 3-5-70 ஞாயிறு மாலை 6-05 மணிக்கு | சிட்டிபாபு – வீணை<br>வேலூர் ராமபத்ரன் - மிருதங்கம் |

---

**யுனிவர்ஸிடி சென்டினரி ஹாலில்**

| | |
|---|---|
| 10-5-70 ஞாயிறு மாலை 6-30 மணிக்கு | பரதநாட்டியாலயா அளிக்கும் கமலா, ராதா, வசந்தி & குழுவினர் பங்கு கொள்ளும் "நாட்டியாஞ்சலி"<br>(இந்தியாவின் பல்வேறு ஸ்தல மகிமைகளை விளக்கும் ஒப்பற்ற நாட்டிய நாடகம் முதன்முறையாக அளிக்கப்படுகிறது)<br>நடன அமைப்பு & டைரக்ஷன்: கமலா |

---

**மியூஸிக் அகாடமி ஹாலில்**

| | |
|---|---|
| 16-5-70 சனி & 17-5-70 ஞாயிறு மாலை 6-30 மணிக்கு | நேஷனல் தியேட்டர்ஸ் மனோகர் அளிக்கும் "காடக முத்தரையன்" |

---

| | |
|---|---|
| 14-6-70 ஞாயிறு மாலை 6-05 மணிக்கு | யுனிவர்ஸிடி சென்டினரி ஹாலில்<br>பத்மஸ்ரீ பிஸ்மில்லாகான் & பார்ட்டி – ஷெனாய் |

---

**மியூஸிக் அகாடமி ஹாலில்**

| | |
|---|---|
| 20-6-70 சனி & 21-6-70 ஞாயிறு மாலை 6-30 மணிக்கு | நேஷனல் தியேட்டர்ஸ் மனோகர் அளிக்கும் "சூரபத்மன்"<br>நாடக ஆக்கம் & உரையாடல்: இரா. பழனிசாமி |

---

தினசரி டிக்கட்டுகள்: ரூ. 15, 10, 5, 3 & 2

டிக்கெட்டுகள் தினசரி காலை 9 மணி முதல் 43, அலமேலுமங்காபுரம், சென்னை-4 விலாசத்தில் கிடைக்கும் (போன்: 72767)

குறிப்பு: அங்கத்தினராக சேர விரும்புவோர்கள் மேற்கண்ட விலாசத்தில் காரியதரிசியை அணுகவும

## அத்தியாயம் 37

## யுத்தங்களில் ஜெயிப்பவர்!

"வாருங்கள்!" என்று சாருலதாவையும் பெருமாளேயும் வரவேற்ருர் டாக்டர் மல்லிகார்ஜுனன்.

"எப்படி இருக்கிருர் டாக்டர்? சொல்லுங்கள்!" பீதியும் துயரமும் ஒருங்கே பொங்கத் தாரை தாரையாகக் கண்களில் நீர் பெருக்கியபடியே கேட்டாள் சாருலதா.

"நான் உங்களே ஏமாற்ற விரும்பவில்லே. ஆபத்தான நிலேமைதான். என்னுல் முடிந்ததை யெல்லாம் செய்திருக்கிறேன்."

"எங்கே இருக்கிருர்? உடனே என்னே அவரிடம் அழைத்துப் போங்கள்."

"இப்போது வேண்டாம்; மயக்கத்திலிருக்கிருன். கண் விழிக்கட்டும். உங்களுக்கு அவனேப் பார்க்கும் போது அதிர்ச்சியாக இருக்கும். உடம்பெல்லாம் கட்டுப் போட்டு வைத்திருக்கிறேன். அவன் எதிரே அழுது புலம்பி எதுவும் செய்யக் கூடாது. தைரியமாக இருக்க வேண்டும். அவன் உடலும் மனமும் ரொம்பத் தளர்ந்து போயிருக்கின்றன. புரிகிறதா?"

சாருலதாவுக்கு இப்போதே உடம்பெல்லாம் நடுங்கியது. "ஐயோ, நான் என்ன செய்வேன்?" என்று குலுங்கக் குலுங்க அழுதாள்.

மல்லிகார்ஜுனன் ஓர் அறையைத் திறந்துவிட்டு அதில் அவளேயும் பெருமாளேயும் அமரச் சொன்னுர். "இப்போது அழுதால் பரவாயில்லே. அவனேப் பார்க்கும்போது நான் சொன்னது நினேவிருக்கட்டும்!" என்ருர். "அவன் அம்மா எங்கே? வரவில்லேயா?"

"கார் அனுப்பியிருக்கிறேன். தம்பி குணு போயிருக்கிருன், அழைத்து வர. இப்போது வந்து விடுவார்கள்."

"அவளுக்கும் முன்கூட்டியே எச்சரித்து வையுங்கள்."

நர்ஸிங் ஹோம் வாசலில் ஒரு கார் வந்து நின்றது. தோட்டத்தில் சுவர் ஓரமாய்க் காரை விட்டு விட்டு, சாரங்கன் இறங்கி அவசரம் அவசரமாய்ப் போர்ட்டிகோவை நோக்கி நடந்தான்.

ஜன்னல் திரையை விலக்கிப் பார்த்து விட்டு, "யார் வருவது?" என்று கேட்டார் டாக்டர் மல்லிகார்ஜுனன்.

"சாரங்கன் — என் செக்ரட்டரி."

"எப்படி நேர்ந்தது இது, வேணுகோபாலுக்கு? உங்களுக்கு ஏதாவது தெரியுமா?"

# சாருலதா

கி.ராஜேந்திரன்



"எனக்கு ஒன்றுமே புரியவில்லேயே, டாக்டர். நீங்கள் வேணுவுக்கு ஆபத்து என்று ஃபோன் பண்ணினீர்கள். ஓடி வந்தேன். அவ்வளவுதான்."

சாரங்கன் அறைக்குள் நுழைந்தான். "என்ன நடந்தது? குணு ஃபோன் செய்தானே?"

"வேணுவை யாரோ பலமாக அடித்து உதைத்துப் போட்டிருக்கிறார்கள்...." என்றார் டாக்டர் [illegible]. "மார்புக் கூட்டில் மூன்று எலும்புகள் முறிந்து விட்டன. ஒன்று நுரையீரலைப் பொத்து விட்டது. அவன் இருமியபோது ரத்தம் குபுக்கென்று வாயிலிருந்து வந்ததைப் பார்த்து ஒரு விநாடி நானே கலங்கிப் போய் விட்டேன்."

சாருலதா ஒடுங்கிப் போனாள். கண்ணீராய்ச் சுரந்து நிறுத்தாள்.

சாரங்கன் புரிந்து கொண்டான்.

டாக்டர் மேலும் சொன்னார்: "அவனே டாக்டரானதால் நெஞ்சில் எலும்பு முறிவு என்பதை உடனே புரிந்து கொண்டு நேரடியாகத் 'தொராஸிக் ஸர்ஜ'னைத் தேடி வந்து விட்டான். 'பிளட் க்ரூப்' என்ன என்பதையும் அவனே சொன்னதால் கூடிய விரைவில் ரத்தம் செலுத்த முடிந்தது. ஆனாலும் கொடிய காயம் பட்டதற்குப் பிறகும் அவன் ரொம்பவும் அலைந்து கஷ்டப்பட்டுக் களைத்திருக்கிறான். அதிர்ச்சி வேறு. சிகிச்சைக்கு என்னிடம் வந்து சேர மிகவும் கால தாமதமாகியிருக்கிறது. வழியில் ஏராளமாய் ரத்தம் இழந்திருக்கிறான். ஆப்பரேஷனைத் தாங்குவானா என்பதே சந்தேகமாயிருந்தது."

"டாக்டர், பிளீஸ்! அரை நிமிஷமாவது அவரைப் பார்த்து விட்டு வந்து விடுகிறேன்" என்று கெஞ்சினாள் சாருலதா.

"அழைத்துப் போகிறேன்; சற்றுப் பொறுமையாக இருங்கள்."

"சாரு! அவருக்குத் தெரியாதா, எப்போது நம்மை அழைத்துப் போவ



தென்று? அமைதியாக இருங்கள்!'' என்றான் சாரங்கன்.

''இது போலீஸ் கேஸ். ஆனால் நான் புகார் கொடுக்கக் கூடாதென்று கண்டிப்பாகக் கேட்டுக் கொண்டான் வேணு. ஏன் அப்படி? உங்களுக்கு ஏதாவது தெரியுமா? அவன் விரோதிகள் யார்? எதற்காக இவன் அவர்கள் மீது பரிவு காட்டுகிறான்?''— மல்லிகார்ஜுனன் கேட்டார்.

சாரங்கன தலை குனிந்து கொண்டான். சாருலதா தனக்குப் புரியவில்லை என்று தலையாட்டினாள்.

''இத்தகைய கேடிப் பசங்களை லாக் அப்பில் தள்ளி நொறுக்கணும். நான் விடப் போவதில்லை'' என்றார் மல்லிகார்ஜுனன்.

''ஒரு சின்னக் கோரிக்கை டாக்டர். வேணுவின் விருப்பத்தை மீறி எதையும் இப்போது செய்யாதீர்கள்'' என்று சாரங்கன் பணிவோடு கேட்டுக் கொண்டான். ''அவர் கண் விழித்ததும் ஒரு



வார்த்தை சொல்லி விட்டுச் செய்யுங்கள்.''

''நோ! நோ! ஒரு பொறுப்புள்ள டாக்டர் அந்த மாதிரியெல்லாம் நடந்து கொள்ள முடியாது ஸார்! போலீசுக்குச் சொல்ல வேண்டாம் என்று வேணு கேட்டுக் கொண்ட போதிலும் நான் அவனெதிரே தலையாட்டினேனே ஒழிய, ஆபரேஷன் தியேட்டருக்குள் நுழையு முன்னர் நர்ஸிடம் ஃபோன் பண்ணிப் போலீசுக்குத் தகவல் கொடுக்குமாறு சொல்லி விட்டேன்.''

நர்ஸ் ஒருத்தி எட்டிப் பார்த்தாள். ''டாக்டர் கொஞ்சம் வருகிறீர்களா?''

''லீலா! போலீசுக்கு ஃபோன் செய்யச் சொன்னேனே; செய்துவிட்டாயல்லவா?''

அவள் கையை உதறிவிட்டு விரலைக் கடித்தாள். ''ஸோ ஸாரி, டாக்டர்! எமர்ஜென்ஸி ஆப்பரேஷன் என்பதால் அவசரம் அவசரமாகத் தியேட்டரில் எல்லாம் ஒழுங்காக இருக்கிறதா என்று கவனித்தேன் அல்லவா? அந்தப் பதற்றத்தில் இது மறந்தே விட்டது!''

''ஸில்லி கேர்ல்!'' என்று கடிந்து கொண்டார் மல்லிகார்ஜுனன். ''என்ன காரியம் செய்தாய் லீலா. என் கௌரவமே குலைந்து விடும், போ! உடனே நானே டி. ஐ. ஜி.க்கு ஃபோன் போடுகிறேன். ஹி இஸ் மை குட் ஃபிரெண்ட். சரி, நீ என்ன கேட்க வந்தாய்?''

நர்ஸைப் பின்தொடர்ந்து டாக்டர் மல்லிகார்ஜுனன் சென்றார்.

சாரங்கன் சொன்னன்: ''மணிபாலையும் சந்திரபாலையும் சந்திப்பதென வேணு திட்டம் போட்டிருந்தார். அவர்கள்தான் இந்தக் காரியத்தைச் செய்திருக்க வேண்டும்!''

சாருலதா திகைத்தாள். ''சாரங்கன்! நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? எனக்காகவா இத்தனை வேதனையையும் அவர் அநுபவிக்கிறார்?'' படீரென்று அவள் தலையில் அடித்துக் கொண்டாள். ''மகாபாவி நான்! மகாபாவி!''

பெருமாள் சாருவை அணைத்துக் கொண்டார். அவருக்கு எதுவும் சரியாகப் புரியவில்லை. ஆனல் இந்த விபரீதம் நிகழ்ந்ததில் தம் மகளுக்கும் ஏதோ ஒரு விதத்தில் பொறுப்பு உண்டு என்று தெரிந்தது. அவர் கூறினர்: ''சாரு! வாசலில் கார் வந்து நிற்கும் சத்தம் கேட்கிறது. வேணுகோபாலின் தாயாராகத்தான் இருக்கும். அவளுக்கு நீ தைரியம் சொல்ல வேண்டாமா? நீயே அழுது கொண்டிருந்தால் எப்படி?''

ஆனல் மீனாட்சியைப் பார்த்ததும் சாருலதாவின் துயரம் அதிகரித்து அவளை முறுக்கிப் பிழிந்தது.

பெருமாள் மகளைத் தட்டிக் கொடுத்தபடியே பேசினர்: ''யாரோ இரண்டு பேர் வேணுகோபாலுடன் சண்டை போட்டு அவரை இந்தக் கதிக்கு ஆளாக்கியிருக்கிறார்கள். அதனல் அந்த இரண்டு பேரும் வெற்றி அடைந்து விட்டதாக நினைக்காதே. எல்லா யுத்தங்களிலும் ஜெயிப்பவர் பகவான் ஒருவரே! 'ஸமிதிஞ் ஜயாய நம:' தைரியமாக இரு அம்மா.''

## அத்தியாயம் 38

# வெற்றித் திலகம்

மயக்கம் தெளிந்து ஆனல் அசதியால் கண்மூடிப் படுத்திருந்தான் வேணுகோபால்.

''உங்களுக்கெல்லாம் பத்து நிமிஷம் தான் தரப் போகிறேன். அதை அழுது புலம்பி வீணடிக்காதீர்கள். அவனுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து தைரியம் சொல்லி விட்டுச் சீக்கிரம் வந்து சேருங்கள்.''

இப்படி எச்சரித்தபிறகு வேணுகோபால் இருந்த அறையின் கதவைத் திறந்து விட்டார் டாக்டர் மல்லிகார்ஜுனன்.

வேணுகோபாலின் இமைகள் மெல்லத் திறந்து கொண்டன. கால்மாட்டில் அமர்ந்திருந்த தாயாரை முதலில் பார்த்தான். புன்னகையில் அவன் அதரங்கள் இலேசாக நீண்டன. விழிகள் சுழன்றன. அறையின் ஒரு பக்கத்தில் குணவும் கமலாவும்; சாரங்கனும் லில்லியும், ஜோடி ஜோடியாக நின்றுகொண்டிருந்தது இயல்பாகவும் அழகாகவும் இருந்தது கண்டு அவன் வேதனைக்கிடையிலும் மகிழ்ச்சி அடைவது தெரிந்தது. இன்னொரு பக்கத்தில் பெருமாளும் கமலாவின் அப்பாவும் கிசுகிசுத்த குரலில் ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள்.

'எல்லாரையும் பார்த்தாகி விட்டது; ஆனல் பக்கத்திலேயே அவர் நெஞ்சுக்கு நேராக நான் இருப்பதை அவர் உணராமலே போய் விடுவாரோ?' என்று சாருலதாவை ஏக்கம் கவ்வியது. தொலைவில்! இருந்தவர்கள் பார்வைக்

குள் சுலபமாய் அகப்பட்டார்கள். ஆனால் பக்கத்தில் இருந்தவளை நோக்கத் தலையைத் திருப்ப அவனால் முடிய வில்லை. மெல்லிய விசும்பலொலி சாரு லதாவிடமிருந்து எழுந்தது. அவன் விழிகள் மறுவிநாடி கடைக்கண்ணுக் குத் தாவின. கரம் உயர்ந்து அவள் தலையை வருடியது.

''அம்மா !'' என்று அழைத்தான்.

''இதோ, இருக்கேண்டா! உன்கிட்டத் திலேயேதான் இருக்கேன்! நீ அதிகமாப் பேசக்கூடாதுன்னு டாக்டர் சொல்லி யிருக்கார்டா'' என்றாள் மீனாட்சி.

''கவலைப்படாதே அம்மா! உன்னை விட்டு விட்டு எங்கேயும் போய் விட மாட்டேன்'' என்றான் ஈனஸ்வரத்தில்.

''அது எனக்குத் தெரியாதா வேணு? உனக்காகத்தானே நான் வாழ்ந்துண் டிருக்கேன் ? என்னை விட்டுப் பிரிவியா நீ? மனசை அலட்டிக்காதே. நீதான் கெட்டிக்கார டாக்டராகப் பார்த்து உன்னை ஒப்படைச்சுண்டுட்டியே. எல் லாம் சரியாப் போயிடும்ப்பா!''

''பார்த்தாயா, சாரு! நான் அவ ளுக்கு ஆறுதல் சொன்னால், அவள் எனக்கு ஆறுதல் சொல்கிறாள்! டாக் டர் மல்லிகார்ஜுனன் எனக்கு உற்சாக மளிக்கும் விதமாகப் பேசச் சொன்னார், இல்லையா ?''

சாருலதா தைரியமாக இருக்க முயன்று தோற்றாள். விசும்பி விசும்பி அழுது கொண்டே, ''ஏன் இப்படிச் செய்தீர்கள் ? அவர்கள் எவ்வளவு பொல்லாதவர்கள் என்று தெரியாதா உங்களுக்கு? எதற்காக அவர்கள் வழிக்கு நீங்கள் போனீர்கள்? என்மீது உங்களுக் குள்ள காதலை நிரூபிக்க இவ்வளவு பெரிய ஆபத்தில் நீங்கள் சிக்கிக் கொள்ள வேண்டுமா?'' என்று கேட்டாள்.

அவன் புன்னகையில் இப்போது இலேசான ஏளனம் கலந்திருந்தது. சிரிக்க அவனால் முடிந்திருந்தால் அந்த நர்ஸிங்ஹோம் முழுவதும் அந்த ஒலியி னால் நிறைந்திருக்கும். ''இட்டத்தில் வா, சாரு! உரக்கப் பேச என்னால் முடியவில்லை'' என்றான்.

அவன் மேல் பட்டும் படாமலும் தன் பட்டுக் கன்னத்தை வைத்துக் கொண்டு தலையணையைக் கண்ணீரால் நனைத்தாள் சாருலதா.

''என் காதலை நிரூபிக்க வேண்டிய அவசியம் இருப்பதாய் நான் நினைக்க வில்லை சாரு. அதை நிரூபிக்கவும் முடி யாது. அது என்ன ஒரு விஞ்ஞான தத்துவமா நிரூபிக்க? காதல் என்பது ஓர் உணர்ச்சி. ஐம்புலன்களும் ஒன்றாய் இணைந்த ஆனால் ஐம்புலன்களுக்கும் அப்பாற்பட்ட ஒரு தூய உணர்ச்சி. அது நிரூபிக்க முடியாத சத்தியம். உருவ மற்ற முழுமை. அதன் எதிரொலி உன் உள்ளத்திலும் ஏற்பட்டால் நான் அதிர்ஷ்டக்காரன்; இல்லையேல் அது என் துரதிர்ஷ்டம்; அவ்வளவுதான் !''

''அந்தக் காரணமும் இல்லை என்றால் பிறகு நீங்கள் ஏன் அந்த முரடர்களிடம் வலியச் சென்று மாட்டிக் கொள்ள வேண்டும்?'' வேணுவிடமிருந்து சற்று அகன்று சென்று கேட்டாள் அவள். அவன் செய்கை இப்போது அர்த்தமில் லாததாக, மன்னிக்க முடியாத அசட் டுத்தனமாகத் தோன்றியது அவளுக்கு.

வேணுவின் முகத்தில் சஞ்சலமும் வருத்தமும் பரவின. உடல் உபாதை யால் ஏற்பட்டதல்ல அவை; அதற்கும் மேலாகக் கிளர்ந்தவை.

மீண்டும் அந்த வினாவை எழுப்பாமல் இருக்கச் சாருலதாவால் முடியவில்லை. விம்மியபடியே கேட்டாள் : '' இது என்ன பைத்தியக்காரத்தனம்? ஒன்று மில்லாததற்கு இப்படி ஓர் அபத்த மான காரியத்தில் யாராவது இறங்கு வார்களா ? எனக்குப் புரியவில்லை. ஏன் இப்படிச் செய்தீர்கள்?''

''உன் கேள்விக்குப் பதில் நாங்கள் சொல்கிறோம்'' என்று ஒரு குரல் கதவருகே கேட்டது.

மஹிபாலின் அந்தக் குரலைச் செவி மடுத்ததுமே வேணுவின் முகம் சட்டென்று சஞ்சலம் நீங்கப் பெற்றுத் தெளிவும் பிரகாசமும் அடைவதைப் பார்த்தாள் சாருலதா.

''டாக்டர் உத்தரவில்லாமல் இவர்கள் இங்கே வரக் கூடாது; சொன்னால் கேட்க மாட்டேனென்கிறார்கள்'' என்றாள் பின்னோடு வந்த ஒரு நர்ஸ், கலவரத்தை முகத்தில் தேக்கியபடி.

''அனுமதிக்கச் சொல்லு!'' என்று ஒரு தீவிரத்துடன் கூறினான் வேணுகோபால்.

சாருலதா கதவருகே போய்ப் பேசி விட்டு வந்தாள்.

மஹிபாலும் சந்திரபாலும் சாஷ்டாங்கமாக வேணுகோபால் எதிரே தரையில் விழுந்தார்கள். ''உன்னால் முடியுமானால் எங்களை மன்னித்து விடு'' என்றார்கள். பிறகு எழுந்து நின்று சாருலதா பக்கம் திரும்பினார்கள். ''உன்னை பிளாக்மெய்ல் செய்து வாங்கிய பணத்தில் நாங்கள் செலவழித்தது போகப் பாக்கி இந்தப் பைகளில் இருக்கிறது'' என்றான் மஹிபால். இரு தோல் பைகளைக் கட்டில் மீது வைத்தான்.

''டேப் ரிகார்டரும் உன் திருமண ஃபோட்டோ நெகடிவ்களும் இதோ'' என்று சந்திரபால் தோல் பைகளுக்கு அருகே அவற்றையும் வைத்தான்.

''நாங்கள் இப்போது போலீஸில் எங்களை ஒப்படைத்துக் கொள்ளப் போகிறோம்'' என்றான் மஹிபால்.

''அதற்கு அவசியமில்லை'' என்றார் அப்போது உள்ளே நுழைந்த டாக்டர் மல்லிகார்ஜுனன். ''போலீசாரே சற்று நேரத்தில் இங்கு வந்து விடுவார்கள். நர்ஸ் சொன்னதைக் கேளாமல் நீங்கள் இருவரும் இங்கு வந்து ஏன் கலாட்டா செய்கிறீர்கள்?''

''டாக்டர்! அவர்களைப் பேச அனுமதிக்குமாறு வேணுகோபால்தான் கேட்டுக் கொண்டார்'' என்றாள் சாருலதா.

''போலீஸ் வரட்டும். உன்னை பிளாக்மெய்ல் செய்தோம்; வேணுகோபாலை அடித்து உதைத்துப் போட்டோம் என்று அவர்களிடம் சொல்கிறோம்.'' — சந்திரபால்.

வேணுகோபாலின் முகத்தில் பெருமிதம் தாண்டவமாடுவதைக் கவனித்தாள் சாருலதா. வேதனையின் சுவடு கூட அங்கு தெரியவில்லை.

''சாரு! உனக்கு நடந்த கதை ஒன்றும் தெரியாது'' என்று ஆரம்பித்தான் மஹிபால். ''வேணுகோபாலை




பாட்னு சர்வகலாசாலையில் பட்டம் பெற்ற டாக்டர்கள் சிலர் மருத்துவத்துறை பற்றிய அடிப்படை விஷயங்களைக் கூடச் சரியாகத் தெரிந்து கொள்ளவில்லை' என்பது கண்டு பிரிட்டிஷ் மருத்துவ நிபுணர்கள் வியப்படைந்தார்கள்.

— செய்தி — ஹிந்து நாளிதழ் 19-3-70

இந்தியாவின் போக்கே இடது பக்கம் போகையிலே
இரண்டு பக்கம் ஏதுக்கடி — குதம்பாய்
இரண்டு பக்கம் ஏதுக்கடி

அசெம்பிளியில் இடம் மாறும் ஆத்மாக்கள் நினைவாக
அவயவங்கள் இடம் மாறுதடி — குதம்பாய்
அவயவங்கள் இடம் மாறுதடி

இங்கிலாந்து போயும் இடப்பக்க ஆர்வத்தை
இழந்து விடுவாரோடி — குதம்பாய்
இழந்து விடுவாரோடி

வலப்பக்க *'லிவரை' வசதியாய் இடப்பக்கம்
வக்கணையாய்த் தேடுனரடி — குதம்பாய்
வக்கணையாய்த் தேடுனரடி

அனாடமி டாக்டரவர் ஆராய்ச்சி டாக்டரில்லை
ஆனாலும் விழித்தாரடி — குதம்பாய்
ஆனாலும் விழித்தாரடி

பாட்னாவில் படித்துப் பட்டங்கள் பெற்ற பின்
ஏட்டு ஞானம் ஏதுக்கடி — குதம்பாய்
ஏட்டு ஞானம் ஏதுக்கடி

முழங்கால் மூட்டுப்பக்கம் மூளையையே தேடினாலும்
மோசம் ஒன்றும் ஆகாதடி — குதம்பாய்
மோசம் ஒன்றும் ஆகாதடி

நாட்டின் புகழ் பெற்ற நாலந்தா இருக்குமிடம்
நாலு பேர் சிரிப்புக்காச்சுடி — குதம்பாய்
நாலு பேர் சிரிப்புக்காச்சுடி

(குதம்பைச் சித்தர் மன்னிப்பாராக) - பட்டினத்தார்

* கல்லீரல்



நாங்கள் அடித்துப் போட்டுவிட்டு வந்தோம். அப்போது சந்திரபாலைப் பாம்பு கடித்து விட்டது. தன்னுடைய ஆபத்தான நிலையைப் பொருட்படுத்தாமல் வேணுகோபால் வந்து முதலுதவி அளித்தான். ஆயினும் வேணுவைக் குற்றுயிராகக் கிடக்குமாறு அங்கேயே விட்டு விட்டு நாங்கள் அவன் காரை எடுத்துக் கொண்டு வந்து விட்டோம். ஜெனரல் ஆஸ்பத்திரிக்குப் போய் விஷ முறிவுக்கு இவனுக்கு ஊசி போட்டானதும் ஒரு டாக்ஸியில் எங்கள் அறைக்கு வந்து சேர்ந்தோம்.''

சந்திரபால் தொடர்ந்தான்: ''எங்கள் விலாசம் உங்களில் யாருக்கும் தெரியாது. ஆனாலும் அங்கே இருக்க எங்களுக்குப் பயமாயிருந்தது. போலீசுக்கு வேணுகோபால் தகவல் கொடுத்துவிட்டால் அவர்கள் எப்படியும் எங்களைத் தேடி வந்து விடுவார்கள் என்று நினைத்து அங்கிருந்து கிளம்பி விட்டோம். டவுனிலிருந்தவர்கள் மாம்பலம் வந்து ஹோட்டல் ஒன்றில் அறை எடுத்துக் கொண்டோம்.''

''படுத்தோம்; தூக்கம் வரவில்லை'' என்றான் மஹிபால். ''ஆளுக்குப் பத்து சிகரெட் பிடித்துத் தீர்த்தோம். நடந்தவை கண் முன்னே நிழலாடியபடி இருந்தன.''

''அடிப்பதிலும் உதைப்பதிலும்தான் வீரம் இருக்கிறது என்று நினைத்துக் கொண்டிருந்த எங்களுக்குப் பிறருக்கு உதவுவதிலும் வீரம் காட்ட முடியும் என்று வேணுகோபால் கற்றுக் கொடுத்தான்.''

''துன்பமளிப்பதல்ல வீரம்; துன்பத்தைப் போக்குவதுதான் வீரம் என்று புரிந்து கொண்டிருக்கிறோம் இப்போது.''

''அதுவும் எதிரிக்கு உதவ எவ்வளவு நெஞ்சத் துணிவு வேண்டும்!''

''எங்களை எவ்வளவு தூரம் அவன் நம்பியிருந்தான். அவனை எப்படியெல்லாம் நாங்கள் ஏமாற்றி விட்டோம்!''

''இதை யெல்லாம் நினைக்க நினைக்க எங்களுக்கு வெட்கமா யிருந்தது. வேணு என்ன ஆனானோ என்று கவலை யாக இருந்தது.''

''வேணுவின் வீட்டுக்கு ஃபோன் போட்டோம். யாரும் எடுக்கவில்லை. சாருவின் வீட்டுக்கு ஃபோன் செய்தோம். சமையல்காரன் சொன்னான். நீங்களெல்லாரும் இங்கே இருப்பதாக.''

''மனசு கேட்கலை. நள்ளிரவில் டாக்சி கூடக் கிடைக்கவில்லை. ஓட்டமும் நடையுமாக வந்து சேர்ந்தோம்.''

நடந்ததை அவர்கள் மாறி மாறிக் கூறி வந்த போது அனைவர் கண்களும் அவர்களையே நோக்கியபடி இருந்தன. வேணுகோபாலை யாரும் கவனிக்கவில்லை.

சாருலதா இப்போது இன்பக் கிளுகிளுப்புடன் வேணுகோபால் பக்கம் திரும்பினாள். அவன் எதை நிரூபிக்க முயன்று இவர்களிடம் வலியச் சென்று பேசிப் பழகியிருக்கிறான் என்பது அவளுக்குப் புரிந்தது. 'என்னிடம் உள்ள காதலை நிரூபிக்கத்தான் வேணு இவர்களுடன் தொடர்பு கொண்டதாய்ச் சுயநலத்துடன் நான் எண்ணியது எவ்வளவு தவறு! இந்தக் கயவர்களைத் திருத்தி விட்டோம் என்பதில் வேணுவின் மனம் எவ்வளவு குதூகலப்படும்!'

அமைதியாகக் கண்களை மூடியபடி படுத்திருந்த வேணுகோபால் அருகில் மண்டியிட்டு அமர்ந்தாள் அவள். ''வேணு! உங்கள் மகிழ்ச்சியை இரட்டிப்பாக்கும் சக்தி இப்போது என்னிடம் இருக்கிறது வேணு! நாலு நாள் அவகாசம் கேட்டேனல்லவா? இன்று மாலை ஒரு நல்ல முடிவுக்கு வந்து விட்டேன். அப்பாவிடமும் குணவிடமும்கூடச் சொல்லி விட்டேன்!''

அவன் அசையவில்லை. முகத்தில் நிலவிய பெருமிதப் புன்னகை மாறவில்லை.

''வேணு!'' என்று அலறினாள் சாருலதா. ''வேணு! நான் உங்களைக் கல்யாணம் செய்து கொள்கிறேன், வேணு! என்னைப் பாருங்கள். கண் திறந்து என்னை ஒரே ஒரு தடவையாவது பாருங்கள். நான் சொல்வதைக் கேளுங்கள். கேட்கமாட்டீர்களா, வேணு? உங்களைக் கல்யாணம் செய்து கொள்கிறேன் என்று நான் சொல்வதைக் கேட்கவே மாட்டீர்களா?''

அலறித் துடித்து அவன் மார்பில் முகம் பதித்துக் கதறி அழுதாள் அவள்.

நீண்ட நேரம் கழித்துச் சோகமே உருவாக அவள் நிமிர்ந்தபோது அவள் நெற்றித் திலகம் அவன் நெஞ்சிலே வெற்றித் திலகமாக மாறி விட்டிருந்தது.

